# சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை

பெரியார் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி)
பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு

ஆய்வாளர்

திருமதி ப.மோகனசுந்தரி, எம்.ஏ.,பி.எட்.,எம்.ஃ.பில்.,

முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்)

பதிவு எண்: **PU/COE/CRE-IX/2284/2016**

நெறியாளர்

முனைவர் க.பொன்மொழி, எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,

இணைப்பேராசிரியர்




## தமிழாய்வுத்துறை

கந்தசாமிக் கண்டர் கல்லூரி

ப.வேலூர் (நாமக்கல்) 638 182

## நவம்பர் - 2022

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் க.பொன்மொழி, எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,**
இணைப்பேராசிரியர்,
தமிழாய்வுத்துறை,
கந்தசாமிக் கண்டர் கல்லூரி,
ப.வேலூர்-நாமக்கல் மாவட்டம்-638 182.

---

சேலம் பெரியார் பல்கலைக் கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெறும் **"சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை"** எனும் தலைப்பில் உள்ள இவ்வாய்வேடு **ப.மோகனசுந்தரி** அவர்களால் **2016-2022**-ஆம் ஆண்டு பகுதிநேர ஆய்வாக எனது மேற்பார்வையின் கீழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக கந்தசாமிக் கண்டர் கல்லூரி, தமிழாய்வுத்துறையில் எழுதப் பெற்றதாகும். இவ்வாய்வு முழுவதும் அவரால் தன்னிச்சையாகச் செய்யப்பட்டது என்றும், இதற்கு முன் இத்தலைப்பு குறித்து எந்தப் பல்கலைக்கழகத்திற்கும் எந்த ஆய்வாளருக்கும் எவ்வகை ஆராய்ச்சிப் பட்டமும் வழங்கப்படவில்லை என்றும் சான்று அளிக்கின்றேன்.

இடம் : ப.வேலூர் (நாமக்கல்)

நாள் :

**துறைத்தலைவர்** **நெறியாளர்**

**முதல்வர்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**ப.மோகனசுந்தரி**
முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்)
தமிழாய்வுத்துறை,
கந்தசாமிக் கண்டர் கல்லூரி,
ப.வேலூர், நாமக்கல் மாவட்டம்-638 182.

---

சேலம் பெரியார் பல்கலைக் கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் **“சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை”** எனும் தலைப்பில் உள்ள இவ்வாய்வேடு 2016-2022-ஆம் ஆண்டு பகுதிநேர ஆய்வாகக் கந்தசாமிக் கண்டர் கல்லூரி, தமிழாய்வுத்துறையில் இணைப்பேராசிரியர் **முனைவர் க.பொன்மொழி** அவர்களை ஆய்வு நெறியாளராகக் கொண்டு முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக செய்யப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதேயாகும். இதற்கு முன் இத்தலைப்பு குறித்து எந்தப் பல்கலைக்கழகத்திற்கும் எந்த ஆய்வாளருக்கும் எவ்வகை ஆராய்ச்சிப் பட்டமும் வழங்கப்படவில்லை என்று உறுதி அளிக்கின்றேன்.

இடம் : ப.வேலூர் (நாமக்கல்)
நாள் :

**ஆய்வாளர்**
**(ப.மோகனசுந்தரி)**

# நன்றியுரை

**“சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை”** என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வினை (பகுதிநேரம்) மேற்கொள்வதற்கு அனுமதி வழங்கிய பெரியார் பல்கலைக் கழகத்திற்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர்பட்ட ஆய்வை நிகழ்த்துவதற்கு எனக்கு அனுமதியளித்த கந்தசாமிக் கண்டர் கல்லூரிக்கும், ஆயிரமாயிரம் மாணவ, மாணவியரின் வாழ்வில் கல்வி தீபம் என்னும் அணையாவிளக்கை ஏற்ற காரணமாய் விளங்கும் இக்கல்லூரியின் நிறுவனருமான நன்செய் இடையாறு கல்வி வள்ளல் சங்கர கந்தசாமிக் கண்டர் கல்லூரியின் **செயலாளர் மருத்துவர் இர.சோமசுந்தரம்** அய்யா அவர்களுக்கும் மற்றும் கல்லூரி **முதல்வர் முனைவர் ந.தங்கராஜ்** அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள விருப்பம் கொண்டு கூறியவுடனே, மலர்ந்த முகத்துடன் மறுகணமே ஏற்றுக் கொண்டு எனக்கு வாய்ப்பளித்து, ஆய்வுத் தொடர்புள்ள பல்வேறுவிதமான கருத்துக்களையெல்லாம், அறிவுரைகளாக வழங்கி செம்மையாகவும், சிறப்பாகவும் என்னுடைய ஆய்வு சிறக்க உதவிய பெருமதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய இணைப்பேராசிரியர் மற்றும் எனது நெறியாளருமான **முனைவர் க.பொன்மொழி, எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,** அவர்களுக்கும், தமிழாய்வுத்துறைத் தலைவர், இணைப்பேராசிரியர் **முனைவர் ந.திலகம்** அம்மா அவர்களுக்கும் மற்றும் தமிழாய்வுத்துறைப் பேராசிரியப் பெருமக்களுக்கும், அனைத்து துறைப் பேராசிரியர்களுக்கும் மற்றும் ஆசிரியரல்லா பணியாளர்கள் அனைவருக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட முதறிஞர் குழு உறுப்பினராக இருந்து என் ஆய்விற்கு மேலான கருத்துக்களை வழங்கிய **உருமு தனலட்சுமி, கல்லூரியின் முதல்வர் முனைவர் இ.ஆர்.ரவிச்சந்திரன்** அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**

**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே"**

என்னும் பாடலுக்கு ஏற்றார் போல் விளங்கும் எனது **தாயார் திருமதி ப.செல்வராணி** அவர்களுக்கும் என்னை அரும்பாடுபட்டு வளர்த்த எனது **தந்தை திரு.ஆ.பஞ்சவர்ணம்** அவர்களுக்கும், இந்த ஆய்வு சிறப்பான முறையில் நிறைவு பெறுவதற்கு பெரும் ஊக்கமும், ஆக்கமும் அளித்து என்னை உற்சாகப்படுத்திய எனது **கணவர் க.ஜெகன்மோகன்** அவர்களுக்கும், எனது **மகள் ஜெ.பிரகன்யாமோகன், மகன் ஜெ.மௌலிமோகன்** அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வுத் தொடர்பான துணைமைத் தரவுகளைத் திரட்ட உதவிய திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக் கழக நூலகர், கோயமுத்தூர் பாரதியார் பல்கலைக்கழக நூலகர், தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழக நூலகர், கந்தசாமிக் கண்டர் கல்லூரி நூலகர், பரமத்தி வேலூர் முழுநேர கிளை நூலகர் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் இவ்வாய்வேட்டினைத் தெளிவான முறையிலும், சிறப்பாகவும் தட்டச்சு செய்து கொடுத்து உதவிய **திருமதி ரா.சாந்தி, அபிராமி டிரேடர்ஸ் கம்ப்யூட்டர் சென்டர், ப.வேலூர்** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**என்றென்றும் நன்றியுடன்...**

**(ப.மோகனசுந்தரி)**

Ouriginal
by Turnitin

## Document Information

| | |
|---|---|
| **Analyzed document** | Mohanasundari P_Tamil_Ph.d.pdf (D146959683) |
| **Submitted** | 2022-10-20 08:23:00 |
| **Submitted by** | pulib |
| **Submitter email** | library@periyaruniversity.ac.in |
| **Similarity** | 0% |
| **Analysis address** | library.periyar@analysis.urkund.com |

## Sources included in the report

W URL: https://www.researchgate.net/publication/338101729_IJTLLS_-_Vol_2_Special_Issue_2_December_2019_Full_Pdf
Fetched: 2020-06-20 08:31:09 3

W URL: https://www.researchgate.net/profile/Praiya_Praiya/publication/340183948_PROCEEDINGS_OF_THE_NATIONAL_SEMINAR_Sponsored_PANDIYA_NADU_CENTRE_FOR_HISTOR CULTURAL_SETTINGS_OF_PANDIYA_COUNTRY_UPTO_1736_AD_Published_by_DEPARTMENT_OF_HISTORY_DEVANGA_ARTS_/links/5e7cccfd458515efa0ad550d/PROCEEDINGS-O Sponsored-PANDIYA-NADU-CENTRE-FOR-HISTORICAL-RESEARCH-PCHR-SOCIO-CULTURAL-SETTINGS-OF-PANDIYA-COUNTRY-UPTO-1736-AD-Published-by-DEPARTMENT-OF-H Fetched: 2021-02-10 08:43:30

## Entire Document

1 Kd;Diu rq;ffhyk; ,uz;lhapuk; Mz;LfSf;F Kw;gl;l fhykhFk;. cyfnkhopfSs; kpfj; njhd;ikahd
nkhop jkpo; nkhopahFk;. "jpq;fnshLk; nrOk;ghpjp jd;NdhLk; tpz;NzhLk; cLf;fNshLk;
nghq;Ffly; ,tw;NwhLk; gpwe;jjkpo;" vd;w ghNte;jh; ghujpjhrd; ghly; thpfSf;F Vw;g jkpo;
nkhop kpfg; goikahdJ MFk;. jkpopyf;fpa kugpy; jdpr; rpwg;Gld; rq;f ,yf;fpak; jpfo;fpd;wJ.
>uhapuk; Mz;LfSf;F Kd;dNu tho;e;j jkpo; kf;fspd; r%fg; gpd;dzpiaAk; tho;f;if
newpKiwfisAk; rq;f ,yf;fpaq;fspd; thapyhf ,d;Wk; ehk; mwpe;J nfhs;s Kbfpd;wJ. goik tha;e;j rq;f
,yf;fpaj;ij mfj;jpiz< Gwj;jpiz vd ,Utifg;gLj;jpf; $wpAs;sdh;. jkpo; ,yf;fpaq;fspy;
vl;Lj;njhifAk;< gj;Jg;ghl;Lk; fhyg;goik tha;e;jjhf mikfpd;wJ. jkpoh; mwpT<
tpidj;jpwk;< tho;tpay; eyk;< cs;sr; nrk;ik Mfpad vy;yhk; ,t;tpyf;fpaq;fshy; mwpa
Kbfpd;wJ. njhy;fhg;gpak;< jpUf;Fws;< vl;Lj;njhif< gj;Jg;ghl;L< jf^h;
ahj;jpiu< gjpndz;fPo;f;fzf;F Nghd;wit rq;ffhy E}y;fs; vdf; fUjg;gLfpd;wd. fsT< fw;G<
Nghh;< rkak;< jj;Jtk; Nghd;wtw;iwg; gw;wpa nra;jpfs; rq;f ,yf;fpa E}y;fspy; ,lk;
ngw;Ws;sd. rq;ffhyj;jpy; tho;e;j ngz;fSf;F kjpg;Gk;< khpahijAk; je;Js;sdh;. guj;ijah;fs; nghJ
kfsph;< nghUl; ngz;bh;< tpiyf;fzpif< tpiy eyg; ngz;bh; vdg; ngz;fis tifg;gLj;jp cs;sdh;.
rq;f fhyj;jpy; tho;e;j ngz;fs; midj;J tpjkhd fiyfspYk; rpwe;J tpsq;fpAs;sdh;. rq;f fhyj;jpy;
tho;e;j tiutpd; kfsph; epiyiag; gw;wp ,t;tha;tpd; %yk; mwpayhk;. 2 Ma;tpd; ,d;wpaikahik
jkpo; nkhopf;Ff; fpilj;j ngUQ;nry;tkhfr; rq;f ,yf;fpak; jpfo;fpd;wJ. vl;Lj;njhif< gj;Jg;ghl;L
ghly;fs; kdpj tho;tpd; mq;fkhf tpsq;Ffpd;wJ. ,yf;fpaj;jpd; Ritiaf; $WfpwJ. ,t;tpyf;fpaj;jpy;
,aw;if #o;epiyfs;< tho;tpay; Kiw< r%f epiyfs;< kdpj czh;TfisAk;< njhopy; KiwfisAk;<
fy;tp< gof;ftof;fq;fs;< ,y;yw tho;f;ifapy; ngz;fspd; epiy Mfpaitfisg; gw;wp Muha;tNj
,t;tha;tpy; ,d;wpaikahjit MFk;. Ma;tpd; Nehf;fk; rq;f ,yf;fpak;gz;ila kf;fspd; tho;f;ifiag;glk;
gpbj;Jf; fhl;Lk; fhyf;fz;zhb MFk;. rq;f E}y;fspy; cs;s ghly;fspd; %yk; FLk;gk;< r%fk;<
kzKiw< thzpgk;< ek;gpf;iffs;< kfsphpd; tho;f;if Kiw< Njhop< ghq;fd;< eLfy;
topghL Nghd;wtw;iw njspthf tpsf;FtJ
,t;tha;tpd; Nehf;fkhFk;. Ma;Tj; jiyg;G "rq;f ,yf;fpaq;fs; fhl;Lk; tiutpd; kfsph; epiy" vd;gJ Ma;Tj; jiyg;ghfj; Njh;T nra;ag;gl;Ls;sJ. Ma;T vy;iy rq;f
,yf;fpaq;fspy; cs;s nkhj;jg; ghly;fs; Ma;T vy;iyahf vLj;Jf; nfhs;sg;gLfpd;wJ. Ma;tpd; fUJNfhs;
gz;ghl;bYk;< ehfhpfj;jpYk; kdpj ,dk; gy;NtW gbepiyfisf; fle;J cah;e;j epiyf;F
te;jpUf;fpd;wJ. guj;jik xOf;fk; vd;gJ kdpj ,dj;ij CLUtp njhlh;e;J nfhz;Nl ,Uf;fpd;wJ. rq;f
,yf;fpaq;fspYk;<
,yf;fz E}y;fspYk; tiutpd; kfsph; gw;wpa nra;jpfs; gjpT nra;ag;gl;Ls;sd. mjw;fhd #o;epiyfis ,dk;
fhz;gJk;< mf;fhyr; nrt;tpay; kuGfisf; fhz;gJNk Ma;tpd; fUJNfhshFk;.
3 Ma;Tj; juTfs; Ma;Tf;Fhpa juTfis Kjd;ikj; juTfs; kw;Wk; Jizikj; juTfs; vd;W tifg;gLj;jpf; $wg;gl;Ls;sd. Kjd;ikj; juTfs; rq;f ,yf;fpaq;fshd
gj;Jg;ghl;Lk;< vl;Lj; njhifAkhfpa E}y;fs;< njhy;fhg;gpak; Kjypad Kjd;ik Mjhuq;fshf
vLj;Jf; nfhs;sg;gl;Ls;sd. Jizikj; juTfs; rq;f ,yf;fpak; njhlh;ghd E}y;fSk;< Ma;Tf;
fl;LiufSk;< Ma;NtLfs;< fiyf;fsQ;rpaq;fs;< Ma;Tf; Nfhitfs;< Ma;T E}y;fs;
Kjyhdtw;iwj; Jizikj; juTfshf vLj;Jf; nfhs;sg;gLfpd;wJ. NkYk; ed;D}y;<
ek;gpafg;nghUs;< ,iwadhh; mfg;nghUs; Nghd;w ,yf;fz E}y;fSk; Jizik Mjhuq;fshfg;
gad;gLj;jg;gl;Ls;sd. Ma;T Kd;Ndhbfs; rq;f ,yf;fpaq;fs; jkpo; Ma;T cyfpy; nghpJk; Muhag;
ngw;witahFk;. mt;thW Muha;e;J vOjg;gl;l rq;f
,yf;fpa Ma;NtLfSk;< Ma;T E}y;fSk; ,t;tha;tpd; Kd;Ndhbahf tpsq;Ffpd;wJ. 1. lhf;lh;
e.Rg;ukzpad;< rq;f fhy tho;tpay; 2017 2. lhf;lh; r.mfj;jpaypq;fk;< rq;f ,yf;fpaq;fs;
nrt;tpay; ,yf;fpaq;fNs 2010 3. Kidth; fh.Nfh.Ntq;fluhkd;< jkpo; ,yf;fpa tuyhW 2006 4.
Nguhrphpah; Nt.jp.nry;tk;< jkpof tuyhWk; gz;ghLk; 1995 5. Qh.khzpf;fthrfd;<

gj;Jg;ghl;L 20166. Kidth; e.mwpturd;< ngz;nkhop GidTk; ePf;fKk; 2017 ,j;jifa Ma;Tfis Kd;dpWj;jpAk;< mtw;wpypUe;J jdpj;jd;ik cilajhfTk; ,t;tha;T Nkw;nfhs;sg;gLfpd;wJ.

4 Ma;TmZFKiwfs;rq;f,yf;fpaE}y;fisMa;Tf;fskhff;nfhz;LNkw;nfhs;sg;ngw;Ws;s,t;tha;tpy;fPo;f;fhZk; mZFKiwfs;gpd;gw;wg;gl;Ls;sd.1. tpsf;fKiw Ma;T2.gFg;gha;T3.cstpay; Ma;TMa;Ntl;bd;fl;likg;G ,t;tha;NtLKd;Diu<KbTiuePq;fyhff;fPo;f;fhZk;Ie;J,ay;fshfg;gFf;fg; ngw;Ws;sd.,ay;xd;Wrq;f ,yf;fpaj;jpd;Njhw;wKk;tsh;r;rpAk;,ay;,uz;Lrq;ffhytho;tpaypy;r%fk;,ay;%d;Wrq;fj;jkpohpd;murpay; ,ay; ehd;Frq;ffhyj;jpy;ngz;fs;epiy,ay;Ie;Jrq;f,yf;fpaq;fspy;tiutpd;kfsph;epiy,ay;tpsf;fq;fs;,ay;xd;W-rq;f,yf;fpaj;jpd;Njhw;wKk; tsh;r;rpAk;fhyj;jhy;mopahjfhtpag;gilg;Gfshdrq;f,yf;fpaq;fs;Njhd;wpaijg; gw;wpAk;<mjd;rpwg;Gfs;<mfk;-Gwk;gw;wpAk;< vl;Lj;njhif E}y;fs;< gj;Jg;ghl;L E}y;fs;< jpiz tpsf;fj;ijAk;< Kjw;nghUs;< fUg;nghUs;< chpg;nghUs; ghly; ,aw;wpa Gyth;fisAk;<

%d;W rq;fq;fs; gw;wpAk;< tsh;r;rp gw;wpAk; ,t;tpaypy; tpsf;fkhf Muhag;gl;Ls;sJ. .,ay; ,uz;L - rq;ffhy tho;tpaypy; r%fk; rq;ffhy kf;fspd; caph;f; Fyq;fspd; Njhw;wk;< ghpzhk tsh;r;rp< jha;topr; r%fk;< je;ij topr; r%fk;< Ch;fSk; fpuhkg;GwKk;< rq;ffhy Cuhl;rp Kiw< rhjpKiw< kfsphpd; kidaw khz;Gfs;< fiyr; rpwg;G< kzKiw< ifk;ik< fzpifah;< cz;bAk; FbtiffSk;< Mil mzpfyd;fs;< moF rhjdq;fs;< kf;fspd; >kr;rlq;Ffs; Mfpatw;iwg; gw;wp ,t;tpaypy; Muhag;gl;Ls;sJ.

5 ,ay; %d;W - rq;fj; jkpohpd; murpay; rq;f fhyj;jpy; tho;e;j jkpoh;fspd; murpay;< mYty;Kiw< mur FLk;gk;< mur rpd;dk;< Ik;ngUq;FO< GNuhfpjh; epiy< ehopiff; fzf;fh;< coT< ifj;njhopy;< thzpgk;< kf;fspd; gof;f tof;fq;fs;< ek;gpf;iffs;< nghOJNghf;Ffs;< tpisahl;Lf;fs; kw;Wk; kfpo;tpidfs; Mfpatw;iwg; gw;wp njspthf ,t;tpaypy; Muhag;gl;Ls;sJ. ,ay; ehd;F - rq;ffhyj;jpy; ngz;fs;epiyrq;ffhyj;jpy;tho;e;jngz;fs;midj;jpYk;rpwe;Jtpsq;fpAs;sdh;.FLk;gk;<jha;<je;ij< jiytd;<jiytp<Njhop< ghq;fd;< thapy;fs;< fsT< fw;G< fy;tp< ,yf;fpak;< Ez;fiyfs;< rkak; Mfpatw;iwg; gw;wp ,t;tpaypy; Muhag;gl;Ls;sJ. ,ay; Ie;J - rq;f ,yf;fpaq;fspy; tiutpd; kfsph; epiy rq;f ,yf;fpak; Rl;Lk; kfsph;< tPukfsph;< kfsphpd; ehl;Lg;gw;W< ifk;ik kfsph;< gjpw;Wg;gj;jpy; tpwypah;< tpwypahpd; gzpfs;< tpwypah; guj;ijauhfapUj;jy;< tpwypapd; tUzid< Fynja;tkhfpa ngz;fs;< eLfy; topghL< ehl;Lg;Gwg;ghly;fspy;ngz;fs;<tiutpd;kfsp;h;<tiutp;d; kfspiuf;Fwpg;gpLk;NtWngah;fs;<tiutpd;kfsph;gw;wpa,yf;fzq;fs;< tiutpd;kfsph;gw;wpa ,yf;fpaq;fs;,tw;wpd;topahfrq;ffhyj;jpy;tho;e;jtiutpd;kfsph;epiyia,t;tpaypy;mwpaKbfpd;wJ.KbTiu

Ma;tpy;Ie;J

,ay;fspd; topahf Muha;e;J fz;lwpag;gl;l Ma;T KbTfs; njhFj;J KbTiuahf mspf;fg;gLfpd;wJ. NkYk; ,j;jiyg;ig mbj;jskhff; nfhz;L vjph;fhyj;jpy; Nkw;nfhs;sj;jf;f Ma;Tf;fsq;fshf Rl;bf; fhl;lg;gLfpwJ. JizE}w;gl;bay; Ma;Tf;Fj; Jiz nra;j E}y;fis mfu thpirapy; mikj;Jj; Jiz E}w;gl;bayhf

,izf;fg;gLfpd;wJ. gpd;dpizg;G Ma;Tj; njhlh;ghf vOjp ntspahd fl;Liufspd; efy;fSk;< mtw;wpd; rhd;wpjo;fspd; efy;fSk; ,izf;fg;gl;Ls;sd.




# பெரியார் பல்கலைக்கழகம்

# PERIYAR UNIVERSITY

SALEM - 636011, TAMIL NADU

**State University - NIRF Rank 73 - ARIIA Rank 10**

## CERTIFICATE OF PLAGIARISM

| | | |
|---|---|---|
| 1. | Name of the Research Scholar | ப.மோகனசுந்தரி |
| 2. | Course of Study | பிஎச்.டி., - பகுதிநேரம் |
| 3. | Subject | தமிழ் |
| 4. | Name of the Supervisor | முனைவர் க.பொன்மொழி |
| 5. | Department/Institution/Research Centre | தமிழாய்வுத்துறை<br>கந்தசாமிக் கண்டர் கல்லூரி, வேலூர்-நாமக்கல் |
| 6. | Title of the Thesis/Dissertation | சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை |
| 7. | Acceptable limit | 20% |
| 8. | % of similarity of content identified | 0% |
| 9. | Software used | URKUND |
| 10. | Date of verification | 20.10.2022 |

*Report of the plagiarism check, items with percentage of similarity is attached*

Signature of the Scholar

Signature of the Supervisor

Signature of University Librarian



**PERIYAR UNIVERSITY, SALEM-636 011**

**Date :**

## DECLARATION BY THE CANDIDATE

I here declare that the thesis entitled **"சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை"** submitted by me for the award for Ph.D. Degree in **"Tamil"** is my original contribution and it is not plagiarized or copied from any other thesis/books/any other copy right materials.

**Signature of the Candidate**

## CERTIFICATE BY THE SUPERVISOR

I hereby declare that the candidate **Mrs.P.MOHANASUNDARI** has carried out the Ph.D programme under my supervision during the period 2016 to 2022 and the thesis entitled **"சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை"** submitted by her is vertified and it is not plagiarized or copied from any other thesis/books/any other copy right materials.

**Signature of the Supervisor**

## CERTIFICATE BY THE LIBRARIAN

It is certified that the thesis entitled **"சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை"** submitted by the candidate **Mrs.P.MOHANASUNDARI**, under the supervision of **Dr.K.PONMOZHI, M.A.,M.Phil.,Ph.D.,** Research Supervisor, Kandaswami Kandar's College, Velur-638 182, Verified for plagiarism through the software and the thesis is within the permissible limits of plagiarism rules and the percentage of plagiarism of the thesis is found to be **0 %.**

**Signature of the Librarian**




# தமிழ் இணையக் கல்விக்கழகம்

சென்னை - 600 025.

# Tamil Virtual Academy

Chennai - 600 025.

[ www.tamilvu.org ● www.tamildigitallibrary.in ]




## சான்றிதழ் / Certificate

திரு. / திருமதி. / செல்வி. ப. மோகனசுந்தரி பதிவு எண் PU/COE/CRE-IX/2284/2016 அவர்களின் முனைவர் பட்ட ஆய்வுத் தலைப்புக்கான "சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை" ஆய்வுச் சுருக்கம், ஆய்வுத் தொகுப்பு மற்றும் கலைச்சொற்களின் பட்டியல் ஆகியவற்றின் மின் நகல்கள் பெரியார் பல்கலைக்கழகம் மூலமாக தமிழ் இணையக் கல்விக்கழகத்தில் 08.11.2022 அன்று பெறப்பட்டுள்ளது எனச் சான்றளிக்கப்படுகிறது.

This is to certify that the digital copies of research abstract, synopsis and list of glossaries of the Thesis entitled "SANGA ELAKIYANGAL KATTUM VARAIVIN MAGALIR NILAI" done by Thiru. / Thirumathi./ Selvi. P. MOHANASUNDARI Reg. No PU/COE/CRE-IX/2284/2016 student of Ph.D. programme in PERIYAR UNIVERSITY, have been received by the Tamil Virtual Academy on 08.11.2022.

TVA/2022/0168

முனைவர் வீ.ப.ஜெயசீலன், இ.ஆ.ப.,

இயக்குநர்

**CERTIFICATE OF GENUINENESS**

**OF THE PUBLICATION**

This is to certify that Ph.D. candidate **Mrs.P.MOHANASUNDARI** working under my supervision has published a research article in the UGC listed journal named **"சங்ககால மகளிர்"** with Vol. No:13, Page No:43-44 and year of Publication **2018** published by **Ayidha Ezhuthu**. The contents of the publication incorporate part of the results presented in her thesis.

**Head of the Department** **Research Supervisor**

**CERTIFICATE OF GENUINENESS**

**OF THE PUBLICATION**

This is to certify that Ph.D. candidate **Mrs.P.MOHANASUNDARI** working under my supervision has published a research article in the UGC listed journal named **“சங்ககால மகளிர் மனையற மாண்புகள்”** with **Vol. No:8 Page No:1659-1665** and year of Publication **2020** published by **Raja Publications**. The contents of the publication incorporate part of the results presented in her thesis.

**Head of the Department** **Research Supervisor**

**CERTIFICATE OF GENUINENESS**

**OF THE PUBLICATION**

This is to certify that Ph.D. candidate **Mrs.P.MOHANASUNDARI** working under my supervision has published a research article in the ISSN listed journal named **"சங்ககால இலக்கிய மகளிரின் விருந்தோம்பல் பண்பாடும், மருத்துவப் பயன்பாடுகளும்"** with **Vol. No:8 Page No:916-921** and year of Publication **2020** published by **Raja Publications**. The contents of the publication incorporate part of the results presented in her thesis.

**Head of the Department** **Research Supervisor**

**CERTIFICATE OF GENUINENESS**

**OF THE PUBLICATION**

This is to certify that Ph.D. candidate **Mrs.P.MOHANASUNDARI** working under my supervision has published a research article in the ISBN listed journal named **"சங்ககால மக்களின் அணிகலன்கள், அழகு சாதனங்கள்"** with Vol. No:**1**, Page No:**194-199** and year of Publication **2022** published by **Elakkiya Publications**. The contents of the publication incorporate part of the results presented in her thesis.

**Head of the Department** **Research Supervisor**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| உ.ஆ | - | உரை ஆசிரியர் |
| எழுத்து | - | எழுத்ததிகாரம் |
| ஐங் | - | ஐங்குறுநூறு |
| களவு | - | களவியல் |
| கற்பு | - | கற்பியல் |
| குறள் | - | திருக்குறள் |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண் | - | சிறுபாணாற்றுப்படை |
| சொல் | - | சொல்லதிகாரம் |
| திருமுருகு | - | திருமுருகாற்றுப்படை |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நற் | - | நற்றிணை |
| நூ | - | நூற்பா |
| நெடுநல் | - | நெடுநல்வாடை |
| ப | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பதிற் | - | பதிற்றுப்பத்து |
| பட்டினம் | - | பட்டினப்பாலை |
| பா | - | பாடல் |
| புறம் | - | புறநானூறு |
| புறப்பொருள் | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| பெரும்பாண் | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர் | - | பொருநராற்றுப்படை |
| பொருள் | - | பொருளதிகாரம் |
| மணி | - | மணிமேகலை |
| மலை | - | மலைபடுகடாம் |
| மதுரை | - | மதுரைக்காஞ்சி |
| முல்லை | - | முல்லைப்பாட்டு |
| மேலது | - | மேலே கூறிய நூல் |

# ஆய்வுச்சுருக்கம்

சங்ககாலம் என்பது சங்க இலக்கியம் இயற்றப்பெற்ற காலம் ஆகும். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு தொல்காப்பியம் ஆகியவற்றைச் சங்ககால நூல்கள் எனக் கருதப்படுகிறது. தமிழரின் பொற்காலம் சங்ககாலம் ஆகும். சங்ககாலமானது தமிழரது அரசியல், சமுதாய வாழ்வியலைப் பற்றிக் கூறியுள்ளது. தமிழக வரலாறு கற்போர்க்குப் பயன்படும் வகையில் அமைந்துள்ளது. பண்டைக் காலத்திலிருந்தே அமைந்துள்ளது. தமிழகத்தை சேரர், சோழர், பாண்டியர் என மூன்று பெருமன்னர்கள் ஆண்டு வந்துள்ளனர்.

சங்ககால மக்களின் அகவாழ்க்கை, புறவாழ்க்கை இவைகளைப் பற்றியும், ஐந்திணைக்குரிய முதற்பொருள்கள், உரிப்பொருள்கள், கருப்பொருள்கள் ஆகியவைகளைப் பற்றியும், மூன்று சங்கங்கள் பற்றியும், தமிழ் மொழியின் வரிவடிவங்களான பிராமி, தாமிழி, தேவநாகரி போன்றவைகள் பற்றியும் இவ்வாய்வில் அமைந்துள்ளன.

முதல் முறையாக உலகம் தோன்றியதையும், பரிணாம வளர்ச்சியில் மனிதனின் தோற்றத்தையும் தெளிவாகக் கூறியுள்ளது. சமுதாய வாழ்க்கையில் தாய்வழிச் சமூகம், தந்தைவழிச் சமூகம், பெண்களுக்கே உரிய கற்பு நிலை, கலைச் சிறப்பு, மணமுறை, கைம்மை மகளிர், கணிகையர் நிலைகள் போன்றவைகள் பற்றி கூறப்பட்டுள்ளது.

சங்ககால மக்கள் சிறப்பாக வாழ்ந்து வந்தனர் என்பதை எடுத்துக்காட்டும் வகையில் ஆடை, அழகு சாதனங்கள், அணிகலன்கள், நறுமணப் பொருட்கள் போன்றவற்றைப் பயன்படுத்தி சிறப்பாக வாழ்ந்துள்ளனர்.

சங்ககாலத்தில் மன்னர்கள் சிறப்பாக ஆட்சி நடத்தி வந்தார்கள். மன்னர்களின் முடிசூட்டு விழா வெகுவிமர்ச்சியாக நடைபெற்றது. அரசனின் சின்னங்களாக படை, கொடி, முரசம், குதிரை, யானை, மாலை போன்றவைகள் அமைந்துள்ளன.

சங்ககாலத்தில் வாழ்ந்த பெண்கள் இல்வாழ்க்கை, கல்வி, இலக்கியம், நுண்கலைகள், சிற்பக்கலை, கூத்து ஆகியவற்றில் தங்கள் திறமயைக் காட்டினார்கள். பெண்கள் தங்கள் நாட்டில் போர் ஏற்பட்டால் போர்க்களத்திற்க்குச் சென்று தங்களின் வீரத்தைக் காட்டுவார்கள். குடும்பத்தில் பெண்கள் முக்கிய பங்கு வகித்தனர். சில பெண்கள் விறலியராகவும், பரத்தையராகவும், விலைமகளிராகவும் வாழ்ந்து வந்தனர் என்பதை இவ்வாய்வின் மூலம் அறியலாம்.

# பொருளடக்கம்



ள

# முன்னுரை

சங்ககாலம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலமாகும். உலகமொழிகளுள் மிகத் தொன்மையான மொழி தமிழ் மொழியாகும்.

**“திங்களொடும் செழும்பரிதி தன்னோடும் விண்ணோடும்**
**உடுக்களோடும் பொங்குகடல் இவற்றோடும் பிறந்ததமிழ்”**

என்ற பாவேந்தர் பாரதிதாசன் பாடல் வரிகளுக்கு ஏற்ப தமிழ் மொழி மிகப் பழமையானது ஆகும்.

தமிழிலக்கிய மரபில் தனிச் சிறப்புடன் சங்க இலக்கியம் திகழ்கின்றது. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வாழ்ந்த தமிழ் மக்களின் சமூகப் பின்னணியையும் வாழ்க்கை நெறிமுறைகளையும் சங்க இலக்கியங்களின் வாயிலாக இன்றும் நாம் அறிந்து கொள்ள முடிகிறது. பழமை வாய்ந்த சங்க இலக்கியத்தை அகத்திணை, புறத்திணை என இருவகைப்படுத்திக் கூறியுள்ளனர். தமிழ் இலக்கியங்களில் எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் காலப்பழமை வாய்ந்ததாக அமைகின்றது. தமிழர் அறிவு, வினைத்திறம், வாழ்வியல் நலம், உள்ளச் செம்மை ஆகியன எல்லாம் இவ்விலக்கியங்களால் அறிய முடிகின்றது.

தொல்காப்பியம், திருக்குறள், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, தகடூர் யாத்திரை, பதினெண் கீழ்க்கணக்கு போன்றவை சங்ககால நூல்கள் எனக் கருதப்படுகின்றன. களவு, கற்பு, போர், சமயம், தத்துவம் போன்றவற்றைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கிய நூல்களில் இடம் பெற்றுள்ளன. சங்ககாலத்தில் வாழ்ந்த பெண்களுக்கு மதிப்பும், மரியாதையும் தந்துள்ளனர். பரத்தையர்கள் பொது மகளிர், பொருட் பெண்டிர், விலைக்கணிகை, விலை நலப் பெண்டிர் எனப் பெண்களை வகைப்படுத்தி உள்ளனர். சங்க காலத்தில் வாழ்ந்த பெண்கள் அனைத்து விதமான கலைகளிலும் சிறந்து விளங்கியுள்ளனர். சங்க காலத்தில் வாழ்ந்த வரைவின் மகளிர் நிலையைப் பற்றி இவ்வாய்வின் மூலம் அறியலாம்.

**ஆய்வின் இன்றியமையாமை**

தமிழ் மொழிக்குக் கிடைத்த பெருஞ்செல்வமாகச் சங்க இலக்கியம் திகழ்கின்றது. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு பாடல்கள் மனித வாழ்வின் அங்கமாக விளங்குகின்றது. இலக்கியத்தின் சுவையைக் கூறுகிறது. இவ்விலக்கியத்தில் இயற்கை சூழ்நிலைகள், வாழ்வியல் முறை, சமூக நிலைகள், மனித உணர்வுகளையும், தொழில் முறைகளையும், கல்வி, பழக்கவழக்கங்கள், இல்லற வாழ்க்கையில் பெண்களின் நிலை ஆகியவைகளைப் பற்றி ஆராய்வதே இவ்வாய்வில் இன்றியமையாதவை ஆகும்.

**ஆய்வின் நோக்கம்**

சங்க இலக்கியம் பண்டைய மக்களின் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டும் காலக்கண்ணாடி ஆகும். சங்க நூல்களில் உள்ள பாடல்களின் மூலம் குடும்பம், சமூகம், மணமுறை, வாணிபம், நம்பிக்கைகள், மகளிரின் வாழ்க்கை முறை, தோழி, பாங்கன், நடுகல் வழிபாடு போன்றவற்றை தெளிவாக விளக்குவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வுத் தலைப்பு**

**"சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை"** என்பது ஆய்வுத் தலைப்பாகத் தேர்வு செய்யப்பட்டுள்ளது.

**ஆய்வு எல்லை**

சங்க இலக்கியங்களில் உள்ள மொத்தப் பாடல்கள் ஆய்வு எல்லையாக எடுத்துக் கொள்ளப்படுகின்றது.

**ஆய்வின் கருதுகோள்**

பண்பாட்டிலும், நாகரிகத்திலும் மனித இனம் பல்வேறு படிநிலைகளைக் கடந்து உயர்ந்த நிலைக்கு வந்திருக்கின்றது. பரத்தமை ஒழுக்கம் என்பது மனித இனத்தை ஊடுருவி தொடர்ந்து கொண்டே இருக்கின்றது. சங்க இலக்கியங்களிலும், இலக்கண நூல்களிலும் வரைவின் மகளிர் பற்றிய செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அதற்கான சூழ்நிலைகளை இனம் காண்பதும், அக்காலச் செவ்வியல் மரபுகளைக் காண்பதுமே ஆய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வுத் தரவுகள்**

ஆய்வுக்குரிய தரவுகளை முதன்மைத் தரவுகள் மற்றும் துணைமைத் தரவுகள் என்று வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளன.

**முதன்மைத் தரவுகள்**

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டும், எட்டுத் தொகையுமாகிய நூல்கள், தொல்காப்பியம் முதலியன முதன்மை ஆதாரங்களாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**துணைமைத் தரவுகள்**

சங்க இலக்கியம் தொடர்பான நூல்களும், ஆய்வுக் கட்டுரைகளும், ஆய்வேடுகள், கலைக்களஞ்சியங்கள், ஆய்வுக் கோவைகள், ஆய்வு நூல்கள் முதலானவற்றைத் துணைமைத் தரவுகளாக எடுத்துக் கொள்ளப்படுகின்றது. மேலும் நன்னூல், நம்பியகப்பொருள், இறையனார் அகப்பொருள் போன்ற இலக்கண நூல்களும் துணைமை ஆதாரங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்**

சங்க இலக்கியங்கள் தமிழ் ஆய்வு உலகில் பெரிதும் ஆராயப் பெற்றவையாகும். அவ்வாறு ஆராய்ந்து எழுதப்பட்ட சங்க இலக்கிய ஆய்வேடுகளும், ஆய்வு நூல்களும் இவ்வாய்வின் முன்னோடியாக விளங்குகின்றது.

1. டாக்டர் ந.சுப்ரமண்யன், சங்க கால வாழ்வியல் 2017
2. டாக்டர் ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே 2010
3. முனைவர் கா.கோ.வேங்கடராமன், தமிழ் இலக்கிய வரலாறு 2006
4. பேராசிரியர் வே.தி.செல்வம், தமிழக வரலாறும் பண்பாடும் 1995
5. ஞா.மாணிக்கவாசகன், பத்துப்பாட்டு 2016
6. முனைவர் ந.அறிவரசன், பெண்மொழி புனைவும் நீக்கமும் 2017

இத்தகைய ஆய்வுகளை முன்னிறுத்தியும், அவற்றிலிருந்து தனித்தன்மை உடையதாகவும் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகின்றது.

**ஆய்வு அணுகுமுறைகள்**

சங்க இலக்கிய நூல்களை ஆய்வுக்களமாகக் கொண்டு மேற்கொள்ளப் பெற்றுள்ள இவ்வாய்வில் கீழ்க்காணும் அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

1. விளக்கமுறை ஆய்வு
2. பகுப்பாய்வு
3. உளவியல் ஆய்வு

**ஆய்வேட்டின் கட்டமைப்பு**

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாகக் கீழ்க்காணும் ஐந்து இயல்களாகப் பகுக்கப் பெற்றுள்ளன.

| | |
|---|---|
| இயல் ஒன்று | சங்க இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும் |
| இயல் இரண்டு | சங்ககால வாழ்வியலில் சமூகம் |
| இயல் மூன்று | சங்கத் தமிழரின் அரசியல் |
| இயல் நான்கு | சங்க காலத்தில் பெண்கள் நிலை |
| இயல் ஐந்து | சங்க இலக்கியங்களில் வரைவின் மகளிர் நிலை |

**இயல் விளக்கங்கள்**

**இயல் ஒன்று - சங்க இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்**

காலத்தால் அழியாத காவியப் படைப்புகளான சங்க இலக்கியங்கள் தோன்றியதைப் பற்றியும், அதன் சிறப்புகள், அகம்-புறம் பற்றியும், எட்டுத்தொகை நூல்கள், பத்துப்பாட்டு நூல்கள், திணை விளக்கத்தையும், முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் பாடல் இயற்றிய புலவர்களையும், மூன்று சங்கங்கள் பற்றியும், வளர்ச்சி பற்றியும் இவ்வியலில் விளக்கமாக ஆராயப்பட்டுள்ளது.

**.இயல் இரண்டு - சங்ககால வாழ்வியலில் சமூகம்**

சங்ககால மக்களின் உயிர்க் குலங்களின் தோற்றம், பரிணாம வளர்ச்சி, தாய்வழிச் சமூகம், தந்தை வழிச் சமூகம், ஊர்களும் கிராமப்புறமும், சங்ககால ஊராட்சி முறை, சாதிமுறை, மகளிரின் மனையற மாண்புகள், கலைச் சிறப்பு, மணமுறை, கைம்மை, கணிகையர், உண்டியும் குடிவகைகளும், ஆடை அணிகலன்கள், அழகு சாதனங்கள், மக்களின் ஈமச்சடங்குகள் ஆகியவற்றைப் பற்றி இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் மூன்று - சங்கத் தமிழரின் அரசியல்**

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர்களின் அரசியல், அலுவல்முறை, அரச குடும்பம், அரச சின்னம், ஐம்பெருங்குழு, புரோகிதர் நிலை, நாழிகைக் கணக்கர், உழவு, கைத்தொழில், வாணிபம், மக்களின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், பொழுதுபோக்குகள், விளையாட்டுக்கள் மற்றும் மகிழ்வினைகள் ஆகியவற்றைப் பற்றி தெளிவாக இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் நான்கு - சங்க காலத்தில் பெண்கள் நிலை**

சங்க காலத்தில் வாழ்ந்த பெண்கள் அனைத்திலும் சிறந்து விளங்கியுள்ளனர். குடும்பம், தாய், தந்தை, தலைவன், தலைவி, தோழி, பாங்கன், வாயில்கள், களவு, கற்பு, கல்வி, இலக்கியம், நுண்கலைகள், சமயம் ஆகியவற்றைப் பற்றி இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் ஐந்து - சங்க இலக்கியங்களில் வரைவின் மகளிர் நிலை**

சங்க இலக்கியம் சுட்டும் மகளிர், வீரமகளிர், மகளிரின் நாட்டுப்பற்று, கைம்மை மகளிர், பதிற்றுப்பத்தில் விறலியர், விறலியரின் பணிகள், விறலியர் பரத்தையராகயிருத்தல், விறலியின் வருணனை, குலதெய்வமாகிய பெண்கள், நடுகல் வழிபாடு, நாட்டுப்புறப் பாடல்களில் பெண்கள், வரைவின் மகளிர், வரைவின் மகளிரைக் குறிப்பிடும் வேறு பெயர்கள், வரைவின் மகளிர் பற்றிய இலக்கணங்கள், வரைவின் மகளிர் பற்றிய இலக்கியங்கள் இவற்றின் வழியாக சங்க காலத்தில் வாழ்ந்த வரைவின் மகளிர் நிலையை இவ்வியலில் அறிய முடிகின்றது.

**முடிவுரை**

ஆய்வில் ஐந்து இயல்களின் வழியாக ஆராய்ந்து கண்டறியப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுத்து முடிவுரையாக அளிக்கப்படுகின்றது. மேலும் இத்தலைப்பை அடித்தளமாகக் கொண்டு எதிர்காலத்தில் மேற்கொள்ளத்தக்க ஆய்வுக்களங்களாக சுட்டிக் காட்டப்படுகிறது.

**துணைநூற்பட்டியல்**

ஆய்வுக்குத் துணை செய்த நூல்களை அகர வரிசையில் அமைத்துத் துணை நூற்பட்டியலாக இணைக்கப்படுகின்றது.

**பின்னிணைப்பு**

ஆய்வுத் தொடர்பாக எழுதி வெளியான கட்டுரைகளின் நகல்களும், அவற்றின் சான்றிதழ்களின் நகல்களும் இணைக்கப்பட்டுள்ளன.

## இயல் ஒன்று

## சங்க இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

- ❖ முன்னுரை
- ❖ சங்க இலக்கியத்தின் தோற்றம்
- ❖ மிகப்பழமையான இலக்கியம்
- ❖ எட்டுத்தொகை நூல்கள்
- ❖ பத்துப்பாட்டு நூல்கள்
- ❖ அகவாழ்க்கை
    - அன்பின் ஐந்திணைக்குரிய முதற்பொருள்கள்
    - ஐந்திணைக்குரிய உரிப்பொருள்கள்
    - ஐந்திணைக்குரிய கருப்பொருள்கள்
- ❖ புறவாழ்க்கை
- ❖ சங்கம் பெயர்க் காரணம்
- ❖ தமிழ் வளர்த்த சங்கம் மூன்று
    - தலைச்சங்கம்
    - இடைச்சங்கம்
    - கடைச்சங்கம்
- ❖ சங்க இலக்கியங்களின் வளர்ச்சி
- ❖ தமிழ் மொழியும் சங்க காலமும்
- ❖ வரிவடிவங்கள்
    - பிராமி
    - தாமிழி
    - தேவநாகரி
- ❖ தொகுப்புரை

## இயல் ஒன்று

## சங்க இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

**முன்னுரை**

ஒவ்வொரு கால கட்டத்திலும் இலக்கியங்கள் பல தோன்றி, நம் தமிழ்மொழிக்கு பெருமை சேர்த்தன. அந்த வரிசையில் சங்க காலத்தில் தோன்றிய நூல்கள் முதன்மை வாய்ந்ததாகக் கருதப்படுகின்றன. சங்ககால மக்களின் வாழ்வினைச் சித்தரிப்பதை இலக்காகக் கொண்டு எழுதப்பட்டவை சங்க இலக்கியங்கள். காலப்போக்கில் என்றும் அழியாமல் பழமையும் பெருமையும் மிக்கதாக பண்டைத் தமிழரின் வாழ்வினைப் பறைசாற்றி நிற்கும் கருவூலம் பழந்தமிழ் இலக்கியமாகும். இயற்கையோடு இயைந்து வாழ்ந்த வாழ்வினை எடுத்துக் காட்டுவதோடு அளவான கற்பனையும் விழுமிய உணர்ச்சியும், ஆழ்ந்த கருத்தும், எளிய வடிவமும் கொண்டு என்றும் வாழும் இலக்கியமாகச் சிறந்து விளங்குவது சங்க இலக்கியம் ஆகும்.

சங்கத் தமிழர்களின் அகம், புறம் என்ற இருவேறு வாழ்க்கை நெறிகளான இல்லற வாழ்வையும், புற உலக வாழ்வையும் தெளிவுற எடுத்துக்காட்டும் காலக்கண்ணாடியாகச் சங்க இலக்கியங்கள் அமைந்துள்ளன. தமிழரின் அக இலக்கியம், புற இலக்கியம் போன்று உலகில் வேறு எந்த மொழியிலும் பாடல்கள் இல்லை. சங்கத் தமிழரின் பழக்கம், அவர்கள் மேற்கொண்ட ஒழுக்கம், ஏற்றுக் கொண்ட பண்பாடு முதலியவற்றை அக இலக்கியங்கள் பகிர்கின்றன. பண்டைத் தமிழரின் வீர வாழ்வைப் புற இலக்கியங்கள் தம் பாடல் வழி பறை சாற்றுகின்றன. சங்க இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

**சங்க இலக்கியத்தின் தோற்றம்**

**"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு**
**முன்தோன்றி மூத்த குடி"**

என்று போற்றப்படும் பழமையும், பண்பாடும் கொண்ட தமிழ்ச் சமுதாயம் அகம், புறம் இரண்டையும் அடிப்படையாகக் கொண்டது. இவ்விரண்டையும் மையமாக வைத்து படைக்கப்பட்டது சங்க இலக்கியமாகும்.

> **"சங்க இலக்கியம் உலக இலக்கியங்களுள் ஒன்று. மிகப்பழமையானது, பாரம்பரியம் மிக்கது. எத்தனையோ நாடுகளிலும், மொழிகளிலும் இலக்கியம் தோன்றாத நேரத்தில் தோன்றிய தொன்மையும் முதுமையும் மிக்கது"[1].**

இப்போதுள்ள தமிழிலக்கியங்களுள் மிகவும் தொன்மையானவை சங்க இலக்கியங்கள் ஆகும். இவை சங்க காலத்தில் பாடப்பெற்ற பாக்களின் தொகுப்பு நூல்கள். இன்று பேச்சு வழக்கிலுள்ள இந்திய மொழிகளின் இலக்கியங்களில் மிகப் பழமையானது சங்க இலக்கியம்.

சங்க இலக்கியங்கள் அன்றையத் தமிழ்ச் சமுதாயத்தின் அருமையான நன்கொடை. சின்னஞ்சிறு பாக்களில் உண்டான செம்மையான பேரிலக்கியப் பெரும் படைப்பு. வாழ்வாங்கு வாழ்ந்த மக்களின் செம்மையான சிந்தனை ஓட்டத்தில் பிறந்த செவ்வியல் இலக்கியமும் ஒன்றாகும்.

> **"சங்க இலக்கியம் என்ற தொகுப்பில் உள்ள பாட்டுகளின் காலம் கி.மு.500 முதல் கி.பி.200 வரை ஆகும்"[2].**

தமிழ் மொழியின், தமிழ் நாட்டின் பழமையான இலக்கியம் மட்டுமன்று. இந்திய நாட்டின் பழமையான இலக்கியங்களில் சங்க இலக்கியம் ஒன்று.

**மிகப்பழமையான இலக்கியம்**

இந்திய நாட்டில் ஆரியர்கள் வருவதற்கு முன்பே வாழ்ந்து வளர்ந்திருந்த திராவிட நாகரிகத்தின் பிரதிபலிப்பாக விளங்கும் பழமையான இலக்கியம் இதுவேயாகும். எத்தனையோ அரசுகள் மாறினும் பல நூற்றாண்டுகளாகப் புகழோடு விளங்கி வரும் நகரங்களுள் மதுரை ஒன்று. உலகத்தில் உள்ள மிகப் பழைய நகரங்களுள் அது ஒன்று. அதைப் பற்றிப் பாடிய பழங்காலத்துப் புலவர் ஒருவர்,

**"வெள்ளத்தின் நீர் முற்றுகையிட்டு மதிலைத் தாக்கும் பகை அல்லாமல் போர் முற்றுகை ஒன்றும் அறியாத கோட்டை உடைய ஊர்"**[3]

என்று பாடியுள்ளார்.

பாட்டுக்கு உரிய கற்பனையழகு இதில் கலந்திருந்த போதிலும், பல மாறுதல்களுக்கு இடையே தொன்று தொட்டுத் தொடர்ந்து வரும் அமைதியான வாழ்வு உடையது என்ற உண்மைக் கருத்தும் பொதிந்துள்ளது. மதுரை நகரத்தைப் பற்றிக் கூறப்பட்ட இந்தச் சிறப்பு ஏறக்குறைய தமிழகத்தின் தொன்மையான நாகரிக வாழ்வுக்கும் பொருந்துவது என்று சொல்லலாம்.

இதை உணர்ந்தால், தமிழ்மொழி பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து அமைதியாக வளர்ந்து வரும் வளர்ச்சியைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிகிறது.

**"பழங்காலத்தில் தமிழ்நாட்டில் வழங்கி வந்த தமிழ் மொழியில் தோன்றி வளர்ந்த இலக்கியங்களில் ஒரு பகுதி இன்று வரையில் காக்கப்பட்டு வருகிறது. அந்தப் பழைய தமிழ் இலக்கியம் தான் சங்க இலக்கியம் ஆகும்"[4].**

சங்க இலக்கியம் என்பது,

**"பழமைக்குப் பழைமையாகவும், புதுமைக்குப் புதுமையாகவும் உள்ள நிலையில் வேறு சில மொழிகளின் இலக்கியம் போலன்றி இன்றும் வளருகின்ற, வாழ்கின்ற மக்களின் இலக்கியமாகவும் உள்ளது. 2500 ஆண்டுகளுக்கு மேலாக வாழ்ந்து, வளர்ந்து வரும் இலக்கியம் ஆகும்"[5].**

சங்க இலக்கியம் பழந்தமிழரின் பண்பாடு, நாகரிகம் முதலியவற்றை விளக்கும் உயிரோவியமாக உள்ளது. மேலும் இயற்கை இலக்கியம், தூய இலக்கியம், வாய்மை இலக்கியம் எனக் கூறப்படுகிறது. சங்கப் பாடல் 'சான்றோர் செய்யுள்' என உரையாசிரியர்களால் போற்றப்படுபவையாகும்.

**“காதலும் போரும் பழைய இலக்கியங்களின் கருத்தாகவும், சமயமும் தத்துவமும் இடைக்கால இலக்கியங்களின் சாரமாகவும் பிரிவாகவும் அமைந்துள்ளன”**[6]

என்று பூர்ணலிங்கம் பிள்ளை கூறியுள்ளார்.

தொல்காப்பியம், திருக்குறள், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, தகடூர்யாத்திரை, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்கள் சங்க காலத்தில் தோன்றியவை எனக் கருதப்பட்டாலும், **“எட்டுத்தொகையும், பத்துப்பாட்டுமாகிய தொகுப்பு நூல்களையே சங்க இலக்கியங்கள்”**[7] எனச் சாற்றுவர். இவற்றைச் சுருக்கமாகப் “**பாட்டும் தொகையும்”**[8] என்பர்.

**எட்டுத்தொகை நூல்கள்**

சங்க இலக்கியங்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு எனப் பகுக்கப்பட்டுள்ளன. எட்டுத்தொகையை ‘எண் பெருந்தொகை’ என்றும் அழைப்பர். எட்டுத்தொகை நூல்களே, முதலில் தொகுக்கப்பட்டவை. அவை,

**“நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறம் என்று**
**இத்திறத்த எட்டுத் தொகை”**[9]

போன்றவை ஆகும்.

எட்டுத்தொகை

| நூல் | பாடல் | எண்ணிக்கை | பாடியோர் | அடி எல்லை | தொகுத்தவர் | தொகுப்பித்தவர் |
|---|---|---|---|---|---|---|
| நற்றிணை | அகம் | 400 + 1 | 192 | 9-12 | தெரியவில்லை | பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி |
| குறுந்தொகை | அகம் | 400 + 2 | 205 | 4-8 | -- | பூரிக்கோ |
| ஐங்குறுநூறு | அகம் | 500 + 1 | 5 | 3-6 | கூடலூர் கிழார் | யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை |
| அகநானூறு | அகம் | 400 + 1 | 145 | 13-31 | உருத்திரசன்மனார் | பாண்டியன் உக்கிரப்பெருவழுதி |
| கலித்தொகை | அகம் | 150 | 5 | 11-80 | நல்லந்துவனார் | -- |
| புறநானூறு | புறம் | 400 + 1 | 165 | 4-40 | -- | -- |
| பதிற்றுப்பத்து | புறம் | 100 | 8 | 8-57 | -- | -- |
| பரிபாடல் | அகமும் புறமும் | 70 | 13 | 25-400 | -- | -- |

- ❖ எட்டுத்தொகை நூல்களுள் அகப்பொருள் பற்றியவை- நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்து நூல்கள் ஆகும்.
- ❖ புறப்பொருள் பற்றியவை - புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய இரு நூல்கள் ஆகும்.
- ❖ அகமும், புறமும் கலந்து வருவது-பரிபாடல்.

ஐந்து பழைய தொகை நூல்கள் முழுவதும் அகப்பொருள் என்றும் காதல், கற்பனை பற்றியது என்றும் கூறப்பட்டுள்ளது. பரிபாடல் என்ற நூல் இனிய ஓசை நயம் அமைந்த செய்யுள் ஆகும். அவற்றுள் சில பாடல்கள் காதல் பற்றியவையும், சில பாடல்கள் தெய்வ வழிபாடு பற்றியவை ஆகும்.

பதிற்றுப்பத்து என்பது சேரநாட்டு அரசர் பதின்மரைப் பற்றிப் பத்துப்பத்தாகப் பாடப்பட்ட நூறு பாட்டுக்கள் கொண்ட தொகை நூல் ஆகும். புறநானூறு என்பது தமிழ்நாட்டு மன்னர்கள், சிற்றரசர்கள், வள்ளல்கள், சிறந்த குடிமக்கள் முதலானோரின் பெருஞ்செயல்களும், அரும்பண்புகளும் பற்றிப் பாடிய நானூறு பாட்டுக்கள் உடைய நூல் ஆகும். பொதுவான உண்மைகளை எடுத்துரைக்கும் பாட்டுக்களும் இந்தத் தொகுப்பில் உண்டு.

**"எட்டுத்தொகைப் பாடல்களின்**
**சிற்றெல்லை-3 அடி, பேரெல்லை-140 அடி"**[10]

இவ்வாறு அடியளவால் வகைப்படுத்திய இத்தொகை நூல்கள் ஒவ்வொன்றும் நானூறு பாக்களை உடையது.

**பத்துப்பாட்டு நூல்கள்**

**"ஆன்றோர் புகழ்ந்த அறிவினிற் றெரிந்து**
**சான்றோர் உரைத்த தண்டளமிழ்த் தெரியல்**
**ஒருபது பாட்டும்"**[11]

என நச்சினார்க்கினியரின் உரைச் சிறப்புப் பாயிரமும்,

**"பத்துப்பாட்டாதி மனம் பற்றினார் பற்றுவரோ**
**எத்துணையும் பொருட்கிசையா இலக்கணமில் கற்பனையே"**[12]

என்று பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் கூற்றும் பத்துப்பாட்டின் சிறப்பை உணர்த்தும்.

'பாட்டும் தொகையும்' எனும் போது, பாட்டு என்பது பத்துப்பாட்டைக் குறிக்கும். இங்குப் பாட்டு முன் கூறப்படும் பெருமை பெற்றது.

**“மூத்தோர்கள் பாடியருள் பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும்”**[13]

என்று தமிழ்விடு தூது இதனைப் புகழும். பத்துப்பாட்டிலுள்ள பாடல்களைப் பா என்றும் பாட்டு என்றும் சுட்டுவர். நூறு அடிகளுக்கு மேற்பட்டதும் ஆயிரம் அடிகளுக்கு உட்பட்டதுமான பத்து நெடும் பாடல்களைக் கொண்டது பத்துப்பாட்டு. இவை நெடும் பாடல்களாகவே உள்ளன. இவற்றை,

**“முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி மருவினிய**
**கோலநெடு நல்வாடை கோல் குறிஞ்சிப் பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து”**[14]

என்ற பாடல் மூலம் அறியப்படுகிறது.

பத்துப்பாட்டில் அகப்பொருளில் அமைவன நான்கு. புறப்பொருளிள் அமைவன ஆறு ஆகும். புறப்பொருள் பாடல்களில் மதுரைக்காஞ்சியைத் தவிர பிற ஐந்தும் ஆற்றுப்படைப் பாடல்கள் ஆகும். மதுரைக்காஞ்சி நிலையாமையை அறிவுறுத்தும் பாடல் ஆகும்.

பரிசில் பெற்ற கலைஞர் ஒருவர், எதிர்ப்பட்ட கலைஞர்களைத் தமக்குப் பரிசில் ஈந்த வள்ளலிடம் செல்லுமாறு வழிப்படுத்துவது, ஆற்றுப்படை ஆகும். ஆற்றுப்படை என்னும் இலக்கிய மரபினை வேறு எம்மொழி இலக்கியத்திலும் காண இயலாது. புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும் சில ஆற்றுப்படைப் பாடல்கள் குறைந்த அடிகளுடன் வருகின்றன. ஆற்றுப்படை பரிசில் பெறும் கலைஞரின் பெயரால் பெயர்பெறும். ஆற்றுப்படை நூல்கள் தமிழர் நாகரிகத்திற்கும், பண்பாட்டிற்கும் ஒளியூட்டுகிறது.

## பத்துப்பாட்டு

| நூல் | புலவர் | பாடப்பட்டோர் | அடிகள் | பொருள் |
| --- | --- | --- | --- | --- |
| திருமுருகாற்றுப்படை | நக்கீரர் | முருகன் | 317 | புறம் |
| பொருநராற்றுப்படை | முடத்தாமக் கண்ணியார் | கரிகாலன் | 248 | புறம் |
| சிறுபாணாற்றுப்படை | நல்லூர் நத்தத்தனார் | நல்லியக்கோடன் | 269 | புறம் |
| பெரும்பாணாற்றுப்படை | உருத்திரங்கண்ணனார் | இளத்திரையன் | 500 | புறம் |
| மலைபடுகடாம் | பெருங்கௌசிகனார் | நன்னன்சேய் நன்னன் | 583 | புறம் |
| மதுரைக்காஞ்சி | மாங்குடி மருதனார் | நெடுஞ்செழியன் | 782 | புறம் |
| முல்லைப்பாட்டு | நப்பூதனார் | நெடுஞ்செழியன் | 103 | அகம் |
| குறிஞ்சிப்பாட்டு | கபிலர் | ஆரிய அரசன் பிரகத்தனுக்கு | 261 | அகம் |
| பட்டினப்பாலை | உருத்திரங்கண்ணனார் | கரிகாலன் | 301 | அகம் |
| நெடுநல்வாடை | நக்கீரர் | நெடுஞ்செழியன் | 188 | அகம் |

சங்க இலக்கியம் அகம், புறம் என்னும் இருபெரும் பகுப்புடையதாகும். பண்டைத் தமிழரின் காதல், வீரம் என்னும் பேருணர்வுகளின் அடிப்படையிலேயே இப்பாகுபாடு அமைந்துள்ளது.

**அகவாழ்க்கை**

**"அகப்பொருளாவது போக நுகர்ச்சியாகலான் அதனால்**
**ஆன பயன்தானே அறிதலின் அகம் என்பர்"**[15]

அகம் என்பது,

**"ஒத்த அன்பான ஒருவனும், ஒருத்தியும் கூறுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம். அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்தது எனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்ப முறுவதோர் பொருள்"**[16] என்பர் நச்சினார்க்கினியர்.

அக ஒழுக்கமாகிய அகத்திணையைக் கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என ஏழு திணைகளாக வகுத்துக் கூறுவர் தொல்காப்பியர்.

கைக்கிளையாவது ஒருதலைக் காமம். பெருந்திணை என்பது பொருந்தாக் காமம். இவ்விரு திணைக்குரிய பாடல்கள் மிகக் குறைவு. ஏனைய ஐந்துமே அக மாந்தர்களின் தூய காதலை வெளிப்படுத்துகின்றன. எனவே இவ்வைந்திணையையும் 'அன்பின் ஐந்திணை' என்று குறிப்பர்.

**அன்பின் ஐந்திணைக்குரிய முதற்பொருள்கள்**

| திணை | நிலம் | பெரும்பொழுது | சிறுபொழுது |
|---|---|---|---|
| குறிஞ்சி | மலையும் மலை சார்ந்த இடமும் | குளிர்காலம் (கூதிர்காலம்) முன்பனிக்காலம் | யாமம் (இரவு 10 மணி முதல் 2 மணி வரை) |
| முல்லை | காடும் காடு சார்ந்த இடமும் | கார்காலம் | மாலை (முன்னிரவு 6 மணி முதல் 10 மணி வரை) |
| மருதம் | வயலும் வயல் சார்ந்த இடமும் | ஆறுபெரும் பொழுதுகளும் | வைகறை (பின்னிரவு 2 மணி முதல் 6 மணி வரை) |
| நெய்தல் | கடலும் கடல் சார்ந்த இடமும் | ஆறுபெரும் பொழுதுகளும் | எற்பாடு (பிற்பகல் 2 மணி முதல் 6 மணி வரை) |
| பாலை | மணலும் மணல் சார்ந்த இடமும் | இளவேனில், முதுவேனில், பின்பனி | நண்பகல் (பகல் 10 மணி முதல் 2 மணி வரை) |

**ஐந்திணைக்குரிய உரிப்பொருள்கள்**

குறிஞ்சி - கூடலும் கூடலின் நிமித்தமும்

முல்லை - இருத்தலும் இருத்தலின் நிமித்தமும்

மருதம் - ஊடலும் ஊடலின் நிமித்தமும்

நெய்தல் - இரங்கலும் இரங்கலின் நிமித்தமும்

பாலை - பிரிதலும் பிரிதலின் நிமித்தமும்

**ஐந்திணைக்குரிய கருப்பொருள்கள்**

| **திணை கருப்பொருள்** | **குறிஞ்சி** | **முல்லை** | **மருதம்** | **நெய்தல்** | **பாலை** |
|---|---|---|---|---|---|
| தெய்வம் | முருகன் | திருமால் | இந்திரன், வேந்தன் | வருணன் | கொற்றவை |
| மக்கள் | வெற்பன், குறவன், குறத்தி | தோன்றல், ஆயர், ஆய்ச்சியர் இடையர், மனைவி | ஊரன், உழவர், உழத்தியர், கடைசியர் | சேர்ப்பன், பரதர், பரத்தியர் | எயினர், எயிற்றியர், மறவர் |
| உணவு | மலைநெல், தினை | வரகு, சாமை | செந்நெல் | மீன், உப்பு விற்றுப் பெற்ற பொருள் | கவர் பொருள் |
| விலங்கு | புலி, யானை, கரடி, சிங்கம் | முயல், மான் | எருமை, நீர்நாய் | முதலை, சுறா | வலியிழந்த யானை, புலி, செந்நாய் |
| பூ | குறிஞ்சி, காந்தள் | முல்லை, தோன்றி | செங்கழுநீர், தாமரை, குவளை | நெய்தல், தாழை, முண்டகப்பூ | குரவம், பாதிரி |
| மரம் | அகில், வேங்கை, தேக்கு, சந்தனம் | கொன்றை, காயா | காஞ்சி, மருதம், வஞ்சி | புன்னை, ஞாழல் | பாவை, இருப்பை |
| பறவை | கிளி, மயில் | காட்டுக்கோழி, மயில் | நாரை, நீர்க்கோழி, குருகு | கடற்காகம், அன்னம் | புறா, பருந்து |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஊர் | சிறுகுடி | பாடி, சேரி | பேரூர், மூதூர் | பட்டினம், பாக்கம் | குறும்பு |
| நீர் | அருவி, சுனைநீர் | காட்டாறு | மனைக்கிணறு, பொய்கை, யாறு | மணற்கிணறு, உவர்க்கழி | வற்றியசுனை, கிணறு |
| பறை | தொண்டகம் | ஏறுகோட்பறை | மணமுழா, நெல்லரிகிணை | மீன்கோட்பறை | துடி |
| யாழ் | குறிஞ்சி யாழ் | முல்லையாழ் | மருதயாழ் | விளரியாழ் | பாலையாழ் |
| பண் | குறிஞ்சிப்பண் | முல்லைப்பண், சாதாரிப்பண் | மருதப்பண் | செவ்வழிப் பண் | பஞ்சுரம் |
| தொழில் | தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், வெறியாடல் | ஏறு தழுவுதல், நிரைமேய்த்தல் | நெல்லரிதல், களை பறித்தல், புதுநீராடல் | மீன்பிடித்தல், மீன் உணக்கல், உப்பு விளைத்தல் | வழிப்பறி, பகற் கொள்ளை, நிரை கவர்தல் |

**புறவாழ்க்கை**

புறம் என்பது வெறும் போரைக் குறிப்பது மட்டும் அல்ல. அறம், பொருள், இன்பம் என்று வகுக்கப்பட்ட மூன்றில் அறத்தையும், பொருளையும் விரிவாகத் தன்னுள் ஆட்படுத்திக் கொண்டிருப்பது புறம் ஆகும்.

> **"புறப்பொருளாவது மறஞ் செய்தலும், அறஞ் செய்தலும்**
> **ஆகலான் அவற்றான் ஆன பயன் பிறருக்குப்**
> **புலனாதலின் புறம் என்பர்-இளம்பூரணர்"**[17]

காதலைத் தவிர ஏனையவை அனைத்தும் புறத்திணையுள் அடங்கும். புறத்தில் போரும், போருக்கு அடிப்படையான வீரமும், சிறப்புப் பெறுகிறது. இத்தகைய சிறப்பு வாய்ந்த அகமும், புறமுமாக அமைந்த வாழ்க்கை பற்றியவை 'பொருள்' என்பதன் கண் அடங்கும்.

> **"பொருள் என்பதற்கு 'The Science of Akam and Puram' என ஆங்கிலத்தில் பொருள் கூறுவர் டாக்டர் சுப்பிரமணியம்"**[18]

ஆகவே போர் மட்டுமே புறமன்று. அறங்களைப் பற்றியும், பொருளைப் பற்றியும் உணர்த்துவது புறமாகும்.

சங்கப் புலவர்கள் போரிலே கூட அறத்தை வலியுறுத்துகின்றனர். கொடையறம் பற்றியும், சங்க இலக்கியங்களில் மிகுதியாகப் பேசப்படுகின்றன.

**சங்கம் பெயர்க்காரணம்**

சங்க இலக்கியம் என்ற பெயர் எப்படி அமைந்தது? சங்கம் என்பது அறிஞர் அறவோர் பலர் கூடி அமைக்கும் அமைப்பு. பிற்காலத்தில் (கி.பி.4,5-ஆம் நூற்றாண்டில்) சமண சமயத்தைச் சார்ந்த துறவிகள் தமிழ்நாட்டில் சங்கம் ஏற்படுத்திக் கல்வித் தொண்டும், சமயத் தொண்டும் புரிந்துள்ளனர்.

அவர்களின் காலத்துச் சங்கங்கள் போலவே, அதற்கு முந்திய காலத்திலும் புலவர்களின் சங்கங்கள் இருந்திருக்க வேண்டும் என்றும், பழைய பாட்டுக்கள் (எட்டுத்தொகை, பத்துப்பாட்டின் பாட்டுக்கள் முதலியவை) அந்தச் சங்கங்களைச் சார்ந்த புலவர்களால் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்றும் அறிஞர்கள் கருதினர்.

**"பழந்தமிழ் நாட்டில் மூன்று தமிழ்ச் சங்கங்கள் இருந்தன என்றும், மதுரையிலும், கபாடபுரத்திலும் இருந்த முதல் இரண்டு சங்கங்கள் மறைந்த பிறகு, மூன்றாம் தமிழ்ச் சங்கம் மதுரையில் பாண்டியர்களின் ஆதரவோடு அமைந்து நடந்தது என்பர். மூன்றாம் தமிழ்ச் சங்கத்து நூல்களே**

**எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் என்று கருதி, அவற்றைச் சங்க இலக்கியம்”**[19] என்று கூறினர். புலவர்கள் முயற்சியாலேயே சங்க இலக்கியம் எனப்படும் தொகை நூல்கள் அமைந்தன என்பது மறுக்க முடியாதவை ஆகும்.

சங்க இலக்கியங்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்று இரு பிரிவினை உடையது. சங்க இலக்கியத்தில் மொத்தம் இடம் பெற்றுள்ள பாடல்கள் 2387 ஆகும். இதில் அகப்பாடல்கள் 1877 மற்றும் புறப்பாடல்கள் 510 ஆகும். சங்கப் பாடல்களை பாடிய மொத்த புலவர்கள் 473 ஆவர். பெண்பாற் புலவர்கள் 30 பேர், அரசர்கள் 25 பேர் எனப்படுவர். சங்கப் பாடல்களின் எண்ணிக்கை 2381. இவற்றை அகம், புறம் என இருவகையாகப் பிரித்து நிற்பர். இவற்றுள் அகப்பாடல்களே அதிகம். இவற்றின் எண்ணிக்கை 1862.

சங்கச் சான்றோர்கள் என்று பெருமையோடு பேசப்படும் 473 புலவர்களின் கைவண்ணத்தில் தோன்றிய இலக்கியங்களே சங்க இலக்கியங்கள்.

**“வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த”**[20]

தமிழ் மொழிக்கும், தமிழ் இலக்கியத்துக்கும் பழமையையும் பெருமையையும் கொண்டு வந்து குவித்தவர்கள். அகப்பாடல்கள் பல்வேறு அக உணர்வுகள் பற்றியவை. புறப்பாடல்கள் புற உணர்வையும், புறச் செயல்களையும் பற்றியவை.

சங்க இலக்கியப் பாட்டுகளில் காணப்படும் பழைய மரபுகள் பல உண்டு. காதல் பற்றிய கற்பனையை அகம் என்றும், வீரம், கொடை, புகழ் முதலிய வாழ்க்கைத் துறைகளைப் புறம் என்றும் பகுத்த பாகுபாடு அந்த மரபுகளுள் முதன்மையானது ஆகும்.

**“அகப்பாட்டுக்களில் கற்பனையாகத் தலைவன், தலைவியின் காதல் பாடப்படும். புறப்பாட்டுக்களில் நாட்டை ஆளும் தலைவனுடைய சிறந்த வீரச்செயல்களும், கொடைப் பண்பும், குடிமக்களுள் சிறந்தவர்களின் அருஞ்செயல்களும் பிறவும் பாடப்படும்”**[21] என்று சங்கப்பாடல்கள் கூறியுள்ளன.

தமிழில் சங்கம் என்ற சொல் பேரெண்ணை உணர்த்தும் வகையில்,

**“நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்”**[22]

என்றும்,

**“வலம்புரிச் சங்கம் வறிதெழுந் தார்ப்ப**
**வலம்புரிச் சங்கம் பொருளோடு முழங்க”[23]**

எனவும் வந்துள்ளது. இரண்டாவதாக கூறப்பட்ட ‘சங்கம்’ புலவர் கூட்டத்தைக் குறிப்பதாக அமைந்துள்ளது.

சங்க இலக்கியம் ஏதேனும் ஒன்றிலாவது ‘சங்கம்’ என்னும் சொல் காணப்படவில்லை என்பது உண்மை ஆகும். இதற்கு காரணமும் இருக்கிறது. இக்காலத்தில் நூல் இயற்றும் ஆசிரியர் ஒருவர் ‘நான்’ இந்நூலை இன்ன இடத்தில் இன்ன பல்கலைக்கழகம் நிகழும் பொழுது ஆக்கினேன் என்று கூறித் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்ளும் மரபு இல்லை. இச்செய்திகளை நாம் அறிய வேண்டுமாயின் நூல் அச்சிடப்பட்ட ஊர், காலம் இவற்றை திரும்பிப் பார்க்க வேண்டும். பண்டைய புலவர்களும் இம்முறையைப் பின்பற்றி வந்தனர்.

**“தனிப்பாடலாசிரியரோ, நூலாசிரியரோ,தொகுப்பாசிரியரோ, இன்ன ஊரில், இன்ன காலகட்டத்தில் தாம் தம் பாட்டையோ, நூலையோ, தொகுப்பையோ படைத்ததாகக் குறிப்பிடும் வழக்கத்தை மேற்கொள்ளாமல் உள்ளனர். இக்காரணத்தாலேயே சங்கம், கூடல், மன்றம் என்னும் சொற்கள் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. அது மட்டும் இன்றி இப்பெயர்கள் அடங்கியிருந்த பாடல்களோ, நூல்களோ, அழிந்து போயிருக்கக் கூடும் அல்லது அழிக்கப்பட்டிருக்கவும் கூடும் எனக் கூறப்படுகிறது”[24]**

எனவே சங்கம் என்ற சொல் தமிழ்ச் சொல்லன்றாயினும் இப்பொருள் தரும் பல சொற்கள் சங்க காலத்தில் வழங்கி உள்ளன.

**தமிழ் வளர்த்த சங்கம் மூன்று**

வரலாற்றின் உயிர்நாடி காலக்கணிப்பாகும். இன்ன ஆண்டில், இன்ன திங்களில், இன்ன நாளில் இன்னது நிகழ்ந்தது என்று கூறுதல் வரலாற்றின் இலக்கணமாகும். பண்டைய தமிழகத்தின் வரலாற்றை அறிவதற்குத் துணைபுரியும் புறச்சான்றுகள் வெகு சிலவே. எனவே, அகச்சான்றுகளை நாடும் தேவை நேரிடுகின்றது. இவ்வகச்சான்றுகள் அத்தனையும் சங்க இலக்கியங்களில் கிடைக்கின்றன.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் தொகைகளில் சேர்க்கப்பட்டுள்ள இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள் எனப் பெயர் பெற்றுள்ளன. தொல்காப்பியம், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் சில. மணிமேகலை,

சிலப்பதிகாரம் ஆகியவற்றையும் சங்க இலக்கியங்களாகவே சேர்த்து எண்ணுவதுண்டு.

பண்டையத் தமிழகத்தில் தமிழ்ப் புலவர்கள் கூடித் தலை, இடை, கடை என மூன்று சங்கங்கள் கூட்டி அவற்றில் அமர்ந்து தமிழ் வளர்த்தார்கள் என்று கூறுவது மரபாக இருந்து வருகின்றது. கடைச்சங்க காலத்தில் எழுந்தவையே எட்டுத் தொகை, பத்துப்பாட்டு நூல்கள் எனக் கொள்வதும் தமிழகத்தில் வழக்கமாய் இருந்து வருகின்றது. பொதுவாகச் சங்கம் என்னும் சொல்லானது கடைச் சங்கத்தையே குறித்து நிற்கும்.

சங்கம் என்னும் சொல் தமிழ் அன்று என்றும் வடமொழிச் சொல்லின் மரூஉ என்றும் கூறுவர் சிலர். எனவே, தமிழ்நாட்டில் வடமொழி இடங்கொண்ட பிறகே சங்கம் தோன்றியது. தமிழ்ச் சொற்கள் கூடல், அவை, மன்றம் ஆகியவை சங்கத்தைக் குறிக்கும் தமிழ்ச் சொற்கள். தமிழ்ச் சங்கம் அல்லது கூடல் வளர்ந்த இடமாகிய மதுரையானது கூடல் என்னும் பெயராலும் வழங்கி வருகின்றது.

தமிழ் வளர்ந்த கூடலைத் **"தமிழ்கெழு கூடல்"**[25] என்று புறப்பாட்டு ஒன்று குறிப்பிடுகின்றது. சங்கம் என்னும் பெயர் ஏற்படுவதற்கு முன்பு கூடல் என்னும் சொல்லே வழங்கியிருக்க வேண்டும். சமணரும், பௌத்தரும் தத்தம் சமயங்களை வளர்ப்பதற்காகச் சங்கங்கள் நிறுவினார்கள். மதுரையில் நடைபெற்று வந்த கூடலை முதன் முதலில் அவர்களே சங்கம் என்று பெயரிட்டழைத்திருக்கக் கூடும். வைதிக ஆரியரும், சமணரும், பௌத்தரும் தமிழகத்தில் நுழைந்த பிறகு ஏற்பட்ட ஆயிரக்கணக்கான பெயர் மாற்றங்களுள் இஃதும் ஒன்றாக இருக்க வேண்டும்.

மூன்று சங்கங்கள் பல்வேறு காலங்களில் மதுரையில் தமிழ் வளர்த்த வரலாற்றைப் பல புராண ஆசிரியரும் ஏற்றுக் கொண்டுள்ளனர். திருவிளையாடற் புராணத்தின் ஆசிரியர் பரஞ்சோதியடிகள் தம் நூலில் தமிழ்ச் சங்கத்தைப் பற்றிப் பாடியுள்ளனர். வில்லிப்புத்தூரார் 15-ஆம் நூற்றாண்டினர். அவர் தாம் பாடிய பாரதத்தில்,

**"நன்றறிவார் வீற்றிருக்கும் நன்மாடக் கூடல்"**[26]

என்று மதுரையைப் புகழ்கின்றார்.

தமிழ் வளர்க்கும் சீரிய நோக்கத்துடன் பண்டைய காலத்துப் பாண்டிய மன்னர்கள் தமிழ் புலவர் பலரையும் ஒன்று கூட்டித் தமிழ்ச் சங்கங்களை நிறுவித்

தமிழுக்கு ஏற்றம் புரிந்தார்கள் என்பதும், இவ்வாறே சங்கம் தோற்றுவிக்கப்பட்டது எனலாம்.

**தலைச்சங்கம்**

கடல்கொண்ட தென்மதுரையில் முதற் சங்கம் நடைபெற்று வந்தது. சிவபெருமான், அகத்தியனார், முருகக் கடவுள், முரஞ்சியூர் முடிநாகனார், குபேரன் முதலாய ஐந்நூற்று நாற்பத் தொன்பதின்மர் அதன்கண் அமர்ந்து தமிழ் மொழியை வளர்த்தனர். அச்சங்கத்துடன் தொடர்பு கொண்டிருந்த புலவர்களின் தொகை மொத்தம் 4449 ஆகும். அவர்கள் பரிபாடல்கள் பலவற்றையும், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை என்ற நூல்களையும் இயற்றினார்கள். இத்தலைச்சங்கம் தொடர்ந்து 4440 ஆண்டுகள் நடைபெற்று வந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

**இடைச்சங்கம்**

இடைச்சங்கம் தோன்றி வளர்ந்தது கபாடபுரமாகும். தென்மதுரை கடல்கோளுக்குள்ளாயிற்று. கபாடபுரம் பாண்டி நாட்டுக்குத் தலைநகரமாயிற்று. இடைச்சங்கம் அங்கு நிறுவப்பட்டது. **“அகத்தியனார், தொல்காப்பியனார், இருந்தையூர்க் கருங்கோழியார், மோசியார், வெள்ளூர்க் காப்பியனார், சிறுபாண்டரங்கனார், திரையன் மாறனார், துவரைக்கோன், கீரந்தையார் முதலாய ஐம்பத்தொன்பதின்மர் இச்சங்கத்தில் அமர்ந்து தமிழாராய்ந்தார்கள்”**[27] கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலை அகவல் முதலிய நூல்களை அவர்கள் பாடினார்கள்.

அகத்தியம், தொல்காப்பியம், மாபுராணம், இசை நுணுக்கம், பூதபுராணம் ஆகிய இலக்கண நூல்களை அவர்கள் பயன்படுத்தி வந்தார்கள். இச்சங்கம் மூவாயிரம் ஆண்டுகள் நடைபெற்றதெனவும் கூறப்பட்டுள்ளது. பிறகு கபாடபுரத்தையும் கடல் கொண்டு போய்விட்டது.

**கடைச்சங்கம்**

பாண்டியர் நாட்டிலுள்ள மதுரை கடைச்சங்கம் ஆகும். இச்சங்கத்தில் அமர்ந்து தமிழ் வளர்த்த புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர். இவர்களுள் மூவர் பாண்டிய மன்னர். **“சேந்தம்பூதனார், அறிவுடையரனர், பெருங்குன்றூர் கிழார், இளந்திருமாறன், மதுரையாசிரியர் நல்லந்துவனார், மருதனிளநாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் ஆகியவர்கள் ஏனைய புலவர்களில் சிலர்”**[28].

இந்நாற்பத்தொன்பதின்மா் பாடிய பாடல்கள் நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலி நூற்றைம்பது, பரிபாடல் எழுபது, கூத்து, வரி, சிற்றிசை, பேரிசை முதலியன. கடைச்சங்க காலத்தில் வழங்கிய இலக்கண நூல்கள் அகத்தியம் தொல்காப்பியம் ஆகும். இச்சங்கம் 1850 ஆண்டுக் காலம் நீடித்ததாகவும் கூறப்பட்டுள்ளது. இக்கடைச் சங்கத்தை மதுரையில் நிறுவியவா் பாண்டியன் முடத்திருமாறன் ஆவாா்.

**சங்க இலக்கியங்களின் வளா்ச்சி**

கி.மு.500-லிருந்து கி.பி.200 வரை உள்ள காலத்தைச் சங்ககாலமாக இருக்கலாம் எனப் பல்வேறு அறிஞா்கள் கருதுகின்றனா். 2500 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த தமிழா்கள் தங்கள் மொழி மேல் தனிக் கவனம் செலுத்தி உள்ளனா். இதனை,

**“வட வேங்கடந் தென் குமரி**
**ஆயிடைத்**
**தமிழ் கூறும் நல் உலகத்து**
**வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்**
**எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்**
**செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு**
**முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்**
**புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்**
**நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து**
**அறங்கரை நாவின் நான்மறை முற்றிய**
**அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து**
**மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி**
**மல்குநீா் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த**
**தொல்காப் பியனெனத் தன்பெயா் தோற்றிப்**
**பல்புகழ் நிறுத்த படிமை யோனே”**[29]

வடக்கே வேங்கடம், தெற்கே குமரி, கிழக்கும் மேற்கும் கடல் எல்லையாகத் தமிழகத்தின் நில அளவு எல்லையாக இருந்திருக்கின்றது. ஆயினும் வாணிகம் தொடா்பாக கி.மு.விலேயே கிரேக்கம், உரோம், எகிப்து, சீனா போன்ற நாடுகளுடன் உறவு கொண்டிருந்தது. தமிழ்நாட்டை ஆண்ட சேர,

சோழ, பாண்டியர்கள் இலக்கியத்தை வளர்த்தனர். இவர்களின் கீழ் பல்வேறு குறுநில மன்னர்கள் நாட்டை ஆண்டனர். இவர்கள் புலவர்களை ஆதரித்து அவர்தம் வறுமையைப் போக்கினர். புலவர்களும் தங்கள் புலமையைக் காட்டிப் பரிசுகள் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்தனர்.

கி.மு.500 முதல் கி.பி.200 வரை உள்ள 700 ஆண்டு காலத்தில் தோன்றிய இலக்கியங்களே சங்க இலக்கியங்களாகும். முச்சங்கங்கள் பற்றிய குறிப்புகளை முதலில் தருவது இறையனார் அகப்பொருளேயாகும். தமிழ்நாட்டைப் பற்றி ஆய்வு மேற்கொண்ட நிலநூல் ஆய்வாளர்கள் இந்துமாக்கடல் ஒரு காலத்தில் பெரும் நிலப்பரப்பாக இருந்தது என்னும் கருத்தை கூறியுள்ளனர். இன்றைய குமரி முனைக்கும் தெற்கே இருந்த பெரும் நிலப்பரப்பில் ப.்.றுளியாறு ஓடியது. குமரி மலை இருந்தது. இதனை,

**"ப.்.றுளி யாறும் பன்மலை யடுக்கமும்**
**குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள"**[30]

என்று இளங்கோவடிகள் கூறியுள்ளார். தமிழ்நாட்டிற்கு எல்லை கூறியவர்கள் கிழக்கிலும், மேற்கிலும் கடல்கள் இருந்ததால் அவ்விரு பக்கமும் எல்லை கூறவில்லை. வடக்கிலும், தெற்கிலும் நிலப்பரப்பு இருந்ததால்தான் வடவேங்கடம் தென்குமரி என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்.

மதுரையைத் தலைநகராகக் கொண்டு காய்சின வழுதி என்ற பாண்டிய மன்னன் சங்கத்தைத் தோற்றுவித்தான். கடல்கோள் ஏற்பட்டு மதுரை உள்ளிட்ட பெரும் நிலப்பகுதி அழிந்துவிட, அடுத்த தமிழ்ச்சங்கம் கபாடபுரத்தைத் தலைநகரமாக கொண்டு வெண்தேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக 59 மன்னர்கள் இச்சங்கத்தைப் போற்றினார்கள். இச்சங்கத்தில் அகத்தியர், தொல்காப்பியர் உள்ளிட்ட 59 பேர் கலந்து கொண்டுள்ளனர். 3700 ஆண்டுக்காலம் இச்சங்கம் இருந்துள்ளது.

கடைச்சங்கம் மதுரையில் அமைந்தது. 1850 ஆண்டுகள் நடைபெற்று உள்ளன. சேந்தம் பூதனார், மருதனிளநாகனார், நக்கீரர், சிறுமேதாவியார் உள்ளிட்ட 49 புலவர்கள் சங்கத்தில் கலந்து கொண்டு உள்ளனர். 449 புலவர்கள் தமிழை வளர்த்தனர். பாட்டும், தொகையும் உட்பட கூத்து, வரி, குற்றிசை, பேரிசை போன்ற இலக்கியங்களும், இசை நூல்களும் தோன்றின.

சங்கம் இருந்துள்ள இடம் கபாடபுரமாகும். எனவே இந்நகரைப் பற்றி வடமொழியின் பெரும் புலவர்களான வால்மீகி, வியாசர், சாணக்கியர்

குறிப்பிட்டுள்ளனர். இதனால் பாண்டியர்களின் தலைநகரமாக கபாடபுரம் இருந்துள்ளது. இலக்கியங்கள் மூவேந்தர்களில் பாண்டியர்களைத் தமிழோடு இணைத்துப் பேசும் பாங்கினை வெறும் புகழ்ச்சி எனச் சொல்லி ஒதுக்கிவிட முடியாது. எனவே தான் அவர்தம் தலைநகர் மதுரையும் தமிழானது. இதனை,

**"தமிழ்நிலை பெற்ற தாங்குஅரு மரபின்**
**மகிழ்நனை மருகின் மதுரை"**[31]
**"தென்தமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரை"**[32]

என்றும்,

**"தென்தமிழ் மதுரை செழுங்கலைப் பாவாய்"**[33]

என மதுரையைத் தமிழோடு இணைத்துப் பாராட்டுகின்றனர்.

**"இமிழ்குரல் முரசம் மூன்றுடன் ஆளும்**
**தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே"**[34]

என்றும்,

**"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**
**மாங்குடி மருதன் தலைவன் ஆக**
**உலகமொடு நிலைஇய பார்புகழ் சிறப்பிற்**
**புலவர் பாடாது வரைகஎன் நிலவரை"**[35]

என்று தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் பாடியுள்ளார்.

**தமிழ் மொழியும் சங்க காலமும்**

தமிழ்மொழி மிக மிகத் தொன்மையான மொழியாகும். உலகின் தொன்மையான மொழிகள் எனக் கூறப்படும் எபிரேயம், கிரேக்கம், இலத்தீன் ஆகிய மொழிகளில் தமிழ்ச்சொல் வேர்கள் உள்ளன. இந்தியாவில் சிந்துவெளி நாகரிக காலத்து (அரப்பா காலகட்டம்) மொழி முதல் நிலை தமிழ் (திராவிட) மொழி என ஆய்வாளர்களால் நிரூபிக்கப்பட்டுள்ளது.

சிந்துவெளி காலத்து மொழி சுமேரிய மொழியுடனும், எலாமிய மொழியுடனும் ஒரு குடும்ப உறவு கொண்டிருந்தது. தமிழ் மொழிக்கும், சுமேரிய மொழிக்கும், எலாமிய மொழிக்கும் நெருக்கமான தொடர்பிருப்பதை ஆய்வாளர்கள் நிரூபித்துள்ளனர்.

ஐரோப்பாக் கண்டத்தில் கிரேக்கர்களுக்கு முந்திய அயோனியர்களுடைய மொழியுடனும், கிரீட் தீவில் நிலவிய மொழியுடனும், தமிழ் தொடர்புடையது என சுனித்குமார் சாட்டர்சி ‘திரவிடியன்’ (Dravidian) என்ற நூலில் விளக்கியுள்ளார்.

**“உரோமானியர்களின் முன்னோடிகளான எட்ரூரியர் (வடக்கு இத்தாலி) களுடைய மொழிக்கும் தமிழுக்கும் நெருக்கமான உறவுள்ளது. வடக்கு இத்தாலியில் ‘இலம்பார்டி’ சமவெளியில் தசுக்கனி என்ற இடத்தில் தமிழ்மொழியின் எச்சம் உள்ளது. ஐரோப்பாவின் மேற்கில் ஐபீரிய தீபகற்பத்தின் வடக்கில் ‘பிரனீசு’ மலைத்தொடரில் வாழும் பாசுக்கு (Basque) இன மக்களின் மொழி தமிழுடன் நெருங்கிய தொடர்புள்ளது”**[36]

இது போன்ற நிலை ஆசியாவில் சைபீரியாவின் கிழக்கில் காமாட்சி கட்கன் தீவக்குறையில் வாழும் மக்களுடைய மொழிக்கும் தமிழுக்கும் உள்ளது. ஆத்திரேலிய பழங்குடி மக்களின் மொழி தமிழுடன் உறவு கொண்டுள்ளது. ஆப்பிரிக்க மக்கள் பேசும் மொழிகளின் அடித்தளத்தில் தமிழின் வேர்கள் உள்ளன என்று கா.பா.அறவாணன் நிரூபித்துள்ளார். வடக்கு ஆப்பிரிக்க கெமெயிட்டிக் (Hemeitic) மொழிகளின் அடித்தளத்திலும், மேற்காசிய செமெட்டிக் (Semetic) மொழிகளின் அடித்தளத்திலும், அனைத்து ஐரோப்பிய மொழிகளின் அடித்தளத்திலும் தமிழின் வேர்கள் உள்ளன என்று இலகோவரி நிரூபித்துள்ளார்.

சப்பானிய மொழிக்கும் தமிழுக்கும் இலக்கண அடிப்படைகளும் சொல் ஒற்றுமைகளும் இருப்பதை சுசுமோ ஓனோ என்ற சப்பானிய ஆய்வாளரும் பிறரும் நிருபித்துள்ளனர். **“தமிழும் பாகதமும் ஒருதாய் ஈன்ற இரட்டையர்கள். இவைகளை பழமையான கூத்தத்தாள நூல் தென் தமிழ், வட தமிழ் எனக் குறிப்பிட்டது. தொல்லியலார் தெற்கு திராவிட மொழி, வடக்கு திராவிட மொழி என்கின்றனர். பாகதத்தின் வரிவடிவம் ‘பிராமி’யும் தமிழின் வரிவடிவம் ‘தாமிழி’யுமாகும்”**[37]

தென் திராவிட மொழி என அழைக்கப்படும் தமிழ் சிதைந்து தெற்குத் திராவிட மொழிக் குடும்பம் உருவாகியது. தமிழை தென் திராவிட மொழிக் குடும்பத்தின் மூத்தமொழி என்கின்றனர்.

**வரிவடிவங்கள் பிராமி**

இது பாகத மொழிக்குரிய வரிவடிவம். இதை பிரம்மா படைத்ததால் பிராமி என்ற பெயர் வந்த கதை பதிவு செய்யப்பட்டுள்ளது. இரிசபதேவர் பிராமி எழுத்துக்களை உருவாக்கினார் என்ற ஒரு மரபும் உள்ளது. சமணர் சூக்தங்களில் இதை 'பாம்பி' எனக் குறிப்பிட்டனர். பௌத்தர்களின் இலளித வித்தாரத்தில் பிராமி எனப்பட்டது.

மௌரியர் காலத்துக்கு முன் பிராமி வடபுலத்து எழுத்து வடிவாக விளங்கியது. மடகலங்களில் எழுதப்பட்டவை பார்வைக்கும் கிடைக்கின்றன. மௌரியர் காலத்தில் வட இந்தியாவிலும், தக்காணத்திலும் பயன்படுத்தப்பட்டது. சாதவாகனர் ஆட்சிக் காலத்தில் தமிழகத்தின் வடக்குப் பகுதிவரை பயன்படுத்தப்பட்டது. முற்காலப் பல்லவர்களும் பிராமி எழுத்துக்களைப் பயன்படுத்தினர்.

**தாமிழி**

**"தமிழுக்குரிய வரிவடிவம் தாமிழியாகும். சமண சூக்தங்களில் 'தாமிழி' எனவும் பௌத்தர்களின் இலளித வித்தாரத்தில் திராவிட லிபி"**[38] எனவும் குறிப்பிடப்பட்டது. இந்தக் காலகட்டத்தில் தக்காணம் முழுவதும் தாமிழி பயன்பட்டது. அன்றைய தமிழகத்து சிற்றூர்களில் கூட சாதாரண மக்கள் எழுதவும், படிக்கவும் பயன்படுத்தினர். கி.பி.மூன்றாம் நூற்றாண்டுக்குப்பின் இதன் உருவம் மெல்ல மெல்ல மாறியது. தாமிழி எழுத்துக்கள் பிராமி எழுத்து மாதிரி உருவ அமைப்பிருந்ததால் முந்தைய தொல்லாய்வினர் இதைத் தெற்கு பிராமி எழுத்துக்கள் என்றனர். இப்பொழுது தமிழ் பிராமி என்கின்றனர்.

**தேவநாகரி**

சமஸ்கிருதத்துக்குரிய எழுத்து வடிவம் தேவநாகரியாகும். தேவநகரத்தில் உருவாக்கியதாக ஒரு கதை உருவாக்கியுள்ளது. வடபுலத்து பிராமி வரிவடிவங்களை செம்மை செய்த வரிவடிவங்களே தேவநாகரி வரிவடிவங்களாகும். 'சுங்க-கன்வ' காலகட்டத்தில் வடிவமைத்திருக்க வேண்டும். இவை போன்ற எழுத்துக்கள் சங்க காலத்தில் இருந்துள்ளது. சங்க காலத்தில் தமிழ் மொழியும் வளர்ச்சி அடைந்துள்ளன.

## தொகுப்புரை

- ❖ பழந்தமிழ் சமூகத்தின் வரலாற்றை விளக்கும் ஆவணங்களாகத் திகழ்வன சங்க இலக்கியங்கள் ஆகும். சங்ககால மக்கள் அகத்திலும், புறத்திலும் தன்னிகரில்லாத வகையில் வாழ்ந்துள்ளனர். குறிப்பாக காதல் வாழ்விலும் புரிதலுடனும் விட்டுக்கொடுத்து போகும் மனப்பக்குவத்துடனும் இருந்ததை உணரமுடிகிறது.

- ❖ ஐந்திணையின் முதற்பொருள் வாயிலாக மக்கள் வாழ்ந்த நிலங்களின் தன்மையை அறிந்து கொள்ள முடிகிறது. கருப்பொருளின் வாயிலாக மக்களின் உணவு, உடை, தொழில், தெய்வங்கள் ஆகியவற்றை பற்றி அறிய முடிகிறது. தமிழ் மொழியை வளர்த்த மூன்று சங்கங்கள் பற்றியும், வரிவடிவ எழுத்துக்கள் உருவான விதம் பற்றிய செய்திகள் முறையாக அமைந்துள்ளது.

- ❖ சங்ககால மக்களின் வாழ்க்கை முறை அம்மக்களின் நாட்டுணர்வு, அவர் தம் வீரச் சிறப்பு, அக்காலப் புலவர்களின் ஆழ்ந்தகன்ற புலமை, மகளிரின் வீரப் பண்பு போன்ற செய்திகளை புறநானூற்றுப் பாடல்கள் சுவைபடக் கூறியுள்ளன.

- ❖ புறநானூற்றினை வரலாற்றுக் களஞ்சியம் என்பர். சங்க கால மக்களின் உண்மை நிலையை முழுவதுமாக தெளிவுப்படக் கூறுவதால் புறநானூறு இணையற்ற இலக்கியமாக விளங்குகிறது.

## இயல் ஒன்று

## சான்றெண்விளக்கம்


1. அகத்தியலிங்கம் ச. டாக்டர்-சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே ப-79
2. வரதராசன் மு-தமிழ் இலக்கிய வரலாறு ப-29
3. மேலது ப-29
4. மேலது ப-29
5. அகத்தியலிங்கம் ச டாக்டர்-சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே ப-80
6. வேங்கடராமன் க.கோ.முனைவர்-தமிழ் இலக்கிய வரலாறு ப-48
7. மேலது ப-48
8. மேலது ப-48
9. மேலது ப-50
10. மேலது ப-50
11. மேலது ப-66
12. மேலது ப-66
13. மேலது ப-66
14. மேலது ப-68
15. இளம்பூரணார்-தொல்காப்பியம்-பொருள்-நூ-90
16. நச்சினார்க்கினியர்-தொல்காப்பியம்-பொருள்-நூ-72
17. இளம்பூரணார்-தொல்காப்பியம்-பொருள்-நூ-125
18. பழனிச்சாமி செ.டாக்டர்-புறநானூற்றில் தமிழர் பண்பாடு-ப-4
19. வரதராசன் மு-தமிழ் இலக்கிய வரலாறு ப-29
20. அகத்தியலிங்கம் ச டாக்டர்-சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே-ப-81
21. வரதராசன் மு.-தமிழ் இலக்கிய வரலாறு-ப-30
22. சோமசுந்தரனார் பொ.வே.-பரிபாடல்-ப-2
23. புலியூர்க்கேசிகன்-மணிமேகலை-ப-113
24. பிள்ளை கே.கே.டாக்டர்-தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும்-பக்-73,74
25. பாலையன் அ.ப-புறநானூறு-பா-58
26. பிள்ளை கே.கே.டாக்டர்-தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும்-பக்-74

27. மேலது ப-75
28. மேலது ப-75
29. இளம்பூரணனார்-தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் ப-9
30. ஸ்ரீசந்திரன் ஜெ-சிலப்பதிகாரம்-ப-78
31. மாணிக்கவாசகன் ஞா.-பத்துப்பாட்டு-சிறுபாணாற்றுப்படை-ப-91
32. ஸ்ரீசந்திரன் ஜெ-சிலம்பு-ப-10
33. புலியூர்க்கேசிகன்-மணிமேகலை-ப-22
34. பாலையன் அ.ப.-புறநானூறு-பா-58
35. புறநானூறு-பா-72
36. மேலது ப-72
37. மேலது ப-74
38. மேலது ப-75

## இயல் இரண்டு

## சங்ககால வாழ்வியலில் சமூகம்

- முன்னுரை
- உயிர்க் குலங்களின் தோற்றம்
- பரிணாம வளர்ச்சியில் மனிதனின் தோற்றம்
- சமுதாய வாழ்க்கை
    - சமூகம்
    - தாய்வழிச் சமூகம்
    - பேறு காலத் தனிமை
    - சேய் வழி அழைத்தல்
    - தந்தை வழிச் சமூகம்
- ஊர்களும் கிராமப்புறமும்
- குடவோலை முறை
- சங்ககால ஊராட்சி முறை
- சாதி முறை
- அடிமை நிலை
- சங்ககால மகளிரில் மனையற மாண்புகள்
- கற்பு
- கலைச் சிறப்பு
- திருமண முறை
- தீப்பாய்தல்
- கைம்மை
- கணிகையர்
- மக்களின் சிறப்புக்கள்
- உண்டியும், குடிவகைகளும்
- ஆடை, அழகு சாதனங்கள்
- அணிகலன்கள்
- மகளிர் அணி வகைகள்
- நறுமணப் பொருள்கள்

## இயல் இரண்டு

## சங்ககால வாழ்வியலில் சமூகம்

### முன்னுரை

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க இலக்கியம் மக்களின் அகப்புற வாழ்வியலைத் தன்னகத்தே கொண்டுள்ளது. மன்னன் என்பவன் சமூகத்தை வழி நடத்திச் செல்கிற தலைமைப் பண்பு உள்ளவனாகக் கருதப்படுகிறான். அவனைச் சார்ந்தே சமூகம் இயங்குகிறது. சமூகம் இயங்குவதைப் போல குடும்பத்தில் தந்தை வழிச் சமூகம் உருவாகியுள்ளது.

சங்ககாலத்தில் பெண்கள் திறமையுடன் விளங்கியதால் தாய்வழிச் சமூகம் நிலவி உள்ளது. பெண்ணாதிக்கச் சமுதாயத்தில் தாய்வழி உறவுகள் பெருமையாகக் கருதப்பட்டன. பெண்ணிற்க்கு மதிப்பும், மரியாதையும் கொடுத்து உள்ளனர். சங்ககாலத்தில் அரசர்கள் சிறப்பாக ஆட்சி செய்து உள்ளனர். அரசர்களை மக்கள் குடவோலை முறையில் தேர்ந்தெடுத்தனர். ஆண்கள், பெண்கள் எனத் தனித்தனியாக ஆடை, அணிகலன்களை அணிவித்து மகிழ்ந்துள்ளனர். இவ்வாறு சங்ககால மக்களின் சமூக நிலையைப் பற்றி இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

### உயிர்க் குலங்களின் தோற்றம்

உலகம் சுமார் 450 கோடி ஆண்டுகளுக்கு முன்பு தான் சிதறிய வண்ணம் இருந்த தூசியும், துகள்களும், கொதித்துக் கொண்டிருந்த குடிக்கற்களும் இணைந்து ஒரு நெருப்புக் கோளமாக உருண்டு திரண்டது. பிறகு அதன் மேற்பரப்புப் பல லட்சம் ஆண்டுகளை எடுத்துக் கொண்டு மெல்ல மெல்ல குளிர்ந்து கொண்டே வந்து ஒரு திடமான உருண்டையாக உருப்பெற்றது. அந்த உருண்டை சூரிய மண்டலத்தின் தலைவனான சூரியனை சுற்றி வலம் வரவும் ஆரம்பித்தது. பூமி என்று நாம் இப்போது அழைக்கிற அந்தப் பெயர் இல்லாத உருண்டையின் எந்த இரண்டு இடுக்கிலும் புல், செடி, கொடியோ, கடுகளவு உயிரினமோ கிடையாது.

சுமார் 100 கோடி ஆண்டுகளுக்குப் பிறகே பூமியில் கடல்கள் உருவாகின. அநேகமாக 350 கோடி ஆண்டுகளுக்கு முன்பு எப்படியோ ஒரு விசித்திரம் நிகழ்ந்ததால் கடலுக்குள் பாக்டீரியா என்கிற நுண்ணுயிர்கள் தோன்றின. நீரிலேயே செடிகள் தோன்றின. உருப்படியான உயிரினம் மீன்கள்தான். இவை 40 கோடி ஆண்டுகளுக்கு முன்பு தோன்றின.

பூமிக்கோளம் முழுவதும் நீரால் நிரம்பியிருந்தது. சூரிய வெப்பத்தால் நீர் ஆவியாகி வெளியேறி மேலே செல்லச் செல்ல பூமியின் நீர்மட்டம் குறைய ஆரம்பித்தது. பூமியின் உட்பகுதியில் நெருப்புக் குழம்பு இருப்பதை எரிமலைகள் மூலம் இப்போதும் நாம் உணர்வோம். இதுபோல கடலுக்கடியிலும் எரிமலைகள் வெடித்துச் சிதறி நீரினால் குளிர்ந்து மலைகள் உருவாகின. நீர் மட்டம் குறையும் போது நீருக்கு மேல் இது போன்ற மலைகள் தோன்றின.

இப்போது நீரும், நீருக்கு மேல் மலை உள்ளதையும் அறிய வேண்டும். இதைத்தான் புறப்பொருள் வெண்பா நூலாசிரியர் ஐயனாரிதனார்,

**“கல் தோன்றி மண்தோன்றா காலத்தே – வாளொடு**
**முன்தோன்றி மூத்த குடி”**[1]

என்கிறார். நீரிலுள்ள சில உயிரினங்கள் ஆமை போன்றவை. மலையில் ஏறி சிறிது நேரம் இருக்கப் பழகியது. கொஞ்சங் கொஞ்சமாக நீரிலும் மலையிலும் இருக்கப் பழகியது. பின்னர் நீர்வற்றி நிலம் தோன்றிய போது தாவரங்கள், பறவைகள், மிருகங்கள் தோன்றின.

**பரிணாம வளர்ச்சியில் மனிதனின் தோற்றம்**

சுமார் மூன்று லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பெண் ஆப்பிரிக்காவின் தென்பகுதியில் ஒரு மலைச்சரிவில் நடந்து சென்றாள். உண்ண உணவு, உடுக்க உடை, படுக்க இடம் என்று எதுவும் இல்லாமல் விலங்குகளோடு தானும் ஓர் விலங்காக வாழ்ந்த மனித இனம். இதனை,

**“வேறுள குழுவை யெல்லாம் மானுடம் வென்றதன்றோ”**[2]

என்று கம்பராமாயணம் பாடல் வழி அறிய முடிகிறது.

மனித இனம், இயற்கைப் பேரிடர்களுக்கும், பறவைகள், விலங்குகள், ஊர்வன ஆகியவைகளின் இடையூறுகளுக்கும் இடையே போராடித்தான் வளர்ந்து வந்திருக்கிறது. உணவு தேடுதல், வேட்டையாடுதல், பாலுணர்வு ஆகியவைகளுக்கு விலங்குகளே மனிதனின் முன்னோடி ஆகும்.

உயிரினங்களின் இலக்குகள் மகிழ்ச்சி, மனநிறைவு, இனப்பெருக்கம் என்று கொள்ளலாம். மனிதன் இன்பத்திற்காக ஒரு பெண்ணை நாடினானே தவிர இனப்பெருக்கமும் அதில் அடங்கியிருக்கிறது என்பது தெரியாது. ஏனெனில் பெண்ணுக்குக் குழந்தை பிறந்த போது அதற்கு காரணம் ஆணின் பங்கும் இணைந்துள்ளது என்பது ஆண் மகனுக்கும் தெரியாது, பெண்ணுக்கும் தெரியாது. பெண்ணின் வயிற்றில் உருவாகிக் குழந்தை பிறப்பதால் பெண்ணே

முழுமுதற்காரணம் என்று நம்பினர். அதனால்தான் தாய்வழிச் சமூகம் ஏற்படலாயிற்று.

> **“மலையாளிகளிடையே தாய்வழி மூலமே உறவுமுறைகளை கணிக்கும் முறைமையும், இம்முறை நாயர்கள், பந்தர்கள், தீயர்கள், சிரியன், கிறிஸ்துவர்களிடையேயும் உள்ளது. திராவிடரும் தொடக்கத்தில் தாய்வழி மரபினராகவே இருந்தனர்”**[3]

தந்தை என்று குறிப்பிடுவதே டிரோப்பிரியாந்து தீவில் வாழும் மக்களுக்குத் தெரியாத விஷயமென்று சந்தேகமற்ற முறையில் **மாலினோவ்ஸ்கி** கூறியிருக்கின்றார். ஆடவர்களில் ஒருவன் ஓர் ஆண்டோ அல்லது அதற்கும் மேலாகவோ கடற்பயணம் போய்விட்டுத் திரும்புகையில் தன் மனைவிக்குத் தான் வெளிநாடு சென்றிருந்த போது குழந்தை பிறந்திருப்பதைக் கண்டு மகிழ்வான். ஆண் தன் மனைவியின் ஒழுக்கத்தில் களங்கம் உள்ளதென்று ஐரோப்பியர் யாராவது குறிப்பாகச் சொன்னால் அவனுக்குப் புரிவதேயில்லை.

> **“ஏதோ சில தெய்வங்கள் குழந்தைகளை எடுத்துக் கொண்டுவந்து தாய்மார்களின் உடலில் பொருத்துவதாக அம்மக்கள் நம்புகின்றனர். கன்னிகள் கருத்தரித்தல் இயலாதென்பது அவர்களும் அறிந்ததே. ஆனால் அச்சிறு தெய்வங்களுக்குக் குறுக்கே ‘ஹைமன்’ என்னும் திருமணத்துக்கான தெய்வம் நின்று தடை செய்வதால் கன்னிகள் கருத்தரிப்பதில்லை என்று அவர்கள் நம்புகிறார்கள். குழந்தைகளுக்கும் அவளுடைய கணவனுக்கும் இரத்தத் தொடர்பு இருப்பதாக அவர்கள் கருதுவது கிடையாது. பெண் (தாய்) வழியாகவே மரபு கூறப்படுகிறது”**[4]

### சமுதாய வாழ்க்கை

அக்காலத்துச் சமூக, பொருளாதார நிலை, மக்களால் ஏற்றுக் கொள்ளவும் போற்றவும் பட்ட பண்பாடு பற்றிய கருத்துக்கள், லட்சியங்கள் அவற்றை நிலை நிறுத்திய நிலையங்கள் மற்றும் செயற்பாடுகள் என்பவற்றைப் பற்றி சங்க இலக்கியம் அசாதாரணமான அளவிற்க்கு முழுமையும் உண்மையுமான விவரங்களைத் தருகின்றது.

தொடக்ககால ஆரியர் சமுதாயத்தைப் போல, சங்ககாலத் தமிழர் சமுதாயமும் தொல்பொருள் சாதனங்களில் சிலவும் இலவாயினும் நிரம்பிய

இலக்கியம் ஒன்றை விட்டுச் சென்றுள்ளது. அவ்விலக்கியத்திலுள்ள விவரங்களைக் கொண்டு, அக்காலத் தமிழர் சமுதாயத்தைப் பற்றி அறிய முடிகிறது.

பண்டைத் தமிழ்ச் சமூகம் அடிப்படையில் ஒரு குடிமுறை அமைப்பேயாகும். சாதிமுறை அச்சமூகத்தின் குறிப்பிடத்தக்க அங்கமாகிவிட்ட போதிலும் அச்சமூகம் தன் குடிமுறைத் தன்மையை நீடித்தது என்பது காணத்தக்கது.

தென் இந்தியாவின் குறிஞ்சி நிலங்களிலும், ஒதுக்குப்புறமான இடங்களிலும் நீலகிரித் தோடர்கள், நாகர்கள் போன்றவர்கள் வாழ்ந்திருக்கிறார்கள்.

சிங்களக் காடுகளில் வாழ்ந்த வேடர்கள் வேட்டைத் தொழிலை மேற்கொண்டவர்கள். தமிழரது வேடர்களினின்றும் அவர்கள் வேறானவர்கள். அவர்களைப் போலவே பழங்குடிகளாயினும் சமூகத்தில் பெரும்பாலோரினின்றும் ஒதுங்கி நின்றனர் பிற குடிகள். அவர்கள் வாழ்ந்த வேறுபட்ட புவியியல் நிலைகளைப் பொறுத்து இக்குடிகளின் இயல்பு, தன்மை, செயற்பாடுகள் மிகவும் வேறுபட்டன.

நாட்டை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று பிரிப்பது செயற்கையான இலக்கியப் பாகுபாடு அன்று. ஏனெனில் அத்தகைய நிலப்பாகுபாடு தமிழகத்தில் உண்மையாகவே இருந்தது. அங்கிருந்தவர்களில் ஒருவா், வேடர் என அழைக்கப்படுவார். மேலும் ஆடுமாடு மேய்ப்பவர், உழவர், மீனவர், கள்ளர், போன்றவா்கள் இருந்தார்கள். அவர்களது தோற்றம், உடை, உணவு, தொழில், பழக்கவழக்கங்கள் முதலியவை இயல்பாகவே வேறுபட்டன.

அவர்கள் ஒருவரோடு ஒருவர் உறவாடி வந்த அளவிற்குச் சண்டையிட்டும் வந்தனர். ஆனால் அவர்கள் எல்லோரும் தென்இந்தியாவின் அடக்கமான குறுகிய ஒரு நிலப்பரப்பில் வாழ்ந்தமையால், ஒன்றிய வாழ்க்கை இன்றியமையாததாயிற்று.

தமிழகத்து நிலப்பகுதிகளான குறிஞ்சி, பாலை. முல்லை, நெய்தல், மருதம் என்னும் ஐவகைப் பாகுபாட்டைக் கொண்டு பி.தி. ஸ்ரீனிவாஸ ஐயங்கார் ஒரு முடிவு காண்கிறார்.

இந்நிலங்கள் முறையே வேடர், கள்ளர், இடையர், மீனவர், உழவர் என்பவா்களின் வாழிடங்கள். இவ்வாறு அமைக்கப்பட்ட ஒரு சமுதாய ஏற்பாடு தென் இந்திய நாகரீக வளர்ச்சியின் வரலாற்றைத் தோற்றுவித்ததாக அமைகிறது.

**தாய்வழிச் சமூகம்**

தாய்வழிச் சமூகம் இலக்கிய காலத்திற்க்கு முந்தியது. சரித்திர காலத்திற்கு முந்தியது. மிகவும் பழமையானது. இந்த உலகம் தோன்றிய காலத்தில் இருந்தது

தாய்வழிச் சமூகம் தான். இன்றைக்கு ஒரு தந்தை குடும்பத் தலைவராக இருப்பது போன்று ஒரு குடும்பத்திற்கு மட்டுமல்ல கூட்டத்துக்கும் தலைவராக பெண்ணே இருந்திருக்கிறாள். நாகரீகமே இல்லாத காலத்தில் ஆடையின்றி விலங்கோடு விலங்காக வாழ்ந்து கொண்டிருந்தான். அவனுக்கு எப்போது ஆறாவது அறிவு வேலை செய்யத் தொடங்குகிறது தெரியுமா? **‘சேமிப்பு’** என்கிற ஒன்று வருகின்ற போதுதான். இந்த சேமிப்பு உணர்வு பெண்ணுக்குத்தான் முதலில் வந்தது. சேமிப்பு உணர்வு ஆணுக்கு வராமல் ஏன் பெண்ணுக்கு ஏற்பட வேண்டும்? அதற்குக் காரணம் இருக்கிறது. பெண்தான் இனவிருத்தி செய்கிறவள். குழந்தை பெற்றுக் கொள்கிறவள். அவளுடைய முதல் சேமிப்பு அவளுடைய குழந்தைதான் என்று இஸ்ரேல் நாட்டின் முன்னாள் **‘ தலைவி கோல்டாமேயர் ’** கூறியுள்ளார்.

தற்போது இருக்கும் சமூகத்தில் ஆண் ஆதிக்கத்துக்கே சான்றுகள் அதிகமாக உள்ளன. சமீபகால முறைக்குச் சான்றுகள் ஆதிக்கம் அகப்படுவது இயற்கையே. பெண் ஆதிக்கச் சமுதாயம் மறைந்துவிட்டது. மறைந்துவிட்ட சமூக முறைகளைப் பற்றிய சான்றுகள் தேடிப் பிடித்தால்தான் அகப்படும். அவற்றிலிருந்து அச்சமுதாயத்தை நாம் புனரமைத்து வருணிக்க வேண்டும்.

மனிதன் தனது உணவை வேட்டையாடிப் பெற்றான். வேட்டையாடி உணவு பெற்ற மனிதரை ‘வில்லேறுழவர்’ என்று பண்டை நூல்கள் அழைக்கின்றன. அக்காலத்தில் வேட்டைத் தொழிலில் சிறந்தவர்களுக்கு ஏற்றம் இருந்தது. காரணம் சமூகத்திற்குத் தேவையான உணவை அவர்களே தேடி அளித்தார்கள். உலோகங்கள் கண்டுபிடிக்கப்பட்ட காலத்தில் மனிதன் வேலை செய்தான். வேல், வேட்டைக் கருவி ஆயிற்று. வேலைக் குறிப்பார்த்துத் திறமையாக எறிபவன் சிறப்பாக வேலன் என்று அழைக்கப்பட்டான். உணவு தேடுவதில் அவனுக்கிருந்த, முக்கியப் பங்கு குறித்து அவன் சிறப்புப் பெற்றான். வேலன் சக்தி மிகுந்தவன் என்று கருதப்பட்டான். அவர்களை வேடர்கள் போற்றினார்கள். வேலனை சக்தி மிகுந்தனவாகக் கருதித் தெய்வமாக வழிபட்டனர்.

மனிதன் வேட்டையாடி உணவு தேடிய காலத்தில் ஆண்களே வேட்டைத் தொழில் செய்தனர். அவர்களே சமுதாயத்தில் ஆதிக்கம் வகித்தனர். அதனால் பெண்கள் குகைகளிலும், குடிசைகளிலும் தங்கினர். அவர்கள் செடி, கொடிகளைக் கண்டனர். அவற்றின் இனப்பெருக்கத்தை அனுபவத்தில் கண்டனர். இயற்கையைப் பின்பற்றித் தாங்களும் விதைகளை நிலத்தில் ஊன்றினர். கிழங்குகளை நிலத்தை அகழ்ந்து புதைத்து மூடினர். ஆடு, மாடுகள் வளர்ச்சியுற்றுப் பலனளித்தன.

இவ்வாறு பண்டையப் பயிர்த் தொழில் தோன்றிற்று. பயிர்த் தொழில், வேட்டைத் தொழிலிலிருந்து கிடைப்பதை விட அதிகமாக உணவு கிடைத்தது. முதலில் பெண்களே பயிர்த்தொழிலில் ஈடுபட்டனர்.

**“பெண் ஆதிக்கச் சமுதாயம் தோன்றி வளரும் சரித்திர முற்காலத்தில் பெண்தெய்வங்கள் தோன்றின”[5]**

பயிர்த்தொழில் செழிப்பைக் கொடுத்தது. ஆகவே செழிப்பைக் குறிக்கும் தெய்வங்கள் பல நாடுகளிலும், பெண் தெய்வங்களாகவே இருக்கின்றன.

**“சீதேவி, கிரேக்க தெய்வங்களான சைபீல் டெடோனா, டெல்பி முதலியவை பெண் தெய்வங்கள். செழிப்பை வேண்டி நடத்தப்படும் விரதங்களிலும், விழாக்களிலும் பெண்கள் மட்டுமே கலந்து கொள்கின்றனர்”[6]**

பாவை நோன்புகளிலும் பெண்களே கலந்து கொள்கின்றனர்.பாவைகள் பலவகைப்படும்.

**“அல்லிப்பாவை, கொல்லிப்பாவை, தெற்றிப்பாவை, மணற்பாவை, வண்டற்பாவை முதலியன. நாடு வளம் செழிக்க இவற்றைப் பெண்கள் பூசை செய்வார்கள். மழைவளம் சுரக்கவும், ஆற்று நீர் நிலத்தை விதையேற்கும் பருவமாக்கவும், முளை வளரவும், பயிர்வளம் பல்கவும் பாவையை வாழ்த்துகிறார்கள்”[7]**

பெண்ணாதிக்கச் சமுதாயத்தில் தாய்வழி உறவு பெருமையாகச் சொல்லப்படுகிறது. ஆணாதிக்கச் சமுதாயத்தில் தந்தை வழி உறவு பெருமையாகச் சொல்லப்படுகிறது. சிலப்பதிகாரத்தில் கொற்றவை வழிபாட்டு முறை சொல்லப்படுகிறது. கொற்றவை கோயில் ஐயைக் கோட்டிடம் என அழைக்கப்படுகிறது. ஐயைக்கு விழாச் செய்ய வேண்டுமென நாள் குறித்துச் சொல்லுபவள். அவள் தெய்வ வெறி கொண்டு ஆடுபவள் ஆவாள்.

**“பழங் கடனுற்ற முழங்கு வாய்ச் சாலினி”[8]**

என்று அவள் வருணிக்கப்படுகிறாள். ஒரு குமரிப் பெண்ணை கோலம் புனைந்து ஐயை என்று பெயரிட்டுக் கலைமான் மீது ஏற்றி வணங்குகிறார்கள். இதனை,

**“இட்டுத் தலையெண்ணும்**
**எயின ரல்லது**
**சுட்டுத் தலை போகா**

**தொல்குடிக் குமரியை**

**சிறு வெள்ளாவின்**

**குருளை நாண் சுற்றி,**

**குறு நெறிக் கூந்தல்**

**நெடு முடி கட்டி,**

**இளை சூழ் படப்பை**

**இழுக்கிய வேனத்து,**

**வளை வெண்கோடு**

**பறித்து மற்றது**

**முளை வெண்**

**திங்க ளென்னச் சாத்தி**

**மறங் கொள் வயப்புலி**

**வாய்பிளந்து பெற்ற**

**மாலை வெண் பற்றாலி**

**நிரை பூட்டி**

**வளியும், புள்ளியும்**

**மயங்கு வான் புறத்து**

**உரிமை மேகலை**

**உடீ இப்பரிவோடு**

**கருவில் வாங்கும்**

**கையத்துக் கொடுத்து"[9]**

பறையும், குழலும், சூறைச் சின்னமும், முழங்கவும் மணியிரட்டவும் தெய்வமென எழுந்தருளுவித்து வேடர்கள் (எயினர்) வணங்குகின்றனர். பூசைக்குரிய சந்தனத்தையும், மலரையும், சாம்பிராணியையும் எயிற்றியர் (பெண்கள்) ஏந்தி வருகிறார்கள். தெய்வமும், பெண் தெய்வம், பூசனை முழுவதும் பெண்களின் உரிமை. இது பழங்காலப் பெண்ணாதிக்க வளர்ச்சி ஆகும்.

முதன்முதலில் பூப்பெய்தியதிலிருந்து, மாதவிடாய் நிற்கும் காலம் வரை, பெண் செழிப்பின் சின்னமாக கருதப்படுகிறது. அதற்க்கு முன்னும், பின்னும் அவள் கருவுயிர்த்து, இனச் செழிப்புக்குக் காரணமாவதில்லை.

ஆகவே மாதவிடாய் உதிரம் மாயசக்தி உடையது, செழிப்புக்கு அறிகுறி என்ற கருத்துப் புராதன மக்களுக்கு ஏற்பட்டது. இன்னும் நாகரிகமடையாத

தொல்குடி மக்களுக்கு இந்த நம்பிக்கை உள்ளது. மாதவிடாய் பருவத்திலுள்ள பெண்களை விதை முளைக்கும் வயலைச் சுற்றி வரச் செய்தால் விதை வளர்ந்து நல்ல பயன் தரும் என்று அவர்கள் நம்புகிறார்கள். இதற்க்கு அடிப்படையான காரணம் மனிதனது பிறப்புக்கு ஆண் பெண் உறவு காரணம் ஆகும். அதுபோல உலகில் எல்லாம் தோன்றுவதற்கு உடலின் நிகழ்ச்சிகள் போன்ற வேறு பிரகிருதி நிகழ்ச்சிகள் காரணம் என்ற நம்பிக்கையும், பிரகிருதியின் செழிப்பை, பெண்ணின் செழிப்புச் சக்தி வளர்க்கும் என்ற நம்பிக்கையுமே ஆகும். ஆகவே சங்க காலத்தில் தாய்வழிச் சமுதாயம் சிறந்து விளங்கியது.

**பேறுகாலத் தனிமை**

பேறுகாலத் தனிமை என்பது மனைவி குழந்தை பெறும் இறுதி நாட்களில் அவள் அவதிப்படும் நடைமுறைகளை அவளின் கணவனும், அவளுடன் இருந்து அவதிப்படுவதாகும். அனைத்து வேலைகளையும் விட்டொழித்து மனைவி அருகிலேயே தனிமைப்பட்டுக் கொண்டும், குறைந்த உணவு உட்கொண்டும், அதிலும் பிரசவத்திற்கேற்ற சுவை மாறுபட்ட உணவை உட்கொண்டும், மனைவிக்கு ஏற்படும் உடல்வலி தனக்கும் ஏற்படுவது போல் பாவனை செய்து கொண்டும் முடங்கிக் கொண்டும் இருப்பதாகும்.

> **“இந்தத் தற்காலிகப் பாவனை, வேதனை மூலம் பிறக்கும் குழந்தைக்குத் தானே தந்தையென்றும், தந்தையின் பங்கும் பேறு காலத்தில் முதன்மையானது என்றும் உணர்த்தும் இம்முறை உண்மையில் தாய்வழிச் சமூகத்திற்குரியதன்று. ஏனெனில் அங்குப் பெண்களே முன்னிரிமை பெறுவதால், ஆண்கள் அடையாளம் பெறுவதில்லை. மாறாகத் தாய்வழிச் சமூகம் அழிக்கப்பட்டுத் தந்தைவழிச் சமூகம் கால் கொண்ட சூழலில் தந்தையின் அடையாளத்தையும், முக்கியத்துவத்தையும் உணர்த்தும் பொருட்டுப் பேறுகாலத் தனிமை ஏற்பட்டது என்பார் டைலர்”**[10]

இம்மாற்றம் தாய்வழிச் சமூகத்தில் தந்தைவழிச் சமூகம் இணைந்ததை அடையாளமாகக் கொள்ளலாம்.

‘குறத்தி பிரசவ வலி வரும்போது அவள் கணவன் மருந்து தின்பான்’ என்ற பழமொழி தமிழில் உள்ளதையும் நாம் பார்க்க வேண்டும்.

**சேய்வழி அழைத்தல்**

குழந்தைகள் பெயரை முன்வைத்து அக்குழந்தையின் பெற்றோரைக் (குறிப்பாகத் தந்தையை) குறிப்பிடுதல் அல்லது அழைக்கும் முறையே ‘சேய்வழி

அழைத்தல்' எனப்படும். உறவு முறையின் ஒரு பகுதியாக இம்முறை சமூகத்தில் நிலைபெற்று வந்துள்ளது.

சேய்வழி அழைத்தல் முறையானது தாய்த்தலைமை குடும்ப முறையின் எஞ்சி நிலைத்தவையாக இன்றும் பல சமூகங்களில் காணப்படுகிறது.

பெண்கள் தங்கள் தலைப் பிரசவத்தைப் பிறந்த வீட்டில் (தாய்வீட்டில்) வைத்துக் கொள்ள வேண்டும் என்ற மரபு தாய்வழிச் சமூகத்தின் எச்சக்கூறு. இனச்சந்ததியின் தோற்றமும், தொடர்ச்சியும் தாய்வழித் தாயகத்தில் தான் நிகழ வேண்டும் என்பது கூற்று ஆகும்.

இக்காலத் தாய்வழிச் சமூகங்களின் அமைப்பு வேறுபாடுகள், ஒரு சமூகத்தின் அமைப்பு முறையை விளக்கிக் கொள்வதில் நான்கு முதன்மையான கூறுகள் உள்ளன. அவை,

- ❖ குடிவழி
- ❖ திருமணத்திற்குப் பின் தம்பதியினர் வாழுமிடம்
- ❖ சொத்துரிமை யாருக்குக் கிடைக்கிறது
- ❖ குடும்பத்தை நிருவகிக்கும் அதிகாரம் யாரிடம் அமைகிறது என்பவையாகும்.

இந்நான்கு கூறுகளையும் முன் வைத்துத் தாய்வழிச் சமூகங்களின் அமைப்பியல்களைத் தாய்வழி, தாயகம், பெண்வழிச் சொத்துரிமை, தாய்த்தலைமை என்னும் கருத்தமைவுகளாகப்படுத்திக் கொள்ளலாம்.

தாய்மாமன் மகளை மணக்கும் வழக்கம் தாய்த்தலைமைப் பண்பாட்டின் அம்சம் என்கிறார் எரன்.ஃ.பெல்ஸ். தாய்த்தலைமைப் பண்பானது இந்தியப் பண்பாட்டில் குறிப்பாகத் திராவிடப் பண்பாட்டில் ஓங்கியிருக்கிறது என **ஸ்மிகிட், காப்பர்ஸ்** ஆகிய இனவியலாலர்கள் சுட்டுவதையும் **எரன்.ஃ.பெல்ஸ்** குறிப்பிடுகிறார். பூர்வீகத் திராவிடப் பண்பாட்டில் தாய்த்தாய முறை இருந்தது என்கிறார். **சர்ஜான் மார்ஷல்.**

சங்க நூல்களுள் பதிற்றுப்பத்து இம்மருமக்கள் தாயமுறையை விளக்கும் முதன்மை நூலாக விளங்குகிறது. முதற்பத்து, இறுதிப்பத்து தொகுக்கப்படாத நிலையில் இடைப்பட்ட எட்டுப்பதிகங்களும் சேரர்களின் தாய்வழித் தாயமுறையை விளக்குகின்றன. சேரரின் பெண் வழித் தாயமுறையைப் பல அறிஞர்கள் ஆராய்ந்து விளக்கியுள்ளனர்.

**"உலகந்தழுவிய நிலையில் தந்தை வழிச் சமுதாயங்களில் திருமணம் என்பது பெண் எடுத்தலைக் குறிக்கும். தாய்வழிச் சமுதாயங்களில் இதற்கு மாறாக மணமகன் பெறுதலைக் குறிக்கும். ஆக உலகளாவிய நிலையில் திருமணம் என்பது ஒரு குழுவிலுள்ள மணத்துணையை வேறொரு குழுவினர் பெறுதலைக் குறிக்கிறது என லெவிஸ்ட்ராஸ் கூறுகிறார்"[11]**

**தந்தை வழிச் சமூகம்**

பண்டைத் தமிழ் நூல்களில் பல அரசர், சிற்றரசர்களைப் பற்றிப் படிக்கிறோம். சிறப்புப் பெற்ற அவர்களெல்லாம் ஆண்கள். அவர்கள் தாயமுறை ஆண் வழியாகவே காணப்படுகிறார்கள். தெய்வங்களில் ஏற்றமுடைய அனைத்தும் ஆண் வழியாகவே காணப்படுகின்றன.

**"1) குறிஞ்சித் தெய்வமான – சேயோன் (முருகன்)**

**2) முல்லைத் தெய்வமான – மாயோன் (திருமால்)**

**3) நெய்தல் தெய்வமான – வருணன்**

**4) மருதத் தெய்வமான - இந்திரன் ஆகிய அனைவரும் ஆண்பால் தெய்வங்களே"[12]**

காவியங்களில் ஆண்களே தலைமை பெறுகிறார்கள். மணிமேகலை கதைத் தலைவியாக உருவாக்கப்பட்டிருப்பினும் அவளது ஆசிரியர் அறவணர் என்பவர் ஆண் என்பது சிந்தனைக்குரியது. சீவக சிந்தாமணி, பெருங்கதை ஆகிய காவியங்களில் ஆண் தலைமைப் பண்பு பெற்று காணப்படுகிறார்கள். பல பெண்கள் அவனுக்கு வாழ்க்கைப்பட்டு அவனது வெற்றிக்கு உதவுவதும், பெண்களுக்கு ஆண்கள் தாழ்ந்த ஸ்தானத்தைத் தான் காவியங்கள் அளிக்கின்றன என்பது தெளிவாகிறது.

புறநானூற்றில் பெரும்பாலான செய்யுட்கள், ஆண்களின் வெற்றிச் சிறப்பையும், கொடைச் சிறப்பையும் போற்றுகின்றன. பெண் கவிகள் சிலர் பாடிய செய்யுட்கள் இத்தொகை நூலிற் காணப்பட்ட போதிலும், அவை ஆண்களுடைய வீரத்தையும், கொடையையும் பாராட்டுவனவாகவே உள்ளன.

ஒன்றிரண்டு செய்யுட்கள் பெண்களுடைய துயரங்களைச் சித்தரித்த போதிலும் அவை ஆண்களைப் பிரிந்த போது பெண்கள் படும் வேதனையாகவே இருந்திருக்கிறது. இவை எல்லாவற்றையும் சான்றாகக் காட்டி தமிழ்நாட்டில் எப்பொழுதும் தந்தைவழிச் சமுதாயமே இருந்து வந்திருக்கிறதென்றும், ஆண்

ஆதிக்கச் சமுதாயமே எப்பொழுதும் நிலை கொண்டுள்ளது என்பதை நாம் அறிய முடிகிறது.

> “**மனைவி கருவுற்றிருக்கும் போதும் குழந்தை பிறந்த போதும், ஒருவன் தன் மனைவியுடனேயேயிருந்து வந்தானானால் குழந்தை பிறந்ததும் அதன்பால் அவனுக்கு இயல்புணர்ச்சியாலே ஏற்படும் அன்பு தோன்றுவதாகவும், இக்காரணமே தந்தை நிலையின் அடிப்படையென்றும் மாலினோவஸ்கி கருதுவது சரியாகும்”**[13]

ஒரு குழந்தையின் நலனை ஒரு மனிதன் பேணுவதற்கு இரண்டு தெளிவான காரணங்கள் இருக்கின்றன.

- ❖ ஒன்று அக்குழந்தை அவனுக்கே பிறந்ததாக நம்புகிறான். ஆகவே அதன் நலனை விரும்பிகிறான்.
- ❖ இரண்டு தன் மனைவிக்குப் பிறந்த குழந்தை என்ற முறையிலும், அக்குழந்தையின் நலனைப் பேணுபவனாகிறான்.

தந்தை இல்லாமல் குழந்தை தோன்ற முடியாது என்ற உண்மை தெரிந்த பின்னர் இன்று நாம் பழக்கப்பட்டுவிட்ட தந்தை வழிச் சமுதாயம் உருவாகியிருக்க வேண்டும்.

தந்தை வழி மூலமே பிள்ளைப் பேறு ஏற்படுகின்றது என்ற உடல் தத்துவ முறை தெரிய வந்ததும் தந்தையின் உணர்வில் ஒரு புது அம்சம் இடம் பெற்றது. அந்த அம்சமே உலகில் எல்லா இடங்களிலும் தந்தை வழிச் சமூகங்கள் அமைய வழி கோலிற்று.

**ஊர்களும் கிராமப்புறமும்**

தமிழ்ச் சங்ககாலப் பொது வாழ்வியல் மன்னனாட்சியில் அடங்கிற்று. சங்ககாலத்தின் தமிழகத்தில் சில முக்கியமான நகரங்களும், துறைமுகங்களும் ஏராளமான கிராமங்களும் இருந்தன. நகரங்களிலுள்ள **“வீடுகள் சுட்ட செங்கல்லால் ஆனவை”**[14] **“கூரை ஓடுவேய்ந்தது”**[15] **“ஒவ்வோரமயங்களில் மேன்மாடம் திறந்த வெளியாயிருக்கும்”**[16]

சுட்ட செங்கல்லாலும் கலவை மண்ணாலும் சுவரெழுப்பப்பட்டன. மதில் சூழ்ந்த ஊர்களையும், அரண்மனைகளையும் போல, பிற சில வாழிடங்களும் சுவர்களால் சூழப்பட்டிருந்தன. **“கூரையிலிருந்து விழும் மழை கூடுவாய் மூலை (அம்பணம்) வழியே வழிந்தது. இச்சாதனம் மீன் வடிவினது. வீடுகளில் சாளரங்கள்**

**இருந்தன. அவற்றைக் காதலர் (காற்று வீசும் வழி) அல்லது கட்டளை என்றனர். அவையும் மீன்கள் போன்றமைக்கப்பட்டன”**[17]

கதவுகளைப் பிணைக்க நுகம் என்னும் குறுக்குச் சட்டம் இடப்பட்டது. புதவு என்பவை சிறு பொருந்து கதவுகள். அக்கதவுகள் எளிதிற் பொருந்துவனவாய் இரு பலகைகளாலாகிச் சேரிடத்தில் தாளிடப்பட்டன.

வீடுகளில் முன்பக்கங்களில் உயர்த்திக் கட்டப்பட்ட வேதிகைகள் இருந்தன. சுவர்களை அலங்கரிக்கச் செம்மண் இடப்பட்டது. தரை சாணத்தால் மெழுகப் பெற்றுத் தூசி படியாமல் வைக்கப்பட்டது. வீட்டுச் சாக்கடை அங்கணம் எனப்பட்டது.

ஒவ்வொரு வீட்டிற்கும் பெரும்பாலும் ஒரு கிணறு இருந்தது. தண்ணீரை ராட்டினத்தில் பொருந்திய கயிறுகளால் சேந்தினர். வீட்டுச் சுவர்கள் மீது விலங்கு உருவங்கள் வரையப் பெற்றன. செல்வர் வீடுகளைச் சுற்றி அழகான தோட்டங்கள் இருந்தன. செய்குன்றுகளும் (கண்ணாடிப்) பளிக்கறைகளும் செல்வர் கண்ட வாழ்க்கை வசதிகள் ஆகும்.

கிராமம் என்பதே, இந்தியாவில் எப்போதும் போல, ஆட்சி நிர்வாகத்தின் அடிப்படைப்பகுதி. பொதுவாகக் கிராமம் தனது விவகாரங்களைத் தானே கவனித்துக் கொண்டது. “**ஊர் என்பது நகரமாகலாம். ஆனால் அது சேரியைவிடப் பெரியது. சேரி என்பது ஒரு பக்க ஊரேயாதலின்”**[18] **என்பதாகும்.**

கிராம விவகாரங்களை மேற்பார்த்தல் என்னும் நிலையில் கீழ்க்கண்ட சொற்களை காண்கிறோம். **“மன்றம், பொதியில், அம்பலம், அவை, என்பவை ஒரு பொருள் பல சொல்”**[19]**.** தல காரியங்களைக் கவனிக்க ‘அவை’ கூடிற்று. ஆனால் திருமுருகாற்றுப்படையில் மன்றமும், அம்பலமும் வெவ்வேறு நிறுவனங்கள் போலக் கூறப்படுகின்றன.

திருக்குறளில் கூறப்பட்டிருத்தல் போல, சங்ககால ஆட்சி முறையில் ஒரு மத்திய அரசும், தல நிறுவனங்களும் அடங்கின என்று வி.ஆர். ராமச்சந்திர தீட்சிதர் கூறுவார். பொதியில் கிராமத்தில் பெரும்பாலும் அதற்கு வெளியில் அமைந்த ஓரிடம். அது அநேகமாக மரத்தடியில் இருக்கும். அ∴து,

- ❖ இளைப்பாற வருவோரும்,
- ❖ பொழுது போக்காக (வம்பு) பேச வருவோரும்
- ❖ பொறுப்புள்ள அரசியல் பேசுவோரும்

❖ அரசியல் - நீதிமன்ற அலுவல்களோடு தொடர்புபட்ட கிராமப் பொதுமக்களும் கூடும் இடமாகும்.

இவ்விடம் பண்டைய சமய அலுவல்களோடு ஒன்றி அமைந்ததாகும். அது முற்றிலும் ஒரு கிராம நிறுவனமாம். ஆயினும் அதனைத் தலைநகரிலுள்ள 'அவை' யோடு பொருத்தி, அங்கு மன்னனது அறக்களத்து அவைபோல நீதி நிர்வாக விஷயங்களைப் பற்றி விவாதித்தனர் எனல் ஆகும்.

சங்கத் தமிழகத்துச் சிறந்த பட்டினம் காவிரிப் பூம்பட்டினமாகும். அதனைப் பொதுவாகப் பட்டினம் என்றே கூறுவர். இப்போது சென்னையைக் கூறுவது போல, சேரி என்பது ஊர் அல்லது கிராமத்தின் புறப்பகுதியாக அமைந்தது. பாக்கம் என்பது பக்கத்திலுள்ளது. பெரிய வீதி சாலை எனப்படும். ஊரிலுள்ள சிறிய வீதிகள் தெருக்களாகும். பள்ளி அல்லது மலர்வனம், நீச்சல்குளம் முதலியவை பொருந்திய இன்பச் சேரிடங்கள் இலவந்திகை எனப்பட்டது. ஆவணம் அல்லது அங்காடி கடைத்தெருவாம். நகர், மனை, இல் என்பவை கோவில், அரண்மனை, வீடு என்பவற்றைப் பொதுவாகக் குறிக்கின்றன.

**சங்ககால ஊராட்சி முறை**

சங்க காலத்தில் முடியரசர்கள் ஆட்சி செலுத்தி வந்தனர். அவர்களது ஆட்சியில் மக்களும் பொறுப்பாளர்களாக இருந்து வந்துள்ளனர். அரசர்களால் அமர்த்தப்பட்ட அலுவலர்கள் மட்டுமின்றி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களும் ஆட்சியில் பங்கேற்றுள்ளனர் என்பதற்குச் சங்கப் பாடல்களில் தெளிவான சான்றுகள் பரவலாகக் காணப்படுகின்றன. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்கள் ஊர்களிலும், நகரங்களிலும் பொறுப்பேற்றிருந்தனர் என்பது தெரிய வருகிறது. இவர்களின் ஆட்சியை 'ஊராட்சி' என்று நாம் குறிப்பிடலாம்.

சங்க நூல்களிலும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலும் **"ஊராண்மை என்னும் சொல் பயின்று வந்துள்ளது"**[20] தவற்றைத் திருத்திக் கொள்ளுதல் என்பது அச்சொல்லின் பொருள். ஊரை ஆளும் கழகங்கள், ஊராண்மைக் கழகங்கள், மக்களின் நடத்தையில் தவறு கண்டவிடத்துத் திருத்தி நல்வழிப்படுத்தியமையால் ஊராண்மை என்னும் சொல்லிற்க்கு அப்பொருள் அக்காலத்தில் அமைந்துள்ளது. இதை பின்வரும் திருக்குறள் மூலம் அறிய முடிகிறது.

**“பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்**

**ஊராண்மை மற்றதன் எ.ஃ.கு”**[21]

அரசன் பங்கேற்கும் அவை அரசவை என்றும், இதனை **“அரசவை இருந்த தோற்றம் போல”**[22] என்று பொருநர் ஆற்றுப்படை பாடல் மூலம் அறிய முடிகிறது. மேலும், **“இசைபெறு திருவின் வேத்தவை ஏற்பத்”**[23] வேத்தவை என்றும் கூறப்படும். இந்த அவையில் வேந்தர்களும், மன்னர்களும் கூடி நாட்டின் நலன் கருதி ஆராய்வர். இதில் மக்கள் உடனிருந்தும், மகளிரும் அங்குச் சென்று தம் குறையைக் கூறி முறைவேண்டலும் உண்டு. அரசன் நாள்தோறும் பங்கேற்ற அவை ‘நாளவை’ என்று வழங்கப்பட்டது. இது பகற் காலத்தில் அரண்மனையில் கூடும். இந்த அவைக்குள் புலவர்கள் அரசனின் அனுமதி இல்லாமலேயே நுழையலாம்.

இங்குப் பொருநர், பாணர் முதலானோர் தம் இசைக் கருவிகளை முழக்குவர். இதனை,

**“களக்கனி யன்ன கதழ்ந்துகிளர் உருவின்**

**வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்**

**அமைவரப் பண்ணி அருள்நெறி திரியாது**

**இசைபெறு திருவின் வேதத்தவை ஏற்பத்**

**துறைபல முற்றிய பைதீர் பாணரொடு”**[24]

என்ற மலைபடுகடாம் பாடல் வரிகள் மூலமாகவும்,

**“இருணிலாக் கிழிந்த பகல்செய் வைகறை**

**ஒருகண் காக்கிணை தெளிரிப்ப வொற்றிப்**

**பாடிமிழ் முரகசி னியறோத் தந்தை**

**வாடா வஞ்சி பாடினெ னாக”**[25]

என்ற புறநானூறு பாடல் வரிகளால் அறிய முடிகிறது.

ஊரை ஆளும் முறைமை, அதாவது நிருவகிக்கும் முறைமையும் ஊராட்சியாளர்களிடம் இருந்திருக்கலாம். மழைக்காலத்தில் ஊர் ஏரியைக் காவற்காரனைக் கொண்டு காவல் காத்து வந்தது போன்ற செயல்கள் ஊராட்சி மன்றங்களால் மேற்கொள்ளப்பட்டவை என்று எண்ண முடிகிறது. உற்றார் உறவினர்கள் கூடிச் செயல்படும் அவையில் திருமணப் பேச்சு முதலான உறவு நிகழ்ச்சிகள் ஆராயப்பட்டன. இதில் வயது முதிர்ந்தவர்களுக்கு முதன்மை இடம் அளிக்கப்பட்டது.

இந்த இருவகை மக்கள் அவையில் வேறு பல பொது வாழ்வு நிகழ்ச்சிகளும் இடம்பெற்றன என்று தெரிய வருகிறது. தன்னை விட்டுவிட்டு மற்றொருத்தியிடம் வாழ்ந்த தன் கணவனை ஒருத்தி அவை முன் இழுத்துவர முயல்கின்ற செய்தியும், அவன் அவைக்கு அஞ்சித் தப்பி ஓடிவிடுகின்ற செய்தியும் பரிபாடலில் விளக்கப்பட்டுள்ளன. அவை,

**"மடமதர் உண்கண் கயிறாக வைத்துத்**
**தடமென்தோள் தொட்டுத் தகைத்து மடவிரலால்**
**இட்டார்க்கு யாழார்த்தும் பாணியில் ஏம்மிழையைத்**
**தொட்டார்த்தும் இன்பத் துறைப்பொதுவி! கெட்டதைப்**
**பொய்தல் மகளிர்கண் காண இகுத்தந்திவ்**
**வையைத் தொழுவத்துத் தந்து அடித்திடித்து**
**மத்திகை மாலையா மோதி அவையத்துத்**
**தொடர்ந்தேம் எருது தொழில் செய்யா தோட"**[26]

தன் உணவுக்காக வரகினைக் கடன் வாங்கும் ஒருவன் ஊரவையைச் சான்றாக வைத்து அந்த அவையத்தார் முன்னிலையில் கடன் வாங்கும் செய்தி கூறப்பட்டுள்ளது. இதை புறநானூறு பாடல் விளக்குகிறது.

**"ஒக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்**
**சிறுபுல் லாளர் முகத்தளவ கூறி**
**வரகு கடனிர்க்கு நெடுந்தகை"**[27]

சங்க காலத்தில் கிழமை என்னும் சொல் தொடர்புரிமை என்னும் பொருளை உடையது. கிழமையர், கிழமையோன், கிழமையான், கிழவர், கிழத்தியர், கிழவது,கிழவியது முதலான சொற்களும் இப்பொருளிலேயே கையாளப்பட்டுள்ளன. இதனால் கிழார் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் என்பது தெளிவாகிறது.

**குடவோலை முறை**

ஊர்த் தலைவர்களாக வரத் தகுதியுடையவர்கள் பெயர்களைத் தனித்தனி ஓலையில் எழுதி ஒரு பானையில் இட்டு மூடிக் கயிற்றால் கட்டி வைத்தனர். பின் அந்தக் கயிற்றை அவிழ்த்துப் பானையிலிருந்த ஓலைகளில் ஒன்றை எடுத்தனர். அதில் எழுதப்பட்டிருந்த எழுத்தைப் பலரறிய வெளிப்படுத்திவிட்டு எஞ்சிய ஓலைகளை அழித்துவிட்டனர். அரசுப் பதிவுகளைச் செய்யும் ஆவண மாக்கள் இதனைச் செய்தனர். இச்செயல் போரிட்டுச் சாய்ந்த வீரனின் குடலை, எருவைப்

பறவை தன் அலகுகளால் குத்தி ஈர்ப்பது போன்று இருந்தது என்று அகநானூற்றில் கூறப்பட்டுள்ளது.

**“கயிறு பிணிக் குழிசி ஓலை கொண்மார்**
**பொறி கண்டு அழிக்கும் ஆவணமாக்களின்**
**உயிர் திறம் பெயர, நல் அமர்க் கடந்த**
**தறுகணாளர் குடர் தரீஇ, தெறுவர,**
**செஞ்செவி எருவை, அஞ்சுவர இகுக்கும்”**[28]

வீரனின் குடலை ஈர்க்கும் பறவைக்கு உவமையாகப் பானையிலிருந்து ஓலையை எடுக்கும் பதிவு அலுவலர் காட்டப்பட்டுள்ளதைக் கொண்டு ஊரவைத் தலைவர் சங்க காலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட முறைமையை உணர முடிகிறது.

சங்க காலத்தில் முடியாட்சிக்குத் துணையாக மக்களாட்சி முறையும் அமைந்திருந்தது. அரசனால் அமர்த்தப்பட்ட அலுவல் தலைவர்களும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறப்புடைத் தலைவர்களும் ஆட்சியில் ஈடுபட்டிருந்தனர். “**ஊரவை, குடவோலை முறை கிழார் முதலானவற்றால் அறியப்படும் செய்திகள், சங்க காலத்தில் குடியாட்சி முறை இருந்தமையைக் காட்டும் சான்றுகளாகும்”**[29].

**சாதி முறை**

சமுதாயத்தைச் சாதி அடிப்படையில் பிரிப்பது என்பது இந்தியாவிற்கே சிறப்பாக உரியது. சாதி என்பது பிற இடங்களில் எப்போதும் ஒன்று சேர்ந்து நிகழாத சூழ்நிலைகளின் உடன் நிகழ்ச்சியேயாகும். எம். ஸ்ரீனிவாஸ ஐயங்கார் தாம் இயற்றிய **Tamil Studies** என்னும் நூலில் தமிழ்ச் சாதிகளின் பரப்பை வரிசைப்படுத்தியுள்ளார். இன்றைய தமிழ் மக்களை மூன்று இனவகையாகப் பிரிக்கலாம். அவை **“1. ஆரியர், 2. திராவிடர், 3. நாகர், அன்றியும் ஆகியோர்கள் ஆவார்கள். பிராமணரை ஆரியர் என்றும், வேளாளரைத் திராவிடர் என்றும், வலையர், பள்ளர், சாணார், இடையர், மறவர், அகம்படியர், பறையர், கைக்கோளர், கம்மாளர், வன்னியர் (பள்ளி), கள்ளர், அம்பலக்காரர் என்போரைக் கலப்பு நாகர் என்றும், குறவரைக் கலப்படமற்ற நாகர்”**[30] என்றும் கூறப்பட்டது.

வெவ்வேறு மொழி பேசுவோர் வெவ்வேறு கலாசாரங்களை உருவாக்கினார்கள். திராவிட மொழிகளான தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் அல்லது துளு என்பவற்றைப் பேசுவோர் திராவிட இனத்தவர்கள் என்றும், இந்தோ ஆரிய மொழிகளில் எ∴தொன்றையும் பேசுவோரும் ஆரிய இனத்தவர்கள் என்றும் கூறுவது இதுவரை பல நூற்றாண்டுகளாக இருந்து

வருகிறது. சாதி அடிப்படையில் எழுந்த சமுதாயத்தில் நிகழும் அகப்பேற்றை கணக்கிட்டாலும் கூட இ∴துண்மையே எனலாம்.

சுதேசிப் பழங்குடிகளில் சிலவற்றை இலக்கியம் குறிப்பிடுகின்றது. இவர்கள் வேடரும், எயினரும், வேட்டுவரும், கள்ளருமாவர். **“பரதவர் மீனவர் என்போர் வலைஞர், பாணர், என்போர் இசை பாடித்திரிவோர், துடியரும் பறையரும் பறையறைந்து அரசனது ஆணைகளை அறிவிக்கும் ஒரே சாதியினர்”**[31] ஆவார்கள். துடியும், பறையும் முரசின் வெவ்வேறு வகைகள். கடம்பு அல்லது கடம்பர் எயினரில் ஒரு வகையினர். அவர்களும் கள்ளர் அல்லது கடற்கொள்ளைக்காரர்கள். போரையே தொழிலாகக் கொண்ட மறக்குடி மக்களுக்கு மறவர் என்பது பொதுப்பெயர். கள்ளரும், பறையரும் ஒரே குடியினர். சமுதாயத்திலிருந்த இவ்வகுப்பினர், அவர்கள் வாழந்த இடத்தாலும் மேற்கொண்ட தொழிலாலும் நாகரீகத்தை நோக்கி மக்களினம் சென்ற முன்னேற்றம் பாதையினின்றும் அகன்று நின்றனர். ஆதலால் அவர்களைச் சமூகத்தின் மிகத் தாழ்ந்த வகுப்பினராகக் கருதலாயினர்.

மீன் பிடிக்கும் சாதியினரை **“மீனவர், வலைஞர், அல்லது வலைப் பரதவர் என்றனர். நாட்டுப் பாடல்களைப் பாடிக் கொண்டும் அரசர்கள் புகழைப் போற்றிக் கொண்டும் ஆங்காங்குத் திரிந்த ஒரு கூட்டத்தினர் பாணர் எனப்பட்டனர்”**[32] இப்பாணர் குடும்பங்கள் அடுத்த உணவு எங்கு எவ்வாறு கிடைக்கும் என்பது அறியாமல் எப்பொழுதும் திரிந்த வண்ணம் இருந்தனர். அவர்கள் பல விநோதமான இசைக்கருவிகளைச் சுமந்து சென்றனர். (யாழ் ஒருவகை நரம்புக்கருவி, நடாரி ஒருவகைத் தோற்கருவி) அவர்கள் பரம ஏழைகள் ஆயினும் மன்னர் மற்றும் சிற்றரசர்களது தாராளமான வள்ளன்மையால் அவர்கள் மகிழ்ச்சியோடு வாழ்ந்தனர்.

மன்னர் சிற்றரசர் ஆகியோர்கள் அவைகளில் பாணர் எப்போதும் குழுமியிருந்தனர். அவர்கள் மகளிர் விறலியர் எனப்பட்டனர். விடியற்காலையில் சேவல் கொக்கரிக்கும் போது, போதுகள் மலரும் வேளையில் இவர்களும் தம் யாழினை இசைத்தனர். கூத்தர் என்போர் ஆட்டத்தைத் தொழிலாகக் கொண்டவர்கள்.

**“கழைக் கூத்தர் மூங்கில் மீது நின்றாடினர். வியப்போடு கண்டு நின்ற கிராமத்து மக்களை இவர்கள் மகிழ்வித்தனர். ஆரியக் கூத்து என்னும் ஒருவகைச் சிறப்புக் கூத்தினையாடியவர்கள் ஆரியக்கூத்தர். வேடர் என்போர் வேட்டையாடுவோர். அவர்கள் கொலைக் கஞ்சாத வழிப்பறிக்**

**கொள்ளைக்காரர்களுமாவர். அவர்கள் ஆநிரைகளை திருடுவர், வழிப்போக்கர்களிடமிருந்து உடைமைகளைப் பறித்து அவர்களது துன்பங்களைக் கண்டு மகிழ்வர் எயினரும் இக்குடியினரே”[33].**

அவர்களுக்குச் சொந்தமான சீறூர்களும், மன்றங்களும் இருந்தன. அவர்கள் கொடுமை, கொள்ளை, கொலை என்பவற்றில் ஈடுபட்டனர். அவர்கள் மறக்குடியினர் ஆவார்கள். குறவர் என்போர் மலைவாழ் குடியினர். அவர்கள் தொழில் குன்றுகளில் விளையும் பண்டங்களைச் சேகரித்தல். ஊழவர் சமவெளிகளில் வாழ்ந்தனர். விளை நிலங்களிலிருந்து உணவுப் பொருள்களை விளைவித்தல் அவர்கள் தொழில் ஆகும்.

**அடிமை நிலை**

சங்ககாலத் தமிழகத்தில் பண்டைய கிரீஸ் அல்லது ரோமாபுரியில் இருந்த மாதிரி அடிமைநிலை ஒரு முக்கியமான சமுதாய நிலையமாக விளங்கிற்று. அடிமை நிலைக்குச் சமமான கீழ்நிலை வேலையாட்களோ, கூலிக்காரர்களோ இருந்திருக்கலாம். தான் கண்ட இந்தியாவில் அடிமை நிலை என்னும் நிலையம் அறியப்படாதது என்று மெகஸ்தனிஸ் கூறுகிறார்.

அடிமை நிலை என்பது தமிழர் என்றுமே அறியாதது. ஆதி காலத்தில் அவர்களுடைய உயர்தரக் கலாசாரத்தை நிறுவவலுத்த சான்றுகள் உள்ளன என்றார் வி.ஏ.ஸ்மித். கனகசபை கூறியதையே தாமும் கூறி **“அடிமை நிலை தமிழர் அறியாதது என்று கூறுவர்”[34]** என்றார். சிலப்பதிகாரம் உரிமைச் சுற்றம் என்போரைப் பற்றிக் கூறுகின்றது. இவர்களை உரைகாரர் ‘அடிமைத்திரள்’ என்று விளக்குவார். அடிமைகள் ‘அடியுறை’ என்றும் அவர்கள் நிலை அடிமை நிலை என்றும் கூறப்படும். அடியுறை என்பவன் முற்றிலும் அண்டிப்பிழைப்பவன். கலித்தொகையில் அடிமைகளை பிற்காலத்துப் போர்க் குதிரைகளைப் போல, அடையாளம் காணும் பொருட்டு மார்பில் சூடிட்டு வைக்கும் விசித்திரமான பழக்கம் கூறப்படுகின்றது.

அடிமை நிலையும், கடனைத் திருப்பித் தரமாட்டாதவர்கள் அடிமைப்படுதலும் மிகப்பழைய ஏற்பாடுகள் என்று அறிய முடிகிறது. சங்கத் தமிழகத்தில் இதற்கு இலக்கியச் சான்று மிகுதியாக இன்மைக்குக் காரணம், அடிமைநிலை மிகத்

தீவிரமானதாக இல்லாமை ஆகும். அச்சமுதாயத்தினரில் கற்றோரிடையே வெறுப்பு ஏற்படாமல் இருந்தது.

**சங்ககால மகளிரின் மனையற மாண்புகள்**

சங்ககாலத்தில் மனையின்கண் இருந்து மனையறம் நிகழ்த்தும் உரிமை, இல்லறத்தில் தலைமை தாங்கி நடத்திச் செல்லும் சிறப்பு மகளிர்க்கே உரிமை ஒன்றாக இருந்தது. **"மனைவி, இல்லாள், மனைக்கு விளக்கு, மனைக்கிழத்தி, மனையாள், மனையோள், இற்பொலிமகடூஉ, இற்கிழத்தி போன்ற பெயர்கள் மகளிர்க்கே உரியனவாயின"**[35] பண்டைய இந்தியப் பெண்மையின் இலட்சியம் அன்பாக அனைவரையும் அரவணைப்பதாக இருந்தது. தாய் வீட்டிலிருந்தவாறே உணவு சமைத்தல், குடும்பப் பொறுப்பு வகித்தல், குழந்தையைப் பாதுகாத்தல் ஆகிய அனைத்தையும் செய்து வருகிறாள். அவள் செய்வன எல்லாம் தெய்வப் பணிக்கு ஒப்பாவதால் இல்லத்தைக் கோயிலாகக் கருதுகிறாள் என்பர் சுவாமி பரமானந்தர்.

லஷ்யத் திருமணத்தில் ஆணும், பெண்ணும் அழகு, கல்வி, செல்வம், பண்பு என்பவற்றில் சரிசமமான தகுதியுடையவராயிருத்தல் வேண்டும். ஆயினும் இருவர்க்குமிடையே வேறுபாடு இருந்தே ஆகவேண்டுமாயின், அந்நிலையில் **"பெண்ணைவிட ஆண் சிறத்தல் நன்று என்று தொல்காப்பியம் கூறுகிறது"**[36].

இதைத்தவிர தகுதி, புகழ், ஈகை, விசாரம் (யாவற்றையும் அறிந்து கொள்ள விழைதல் பண்பு), நடை, நட்பு, கண்ணோட்டம், துணிவு, நிலை மாறாமை என்பவற்றால் பிறக்கும் ஆண்மை ஆடவர் பண்பு என்றும் கூறினார். **"காதலால் தோன்றும் அச்சம், நாணம், பெரியோர் சொல்கேட்டு எதிர்கூறாமல் தவறாமல் நடத்தல் என்பன மகளிர்க்குரிய சீரிய பண்புகள்"**[37] ஆகும்.

அஞ்சாது பழகுதல் ஆடவனுக்குரிய பண்பு. ஆனால் நாணமும், கூச்சமும் மகளிர்க்குச் சிறக்கும் பண்புகள் ஆகும். ஆதலால் ஐந்திணைக் காதலிலும் அதாவது இயற்கைப் புணர்ச்சியிலும், ஆண்மகன் தன் காதலை வாய்விட்டுச் சொல்லலாம். ஆனால் பெண் நோக்கவோ, சைகையாலோ தான் தெரிவிக்கலாம்.

மகளிர்க்கு இயற்கையாக அமைந்துள்ள பண்புகள் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு (முன்பு அறியாதவரோடு பழகக் கூசுதல்) என்று இறையனார் அகப்பொருள் உரை கூறுகிறது.

திருமணத்திற்குப் பிறகு கணவர் தன்நலம் கருதுதல் விட்டுத் தன் மனைவியின் நலம் கருதுவானாய், அவளுக்கு வேண்டும் பொருட்களெல்லாம்

தொகுத்துக் கொடுக்கும் பொருட்டு முயலும் பல்வகை முயற்சிகளில் ஈடுபடுகிறாள். அங்ஙனமே மனைவியும் தன்னைப் பேணும் கருத்தை விட்டுத் தன் கணவனையே தன்னுயிராகக் கருதி ஓம்புதலிலும், அன்புச் சேர்க்கையால் பிறக்கும் இன்பக் குழந்தைகளைப் போற்றி வளர்த்தலிலும், அந்தணர், அறவோர், விருந்தினர்க்கு அறம் செய்து ஒழுகுதலிலும் ஈடுபடுகிறாள். ஒருவனது வாழ்க்கைத் துணையாகிய மனையாள் மாட்சிமையுடையவளாய் இருத்தல் வேண்டும்.

**கற்பு**

மகளிர்க்கு முக்கியமான நற்பண்பு கற்பு என்பதாகும். கற்பு என்பது ஒரு தெய்வீகப் பண்பு என்று பேசப்பட்டது. வயது வந்த பெண்கள் வீட்டில் அடைக்கப்படுவார்கள். வீட்டிலுள்ள வயதான மகளிர் இவர்களைக் கண்காணிப்பார்கள். கற்பு என்பது மகளிர் வாழ்க்கையில் கற்றுக் கொள்ள வேண்டிய மிக முக்கியமான ஒன்றாகும். கணவனைத் தவிரப் பிறிதொரு கடவுள் இல்லை என்பதாகும்.

ஒரு பெண் ஆண்மகனை உள்ளத்தில் நினைத்துவிட்டால் அப்போதே கற்புத் தொடங்கி விடுகிறது. அக்கணமே அவனைத் தன் நாயகனாகக் கருதத் தொடங்குவாள். மரபுப்படி கற்பைக் குறிக்கும் முல்லை மலரையணிவாள். பிறிதொரு கடவுளை வழிபடமாட்டாள். நாளடைவில் அவள் அவனை மணந்து இல்வாழ்க்கையில் அமர்வாள்.

அவனுடைய வாழ்க்கைத் துணையாகி மகப்பேறு பெறுவாள். அவள் அவன் திறனை ஆராயக் கூடாது. ஆனால் சுக துக்கநேரங்களில் அவற்றை அவனோடு பகிர்ந்து கொள்ள வேண்டும். கணவனின் நெறிகெட்ட நடத்தையையும் அவள் பொறுத்துக் கொள்ள வேண்டும். **“கோவலன் மாதவியோடு கொண்ட பரத்தைத் தன்மையைக் கண்ணகி பொறுத்துக் கொண்டது போல, அகப்பொருள் இலக்கணம் இதனை ‘இருத்தல்’ அல்லது ‘பொறுத்துக் கொள்ளுதல்’ என்று குறிக்கிறது”[38].**

இல்வாழ்க்கையில் அமைதியான மகிழ்ச்சிக்கு மகளிர் கற்பேயாதாரம் என்பார் வள்ளுவர். அவள் மனநிறை ஒன்றே அவளை வேண்டா விருப்பங்களினின்றும் காக்கும் தலையாய காப்பு என்றார். அன்றியும் பண்புடைய இல்லாளைப் பெற்றவனது வீடு முற்றிலும் சிறப்படைகிறது.

உயிரினும் நாணம் சிறந்தது, நாணிலும் கற்புச் சிறந்தது என்று கருதப்பட்டது. விடியற்காலையில் அவள் தன் கணவனை வணங்கி வழபட

வேண்டும். பிற கடவுளரை வணங்குதலை நீக்க வேண்டும். மன, மொழி, மெய்யால் கற்புடைய பெண்ணுக்குப் பஞ்ச பூதங்களும் ஏவல் கேட்கும் பல அற்புதச் செயல்களைப் புரிந்த கற்புடைய மங்கையர்களைப் பற்றிய கதைகளைச் சிலப்பதிகாரம் கூறுகின்றது. இவற்றில் இருவகைக் கற்புகள் கூறப்பட்டன.

1. **“அறக்கற்பு – கற்பினை அமைதி வகையில் காத்துக் கொள்ளுதல். உதாரணமாக தன் கணவன் இறந்தவுடனேயே உயிர் நீத்த கோப்பெருந்தேவி ( ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனின் மனைவி)**
2. **மறக்கற்பு – கற்பு அஞ்சத்தக்க முறையில் வெளிப்படுதல். தன் கணவனைக் கொலை செய்தவர்கள் மீது பயங்கர வஞ்சம் தீர்த்துக் கொண்ட பிறகே இறந்த கண்ணகி இதற்கு உதாரணம் ஆகும்”**[39]

பெரும்பாலும் மனையாள் என்பவள் நெறிதவறாதவள். கடமையுணர்ச்சியும், பயிர்ப்பும் உடையவள். கற்பிக்கும், நாணத்திற்கும் பெயர்போனவள். நல்கூர்ந்தார்க்கும் பிற விருந்தினர்க்கும் நன்கு விருந்திடும் சீர்மையுடையவள். பழக்கமில்லாதவா்கள் இடையில் ஒரு பொருளை வைத்துத் தான் அவள் பேசுவது வழக்கம். உயிரில்லாத தூண் அல்லது உத்தரம் போன்ற பொருளும் கூடப் போதுமானதாக இருக்கும். இதனை,

**“சிற்றி னற்றூண் பற்றி நின்மகன்**
**யாண்டுள னோவென வினவுதி யென்மகன்**
**யாண்டுள னாயினு மறியே னோரும்**
**புலிசேர்ந்து போகிய கல்லளை போல**
**ஈன்ற வயிறோ விதுவே**
**தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே”**[40]

பட்டங்களும், கவுரவங்களும் அளித்து அரசர்கள் கற்புடைய மங்கையர்களைச் சிறப்பிக்கும் மரபு கூறப்படுகின்றது. தன் கணவரிடம் அளவற்ற பக்தியுடைய பெண்ணுக்கு ஒரு **‘கொடி’** வைத்துக் கொள்ளும் சிறப்புத் தரப்பட்டது. மலைபடு கடாத்தின் பாட்டுடைத் தலைவனாகிய நன்னன் மனைவிக்கு அத்தகைய கொடிச்சிறப்பு உண்டு. இத்தகைய அரசுச் சிறப்புக்களால் கற்பு ஊக்கப்பட்டு இருந்துள்ளது.

**கலைச்சிறப்பு**

மகளிா் சிலா் கலைச்சிறப்பு மிக்கவர்களாக விளங்கினர். எத்தகைய தகுதியை எய்தலும் அவர்கட்கு விலக்கன்று என்று தோன்றுகின்றது. சங்க

இலக்கியக் கருத்தாக்களாகப் பல பெண்பால் புலவர்களைப் பற்றிக் கேள்வியுறுகிறோம். அவர்களில் **“ஔவையார், நச்செள்ளையார் என்போர் புகழ்பெற்றவர்கள். பூதப்பாண்டியின் தேவி பெருங்கோப்பெண்டு என்பாள் கலைச் சிறப்புமிக்க அரசி”[41].** அவள் தீப்பாய்தலைப் பற்றி இயற்றிய பாடல் புறநானூற்றில் சேர்க்கப்பட்டுள்ளது.

அரசியராயினும் மகளிர் சொத்துரிமையற்றவர்கள் என்றே அறியமுடிகிறது. போர் வீரர், அமைச்சர், தூதர், மன்னரது பிற அறிவுரையாளர் என்னும் எந்த நிலையிலும் மகளிர் அமர்த்தப்படவில்லை. மனைவியரல்லாத பிற மகளிர் சிலரைத் துணைவியராகக் கொள்வதுண்டு. அவர்கள் ஆடவர் கவனத்தைச் சற்று உரிமையோடு ஈர்ப்பர். அவர்களுக்கு உரிமை மகளிர் என்று பெயர். அரசனுக்குப் பல அணுக்க ஆப்தங்கள் அந்தப்புரத்தில் இருந்தனராயினும் அரசி என்னும் நிலைக்கு உரியவள் ஒருத்தியே எனலாம்.

சங்க காலச் சமுதாயத்தில் பலவித மகளிர் இருந்தனர். மணம்புரிந்து கொண்டு தனது கணவனது மற்றும், குழந்தைகளது வசதிகளைக் கவனித்துக் கொண்டு இல்லறத்தில் நின்ற பெண் நேரான வகைப் பெண். “**அவள் முழுமையான, அறத்தின் பாற்பட்ட, பொருள் பொதிந்த, அன்பு செறிந்த, ஆதரவுமிக்க, சூழ்ந்தார்க்கு ஆற்றும் ஊழியம் நிறைந்த வாழ்க்கை வாழ்ந்தவள். அவள் தான் தீப்பாய்வள் அல்லது கைம்பெண்ணாகி நோன்பியற்றுபவள்”[42].**

சமூகத்தில் பிற நிலைகளில் நின்ற மகளிரும் உளர். அவர்களில் கவுந்தி அடிகள், மணிமேகலை போன்ற சைன, பௌத்தப் பெண்டிரைக் கூறலாம். கணிகையர் பிறிதொரு மகிழ்ச்சி நிறைந்த குழுவினர். சங்ககாலத்தில் அவர்கள் பெருவாரியாக இருந்தனர்.

**மணமுறை**

குடும்ப வாழ்க்கைக்கு ஆதாரமான திருமணம் என்னும் நிகழ்ச்சி முற்காலத்தில் தமிழகத்தில் ஒருவகைப் பரிணாம வளர்ச்சியாக அமைந்துள்ளது. தமிழரிடையே பயின்ற ஆதிகால மணமுறை எளிதாயும் இயல்பானதாயுமிருந்தது. தலைவனும், தலைவியும் சேர்தல் மணமாயிற்று. பெரும்பாண்மை காதலின் விளைவாய் மணம் நிகழ்ந்திருக்க வேண்டும். ஏனெனில், அது பிறரால் ஏற்படுத்தப்பட்ட மணமன்று. குடும்பம், குலமுறை, இனம் இவற்றைப் பெருக்க வேண்டி நிகழும் மணம் மிகுதியும் அறியப்படவில்லை. சடங்கு இல்லாத மணமுறை தமிழரிடையே களவு எனப்பட்டது.

தலைவன், தலைவியர் ஆகிய இருவர் ஒப்புதலாலேயே அது நடைபெற்றமையின், பெற்றோர் பிற உறவினர் என்போர் அறியாமலே அம்மணம் நிறைவேறிற்று. அதனால் அது களவின் பாற்பட்டது. அதாவது தலைவியைத் தலைவன் அவளைப் பெற்றோரிடமிருந்து களவாடித் தன்னவளாக்கிக் கொண்டான் என்பது கருத்து ஆகும்.

வடமொழியாளர்க்கும் அம்முறை தெரியாததன்று. அவர்கள் அதனைக் காந்தருவம் என்றனர். அவர்கள் கண்ட மன்றல் எட்டு. அவை,

1. பிரம்மம்
2. பிரஜாபத்யம்
3. ஆர்ஷம்
4. தைவம்
5. காந்தர்வம்
6. ஆசுரம்
7. ராசக்ஷஸம் (ராக்ஸஸம்)
8. பைசாசம் ஆகியவை ஆகும். இதில்

- முதலாவது, நாற்பத்தெட்டு ஆண்டு பிரமசரியம் காத்தவனுக்குப் பன்னீராண்டுப் பெண்ணைத் தானமாகக் கொடுத்தல்.
- இரண்டாவது, வேறு கோத்திரத்தான் ஒருவனுக்கு அவன் விரும்பினால் ஒரு பெண்ணை ஈதல்.
- மூன்றாவது, ஒரு பெண்ணை தத்தம் கொடுத்தல். அதாவது அவளை ஒரு பொற்பசு, பொற்காளை இவற்றிடை நிறுத்தி நீர்வார்த்து அப் ‘பொன்கால்நடைக’ளோடு அவளையும் தானம் செய்து கொடுத்தல்.
- நான்காவது, அப்பெண்ணை வேத வேள்வி செய்த அந்தணனுக்கு ஈதல்.
- ஐந்தாவது, தலைவனும், தலைவியும் கொடுப்பாரும் ஏற்பாரும் இன்றித் தாமே விரும்பிக் கூடி, களவு முறையில், சடங்கு யாதுமின்றி, மணத்தை நிறைவேற்றிக் கோடல்.
- ஆறாவது, தலைவன் கடினமான இட்ட கட்டளையை நிறைவேற்றி (இராமன், அர்ச்சுனன் என்போர் வில்லை வளைத்து சீதை, திரௌபதி என்போரை மணந்தது போல) மகட்கொடை ஏற்றல்.

- ஏழாவது, ஒரு பெண்ணை அவள் விருப்பத்திற்கெதிராக உற்றாரைக் கேளாமல், வலுவில் கடத்திச் சேறல், அன்றித் துயில்வோளையோ மயங்கி இருப்பாளையோ கூடுதல்.

இவற்றில் ஐந்தாவது˙ கந்தருவர் என்பாரது மரபாதலின் அம்முறை மணம் காந்தருவம் எனப்பட்டது. மணமுறையில் மூன்று காதல் வகைகள் உள்ளன. அவை,

1. தூய இயற்கைக் காதல் - இது வாழ்நாள் முழுவதும் நின்று நிலவும் சேர்க்கையாக மிளிரும் தகுதியுடைத்து ஆகும்.
2. கைக்கிளை அல்லது ஒருதலைக்காமம்.
3. பெருந்திணை அல்லது பொருந்தாக் காமம்.

இவற்றில் முதற் கண்டது காந்தருவத்தின் பாலும், இரண்டாவது பிரமம், பிரஜாபத்யம், ஆரிடம், என்பவற்றுள்ளும், மூன்றாவது இராக்கதம், ஆசுரம், பைசாசம் என்பனவற்றுள்ளும் அடங்குவனவாகும்.

சங்க காலத்தில் பழக்கத்திலிருந்த மணமுறை தற்காலத்தில் போலக் காரணமாக அமைந்ததே. தொல்காப்பியத்திலேயே சிலப்பதிகாரத்துக் கோவலன் - கண்ணகி திருமண முறை பற்றிய விவரம் காணப்படும். மணமகள் 12 ஆண்டும் மணமகன் 16 ஆண்டும் நிரம்பியவர்கள். அத்திருமணம் பெற்றோர்களால் நிச்சயிக்கப்பட்டது. திருமணம் தொடங்கும் முன்பு அழகிய உடை உடுத்திய மகளிர் சிலர் யானை மீதேறி ஊர்வலம் வந்து மனைவியை அறிவிப்பர். பிறகு முரசொலிக்கும். சங்கு ஊதப்பெறும், மணமகள் வாழ்நாள் முழுவதும் அணிய வேண்டிய மங்கல அணியான தாலி யாவராலும் வாழ்த்துப்பெற வேண்டிப் பலரிடம் எடுத்துச் செல்லப் பெறும்.

முதிய அந்தணர்கள் அருந்ததி போன்ற கற்புடைய கண்ணகிக்கும் கோவலற்கும் மணமுடித்தனர். மறையில் கூறியாங்குக் கோவலன் தீவலம் வந்தனன். அன்றே திருமணம் முழுமை எய்தி நிறைவேறிற்று. இது தற்காலத்தில் நடைபெறும் தமிழர் மணம் போன்றே காண்கிறது.

தாலி அணிதல் ஆரியர் அறியாத தமிழ்ப்பழக்கம். தமிழ்நாட்டிற்குரிய இப்பழக்கம் பிராமணர்களால் பிற்காலத்தில் தமது சடங்குகளில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. தாலிக்கு இருவகைத் தத்துவங்கள் உள்ளன. சங்கத்தமிழர் தமது சிறார்க்கு ஐம்படைத் தாலி அணிவர். திருமாலின் ஐம்படைகளான சங்கு, சக்கரம், வாள், வில், கதை என்னும் ஆயுதங்கள் பொறித்தது.

அவ்வைம்படைத்தாலி பிற்காலத்தில் சைவர்கள் சிவபெருமானது ஆயுதங்கள் ஐந்தைக் கொண்டு வேறொரு ஐம்படைத்தாலி கூறுவர். இத்தாலி குழந்தைகளுக்குத் தீங்கு நேரிடாமல் காக்கும் என்று நம்பினர். திருமணத்தில் தாலி என்பது தாலியணிந்தவள், திருமணமானவள் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**தீப்பாய்தல் (ஸதி)**

கணவனுக்கு முன் இறந்துவிடும் காதல் மனைவியை அதிர்ஷ்டசாலி எனக் கூறவேண்டும். அவனுக்குப் பின் உயிர்வாழ வேண்டிய போகூழ் அவளுக்கு இருக்குமாயின் அவள் நிலை வருந்தத்தக்கதே. அவள் கணவனொடு உடன்கட்டையேறலாம் அல்லது பிறர் பழிக்கும் கைம் பெண்ணாக அவமதிப்பிற்காளாகி வாழலாம். முந்திய பழக்கத்தை இந்தியாவில் ஸதி என்பர். இவ்வடச்சொல் 'நற்குணமுடைய மனைவி' என்றே பொருள்படுமாயினும் 'கைம்பெண் கணவனோடு மரித்தற்குத் தற்செய்து கோடல்' என்று மருவிப் பொருள்படுவதாயிற்று. இச்சொல் சங்க இலக்கியத்தில் காணப்படுவதில்லை. ஆயினும் அம்மரபு இருந்தது. தமிழில் இதனைத் தீப்பாய்தல் என்றனர்.

கணவனொடு மனைவி மரித்தல் தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளது. அங்கு அது ஒரு போர்க்கள நிலையாகவும் ஆளப்படும். அதாவது களத்தில் வீரன் கொல்லப்பட்டால் அவன் மனைவி அங்குச் சென்று அவன், 'தலையைத் தழுவித் தானும் உயிர் நீத்தல் என்பது' ஆகும். கணவனொடு தீப்பாயும் நிலையும் தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளது. அதனால் அம்மனைவி பெரிய நல்லோள் எனப்படுவாள்.

தீப்பாய்ந்து இறந்த சில கற்புடை மகளிரைப் பற்றி தெரிந்து கொள்ள முடிகிறது.

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் பற்றி கூறியது.

**"பல்சான்றீரே பல்சான்றீரே**
**செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்**
**பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே**
**அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட**

**காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா**

**தடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்**

**வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட**

**வேளை வெந்தை வல்சி யாகப்**

**பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்**

**உயவற் பெண்டிரே மல்லே மாதோ**

**பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்**

**நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்**

**பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற**

**வள்ளித ழவிழ்ந்த தாமரை**

**நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே"**[43]

பல சான்றவிரே நின் தலைவனோடு இறப்ப நீ போ என்று கூறாது, அதனைத் தவிர்க்க என்று சொல்லி விலக்கும். பொல்லாத விசாரத்தையுடைய பல சான்றவிரே. அணிலினது வரிபோலும் வரியையுடைய வளைந்த வெள்ளரிக்காயை அரிவாளால் அரிந்திடப்பட்ட விதை போன்ற நல்ல வெள்ளிய நறியநெய் தீண்டாமல், இடையிடையே பயின்ற கையாற் பிழிந்து கொள்ளப்பட்ட நீர்ச் சோற்றுத் திரளுடனே, வெள்ளிய எள்ளரைத்த விழுதுடனே. புளி கூட்டியடப்பட்ட வேளையிலை வெந்த வேவையுமாகிய இவை, உணவாகக் கொண்டு, பருக்கைகளாற் படுக்கப்பட்ட படுக்கையின்கண், பாயுமின்றிக் கிடக்கும், கைம்மை நோன்பால் வருந்தும் பெண்டிருள்ளே மல்லேம் யாம். புறங்காட்டின்கண் உண்டாக்கப் பட்ட கரிய முருட்டால் அடுக்கப்பட்ட பிணப்படுக்கை உங்களுக்கு அரிதாவதாகும். எமக்கு எம்முடைய பெரிய தோளையுடையனாகிய கொழுநன் இறந்துபட்டானாக. அரும்பு அற வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை முகையில்லையாக வளவிய இதழ் மலர்ந்த தாமரையையுடைய, நீர் செறிந்த பொய்கையும், தீயும் ஒரு தன்மைத்து ஆகும்.

அச்சான்றோளான அரசி தீப்பாய்ந்து இறந்தமை மதுரைப் பேராலவாயரால் குறிக்கப்பட்டது.

**"யானை தந்த முளிமர விறகிற்**

**கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து**

**மடமான் பெருநிரை வைகுதுயி லெடுப்பி**

**மந்தி சீக்கு மணங்குடை முன்றிலின்**

**நீர்வார் கூந்த லிரும்புறந் தாழப்**

**பேரஞர்க் கண்ணள் பெருங்காடு நோக்கித்**

**தெருமரு மம்ம தானேதன் கொழுநன்**

**முழவுகண் டுயிலாக் கடியுடை வியனகர்ச்**

**சிறுநனி தமிய ளாயினும்**

**இன்னுயிர் நடுங்குந்த னிளமைபுறங் கொடுத்தே"[44]**

யானை கொண்டு வரப்பட்ட உலர்ந்த மரத்து விறகால், வேடர் மூடப்பட்ட கடைந்து கொள்ளப்பட்ட எரியாகிய விளக்கினது ஒளியின் கண் மடவிய மானாகிய பெரிய நிரை, வைகிய உறக்கத்தை எழுப்பி மந்தி தூர்க்கும். அணங்குடைத் தேவியுடைய முற்றத்து, நீர் வடிந்த மயிர் மிக்க புறத்தில் வீழ, பெரிய துன்பமேவிய கண்ணையுடையளாய், புறங்கோட்டைப் பார்த்துத் தான் சுழலும் தன் தலைவன், முழவினது கண் மார்ச்சனையுலராத, காவலையுடைய அகலிய கோயிலுள் மகிச் சிறிது பொழுது தனித்திருப்பினும், இனிய உயிர் தளரும், தன் இளமை புறங்கொடுத்தலாவது இளமையுணர்ச்சிகட்கு அடிமையாய் உணர்வு மடிந்தொழுகுதலெனக் கொள்ள வேண்டும். காதலனொடு கூடி யுறையும் நலங்கனிந்த இளமகளிர்க்குப் பிரிவினும் துன்பந்தருவது பிறிதில்லை எனப்படும். இதை,

**"இன்னாது இனனில்லூர் வாழ்தல் அதனினும்**

**இன்னாது இனியார்ப் பிரிவு"[45]**

தோழியர் எவருமே இல்லாத ஊரில் குடியிருப்பது மிகத் துன்பமானது. இனிய காதலரைப் பிரிந்து தனித்திருப்பது அதைவிட மிகவும் துன்பமானது என்று சான்றோர் உரைத்து உள்ளனர்.

சாதுவன் மனைவி ஆதிரை என்பாள் தன் கணவன் கடலில் மூழ்கி இறந்து பட்டமையைக் கேள்வியுற்றுத் தீப்பாய முயன்றனளாயினும் அத்தீ அந்தன் பொய்கை போலக் குளிர்ந்திருந்தது என்று மணிமேகலை கூறும். அவள் கணவன் இறக்கவில்லை என்பதை ஆதிரை அறிந்து அதன் பிறகு தற்கொலை முயற்சியைக் கைவிட்டனள்.

கணவனொடு மடிய முயலும் மனைவி நல்லோள் எனப்படுவாள் என்றும், வருந்தி வாழும் கைம்பெண் வாழ்வதை விட இறத்தல் மேலானது என்று கருதினாள் என்பதும், அவள் வருத்த மிகுதியால் அந்தன் பொய்கை நீரும்

நெருப்பும் நிகராக அவனுக்குத் தோன்றின என்பதும், பெரும்பாலும் உற்றார் உறவினர் அவள் தீப்பாய்தலைத் தடுத்தனர் என்பதும், துணிந்த சில மனைவியர் இத்தடுப்பையும் மதியாது உடன்கட்டையேறி விட்டனர் என்பதும் தெளிவாகும்.

போர்க்களத்தில் தலைவர்காகவும், மன்னர்காகவும் பட்ட வீரர்க்கு நடுகல் அமைத்தல் கூறப்படுதலின் தம் கணவர் காரணமாக இறக்கும் கற்புடை மகளிர்க்கும் கல்நடுதல் அம்மரபின் ஒரு வகையே. கண்ணகிக்குச் செங்குட்டுவன் நட்ட கல்லை இளங்கோ நடுகல் என்றே கூறினார்.

**கைம்மை**

ஒவ்வொரு கைம்பெண்ணும் தீப்பாய்ந்தாள் என்பதில்லை. கணவனையிழந்தாட்டு நிகழ்வன மூவகை நிலைகள் என்று மணிமேகலையால் அறிவோம். முதற்கண் அவள் உடனடியாக வருத்த மேலீட்டால் இறக்கலாம். கோவலற்க்கு அறியாமையால் தீங்கிழைத்து விட்டு அதனையுணர்ந்து அரசு கட்டிலில் உயிர் நீத்த ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் மனைவி கோப்பெருந்தேவி அங்ஙனம் இறந்தவள். கணவனும் மனைவியும் ஈருடலும் ஓருயிரும் உடையர் என்பதை உணர்த்துகின்றது.

அதற்கடுத்தாற்போல், அதற்கென ஒரு தீயை வளர்த்து, அதிற்பாய்தல். இது பெருங்கோப்பெண்டு செய்தது.

மூன்றாவதாக கணவனையிழந்தாள் கைம்மையெய்தித் தவ வாழ்க்கை நடத்துதல், தீப்பாய்தல் வேண்டும் என்று வற்புறுத்தப்படவில்லை. ஆனால் அது அனுமதிக்கப்பட்டது. சில சமயங்களில் பெருமையோடு புகழவும் பெற்றது. ஆயினும் கைம்பெண்ணின் வாழ்க்கை பல கட்டுப்பாடுகளுக்கடங்கிற்று. அதில் நிகழும் வழுக்கள் கடுமையான எதிர்ப்பிற்காளாயின.

கைம்பெண் தவ வாழ்க்கை நடத்த வேண்டும். அது ஒரு நோன்பு வாழ்வாம். அது இழிதக்க வாழ்க்கை. ஏனெனில் ஒரு பெண்ணுக்கு கணவன் உடன் வாழும் நாளே பயனுடைய முழுமையான வாழ்நாளாம். ஆதலாலே அது கைம்மை எனப்பட்டது. அதாவது இழந்த இழிந்த நிலை என்பது (கை – சிறுமை), கணவனையிழந்தாள் கைம்பெண் ஆயினாள்.

கடிய எளிய உணவையே அவள் உண்ணவேண்டும் என்று விதிக்கப்பட்டது. **“வெந்த வேளையிலையும் பழைய சோறும் என்று இவ்வுணவு பெருங்கோப்பெண்டால் விளக்கப்பட்டது. பொரித்த அல்லது வெந்த ஆம்பல் மலரும் அவர்கள் உணவாம்”**[46] தாயங்கண்ணனார் வெள்ளாம்பலைக் கூறுவார்.

கணவனையிழந்து நிற்கும் மனைவியின் நிலையை இத்தாயங்கண்ணனார் விரிவாக வருணிக்கிறார். இதை,

**“குய்குரன் மலிந்த கொழுந்துவை யடிசில்**
**இரவலர்த் தடுத்த வாயிற் புரவலர்**
**கண்ணீர்த் தடுத்த தண்ணறும் பந்தர்க்**
**கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி**
**அல்லி யுணவின் மனைவியோ டினியே**
**புல்லென்றனையால் வளங்கெழு திருநகர்**
**வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்**
**முனித்தலைப் புதல்வர் தந்தை**
**தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே”**[47]

என்ற பாடல் மூலம் அறிய முடிகிறது. அவள் தலை மழுங்கச் சிரைக்கப்பட்டது. அவள் கையிலணிந்த குறுவளைகள் கழற்றப்பட்டன. அல்லியொடு கலந்த சோறு அவள் உணவு. அவள் மகன் தந்தையிறந்த பின் இதுவே அவள் நிலை.

‘குழந்தைகளைப் பாதுகாக்க வேண்டிய நிலையில் உள்ள மகளிரும், பாதுகாப்பாளர்கள் இழக்கும் பெண்களும் தீப்பாய்தல் கூடாது என்று விதிக்கப்பட்டது’ என்று கிருஷ்ணசாமி ஐயங்கார் கூறுகிறார்.

கைம்பெண்கள் தலையை மழுங்கச் சிரைத்துக் கொள்ள வேண்டும் என்பது தமிழ் பழக்கம் ஆகும். இதனை,

**“என்னை மார்பிற் புண்ணும் வெய்ய**
**நடுநாள் வந்து தும்பியுந் துவைக்கும்**
**நெடுநகர் வரைப்பின் விளக்கு நில்லா**
**துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்**
**அஞ்சுவரு குராஅற் குரலுந் தூற்றும்**
**நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்கு**
**செம்முது பெண்டின் சொல்லு நிரம்பா**
**துடிய பாண பாடுவல் விறலி**
**என்னா குவிர்கொ லளியிர் நுமக்கும்**
**இவணுறை வாழ்க்கையோ வரிதே யானும்**
**மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்**

**தொன்றுதா முடுத்த வம்பகைத் தெரியற்**
**சிறுவெள் ளாம்ப லல்லி யுண்ணும்**

**கழிகல மகளிர் போல**
**வழிநினைந் திருத்த லதனினு மரிதே”**[48]

என்று புறநானூறு கூறுகிறது.

தன் கணவன் உயிருடன் இருக்கும் காலத்தில் எதைச் செய்தால் அவன் மனம் வெறுப்படையுமோ அக்காரியத்தை அவன் இறந்த பிறகும் செய்யலாகாது என்று கூறப்படுகிறது.

தாலி முதலிய அணிகளைக் கழற்றலும், நீண்ட அழகிய ஒள்ளிய கேசத்தை நீக்கிவிடலும், அவளைக் குரூபியாக்கி ஆடவர் மனதை ஈர்க்கும் வாய்ப்பினை அகற்றி விடுதலை நோக்கமாகக் கொண்டு எழுந்த பழக்கங்களாகலாம். அதன் பிறகு அவள் அணிந்த வெண்ணிற ஆடை தூய்மையைக் குறித்தது. இறந்த கணவனது ஆவிக்குச் சிராத்த பிண்டம் படைத்தல் வேண்டும். அதற்காக அவள் வீட்டுத் தரையை ஈரப்பசுஞ்சாணத்தால் மெழுகித் துடைத்துச் சுத்தமாக வைக்க வேண்டும். 'வருந்தி நிற்கும் கைம்பெண் மனைவி தனது கண்ணீரால் தரையை மெழுகினாள்.' கணவனை அண்மையில் இழந்த மனைவி பெரிதும் மனம் வெதும்பினாள். அவள் தனது மார்பின் மீது பெரிதும் கடுமையாகவும் அறைந்து கொண்டமையால் அவள் மயங்கி வீழந்தனள். மேலும்,

**“மீன்றிகழ் விசும்பிற் பாயிரு ளகல**
**ஈண்டுசெலன் மரபிற் றன்னியல் வழாஅ**
**துரவுச் சினந் திருகிய வுருகெழு ஞாயிறு**
**நிலவுத்திகழ் மதியமொடு நிலஞ்சேர்ந் தாஅங்**
**குடலருந் துப்பி னொன்றுமொழி வேந்தரை**
**அணங்கரும் பறந்தலை யுணங்கப் பண்ணிப்**
**பிணியுறு முரசங் கொண்ட காலை**
**நிலைதிரி பெறியத் திண்மடை கலங்கிச்**
**சிதைதலுய்ந் தன்றோ நின்வேல் செழிய**
**முலைபொலியாக முருப்ப நூறி**
**மேய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்**

ஒண்ணுதன் மகளிர் கைம்மை கூர

அவிரறல் கடுக்கு மம்மென்

குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே”[49]

என்று புறநானூறு பாடல் கைமையின் நிலையை உணர்த்துகிறது. இத்தகைய இழிதகைமை வாழ்க்கை வாழ்வதைவிட இறத்தலே மேல் என்று சில உணர்ச்சியும் அன்பும் மிக்க மனைவியரை சாகத் துணிவித்தது.

**கணிகையர்**

கணிகையர் சங்க இலக்கியத்தில் பல இடங்களில், முக்கியமாக அகப்பொருள் இலக்கியத்தில் குறிப்பிடப் பெறுகின்றனர். கணிகையர் எனினும் பரத்தையர் எனினும் ஒக்கும். பரத்தமை தடுக்கப்படவில்லை. அதற்கு வழிகள் வகுக்கப்பட்டு அனுமதிச் சீட்டும் அளிக்கப்படவில்லை.கணிகையர் பரத்தமையைத் தொழிலாகக் கொண்ட ஒரு தனிக்கூட்டத்தார். அவர்கள் இருவகையினர். அத்தொழிலால் வாழ்க்கை நடத்திய பரத்தையர் எந்த ஒரு தனிப்புரவலனுடனும் தனியன்பு கொண்டவரல்லர்.

அவர்களைச் சேரிப் பரத்தையர் அல்லது காமக்கணிகையர் என்றனர். வேறுசிலர் அக்குலத்தைச் சேர்ந்தவர்களாயினும் ஒரு தனிப் புரவலர் மீது அன்பு கொண்டு அவரொடு காதல் வாழ்க்கை நடத்தினர். ஆயினும் அவர்கள் ஒருவரையும் மணப்பதில்லை. அவர்களைக் காதற் பரத்தையர் அல்லது காமக் கிழத்தியர் என்பர். அவர்கள் மணமாகாத வாழ்க்கைத் துனைவியர்.

இம்முறையிலேயே கோவலன் மாதவியோடு வாழ்ந்தான். இத்தகையாரோடு உறவுகொண்ட ஆடவர்களைச் சமூகம் அன்று பழித்ததாகத் தெரியவில்லை. அவ்வாறு நடந்து கொள்ளுதல் மனிதனுடைய உரிமைக்கு முழுவதும் உட்பட்ட செயலே என்று கருதினர்.

அரசர் மாளிகையில் இக்கணிகையர் பெரும்பாலோர் காணப்படுவர். அவர்கள் அரசருடைய மெய்க்காப்பாளராகவும் பணியாட்களாகவும் செயலாற்றினர். அரசியின் சிலதியரும் அவர்களே போலும். அவர்கள் அரசனோடு போர்க்களத்திற்கும் சென்றனர். அன்னார் வனப்புடை வனிதையர். இடையில் சிறியதொரு வாளினைத் தமது கச்சையில் செருகியிருந்தனர். அரசனுடைய அகவசதிகளை அவர்கள் மேற்பார்த்தனர்.

இவர்கள் நகரங்களில் பரத்தையர் சேரிகள் என்னும் தனிப்பாக்கங்களில் வசித்தனர். மதுரையில் இருபெருந்தெருக்களில் இவர்களே வாழ்ந்தனர் என்று சிலப்பதிகாரம் கூறும் ஒரு ஏனாதிப் பட்டம் பெற்றோன் ஏனாதிச்சேரி என்றொரு குடியிருப்பை இவர்கட்கு ஏற்படுத்தி வைத்தான். அவர்கள் நடனம், இடை, நாடகங்களில் மிக வல்லுநராயிருந்தனர். நாட்டியமும் இசையும் இவர்கள் பயிலும் மரபாக இன்று வரையில் நடைமுறையில் உள்ளது.

கணிகையர் கற்று வைத்திருக்க வேண்டிய கலைகள் பட்டியல் ஒன்று மணிமேகலையில் காணப்பெறுகிறது. அவை,

1. இருவகைக் கூத்து:
   வேத்தியல் (மன்னர் முன்னிலையில் ஆடுவது) இசையறிவும் லய அறிவும் இல்லாவிடில் நாட்டியக்கலை முழுவதும் கைவந்த தாகாது. இசைமிடற்றாலும், யாழ், குழல் முதலிய கருவிகளாலும் பயில்வது. இசையில் நாடகக் குறிப்புள்ள சாகித்யமும் அடங்கிற்று.
2. பந்தெறிந்து ஆடுதல்.
3. உணவு வகை பற்றிய கலையும் பாகசாத்திரமும்
4. காதற் கலையின் எல்லா அம்சங்களும்
5. திறம்படவும் நயம்படவும் பேசுங்கலை
6. பிறர் காணாது திரியும் கலை
7. பிறர் எண்ணங்களை உய்த்துணரும் வன்மை
8. கையெழுத்துக் கலை
9. பூமாலை கட்டும் கலை
10. வேடமணிதல், உடைதயாரித்தல் ஆகியவை.
11. முத்துக்கள் முதலிய அழகிய மணிகளைக் கோத்தல்
12. சோதிடம்

முதலிய 64 கலைகளைக் கணிகையர் கற்றுத் தெளிந்தனர் என்று கூறப்படுகிறது.

இதில் சிறந்தது யாழ் வாசித்தலே. சோழ மன்னர்கள் அவர்களை ஆதரித்தனர். ஒவ்வோராண்டிலும் மிகச்சிறந்த நாட்டியக்காரியைத் தேர்ந்தெடுத்து அவளுக்கு மிகுந்த பரிசளிக்க ஏற்பாடு செய்தனர். மாதவி அத்தகைய பரிசைப் பெற்றாள். அதனின்றும் பிறந்தது கோவலன் - மாதவியரைப் பற்றிய செய்திகள் ஆகும்.

**மக்களின் சிறப்புக்கள்**

மன்னனின் விருப்பக் கணிகையர் பல சிறப்புக்களைப் பெற்றனர். பல்லக்கேறிச் செல்லும் உரிமை, கவரி வீசப்படுதல், தங்கத்தாலான வெற்றிலை பாக்குப் பெட்டியை வைத்து கொள்ளுதல் முதலியவை இவர்கள் பெற்ற சில சிறப்புக்கள். இக்குலத்தாரைத் தமது தொழிலை மேற்கொள்ளாதவாறு தடுத்தல் தவறு என்று கருதப்பட்டது. உண்மையில் தங்கள் தொழிலை மறந்த அல்லது புறக்கணித்த கணிகையரைச் சட்டப்படி தண்டித்தனர்.

**உண்டியும் குடிவகைகளும்**

சங்கத் தமிழர், மரக்கறியுணவாயினும், இறைச்சியாயினும், நிரம்பவும் நன்றாக உண்பதில் அக்கறையுடையவர்கள். அவ்வாறு உண்டு பழகியவர்கள். அவர்களில் ஒரு பகுதியினராயினும் (அதாவது பிராமணர்கள்) சிறிதும் வழுவாமல் மரக்கறியுணவே உண்டனர் என்பது தெளிவாகிறது. அரிசிச் சோறு (முக்கியமாக வேத வேள்விகளில் ஆகுதி செய்ததற்குச் சிறந்த ராஜான்னம் என்னும் வகை அரிசி), நெய், பால், தயிரும் மாங்காய், கொம்மட்டி மாதுளை, கீரை முதலிய காய்கறிவகைகளும் அவர்கள் சமைத்து உண்ட உணவு பார்ப்பன மகளிர் சமையல் செய்வதில் வல்லவா்களாக திகழ்ந்தனா். அக்கலையில் தமக்குள்ள திறமையில் அவர்களுக்குப் பெருமை உண்டு.

அரிசி, தினை முதலிய தானியங்களைப் பாலில் வேகவைத்து உண்ணல் ஓர் விருப்ப உணவு. அதனை இப்போதும் பொங்கல் என்பர். அவர்கள் தரையில் உட்கார்ந்து உண்பர். மகளிர் நின்றுகொண்டு முன்பே பிசைந்து வைத்த ஆதாரங்களை அவர்களுக்கு குனிந்து பரிமாறினர். உணவு வாழையிலையில் பரிமாறப்பட்டது. அதுவே இப்போதும் உள்ள பழக்கம். எச்சாதியினராயினும் கைம்பெண்களுக்குப் பழைய சோறும், வேளைக்கீரையுமே உணவு என்பது விதி. துறவியர் பழைய சோறும், வெந்நீரும் உட்கொண்டு திருப்தியடைய வேண்டும். இல்லறத்தானுக்குப் பாலும் அதிலிருந்து ஆகும். நெய் முதலியனவும் நாள்தோறும் உணவின் பெரும்பகுதியாம். இடையர்கள் வாணிபம் செழித்தது. வெண்ணெய் நீக்கப்பட்ட பாலில் கொழுப்புச் சத்தும் பசியும் இல்லாமை குறிக்கப்பட்டுள்ளது.

உலர்ந்த வற்றல்களைக் காயும் நெய்யிற் பொரித்தல் அவர்கள் நன்கு அறிந்த ஒரு சமையல் வகை. இதை புறநானூறு பாடல் விளக்குகிறது.

**"நெடுநீர நிறைகயத்துப்**
**படுமாரித் துளிபோல**
**நெய்துள்ளிய வறைமுகக்கவும்**
**சூடு கிழித்து வாடூன் மிசையவும்**
**ஊன்கொண்ட வெண்மண்டை**
**ஆன்பயத்தான் முற்றழிப்பவும்**
**வெய்துண்ட வியர்ப் பல்லது**
**செய்தொழிலான் வியர்ப்பறியாமை**
**ஈத்தோ னெந்தை யிசைதன தாக"**[50]

அவ்உணவை இப்பொழுதும் விரும்பிச் செய்கின்றனர். இவை வற்றல் எனவும், ஊறுகாய் எனவும் பட்டன. அரிசிச் சோறுதான் சிறப்பான உணவு முக்கிய பண்டிகை நாட்களில் ராஜான்னம் என்னும் சிறப்புவகை அரிசியைச் சமைத்தனர்.

மன்னர்களிடம் ஆடிப்பாடிச் சென்று பரிசு வேண்டிய பாணரும் விறலியரும் ஆரவாரமான விருந்தில் கலந்து கொண்டு பெரும்பான்மைப் புலால் உணவைத் தின்று களித்தனர். தம்மை ஒரு பாணர் நிலையில் வைத்துக் கொண்டு குமட்டூர்க் கண்ணனார் என்னும் புலவர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாடுங்கால், கள்குடிக்கவும், அரிசிச்சோறு ஆக்கவும், இறைச்சித் துண்டுகளை வெட்டவும், வறுத்து எடுத்து சமைத்தும் உண்டு வந்தனர்.

இறைச்சி உண்ணலும், கள்குடித்தலும் உடனிகழ்ந்தன. மன்னன் தனது விருந்தினர், உறவினருடனிருந்து உண்டும், குடித்தும், மகிழ்ந்தான். ஆரவாரமான களிப்பு மிகுந்த சாப்பாட்டு இடத்தில் அவன் தலைமை தாங்கினான். கடைத் தெருக்களில் கள் விற்றற்குத் தனி இடங்கள் ஒதுக்கப்பட்டன. அவற்றின் இருப்பிடம் அங்குப் பறந்த கொடிகளால் அறிவிக்கப்பட்டது.

'குடி இன்பம் நிகரற்றது.' கள்ளுக்கடைக்குக் குடிகாரன் நடந்து சென்றது கள்ளில் யாத்திரை எனப்பட்டது. மேலும்,

**"கள்ளின் கேளிர் ஆர்த்திய, உள்ளூர்ப்**
**பாளை தந்த பஞ்சிஅம் குறுங்காய்**
**ஓங்குஇரும் பெண்ணை நுங்கொடு பெயரும்**
**ஆதி அருமன் மூதூர் அன்ன,**
**அயவெள் ளாம்பல் அம்பகை நெறித்தழை**
**தித்திக் குறங்கின் ஊழ்மாறு அலைப்ப,**

**வருமே சேயிழை, அந்தில்**

**கொழுநற் காணிய அளியேன் யானே!"**[51]

தோழி, கள்ளைக் குடிக்கும் விருப்பத்தை உடையவரது பயணமானது, ஊரகத்தேயுள்ள பாளையால் தரப்பட்ட நாரையுடைய குறுங்காய்களை உடையதான, உயர்ந்த கரிய பனையின் நுங்கினையும் கைக்கொண்டு பெயர்வதாயிருக்கும்.

பனங்கள்ளை உண்ணச் சென்றோர், அதனோடும் அமையாது, நுங்கையும் வெட்டிக் கொண்டு வருபவர் ஆவார். அவ்வாறே, தலைவனின் செயலால் அவனைக் காணத் தலைவி வீட்டிற்கு வரும் பரத்தை, அவனைக் கைக் கொள்வதுடன், தலைவியையும் பழித்துச் செல்வாள் என்பது புலப்பட இவ்வாறு கூறினாள். எனினும், தான் அவனை ஏற்க மறுப்பதாகக் கூறாத பண்பாட்டைத் தலைவி பெற்றிருப்பதனையும் இது காட்டும். **'கள்ளில் ஆத்திரை' என்ற** சொன்னயத்தால் இவரைக் **'கள்ளில் ஆத்திரையன்'** என்றனர்.

குடியர்கள் கடுமையான கள்ளிற்க்கு மாற்றாகச் சில புளித்த துணைக்கறித் துண்டுகளைப் பயன்படுத்தினர் என்று பின்வரும் புறநானூறு பாடல் கூறுகிறது.

**"திங்களு நுழையா வெந்திரப் படுபுழைக்**

**கண்மாறு நீட்ட நணிநணி யிருந்த**

**குறும்பல் குறும்பிற் றதும்ப வைகிப்**

**புளிச்சுவை வேட்ட செங்க ணாடவர்**

**தீம்புளிக் களாவொடு துடரி முனையின்**

**மட்டற னல்யாற் றெக்க ரேறிக்"**[52]

கள்ளும் மயக்கும் பிற குடிகளும் தனியார் வீடுகளில் தயாரிக்கப்பட்டன. அவற்றை உண்டு மக்கள் மகிழ்ச்சி அடைந்தனர்.

**"இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்**

**புடைநடு கல்லி னாட்பலி யூட்டி**

**நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇய**

**மங்குன் மாப்புகை மறுகுடன் கமழும்**

**அருமுனை யிருக்கைத் தாயினும் வரிமிடற்**

**றரவுறை புற்றத் தற்றே நாளும்**

**புரவலர் புன்க ணோக்கா திரவலர்க்**

**கருகா தீயும் வண்மை**

**உரைசா னெடுந்தகை யோம்பு மூரே”**[53]

என்று கூறப்படுகிறது.

யவனர் நாட்டிலிருந்து தருவிக்கப்பட்ட உயர் வகை மதுபானங்கள் மன்னர்களுடைய சிறந்த விருப்பக் குடிகளாம். அவர்கள் தெள்ளிய, மெல்லிய மதுவைத் தாம் உண்டு, ருசியான கலக்கங்களை விருந்தினர்க்களித்தனர். மேலும் இக்கருத்தை புறநானூறு பாடல் கூறுகிறது.

**“எமக்கே கலங்க றருமே தானே**
**தேற லுண்ணு மன்னே நன்றும்**
**இன்னான் மன்ற வேந்தே யினியே**
**நேரா ராரெயின் முற்றி**
**வாய்மடித் துரறிநீ முந்தென் னானே”**[54]

இம்மயக்கக் குடியைப் பெரிதும் நுகர்தற்பொருட்டு, அவர்கள் இஞ்சித் துண்டுகளை வைத்திருந்தனர். கோப்பையில் கள்ளை ஒருமுறையுறிஞ்சுவதும், அடுத்து இஞ்சித் துணுக்கைக் கடித்துக் கோடலும் மாறிமாறி நிகழ்ந்தன. இதனால் உண்டோர் அடைந்த களிப்பு மட்டற்றது. **“ஆமை, மீன், மான், முயல் இவற்றில் இறைச்சி சில அரிய விருப்ப உணவுகள். மயக்கம் தரும் பானங்கள் தடையின்றிப் பயன்பட்டன. சில தோட்டங்களில் அபின் உண்டாகும் கசகசாச்செடி பயிரிடப்பட்டது. நாடோடிகளான பாணர்கள் அபினை உண்டல் குறிக்கப் பெறுகின்றது”**[55] என்பதை எடுத்துக்காட்டுகின்றது.

வெற்றிலை போடுதல் அவர்களது பழக்கமாகும். வெற்றிலைச் சுருள்களுக்குத் திரையல் என்பது பெயர். (திரையல் என்பது சுருள்) மன்னர்களுக்கு வெற்றிலை வழங்கத் தனிப்பட்ட பணியாட்கள் எப்போதும் அருகில் நின்றனர். இவ்இலைகளை இட்டுவைத்தற்குச் சிறு பெட்டிகள் இருந்தன. இன்றுபோல் அன்றும் இவற்றைக் கையோடு எடுத்துச் செல்வர். தனிச் சலுகை பெற்றவர்கள் தங்கத்தால் செய்யப்பட்ட வெற்றிலைப் பெட்டிகள் வைத்திருந்தனர். வெற்றிலைப் போடுவதால் போடுபவர்களுக்கு அழகும் வனப்பும் தோன்றும் என்பது அவர்கள் கருத்து ஆகும்.

கணவன் உண்ட பிறகு அவனுக்கு மனைவி வெற்றிலை பாக்கு மடித்துத் தருதல் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு சங்க கால மக்கள் வாழ்ந்தனர்.

**ஆடை அழகு சாதனங்கள்**

சங்கச் சமுதாயத்தில் பல நிலைகள் இருந்தது போல, பல்வேறு நிலையில் இருந்த மக்கள் அணிந்த உடைகளிலும் பலதரங்களும் வகைகளும் இருந்தன. இடையைச் சுற்றித் தழையணிதல் முதல் மிக நேர்த்தியான உறையூர் (ஆர்கரடிக்) ஆடைகளை உடுத்தல் வரை ஆடை வகைகள் வேறுபட்டன. முந்தியது மலை வாணர்களாலும், மறக்குடிகளாலும், கள்ளர்களாலும் ஒவ்வோரமயங்களில் இடைச்சாதியராலும் அணியப் பெற்றது. பிந்தியது ஆறு கடலொடு கலக்குமிடத்து வதிந்த மருதநில மக்கள் விரும்பியணிந்தது.

ஆடவர் எப்போதும் பருத்தி உடையே அணிந்தனர் போலும். அதன் அழகு, தரம், நீளம் என்பவை உடுப்போரைப் பொறுத்து வேறுபட்டிருக்கும். தழை, உடை, இலை பூக்களால் வேயப்பெற்று இடையைச் சுற்றி உடுத்தப்பெறுவது. மலர்களேயன்றிப் பிற ஆடையறியா மகளிர் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் பலகாலும் பேசப்படுகின்றனர்.

ஆட்டு, மாட்டு இடையர்கள் இடுப்புத்துணி மட்டும் அணிந்து மேலுடையை நிராகரித்தனர். பல பகுதிகளிலும் இந்நிலையே நிலைத்துவிட்டது. வேடர்கள், விறகு வெட்டிகள், மீனவர்கள் என்போர் இயன்றவரையில் குறைந்த ஆடையோடு இருக்க விரும்பினர்.

மகளிர் இடையில் அணிந்த ஆடை இடுப்பிலிருந்து கணுக்கால் வரையில் தொங்கிற்று. ஒவ்வோரமயங்களில் அதன் கீழ்க்கரை பூமியிலும் புரண்டது. அதனை, **“நீல, நாகம் நல்கிய கலிங்கம்”**[56] என்று கூறுகிறது. செல்வர் ஆடைகள் நீல நிறந்தனவாகவும் கோல வேலைப்பாடமைந்தனவாயும் இருந்தன. உண்மையில், அரைத்துணிக்கு நீல நிறமே தமிழர் விரும்பிய நிறம் என்று சிறுபாண் ஆற்றுப்படை கூறியுள்ளது. மேலும்,

**“புகைமுகந்து அனன் மாசு இல் தூஉடை”**[57]

என்றும்,

**“மழை என மருளும் மகிழ்செய் மாடத்து**
**இழை அணி வனப்பின் இன்நகை மகளிர்”**[58]

என்று கூறப்படுகிறது.

தமிழ் உயர்குடிமக்கள் மிக நேர்த்தியான பருத்தி ஆடைகளையணிந்தன. அவை ஆவிபோன்று மெல்லியதாயிருந்தனர். அன்றிப் பாலாடை போன்றோ, பாம்புரித்த தோல் போன்றோ, சிலந்திக்கூடு போன்றோ நுண்ணியதாயிருந்தன.

**“துணைப்புணர்ந்த மட மங்கையர்**

**பட்டுநீக்கித் துகிலுடுத்து”**[59]

பட்டுத்துணி கனமாகவும் பருத்தித்துணி மெல்லியதாகவும் இருந்தமையின் மகளிர் பட்டாடையைக் களைந்துவிட்டுப் பருத்தித் துணியை உடுத்திக் கொண்டனர்.

நீளமாக நெய்யப்பட்ட ஆடையைத் தேவையான அளவிற்குத் துணித்துக் கொண்டனர். இவ்வாறு துணிக்கப்பட்டவையே ஆடையாக அணியப் பெற்றன. அவற்றைத் துணி, துண்டு, அறுவை என்றனர். துகில் என்பது வெளுப்பான அல்லது சிவப்பான துணி. அது செல்வர் உடுத்தியது. அது கடவுள் வழிபாட்டு மையங்களில் அணியப்பட்டது.**கலிங்கம், ஆடை** என்பன பொதுப் பெயர்கள். மடி என்பது சிறப்பாக வெளுத்து மடித்து வைக்கப்பட்ட துணியின் கொய்சகங்கள்.

**“குடிசெய்வ என்னும் ஒருவற்குத் தெய்வம்**

**மடிதற்றுத் தான்முந் துறும்”**[60]

‘என் குடியைப் புகழால் உயரச் செய்வேன்’ என்று அதற்கேற்ற செயல்களிலே ஈடுபடும் ஒருவனுக்கு தெய்வமும் மடியை உதறிக்கொண்டு முன்வந்து உதவி நிற்கும் என்று திருக்குறள் கூறுகிறது.

இடைத்துணியைச் சுற்றி ஆடவர் அணிந்தது கச்சு அல்லது வம்பு. அடிபுதையரணம் என்பது வேடர், போர்வீரர், இடையர் ஆகியோர் அணிந்த செருப்பேயன்றிப் பிறிதன்று. இச்செருப்புக்கள் தோலாற் செய்யப்பட்டன.

**“தொடு தோல் மரீஇய வடு ஆழ் நோன் அடி”**[61]

என்று பெரும்பாணாற்றுப்படையும்,

**“தொடுதோல் அடியர் துடிபடக் குழீஇக்”**[62]

என்று பட்டினப்பாலை பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது.

மகளிரைப் போல் ஆடவரும் தமது கேசத்தை அதன் இயற்கையான நீளத்திற்கு வளர விட்டனர். அதனை எடுத்து தலை உச்சியில் குடுமியாக முடிந்தனர். ஆண்கள் கேசத்தைக் குடுமியாகவே வைத்துக் கொண்டனர். நீண்டு, கறுத்து, ஒள்ளிதாக இருந்த தமது கேசத்தை மகளிர் கூந்தல் என்றனர். பகட்டு மகளிர் கூந்தலை ஐந்து பகுதியாக்கி அணிந்தனர். குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என்பன அவை. அவை வெவ்வேறு வகையின. அவை மொத்தமாக ஐம்பால் எனப்பெற்றன. மகளிரில் மூத்தோர் கேசத்தை வாரி முடிந்துவிட்டனர். கைம்பெண்களும், துறவிகளும் தலைமயிரை முற்றிலும்

மழித்துவிட்டனர். சில துறவிகள் கேசத்தைச் சிக்குப் பிடித்த சடையாக அணிந்து இருந்துள்ளனர்.

**அணிகலன்கள்**

பணக்காரர்கள் உயர் உலோகங்களாலும், ரத்தனங்களாலுமான மதிப்புயர்ந்த நகைகளை அணிந்தனர். அத்தகைய வசதியில்லாதவர்கள் கூடக் கண்ணாடி மணிகளைக் கோத்தேனும் மாலைகள் அணிந்தனர். சிறார் ஐம்படைத்தாலி என்னும் நகை அணிந்தனர். இது அவர்கள் கழுத்தைச் சுற்றி அணியப் பெற்றது. இதில் திருமாலின் ஐம்படைகள் தொங்கட்டானாகக் கோக்கப்பெற்றன. இதை புறநானூறு பாடல் பின்வருமாறு கூறியுள்ளது.

**“கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டுக்**
**குடுமி களைந்த நுதல் வேம்பி னொண்டளிர்**
**நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து**
**குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி**
**நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்**
**யார்கொல் வாழ்கவவன் கண்ணி தார்பூண்டு**
**தாலி களைந்தன்று மிலனே பால்விட்**
**டயினியு மின்றயின் றனனே வயின்வயின்**
**உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை**
**வியந்தன்று மிழிந்தன்று மிலனே யவரை**
**அழுந்தப் பற்றி யகல்விசும் பார்ப்பெழக்**
**கவிழ்ந்துநிலஞ் சேர வட்டதை**
**மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே”**[63]

இளஞ் சிறார்க்குக் காலிற் கிண்கிணியும், தலையிற் குடுமியும், கையில் குறிய வளையும், மார்பில் ஐம்படைத் தாலியும் அணிவதும், பாலுணவளிப்பதும் பண்டைத் தமிழ்ச் செல்வர் மரபு. இளமை கழிந்து காளைப் பருவ மெய்தினார் காலிற் கழலும் தோளில் தொடியும் மார்பில் மாலையும் அணிவர்.

அவர்கள் சோற்றுணவு உண்பவராக இருந்தனர். ஈண்டு நெடுஞ்செழியன் இளமைச் செவ்வியை இன்னும் நன்கு கழிந்திலன் என்றற்கு இவற்றை விரித்துக் கூறினார். மேலும்,

**“முகிழ் நிலாத் திகழ்தரும் மூவாத் திங்கள்**
**பொன்னுடைத் தாலி என் மகன் ஒற்றி**

**வருகுவை ஆயின் தருகுவென் பால்”[64]**

தாலி பொன்னாலானது. இவற்றை சங்ககால பெண்கள் கழுத்தில் அணிந்து உள்ளனர். சிறுவர்கள் காலில் கிங்கிணி என்னும் சிறு சிலம்புகள் அணிந்தனர். அவர்கள் நடந்தபோது அவை ஒலித்தன. அவையேயன்றி சிவனது வாள், சூலம், நந்தி ஆகியவற்றைப் போற்றும் ஆபரணங்களும் அணியப் பெற்றன.

**“புலிப்பற் றாலிப் புன்றலைச் சிறாஅர்”[65]**

சிறுவர் அணிந்த ஒருவகைப் பொற்சங்கிலியில் புலிப்பல் தொங்கட்டானாகக் கோக்கப்பட்டது. அது புலிப்பற்றாலி எனப்படும். குழந்தைகள் கழுத்தில் புலிப்பல் அணிந்தால் அது அவர்களைக் கண்ணீட்டினின்றும் காக்கும் என்று நம்பினர்.

**மகளிர் அணிவகைகள்**

மகளிர் அணிவகைகள் பலதரப்பட்டன. காலில் சிலம்பணிந்தனர். அதில் ஒவ்வொரு வகை மணிகளை இட்டு வைத்தனர். அவர்கள் நடந்தபோது அவை குழந்தைகளது கிங்கிணி போன்று ஒலித்தன. கண்ணகியணிந்திருந்த சிலம்பில் ரத்னமும், பாண்டியன் மனைவி கோப்பெருந்தேவியணிந்த சிலம்பில் முத்தும் இருந்தன.

இடையை சுற்றிப் பலவகைக் கச்சுக்கள் அணிந்தனர். அவை அணியாகவும் ஆடையை இறுக்கவும் பயன்பட்டன. முத்தாரை என்னும் அணியில் முத்துக்கோக்கப் பெற்றது. மேகலை 32 கோவை முத்துக்கள் சேர்ந்த மிக அழகிய வேலைப்பாடமைந்த அணியாகும். பவளத்தாலான மேகலைகளும் அணிவதுண்டு. இம்மேகலை மீது மெல்லிய கலிங்கம் போர்த்திக் கொள்வர். தலைமீது பூப்போன்ற செந்திரு அல்லது தெய்வ உத்தி என்னும் ஓர் அணியைச் சூடினர். இதனை நச்சினார்க்கினியர் சீதேவி என்றார்.

**“தெய்வ உத்தியொடு வலம்புரி வயின் வைத்து”[66]**

என்று திருமுருகாற்றுப்படையில் தேவமகளிர் அணிந்த அணிகலன்கள் பற்றி குறிப்பிடுகிறது.

வயந்தகம் என்பது நெற்றியில் தொங்கிய ஒரு தொங்கட்டான். அதனை நாட்டியக்காரிகள் அணிந்தனர். காதில் குழையும், கழுத்தில் காசுமாலையும், கை, கால் விரல்களில் மோதிரமும், தோளுக்குத் தொடியும், முன்னங்கைகளில் அணிந்தனர். இதனை,

**“மடைசெறி முன்கைக் கடகமோ டீத்தனன்”[67]**

என்று புறநானூறு பாடல் வழி அறிய முடிகிறது.

சங்ககால அணிகலன்கள் பண்டைக் காலத்தில் உலர்ந்த பனை ஓலை துணுக்குக்களை நறுக்கிச் சாயம் தோய்த்து சுருட்டிக் காதில் அணிந்தமை ஓலை அல்லது தோடு எனப்பட்டன. தாலியும், தோடும் மணமான மகளிர் அணிய வேண்டியவை. கைம்பெண்கள் இவற்றைக் கழற்றிவிட்டனர். அவை மணநிலையைக் காட்டும் மங்கல அணிகளாயின.

**நறுமணப் பொருள்கள்**

தமிழர் நறுமணப் பொருள்களைப் பெரிதும் விரும்பினர். கோவலனும், மாதவியும் கடற்கரைக்குச் சென்றபோது, மாதவி தன்னை ஆடை, அணி, வாசனைப் பொருள்கள் முதலியவற்றால் பெரிதும் அலங்கரித்துக் கொண்டாள் என்று இளங்கோ கூறுவார். அவளது கூந்தலுக்கு மென்மை மிக்க வாசனைப் பொருள் பூசப்பட்டது. அந்நறுமணம் பத்து வகை துவர் சரக்குகள், ஐவகை வாசைன, 32 வகை நறுமணச் செடிகளில் கிடைத்த சாறுகள் என்பவற்றாலானது. அகிற்புகை கேசத்திற்கு ஊட்டப்பட்டது. கடைசியில் கத்தூரியாலாகிய ஒருவகை மெழுகு கூந்தற்கிடப்பட்டது. காலிற்குச் செம்பஞ்சுக் குழம்பு பூசிக் கொண்டனர்.

தமிழ் மகளிரின் மிக விருப்பப்பொருள் மலர்களே ஆகும். முடி மன்னர்கள் பலவகைச் சிறப்பு மலர்களோடு தொடர்புபடுத்தப்பட்டனர். **“சோழற்கு ஆல், பாண்டியற்கு வேம்பு, சேரற்குப் பனை”**[68] அவர்கள் நிலத்தைப் பிரித்துத் திணைகளோடு பொருத்திக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனக் கொண்டனர். தமிழிசையில் பண்களுக்கும் இப்பெயரிட்டனர்.

குறிஞ்சிப்பாட்டில் கபிலர் 99 வகைப் பூக்களைக் கூறுகிறார். அவை,

**“உள் அகம் சிவந்த கண்ணேம் வள் இதழ்**
**ஒண் செங் காந்தள், ஆம்பல், அனிச்சம்**
**தண் கயக் குவளை, குறிஞ்சி, வெட்சி**
**செங்கொடு வேரி தெமா மணிச்சிகை,**
**உரிது நாறு அவிழ் தொத்து உந்தூழ் கூவிளம்**
**எரி புரை எறுழம் சுள்ளி கூவிரம்**
**வடவனம் வாகை வான்பூங் குடசம்**
**எருவை செருவிளை மணிப்பூங் கருவிளை**
**பயினி வானி பல் இணர்க் குரவம்**
**பசும் பிடி வகுளம் பல் இணர்க் காயா**
**விரி மலர் ஆவிரை வேரல் சூரல்**

**குரீஇப் பூளை குறு நறுங் கண்ணி**
**குருகிலை மருதம் விரி பூங்கோங்கம்**
**போங்கம் திலகம் தேங்கமழ் பாதிரி**
**செருந்தி அதிரல் பெருந்தண் சண்பகம்**
**கரந்தை குளவி கடிகமழ் கலி மா**
**தில்லை பாலை கல் இவர் முல்லை**
**குல்லை பிடவம் சிறு மாரோடம்**
**வாழை வள்ளி நீள் நறு நெய்தல்**
**தாழை தளவம் முள் தாள் தாமரை**
**ஞாழல் மௌவல் நறுந்தண் கொகுடி**
**சேடல் செம்மல் சிறு செங்குரலி**
**கோடல் கைதை கொங்கு முதிர் நறு வழை**
**காஞ்சி மணிக்குலைக் கள் கமழ் நெய்தல்**
**பாங்கர் மராஅம் பல் பூந் தணக்கம்**
**ஈங்கை இலவம் தூங்கு இணர் கொன்றை**
**அடும்பு அமர் ஆத்தி நெடுங்கொடி அவரை**
**பகன்றை பலாசம் பல் பூம் பிண்டி**
**லஞ்சி பித்திகம் சிந்து வாரம்**
**தும்பை துழாஅய் சுடர்பூந் தோன்றி**
**நந்தி நறவம் நறும் புன்னாகம்**
**பாரம் பீரம் பைங் குருக்கத்தி**
**ஆரம் காழ்வை கடி இரும் புன்னை**
**நரந்தம் நாகம் நள்ளிருள் நாறி**
**மா இருங் குருந்தும் வேங்கையும் பிறவும்**
**அரக்கு விரித்தன்ன பரு ஏர் அம் புழகுடன்**
**மால் அங்கு உடைய மலிவனம் மறுகி”**[69]

மணிமேகலையில் சாத்தனார் 20 வகை கூறுகின்றார். புகார், மதுரை கடைத்தெருக்களில் மலர்கள் உதிரியாகவும், மாலைகளாகவும்,ஏராளமாக விற்கப்பட்டன. அம்மலர்களின் மிகுதியைக் காணும்போது அக்கடைத்தெரு மலர்க்காடு போல் தோன்றும். உதிரிப்பூவும், மாலையும், செண்டும் அவர்கள் விற்ற

பூக்களில் மூவகை. இம்மலர்களை தலையில் சூடிக்கொண்டனர். அப்போது அது கண்ணி எனப்பட்டது. தோளில் சூடிக்கொண்டது தார் எனப்பட்டது.

நறுமணப் பொருள்களை உபயோகப்படுத்த நிலைக் கண்ணாடி தேவைப்பட்டது.தமிழர் கண்ணாடியும் முகங்காட்டக்கூடிய பளபளப்பான வேறு பொருள்களையும் உபயோகித்தனர்.

**ஈமச்சடங்குகள்**

ஒருவன் இறப்பின், எப்போதும் உள்ள அழுகையும் கூக்குரலும் தவிர முரசடித்தலும், சங்கு ஊதுதலும் நிகழ்ந்தன. விதவை ஒருத்தி இருப்பாளாயின் அவள் இறந்த கணவனைத் தொடர்ந்து சாவாள். அல்லது கைம்மை வாழ்க்கையை மேற்கொண்டு அதன் கடுமைக்கு ஆளாவாள்.

இறந்தோர் சடலத்தை ஒழித்தற்குப் பல வகைகள் தமிழர் அறிந்திருந்தனர். அவை,

அ. சுட்டு எரித்தல்

ஆ. பானையில் அடக்கல்

இ. கழுகுகளும் நரிகளும் தின்று விடும்படி எறிந்து விடுதல்

ஈ. சாதாரணமாகப் புதைத்தல்

என்னும் வழிகள் அவர்கள் தெரிந்து கையாளப் பெற்றனர். எரிக்குமிடம் சுடுகாடு, மற்றவைக்குரியது இடுகாடுகள். சுடுதலே பெரும்பான்மை மரபு. ஏனெனில் இடுகாட்டை விடச் சுடுகாட்டைப் (சுடலை) பற்றிய குறிப்புக்களே பலவாயின. நாலடியாரில் இடுகாட்டில் ஒற்றைப் பனையைப் பற்றிய குறிப்புண்டு. அன்றியும் எளிய வகைப் புதைத்தல் மரபும் கூறப்பட்டுள்ளது. அவற்றை நாலடியார் பாடல் கூறுகிறது.

**“நார்த்தொடுத்து ஈர்க்கிலென் நன்றாய்ந்து அடக்கிலென்**
**பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்**
**தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்**
**கூத்தன் புறப்பட்டக் கால்”**[70]

பிணத்தை ஒரு பெரிய பானையிலிட்டு பூமியில் அதனைத் தலைகீழாய்ப் புதைத்து விடுதலே சட்டியில் புதைத்தல் என்பது. இப்பானை முதுமக்கள் தாழி எனப்பட்டது. (இறந்தோர் தாழி என்பது பொருள்) செஞ்செவிச் சேவலும் கழுகும் பிணத்தை எதிர்பார்த்துத் தாழி மீது உட்கார்ந்திருத்தலைப் புறநானூறு கூறியுள்ளது.

**“கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே**
**அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய**
**சிறுவெண் பல்லி போலத் தன்னொடு**
**சுரம்பல வந்த வெமக்கு மருளி**
**வியன்பல ரகன்பொழி வீமத் தாழி**
**அகலி தாக வனைமோ**
**நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவோ”**[71]

ஈமத்தாழி முதுமக்கள் தாழி. யாமும் எம் தலைவனோடே இறக்கவிருக்கின்றோமாதலால் எமக்கும் அவனோடே இடம் அமையத்தக்க அகல முடைத்தாகப் பெரியதொரு தாழி செய்ய வேண்டுமென வேண்டுதலின், ‘எமக்கும் அருளி அகலிதாக வனைமோ’ என்றாள். சாகாட்டாரம் பொருந்திய பல்லி போலக் கணவனைப் பற்றித் தொடர்ந்து வந்தவள் ‘எனக்கும்’ என அவனிற் பிரித்திசைக்கும் சொல்லை நெஞ்சாலும் நினையாளாதலின், எமக்கும் என்றனள்.

கணவன் உடல் எவ்வாறு அழிக்கப்பட்டிருப்பினும் ஸதி என்னும் பழக்கம் தீப்பாய்தல் வகையிலேயே மேற்கொள்ளப்பட்டது. அதற்கென ஒதுக்கப்பட்ட புதைக்கும் அல்லது எரிக்கும் இடத்திற்குச் செத்தார் சடலம் உறவினரால் தூக்கிச் செல்லப்பட்டது. உடலை அழித்ததற்கு முன்பும், பின்பும் அவர்கள் மன்றம் எனப்பட்ட நிழல்தரும் பெரிய மரத்தடியில் சற்று அமர்ந்தனர். பொதுக் காரியத்திற்காக இவர்கள் கூடினமையின் அது மன்றமாயிற்று. இவ்வாறு இவர்கள் அமர்ந்த மரங்களில் வன்னிய மரத்தைக் கூறிற்று பதிற்றுப்பத்தாகும்.

இறந்தோர்க்குச் சில சடங்குகள் செய்தல் வழக்கம். சிலப்பதிகார ஆசிரியர் இவற்றைக் கடன் (கடமை) என்றும், உரைகாரர் பலிகடன் என்று கூறுவர். அதாவது செத்தார்க்குச் சோற்றுருண்டை அளிக்கும் கடமை. இவ்வுருண்டை புல் (அதாவது தருப்பை) மீது வைக்கப்பட்டது. அவற்றை பின்வரும் புறநானூறு பாடல் கூறுகிறது.

**“பயனுறுப்பப் பலர்க்காற்றி**
**ஏமமாக விந்நில மாண்டோர்**
**சிலரே பெரும கேளினி நாளும்**
**பலரே தெய்வ.். தறியா தோரே**

**அன்னோர் செல்வமு மன்னி நில்லா**
**தின்னு மற்றதன் பண்பே யதனால்**
**நிச்சமு மொழுக்க முட்டிலை பரிசில்**
**நச்சுவர நிரப்ப லோம்புமதி யச்சுவரப்**
**பாறிறை கொண்ட பயந்தலை மாறுதகக்**
**கள்ளி போகிய களரி மருங்கின்**
**வெள்ளி நிறுத்த பின்றைக் கள்ளொடு**
**புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி**
**புலைய னேவப் புனமே லமர்ந்துண்**
**டழல்வாய்ப் புக்க பின்னும்**
**பலர்வாய்த் திரா அர் பகுத்துண்டோரே"[72]**

எரித்தல் என்பது மரக்கட்டைகள் அடுக்கிவைத்த சிதைமீது சடலத்தைக் கிடத்தி அதற்குத் தீ வைத்து விடுதல் ஆகும். இம்முறையே சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் கடைப்பிடித்தனர். இவற்றை புறநானூறு பாடல் மூலம் அறிய முடிகிறது.

**"பல்சான் றீரே பல்சான் றீரே**
**செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்**
**..........................................................**
**வள்ளித ழவிழ்ந்த தாமரை**
**நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே"[73]**

இறந்தபின் இறந்தவர்க்கு உறவினர்கள் பல உருவங்களில் செங்கல் கட்டடங்கள் (சமாதி) கட்டி வைத்தமை கூறப்படும். ஆங்குப் புதைக்கப்பட்டவர்கள் சந்நியாசிகள் அல்லது அரசர்கள் அல்லது சதிநிலையடைந்த மகளிராகலாம். நடுகல் வேறு, இது வேறு என்று காண வேண்டும். ஏனெனில் நடுகல் என்பது நினைவுக்கல். (அதாவது இறந்தோர் உடலைத் தம் கீழ் இடக்காத நினைவுக்கல்) ஆனால் மணிமேகலை கூறுவது சமாதியேயாம். இச்சமாதிகள் வெவ்வேறு சாதியார்க்கும், வெவ்வேறு நிலையினர்க்கும், உருவங்களில் அமைந்தன. சில சுட்ட செங்கல்லால் எழுப்பப்பெற்ற கோபுரங்கள் போன்று இருந்தன. இவை சங்ககால மக்கள் கடைப்பிடித்த ஈமச்சடங்குகள் முறை என்பதாகும்.

## தொகுப்புரை

- சங்ககாலம் தமிழ் இலக்கிய வரலாற்றின் பொற்காலமாகும். ஆணாதிக்கச் சமூகத்தை உருவாக்கிய காலம். அதற்கேற்ப மகளிர் இலக்கியத்திலும், சமுதாயத்திலும் சிறந்து விளங்கியுள்ளனர். ஆணும், பெண்ணும் இணைந்து நடத்துகின்ற இல்லற வாழ்வே பழமையான வாழ்வு என மேற்கொள்ளப்பெற்றது.

- சங்ககாலப் பெண்கள் அழகு, கல்வி, வீரம் ஆகியவற்றில் சிறந்தவர்களாக விளங்கியுள்ளனர். நீர் போன்ற சாயலும், மயில் போன்ற இயலும், மணமும், மானம் உடையவர்களாக மகளிர் இருந்துள்ளனர். சங்க இலக்கியங்களில் புறப்பாடல்களை விடவும் அகப்பாடல்களே பெண்களின் மென்மையை மிகுதியாகப் பேசுகின்றன.

## இயல் இரண்டு

## சான்றெண்விளக்கம்

1. சோமசுந்தரனார் பெ.வே-புறப்பொருள் வெண்பாமாலை பா-1
2. டாக்டர் பூவண்ணன் - கம்பராமாயணம் - கிட்கிந்தா காண்டம் பா-963
3. கில்பர்ட் கிலேட்டர் - இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு பக்-117
4. மாதவன் கே. - திருமணமுறைகள் பக்-18,19
5. நா.வானமாமலை - தமிழர் வரலாறும் பண்பாடும் பக்-75
6. மேலது பக்-75
7. மேலது பக்-75
8. மேலது பக்-77
9. மேலது பக்-77,78
10. பக்தவச்சலபாரதி - தமிழர் மானிடவியல் பக்-3,4
11. மேலது பக்-35
12. நா.வானமாமலை - தமிழர் வரலாறும் பண்பாடும் பக்-72
13. பெர்ட்ராண்டுரஸ்ஸல் - திருமணமுறைகள் பக்-1
14. கடியலூர் உருத்திரங்கண்ணார் - பெரும்பாணாற்றுப்படை பா-405
15. அடியார் உரையும் பழைய உரையும் - சிலம்பு பா-146
16. மேலது பக்-7
17. டாக்டர் ந.சுப்ரமண்யன் - சங்ககால வாழ்வியல் பக்-155
18. புலியூர்க்கேசிகன் - குறுந்தொகை பா-262
19. டாக்டர் ந.சுப்ரமண்யன் - சங்ககால வாழ்வியல் பக்-147
20. தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு - தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம் (அரசியல்) பக்-589
21. புலியூர்க்கேசிகன் - திருக்குறள்-773
22. மாணிக்கவாசகன் ஞா - பத்துப்பாட்டு-பொருள் - பா-55
23. மேலது பக்-39
24. மேலது பக்-36
25. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - புறம் பா-6
26. புலியூர்க்கேசிகன் - பரிபாடல் - பா-20
27. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை - புறம் பா-327
28. செயபால் இரா முனைவர் - அகம் பா -77

29. தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு - தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம் (அரசியல்) பக் - 591
30. சுப்ரமண்யன் ந. டாக்டர்- சங்ககால வாழ்வியல் - பக்-333
31. மேலது பக்-334
32. மேலது பக்-335
33. மேலது பக்-336
34. மேலது பக்-373
35. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - புறம் பா-191
36. தொல் - பொருள் நூ-93
37. சுப்ரமண்யன் ந. டாக்டர் - சங்ககால வாழ்வியல் பக்-375
38. மேலது பக்-376
39. மேலது பக்-378
40. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - புறம் பா-86
41. சுப்ரமண்யன் ந. டாக்டர் - சங்ககால வாழ்வியல் பக்-379
42. மேலது பக்-380
43. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - புறம் பா-246
44 மேலது பா-247
45. புலியூர்க்கேசிகன் - குறள் - 1158
46. சுப்ரமண்யன் ந. டாக்டர் - சங்ககால வாழ்வியல் பக்-395
47. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - புறம் பா-250
48. மேலது பா-280
49. மேலது பா-25
50. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - புறம் பா-286
51. புலியூர்க்கேசிகன் - குறுந்தொகை பா-293
52. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - புறம் - பா-177
53. மேலது பா-329
54. மேலது பா-298
55. சுப்ரமண்யன் ந. டாக்டர் - சங்ககால வாழ்வியல் பக்-402
56. மாணிக்கவாசகன் ஞா. - பத்துப்பாட்டு சிறுபாண் பா-96
57. மேலது - திருமுருகாற்றுப்படை பா-138
58. மேலது - பொருநர் பா-84, 85

59. மேலது - பட்டினப்பாலை பா-107
60. மேலது - திருமுருகாற்றுப்படை பா-138
61. மாணிக்கவாசகன் ஞா. - பத்துப்பாட்டு -பெரும்பாண் பா-169
62. மேலது - பட்டினப்பாலை பா-265
63. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - புறம் பா-77
64. செயபால் இரா. முனைவர் - அகம் பா-54
65. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - புறம் பா-374
66. மாணிக்கவாசகன் ஞா.- பத்துப்பாட்டு-முருகாற்றுப்படை - பா- 23
67. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - புறம் பா-150
68. சுப்ரமண்யன் ந. டாக்டர் - சங்ககால வாழ்வியல் பக்-402
69. மாணிக்கவாசகன் ஞா- பத்துப்பாட்டு - குறிஞ்சிப்பாட்டு பா-61
70. ஸ்ரீசந்திரன் ஜெ. பேராசிரியர் - நாலடியார் பா-26
71. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - புறம் - பா-256
72. மேலது பா-360
73. மேலது பா-246

# இயல் மூன்று

# சங்கத் தமிழரின் அரசியல்

- முன்னுரை
- சங்ககாலத்தில் அரசாட்சி
    - சேரநாடு
    - சோழநாடு
    - பாண்டியநாடு
- மன்னன்
- முடிசூடுதல்
- அரசவையும் அரச அலுவல் முறையும்
- அரச குடும்பமும், கோயில் நிர்வாகஸ்தர்களும்
- அரசன் சின்னங்கள்
- ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும்
- புரோகிதர்
- நாழிகைக் கணக்கர்
- சங்ககாலத்தில் உழவு
- சங்ககால மக்களின் கைத்தொழில்
- வாணிபம்
    - உள்நாட்டு வாணிபம்
    - வெளிநாட்டு வாணிபம்
- பொழுதுபோக்குகள், விளையாட்டுக்கள் மற்றும் மகிழ்வினைகள்
- சங்ககால பழக்க வழக்கங்கள்
- நம்பிக்கைகளும் மூடநம்பிக்கைகளும்
- தொகுப்புரை

## இயல் மூன்று
## சங்கத் தமிழரின் அரசியல்

**முன்னுரை**

சங்ககாலம் முதல் தற்காலம் வரை மனித வாழ்க்கையை நம் கண் முன்னே காட்டும் இலக்கியங்கள் காலம் தோறும் மக்களால் ஏற்கப்பட்டு தான் வருகின்றன. உள்ளனத்தின் உணர்வுகளை அடுத்தவர்களுக்குப் புரிய வைக்கும் ஊடகங்களில் தலைசிறந்தது இலக்கியமாகும். தமிழின் தொன்மைகளை வெளிப்படுத்திக் காட்டும் இலக்கியங்கள் போல சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன.

சங்க காலத்தில் மூவேந்தர்கள் சிறப்பாக ஆட்சி நடத்தினார்கள். அரசனை ‘கோ’ என்று மக்கள் அழைத்தனர். அரசனுக்கு பிறகு மூத்த மகன் மன்னன் ஆனார். ஐம்பெருங்குழு கொண்டு அமைக்கப்பட்டு இருந்தது. அவர்கள் தங்கள் கருத்துக்களை அரசவையில் கூறினார்கள். சங்ககாலத்தில் உழவும், வாணிபம் மக்களுக்கு ஏற்ற வகையில் நடைபெற்றன. மக்கள் பொழுதுபோக்கிற்காக சில விளையாட்டுக்களில் கலந்து கொண்டு தங்கள் பொழுதினை கலித்தார்கள். சங்கத் தமிழரின் அரசியல் என்னும் இவ்வியலில் மன்னர்களின் வாழ்க்கை முறை பற்றிய செய்திகள் இங்கு ஆராயப்பட்டுள்ளன.

**சங்ககாலத்தில் அரசாட்சி**

சங்ககாலத் தமிழர் வலுப்பெற்ற மன்னர்களால் ஆளப்பெற்றனர். சங்ககால அரசியல் முறை மன்னராட்சியும் பல சிற்றரசர் ஆட்சியும் அடங்கியது. பண்டைக் காலத்திலிருந்தே தமிழகத்தில் சேரர், சோழர், பாண்டியர் என மூன்று பெருமன்னர்கள் ஆண்டு வந்தனர். சேரர் நாட்டின் தென்மேற்குப் பகுதியையும், சோழர் வடகிழக்குப் பகுதிகளையும், பாண்டியர் தென்கிழக்குப் பகுதியையும் ஆண்டு வந்தனர்.

தற்காலத்திய சிற்றூர், வட ஆற்காடு, சென்னை, செங்கல்பட்டு, தென் ஆற்காடு, தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்கள் சேர்ந்தது சோழர் பகுதி. இவற்றில் சிற்றூர், வட ஆற்காடு, சென்னை, செங்கல்பட்டு பகுதிகள் தொண்டை மண்டலம் எனப்பட்டது. பாண்டியர் நாடு காவிரியாற்றிற்குத் தெற்கேயும் ஆனைமலைத் தொடருக்கு கிழக்கேயும் குணக்கடல் வரையிலும் தெற்கே குமரிமுனை வரையும் பரந்திருந்தது.

சேரநாடு தற்காலக் கேரளா அரசின் பரப்பை உள்ளடக்கிற்று. கோயம்புத்தூர், சேலம் மாவட்டப் பகுதிகள் பல வேந்தர்களாலும் வேளாளச்

சிற்றரசர்களாலும் ஆளப்பெற்றுக் கொங்குநாடு ஆகியது. நெடுஞ்சேரலாதன் அல்லது செங்குட்டுவன் போன்ற வலுமிக்க மன்னர்களாட்சியில் கொங்குநாடு சேரர் ஆட்சியில் அடங்கிற்று. குடகு, நீலகிரி மலைகள் மற்றும் தென் கன்னடம் கோசர் நாட்டுப் பகுதிகளாயின. தென் மத்திய மைசூர் பிரதேசம் கங்கர்களால் ஆளப்பட்டது. ஆயினும் தலையாய மன்னர்கள் சேரர், சோழர், பாண்டியர் என்பவர்களே ஆவார்கள்.

**சேர நாடு**

சேர, சோழ, பாண்டியர் என்னும் சொற்களுக்குப் பலவித கிளவியாக்கங்கள் பல அறிஞர்களால் கூறப்பட்டுள்ளன. சேரரை வானவர், வில்லவர்,குடவர், குட்டுவர், பொறையர், மலையர் முதலிய பெயர்களாலும் அழைப்பார்கள். வானவர் என்போர் தேவலோகத்தில் வசிக்கும் உம்பர் நாட்டின் தேவர்களைக் குறிக்கும். ஆகையால் உயர்ந்த நாட்டை [மேல்நாடு அல்லது மேலைநாடு] ஆண்ட சேரர் வானவராயினர், சேரர் வேட்டுவரானதால் வில்லவராயினர். மேலைநாட்டவரானதால் குடவர் அல்லது குட்டுவராயினர். போறை, மலை என்னும் பரியாயச் சொற்கள் மலை என்று பொருள்படுவன. ஆகையால் மலைநாட்டை ஆண்ட சேரர் இயற்கையிலேயே 'பொறையர்' 'மலையர்' ஆயினர். சேரரைப் பூழியர் என்றும் கூறுவர். பூழி என்றால் புழுதி என்பதாகும். அவர்கள் புழுதி நாட்டை ஆண்டவர்கள் ஆவர். ஆனால் சேரநாட்டின் ஒரு பகுதி பூழிநாடு ஆயிற்று.

**சோழநாடு**

சோழர்கள் சென்னி, செம்பியன், வளவன், கிள்ளி எனப் பட்டனர்.சென்னி என்றால் தலை. ஆகவே சென்னி என்பவன் தலைவன் என்று அழைக்கப்பட்டார். செம்பியன் செம்மையின் விகாரமாதல் கூடும் எனில் இம்மா "ம்மா, ம்பா எனவும் ஆகும்" ஆயினும் செம்பியனைச் சிபியிலிருந்து பெறுவது விந்தையாயிருக்கிறது.

வளவன் என்பது செழிப்பான நாட்டை ஆள்பவன் என்று பொருள்படும்.வளமை என்பது செழுமை. காவிரி நாடே தமிழகத்தில் மிகவும் செழிப்பான பகுதி என்பதில் தடையில்லை. சோழ நாட்டைச் சோழவளநாடு என்பர். கிள்ளியை தலைவர் என்னும் பொருளிலேயே ஆண்டுள்ளனர்.

> **"பொலந்தார்த் தேவர்கள் கிள்ளி போகிய**
> **பேரிசை மூதூர் மன்றங் கண்டே"[1]**

அதனைச் சோழர் பட்டங்களோடு சேர்த்து வரும் கிள்ளிவளவன் போன்ற பெயர்கள் மீ மிசையல்ல. சோழரது அதிகாரிகளில் சிலர் கிள்ளி எனப்பட்டனர். உதாரணமாக,

**"கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி"[2]**

என்றும் சோழ என்னும் சொல்லைச் சோழநாடு என்பதனோடு பொருத்துவர்.

**பாண்டியநாடு**

பாண்டியரை மீனவர், கவுரியர், பஞ்சவர், தென்னவர், செழியர், மாறர், வழுதி முதலியனவாக அழைப்பர். இதனை,

**"அருநரை உருமின் பொருநரைப் பொறா அச்**
**செருமாண் பஞ்சவர் ஏறே"[3]**

என்று புறநானூறு பாடல் கூறுகிறது.

சேரர் வேட்டுவராய் வில்லவரானது போலப் பிற்காலத்தில் மீன் கொடிக்கு உரிய மீனவரை அது எளிதில் குறிப்பதாயிற்று. கவுரியர், பஞ்சவர் என்பது மகாபாரத வீரர்களைப் பாண்டியரோடு தொடர்புபடுத்தி வேண்டிப் பிற்காலத்து எழுந்த முயற்சியாகும். தென்னவர் என்பது பாண்டியரைக் குறித்தல் இயற்கை, குடவர் சேரரைக் குறிப்பது போல, செழியன் என்பது பாண்டியரது புகழ் பெற்ற பட்டங்களில் ஒன்று ஆகும். நெடுஞ்செழியன் என்பது பாண்டியரைக் குறிக்கும். வளவன் என்பது வளமையிலிருந்து பெறப்படுவது போல் செழியன் என்பது செழுமையிலிருந்து பெறப்படலாம். அதற்கும் வெண்மை யென்னும் பொருளுண்டு. மாறன் என்பதைத் தென்னவனுக்குப் பரியாயமாகப் பயன்படுத்துவர். இரு சொல்லும் தென்திசைக் காவலனான காலதேவனைக் குறிக்கும்.

**மன்னன்**

அரசன் ஆட்சியின் மையமாகவும் உருவமாகவும் விளங்கினான். அவனைக் கோ, மன்னன், வேந்தன், கொற்றவன், இறைவன் என்று அழைத்தனர்.கோ என்னும் சொல் அரசனையும் ஆண்டவனையும் குறிக்கும். ஆண்டவன் அண்டங்கள் யாவற்றிற்கும் மன்னன் என்பதால் அவனைக் கோ என்றனர். மன்னன் கடவுளின் அவதாரம் என்று கருதி அவனைக் கோ என்றனர். அரசனின் மனையும் கடவுளின் இல்லமும் கோயில் என்றழைக்கப்பட்டன. நிலைபேறுள்ள புகழைப் பெற்றவன் மன்னன். ஆனால் மன்னன் ஒரு சிறு அரசன் பெரிய அரசனை வேந்தன் என்றே கூறினர். இதனை,

**"சீறூர் மன்னன் சிறியிலை எஃகம்**

**வேந்துஊர் யானை ஏந்துமுகத்து அதுவே**
**வேந்து உடன்று எறிந்த வேலே"**[4]

என்று புறநானூறு கூறுகிறது. வேந்தன் என்பவன் வேய்ந்தோன் அதாவது முடி வேய்ந்தோன், 'கொன்றை வேந்தன்' என்றும் கருதப்பட்டனர்.

**முடிசூடுதல்**

சங்க காலத்தில் மிகவும் பொதுவாகப் பயின்ற அரசுமுறை பாரம்பரிய முடியாட்சியே. பொதுவாக ஆட்சியிலிருக்கும் அரசனுடைய மூத்த மகன் தந்தையைத் தொடர்ந்து மன்னன் ஆனான்.

அரசு கட்டில் உரிமை அவனால் பெறப்பட்டது. அதனை முறை முதல் கட்டில் என்பர். சேரமன்னன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு மக்கள் இருவர் அதாவது மூத்தவனான செங்குட்டுவனும், இளையவனான இளங்கோவும் அவ்விருவரில் இளையவனே அரியனை ஏறப்போவதாகக் கணி அறிவித்தனன். மூத்த மகனான செங்குட்டுவன் அரசு கட்டிலுக்குத் தன்னுடைய உரிமை மறுக்கப்பட்டதென்று கருதி வெகுண்டான். அரசு கட்டிற்கு உரியவனான அண்ணனோடு வருத்தம் மிகாமலிருக்கும் பொருட்டு இளையவன் துறவு பூண்டு இளங்கோ அடிகள் என்னும் பெயர் பெற்றான். இதனால் அரசு கட்டில் ஏறும் முறை முதல் மகன் வாயிலாகவே நிகழ்வது அக்காலத்திலேயே நிலைத்து விட்டது.

அரசுக்குரிய மகனைக் கோமகன் என்பர். இளைய மக்களை இளங்கோ என்பர். இளஞ்செழியன், இளஞ்சேரல், இளங்கோசர், இளவெளிமான் இளவிச்சிக்கோன் என்பவையெல்லாம் இளைய மக்களின் பட்டங்கள் ஆகும்.

**அரசவையும் அரச அலுவல் முறையும்**

சங்கத் தமிழகத்து முடிமன்னர்களின் அவைக்களம் கம்பீரமானது. அவர்களுடைய குறுநில மன்னர்கள் அவைக்களங்களும் அவர்தம் வசதிக்கேற்ப அமைந்தன. அரசனது சபை அரசவை, ஓலக்கம், இருக்கை எனப்படும். இதனை,

**"பழுமரம் உள்ளிய பறவையின் யானும் அவன்**
**இழுமென் சும்மை இடனுடை வரைப்பின்"**[5]

பழுத்த பழமரங்களை விரும்பித் தேடிச் செல்லும் பறவை போல நானும் முன்பு உன்னைப் போல வறுமையுற்றிருந்தபோது, இழுமென்னும் ஓசையுடன் முரசொலித்துக் கொண்டிருக்கும். கரிகால் பெருவளத்தானுடைய கோட்டை மதில்

தாண்டி விரும்பி வந்தவர்களை வரவேற்க எப்போதும் திறந்தே இருக்கும்.இத்தகைய சிறப்பான அரசாட்சியை அரசர்கள் நடத்தினார்கள்.

அரசனது சபை வேத்தவை எனவும் பட்டது. இவ்வவை மன்னர்களுடைய அதிகார அலுவல்களின் மையம். தமிழ் மன்னனின் அவை யாவரும் செல்லக்கூடிய பொது அவை. இதில் அரச குடும்பத்தார், ஆட்சி அதிகாரிகள், பொதுமக்கள் என்போர்க்கு இடமுண்டு. அது 'மறையவை' அன்று.

அரசவை காலையிற் கூடும் அப்போது அதற்கு 'நாளிருக்கை' அல்லது 'நாளவை' என்பது பெயர். அதனை 'நாண்மகிழிருக்கை' அல்லது 'பெருநாளிருக்கை' எனவும் அறிவர். அரசன் தானே சபைத்தலைமை வகிப்பது மரபு. சேரனது 'காலை அவை' அதன் பெருமைக்குப் புகழ் பெற்றது. ஹந்தை (உறையூர்) அவை அதன் நீதிக்கும் நேர்மைக்கும் பெயர் பெற்றது. இவ்வரசவையில் மன்னனது அன்றாட அதிகார அலுவல்கள் நடைபெற்றன. 'அவை' மகிழ்ச்சி நிரம்பிய இடம். அங்கு இசைக்கருவிகளின் இன்னொலி எப்போதும் கேட்கப் பெற்றது. மேலும்,

**"இசைபெறு திருவின் வேத்தவை ஏற்பத்**
**துறைபல முற்றிய பைதீர் பாணரொடு"**[6]

இசையை விரும்பிக் கேட்டுப் போற்றுகின்ற அரசர்களுடைய பேரவைகளில், பாணருடன் சென்று, இனிய இசைவிருந்து நிகழ்த்த வல்ல பாணணே. இத்தகைய வகையில் அரசவை நடைபெற்றது.

**அரச குடும்பமும், கோயில் நிர்வாகஸ்தர்களும்**

மன்னனுக்குட்பட்ட அரச குடும்பம், அரசி (அல்லது அரசியர்) அரசகுமாரர்கள் மற்றும் அரசனால் இன்றியமையாதவர்களாகக் கருதப்பட்ட நெருங்கிய உறவினர் ஆகியோர் ஆவார்கள். அரசி (பட்டத்தரசி) கோயிலாள் எனப்பட்டாள். அதாவது அரசனது கோயிலை நிர்வகிப்பவள் (மனையாள் என்பதுபோல) கோயில் என்பது அரசனது மனையாதலின் அரசன் நிலையில், கோயிலாள் என்பது பட்டத்தரசியையே குறிக்கும்.

அரசி பட்டத்திற்கு வரமுடியாது, அவளுக்குச் சிம்மாசனத்தில் எவ்வித அக்கறையும் கிடையாது. மக்கள் தாயமுறைமையால் அரண்மனையிலும் ஆட்சியிலும் அரசி கீழ்ப்படிந்த அல்லது ஒவ்வோரமயங்களில் அறிவுரை கூறும் நிலையில் இருந்துள்ளார். ஆயினும் அவள் அரசனின் மனைவியாதலின் குடிமக்களால் நன்கு மதிக்கப்பட்டாள்.

மூவரசர்கள் குடும்பத்திற்குள் அக்குடும்பத்தினரிடையே கலப்பு மணம் நடைபெறுவது வழக்கம். பாண்டியர்க்கும் பிற அரசு குடும்பத்தினர்க்கும் இடையே இருந்ததைவிட சேர சோழர்களிடையே உறவு மிகுந்திருந்தது. மரபு வழிச் சிற்றரசர்களான வேளிர்கள், உழுவித்துண்ணும் வேளாளர் என்போர் அரச குடும்பத்தாரோடு மணவுறவு கொண்டனர். ஆகையால், சமுதாய நிலையில் அவர்களிடையே வேற்றுமையில்லை. அந்தப்புர மகளிர் உரிமை மகளிர் எனப்பட்டனர். போர்க்களத்தில் கைப்பற்றப்பட்ட மகளிரும் இருந்தனர். தமது தனிமை காப்பாற்றப்பட்ட பிற அந்தப்புர மகளிரைப் போலல்லாமல் மகளிர் பொதுக்கயங்களில் குளித்தனர். இச்சிறைப்பட்ட மகளிர் பலர் கூடுமிடமான பொதியில் அல்லது மன்றத்தில் கூடி அங்கிருந்த தெய்வீகமாகக் கருதப்பெற்ற தறி அல்லது கத்திக்கு மாலையிட்டு அதனை வாழ்த்தினர். அவர்கள் மன்றத்தில் கடவுளை வணங்கிய போது தமது விடுதலையை வேண்டினர்.

மூத்த மகன் கோமகன் எனப்படுவான். மற்றைய மக்களும் அரசனது இளைய மக்களும் தம்பியரும் கோமகனை அடுத்து அரசாளும் உரிமையுடையவர். அவர்களை இளங்கோ என்பார். இவ்விளைய மக்கள் அரசப் பிரதிநிதியின் பொறுப்பேற்றிருப்பர் எனலாம்.

**அரசனின் சின்னங்கள்**

அரசன் தனது சின்னங்களையும் தம்மோடு நீக்கமறத் தொடர்பு கொண்ட பிற பரிவாரங்களையும் பெற்றிருந்தான். தொல்காப்பியர்,

1. படை (வாள்)
2. கொடி
3. குடை
4. முரசம்
5. குதிரை
6. யானை
7. தேர்
8. மலை
9. முடி

என்பவற்றை இன்றியமையா அரச சின்னங்களாகக் கூறினார்.

சங்கத் தமிழர் சேனையை அரசனது உடலாகவே கருதியமையாலும், போர் மன்னனது இரு கடமைகளில் ஒன்றாதலாலும், தொல்காப்பியர் ஏற்பாட்டில் அது

முதலிடம் பெற்றது என்பர். சங்க கால மன்னர்கள் சேனையை நம்பிப் பிழைத்தனர். ஆதலால் அதற்கு முதன்மையளிக்கப்பட்டது என்றும் கூறலாம். ஆனால் உண்மையில், படை ஈண்டுச் சேனையன்று, இது வாள் என்றே பொருள்படும். வாளும்,முரசும், குடையும் நிகராகப் பிறாண்டு தொல்காப்பியத்தில் கருதப்படும்.

பிற்கால நூல்கள் 21 பொருள்களைப் பெரும் பட்டியலாகக் கூறும். அவை,

1. முடி
2. குடை
3. கவரி
4. அங்குசம் (தோட்டி)
5. முரசு மீன்
6. ஆழி
7. களிறு
8. கொடி
9. கோட்டை
10. தோரணம்
11. தூயநீர்க்குடம்
12. மாலை
13. சங்கு
14. கடல்
15. மீன்
16. ஆமை
17. இனைக்கயல்
18. சிங்கம்
19. விளக்கு
20. ஏறு
21. அரியணை

ஆகியவை ஆகும். சிலப்பதிகாரம் 1.முரசு 2.குடை 3.கவரி 4.கொடி 5.தோட்டி 6.ஈட்டி 7.பாசம் என்னும் ஏழு சின்னங்களை அரசர்க்கும் பூதங்களுக்கும் பொதுவானவையாகக் கூறியுள்ளது.

**ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும்**

சங்ககால அரசியலை ஆய்வோர் ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்னும் இருநிலையங்களைப் பற்றி அடிக்கடி விவாதிப்பர். சிலப்பதிகாரம், மணிமேகலை, மதுரைக்காஞ்சி, ஆகிய சங்க இலக்கியங்களில் இவை கூறப்படுகின்றன. பெருங்கதை போன்ற சில சங்கப் பிற்கால இலக்கியங்களும் இவற்றைக் கூறுகின்றன.

மதுரைக்காஞ்சி, சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற சில தமிழ்ச் சங்க நூல்கள் மன்னரோடு தொடர்பு கொண்ட இருவகைக் குழுக்களைக் குறிக்கின்றன. அவை, ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்பனவாகும். மதுரைக்காஞ்சியில் நாற்பெருங்குழுவைப் பற்றிய குறிப்பே உள்ளது.

1. புரோகிதர்
2. தானைத்தலைவர்

3. தூதுவர்

4. ஒற்றர்

என்போர் என்று நச்சினார்க்கினியர் கூறியுள்ளார். மேலும்,

1. மக்கள்

2. அந்தணர்

3. மருந்தர்

4. நிமித்தம்

5. அமைச்சர்

ஆகியோர் என்று உரையாசிரியர் கூறியுள்ளார். மேலும் ஐம்பெருங்குழு என்பது,

1. அமைச்சர்

2. புரோகிதர்

3. சேனாதிபர்

4. தூதர்

5. ஒற்றர்

என்போரைக் கொண்டது. ஐம்பெருங்குழுவைப் பஞ்சமாவர்க்கம் என்று வடமொழிப் படுத்தியுள்ளனர்.

எண்பேராயத்தைப் பற்றி நச்சினார்க்கினியர் கூறுவார்.

1. கரணத்தலைவர் (கணக்கர்கள்)
2. கருமகாரர் (செயலக அலுவலர்)
3. கனகச்சுற்றம் (பொக்கிஷ அதிகாரிகள்)
4. கடைகாப்பாளர் (கோயிற் காவலர்)
5. நகர மாந்தர் (நகரத்திலுள்ள பெரியோர்கள், அவர்களிடம் அரசன் மக்களது நலனைக் கேட்டு அறிந்து கொள்வான்)
6. படைத்தலைவர் (காலாட்படைத் தலைவர்)
7. யானைவீரர்
8. இவுளிமறவர்(குதிரை வீரர்கள்)

என்போர் கூடியது எண்பேராயம். அடியார்க்கு நல்லார் இதனை ஏற்றுக்கொண்டார்.

சிலப்பதிகாரப் பழைய உரையாசிரியர் இதனையும் மாற்றிக் கீழ்க்காண்பவை மன்னனுடைய அணுக்கர்கள் என்றார்.

1. சாந்து 5. பாக்கு

2. பூ 6. இலை

3. கச்சு 7. கஞ்சுகம் (சட்டை)

4. ஆடை 8. நெய்

என்பனவாகும்.

**புரோகிதர்**

தமிழ் இலக்கியத்தின் தொடக்கக் காலத்திலிருந்து அரசவையில் பிராமணர்கள் முக்கியமான நிலைமை வகித்து வந்துள்ளனர். அரசர்கள் அந்தணர்களை மதித்தனர். ஓர் அந்தணப் புலவனை அவமதித்த சோழன் மாவளத்தான் என்பவன் தன் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டான். அப்புலவரும் அரசனது நற்குணத்தை மெச்சும் வகையில் நன்னயம் படைத்திருந்தார். இதனை,

> **“ஆர்புனை தெரியல்நின் முன்னோர் எல்லாம்**
> **பார்ப்பார் நோவன செய்யலர் மற்று இது**
> **நீர்த்தோ நினக்கு”**[7]

என புறநானூறு கூறுகிறது.

அந்தணர் அறிவுரைக்கு அரசர் அடங்கி நடக்க வேண்டும் என்பது பொதுவாக ஓர் அறிவுரையாக இருந்துள்ளது. பிராமணர்கள் மட்டுமே அரசனது புரோகிதர்களாயினர். புரோகிதனை ஆசான் அல்லது கருமவினைஞன் என்றும் அறிந்தனர். சேரநாட்டில் புரோகிதர் என்னும் சொல் ‘புரோசு’ என்று மயங்கிற்று.

**கணிதர்**

சங்ககால அரசவையில் இன்றியமையாத அலுவலர்களில் சோதிடரும் ஒருவராம். நல்லோா் உரைகளிலும், நற்சகுணங்களிலும் ஆழ்ந்த நம்பிக்கையிருந்தமையால், அவ்வரசர்கள் சோதிடர்களைத் தமது அவையில் நிரந்தரமாக வைத்திருந்தனர். சோதிடர்க்குக் கணி என்பது பெயர். தலைமைச் சோதிடர் பெருங்கணியாவார். அரச காரியங்களைச்(சாதாரண, அசாதாரண) செய்தற்குப் பொருத்தமான காலத்தைக் கூறுதல் அவர்கள் கடன். அவர்கள் குறித்த நன்னாளும் நல்லோரையும் அரசர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு அதற்கேற்பச் செயலாற்றினர். ஆண்டுகளும், மாதங்களும் சென்ற கணக்கையும் இட்டு வைத்துக் கொள்ளுதலும் அவர்கள் அலுவலே போலும்.

**நாழிகைக் கணக்கர்**

ஒரு நாட்பொழுதில் ஓரையைக் கணக்கிடும் சில்லறை அதிகாரிகள் நாழிகைக் கணக்கர் எனப்பட்டனர். நாளில் ஓரை கணக்கிட நாழிகை வட்டிலை அவர்கள் பயன்படுத்தினர். இவ்வதிகாரிகள் அரசனுக்கு ஓரையை இசைத்துக் கூறுவார்கள். இந்நாழிகைக் கணக்கர் அல்லும் பகலும் விழித்திருந்து மணிக்கணக்கை ஆய்ந்து கொண்டனர். இதனை,

**"பழமலை பொழிந்தெனப் பதன் அழிந்து உருகிய**
**சிதட்டுக்காய் எண்ணின் சில்பெயற் கடைநாள்**
**சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்**
**நள்ளென் யாமத்து 'ஐ' எனக் கரையும்**
**.......................................................................**
**கணக்குஆய் வகையின் வருந்தி எண்**
**நெஞ்சுபுண் உற்ற விழுமத் தானே"**[8]

என்று இரவுப்பொழுது கழியும் ஒவ்வொரு நொடியினையும் கணக்கிட்டு ஆராய்கின்ற தன்மையையுடையவர் நாழிகைக் கணக்கர் ஆவார்கள் என்று குறுந்தொகை பாடல் கூறுகிறது.

**சங்ககாலத்தில் உழவு**

தமிழகத்தின் சிறப்பான தொழில் எப்போதும் போற்றப் பெற்ற உழவேயாம்.

**"சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை"**[9]

உழவின் வருத்தத்தைக் கண்டு, பிற தொழில்களைச் செய்து திரிந்தாலும் முடிவில் ஏருடையவரையே உலகம் உணவுக்கு எதிர்பார்த்தலால், உழவே மிகவும் சிறந்தது.

முற்றம் துறந்தாரும் உழவினார் கை மடங்கின் நிலையற்றுப் போவர். உழவைப்போல ஆதாரத்தொழில் வேறொன்றும் இல்லை.

**"உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்**
**விட்டேமென் பார்க்கும் நிலை"**[10]

உழவர்களின் கை உழாது மடங்கிவிடுமானால் யாவரும் விரும்பும் உணவையும் கைவிட்டோம் என்று துறந்தவர்க்கும், அவ்வறத்தில் நிலைத்து நிற்க முடியாது என்று திருக்குறள் மூலம் அறிய முடிகிறது.

துரியமான அரசின் இன்றியமையா இயல்பாகச் செழிப்புடை நிலத்தைக் கூறிய வள்ளுவர் 'நாடு என்பது நாடாவளத்தன' என்றார். தமிழகத்தின் முக்கியமான சில ஆறுகளான பாலாறு, தென்பெண்ணை, காவிரி, வைகை, தாமிரபரணி என்பவை நிலத்தின் வன்மையைக் காத்தன. ஆறுகடலொடு கலக்கும் பிரதேசங்களின் செல்வம், காட்டுவளம், முல்லை நிலவலம், குறிஞ்சி நெய்தல் நிலவளங்கள் ஆகியவற்றால் பெருகிற்று. ஆயினும் நிலச் சாகுபடி என்னும் அடிப்படையிலேயே பொருளாதாரம் வளர்ந்தது. நிலம் வளம் மிகுந்திருந்ததோடு, உழவனும் மெய்வருத்தம் பாராத தொழிலாளியாயினன்.

ஆதலால் உணவுத் துறையில் தன்னிறைவு இருந்திருக்க வேண்டும். இன்றுபோல் அன்றும் அரிசியே மக்களின் முக்கிய உணவாயிருந்தது.

கிள்ளிவளவன் என்னும் சோழனை விளித்து ஆவூர் மூலங்கிழார்,

**"ஒருபிடி படியும் சீறிடம்**
**எழுகளிறு புரக்கும் நாடுகிழ வோயே"**[11]

என்று நாட்டையும் மன்னனையும் புகழ்ந்தார். பல்குன்றக் கோட்டம் போன்ற மலைப் பிராந்தியங்களிலும் நிலவண்மை சிறப்புற்றிருந்தது. இதனை மலைபடுகடாம் பாடல் மூலம் அறிய முடிகிறது.

**"நீலத் தன்ன விதைப்புன மருங்கின்**
**மகுளி பாயாது மலிதுளி தழாலின்**
**அகளத்து அன்ன நிறைசுனைப் புறவின்**

**கௌவை போகிய கருங்காய் பிடிஏழ்**
**நெய்கொள ஒழுகின பல்கவர் ஈர்எண்"**[12]

மின்னி இடி இடித்து மழை பொழியும், வானம் வழங்குகின்ற வளத்தால், மண்ணில் போட்டதெல்லாம் விளையும் வேண்டும் பயன்தரும் மழைவளம் நிறைந்த அவன் கொல்லையும் நிலமும் வெள்ளைப் பூப் பூக்கும் முசுண்டைக்கொடி விரிந்து படரும். விதை நிலத்தில் விதைத்த எள் பிடிக்கு ஏழுகாய் என்ற கணக்கில் எண்ணெய்ப் பதம் கொண்டு விளையும். செழுமை மிக்க ஒரு வேலி நிலத்தில் ஆயிரம் கலம் நெல் விளைந்தது. ஊக்கம் மிகுந்த உழவர் அவ்வளவு மகசூலை எதிர்பார்த்தனர்.

நாட்டின் எப்பகுதியிலும் விவசாயம் நடைபெற்றது. ஆயினும் ஆறுகள் கடலோடு கலக்குமிடங்களில் மிகுதியாகவே நடைபெற்றது. முக்கிய உணவான

நெற்பயிரைத் தவிர வரகு முதலிய சிறு தானியங்களும் பயிரிடப்பட்டன. தேங்காய், வாழை, கரும்பு, பருத்தி முதலியன எப்போதும் மிகுதியாகவே பயிரிடப்பட்டன. தமிழக மரபுப்படி நிலம் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டதில், சாகுபடி நிலம் மருதம் எனப்படும். விவசாயிகளை உழவர்கள் எனவும் அவர்தம் மகளிரை உழத்தியர் எனவும் கூறினர். துறக்கத்தில் அரசு புரியும் இந்திரனைத் தொல்காப்பியர் வேந்தன் என்பார். அவ்வேந்தன் மருத நிலக்கடவுள். பருவ மழையின் தெய்வ உரு உழவர் அவனைக் கடவுளாக வழிபட்டனர். அவனை நம்பியே அவர்கள் வாழ்ந்தனராதலின்,

**"வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்**

**கோனோக்கி வாழுங் குடி"**[13]

மழையின் செம்மையை எதிர்பார்த்து உலகத்து உயிர்கள் எல்லாம் வாழும். மன்னவனின் செங்கோன்மையை எதிர்பார்த்துக் குடிகள் வாழ்வார்கள். உலக வாழ்க்கைக்கு முக்கிய உணவான நெல்லும் நீரும், அடிப்படை என்றனர். ஆடு மாடுகளே அவர்களுடைய வீட்டு விலங்குகள். மருத நிலத்து மரங்களில் வஞ்சி, காஞ்சி, மருதம் என்பன முக்கியமானவை. உழவு அவர்கள் தொழில் தாமரை அவர்களது புனித மலர். நிலக்கிழாரான உழுவித்துண்போர் நிலத்தில் ஊழியம் செய்யும் உழுவோர் என அவர்கள் இருவகையினர். அவர்களின் முற்கூறியோர் உயர்ந்த வேளாளர் எனவும், பிறர் இழிந்த வேளாளர் எனவும் பட்டனர். இதனை,

**"இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**

**வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு"**[14]

கீழ்நீரும் மேல்நீரும் என்னும் இருநீர் வளமும் வளம் வாய்ந்த மலைகளும், ஆறுகளும், வலிமையான அரண்களும், ஒரு நாட்டிற்கு வேண்டிய உறுப்புக்களாம் என்று திருக்குறள் கூறுகிறது.

மனிதனின் முதல் தேவை உணவாதலின் உழவின் பெருமையைத் தெளிவாக எடுத்துக்கூறுகின்றார்.

**"உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது**

**எழுவாரை எல்லாம் பொறுத்து"**[15]

என்றார். உழவைவிட்டுப் பிற தொழில்களைச் செய்வாருக்கும் உணவுப் பொருள்களைத் தந்து தாங்குவதனால், உழுதொழில் செய்வாரே உலகத்தாருக்கு அச்சாணி ஆவார். அவர்களே பயனுள்ள வாழ்க்கை வாழ்பவர். பிறர் எல்லாம் போலிப் புகழ்ச்சி செய்து பிறரை ஒட்டி வாழ்ந்து,

**“உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்**

**தொழுதுண்டு பின்செல் பவர்”[16]**

யாவரும் உண்ணுவதற்கு உணவைத் தந்து, தாமும் உண்டு வாழ்பவரே உரிமை வாழ்வினர். மற்றையவர் பிறரைத் தொழுது உண்டு, அவர்பின் செல்கின்றவரே யாவர். உலகியல் உணர்ந்த வள்ளுவர் உழவரைப் புகழ்தலோடு நில்லாமல் அத்தொழிலொடு தொடர்புபட்ட சில அறிவுரைகளும் கூறுகின்றார்.

**“தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்**

**வேண்டாது சாலப்படும்”[17]**

அதாவது கால்பகுதியாக உலர்த்திவிட்டால், அந்நிலத்திற்கு ஒருபிடி எருவும் இடவேண்டாம். அவர் கருத்துப்படி உழவன்,

1. நிலத்தை உழவேண்டும்
2. எருவிட வேண்டும்
3. நாற்று நட வேண்டும்
4. நீர்ப்பாசன ஏற்பாடு செயல் வேண்டும்
5. பட்டி மாடுகளை மேய்ந்துவிடா வண்ணம் காத்தல் வேண்டும்.

சோம்பியிருத்தல் ஆகாது என்று உழுவார்க்கு அவர் கூறுகின்றார்.

**“செல்வான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து**

**இல்லாளின் ஊடி விடும்”[18]**

நிலத்துக்கு உரியவன் நாள்தோறும் சென்று பார்த்து, வேண்டியவை செய்யாது சோம்பினால், அந்த நிலமும், அவன் மனைவியைப் போல, அவனோடு பிணங்கி விடும். இலம் என்று அசை இருத்தல் கூடாது என்பார் நிலக்கிழார். நிலத்தைச் சென்று பலகாலும் பாராமல் இருத்தல் கூடாது என்பார்.

**சங்ககால மக்களின் கைத்தொழில்**

பெரும்பாலோரின் தொழில் விவசாயமாகவே இருந்ததால், பிற தொழில்கள் புறக்கணிக்கப்பட்டன. சங்க காலத்தில் கைத்தொழிலும் திறன்களும் சிறந்து இருந்தன. உள்நாட்டுக் கைத்தொழில்கள் முதிர்ந்த நிலையில் இருப்பினும் சில தொழில்களில் பிற நாட்டார் அதிகமாக முன்னேறி இருப்பதைக் காணின், அவர்களைத் தமிழகத்தே வந்து குடியேற ஊக்குவித்தனர். மகத வினைஞரும் அவந்திக் கொல்லரும், மராட்டக்கம்மரும், யவனத் தச்சரும் தமிழகத்தின் சிறந்த நகரங்களில் வசித்து வந்தனர். தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடி, சிறுதொழில்

பேட்டைகளில் தமது கைத்தொழில்களில் ஈடுபட்டனர். சில செய்பொருள்கள் பிற நாட்டில் பெயர் பெற்றவை. அவை தமிழகத்தே செய்யப்படினும் அப்பொருள்கள் வெளிநாட்டுப் பெயர்களையே ஏற்றன. உதாரணமாக, ‘கலிங்கம்’ ‘காழகம்’ என்பவை கலிங்கத்திலும் காழகத்திலும் நெய்யப்பெற்ற சிறப்பு வகை துணிகளைக் குறித்தன. அவை பெரும்பாலும் பூவேலை செய்யப்பட்டவை. சீனாவிலிருந்து வந்த பட்டு ‘சீனம்’ எனப்பட்டது.

**“உயிர்நடுக் குற்றுப் புலாவிட் டரற்றச்**
**சிறையும் செற்றையும் புடையுநள் எழுந்த**
**பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து”**[19]

என்று பருத்தி நூலை நூற்கும் பெண்கள் நெசவுத்தொழில் செய்து வந்துள்ளனர் என்று புறநானூறு பாடல் கூறுகிறது. உழவுத்தொழிலை அடுத்து, நூற்றலும் நெசவும் பெரும்பாலும் மேற்கொள்ளப்பெற்ற தொழில்களாகும். இன்று போல் அன்றும், சில மகளிர் மிகப் பொறுமையோடு பருத்தியை நூற்றுக் கொண்டிருந்தனர்.

உறையூர், மதுரை போன்ற சில நகரங்களில் நெசவுத்தொழில் புகழ்பெற்ற கைத்தொழிலாக விளங்கிற்று கைத்தறித் துணிகள் இன்றும் அந்நகரங்களில் பெருவாரியாக நெய்யப் பெறுவது கண்கூடு. உறையூரிலிருந்து வரும் நெசவுப் பொருள்களின் நுண்ணிய அருமையைப் பற்றிய பெரிப்ளுஸ் என்னும் நூல் கூறும். நெசவுப் பொருள்களின் அழகையும், நுண்மையும் பற்றி அக்காலத்து இந்நாட்டு இலக்கியம் நிரம்பப் பேசுகின்றது. இதனை,

**“புகைமுகந்து அன்ன மாசு இல் தூஉடை”**[20]

புகையினால் செய்தது போன்ற அழகிய மெல்லிய தூய உடை உடுத்தியுள்ளனர் சங்ககால மக்கள்.

கண்ணிற் பார்வை நூலின் இழை போன வழி யாது என்று குறித்துப் பார்க்கலாகாத நுண்மையையுடையவாய் தொழில் முற்றுப் பெற்ற தன்மையால் பாம்பு உரித்த தோலையொத்தது. மேலும்,

**“வேரொடு நனைந்து வேற்று இழை நுழைந்த**
**துன்னற் சிதா அர் துவர நீக்கி”**[21]

இழையானது மிகுந்து கிழிந்து, நைந்திருந்த கந்தல் உடையை, முற்றிலும் அகற்றச் செய்து, நூலிழை நெய்ததைக் கூடக் காண முடியாத அளவுக்கு அழகிய

பூ வேலைப்பாடமைந்த, பாம்பு உரித்த தோல் போன்ற மெல்லிய உடையைத் தந்து உடுத்தச் செய்தான்.

“கொட்டைக்கரைய பட்டுடை” யைப் பற்றியும் பொருநராற்றுப்படை குறிக்கின்றது.

பூவேலை செய்யப்பட்ட துணிகள் சிறப்பாக நெய்யப்பட்டன. ஆயினும் அவற்றை உயர் வகுப்பினர் மட்டுமே பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**“கோபத்தன்ன தோயாப் பூந்துகில்”**[22]

இந்திர கோபம் என்னும் அழகிய பூச்சியின் இயற்கை நிறம்போல, பல வண்ணம் அமைய அணிந்த புடவையும், பலமணிகள் வரிசையாகக் கோத்த மணிவடங்கள் கொண்ட மேகலையும் மக்கள் அணிந்துள்ளனர்.

நெசவையடுத்து சாயம் தோய்த்தல் ஒரு பெருவாரியான கைத்தொழில். நீலச்சாயம் தோய்ந்த அரை வேட்டிகளைத் துணிவாங்குவோர் மிகவும் விரும்பினர். மேலும்,

**“நீலக் கச்சைப் பூவார் ஆடைப்**
**பீலிக் கண்ணிப் பெருந்தொகை மறவன்”**[23]

நீல நிறக் கச்சையினையும் பூத்தொழில் செய்யப்பட்ட ஆடையினையும் மயிற்பீலி தொடுக்கப்பட்ட மாலையினையும் உடைய மறவன் விரும்பி ஆடைகளை ஏற்றுள்ளனர்.

பட்டு பருத்தி ஆடைகளேயன்றி மரவுரியால் செய்த ஆடைகள் துறவிகளாலும், சமயத்துறையினராலும் பயன்படுத்தப்பட்டன.

**“சீரை தைஇய உடுக்கையர் சீரொடு”**[24]

மரஉரியாலான உடையும், வெண்சங்கு போல வெளுத்த சீரான வெள்ளை நரைமுடியும், தூய ஒலி உடம்பும், மான்தோல் போன்ற ஆடைகளையும் துறவிகள் அணிந்துள்ளனர் என்று ஆற்றுப்படை பாடல் கூறுகிறது.

மதுரைச் சந்தையில் கம்பளித் துணிகள் (மயிரிழைகளால் ஆக்கப் பெற்றவை கூட) பருத்தி பட்டுத் துணிகளோடும் விற்கப்பட்டமை குறிக்கப்படுகின்றது.

நெசவு வணிகா்ருக்கு அறுவை வாணிகர் என்பது பெயர். நகரங்களில் அறுவை வீதி என்னும் சேரிகளில் அவர்கள் வசித்தனர்.பெரும்பாலும் தமிழர் துணியை நெய்தவாறே உடுத்தினர். ஒருசில இடங்களில் துணிகளைத் தைத்தும் உடுப்பதுண்டு.

**"உண்பது நாழி உடுப்பவை இரண்டே"**[25]

என்றாதலாலும், பிற்காலத்தார்,

**'உண்பது நாழி யுடுப்பது நான்கு முழம்'**

என்றமையாலும் தமிழர் பொதுவாக ஓர் அரை வேட்டியும், மேல் துண்டும் மட்டும் அணிந்துள்ளனர்.

வெளிநாடுகளில் இருந்து தமிழகம் வந்த யவனர் போன்றோர் கஞ்சுகம் அல்லது சட்டை அணிந்தனர். மன்னருடைய ஒற்றர் முதலானோர் ஒரு சிறப்பு வகைக் கஞ்சுகம் போர்த்தனர். இவையெல்லாம் தைக்கப்பட்ட துணிவகைகளே. மதுரை ஆகிய பெருநகரங்களிலிருந்த 'துன்னகாரர்' என்னும் தையற்காரர்கள் இத்தகைய துணிகளைத் தைத்தனர்.

கயிறு திரித்தல், போர்ப்படைகளுக்கு வேண்டிய தோலுறைகளைச் செய்தல், வளைகள் செய்வதற்காகச் சங்கறுத்தல், தந்தம் வேலை முதலிய மேற்கோடல் ஆகிய செயற்பாடுகள் அக்காலத்து இலக்கியத்தில் கூறப்படுகின்றன. வீட்டில் தானியங்கள் முதலிய உலர் பண்டங்களை இட்டு வைத்ததற்குப் பயன்படும் கூடைகள் கைத்தொழிலாளர்கள் சிலரால் முடியப் பெற்றன.

போர்ப்படைக் கலங்களை ஆக்கவும் திருத்தவும் கொல்லர் பட்டறைகள் இருந்தன. இவை பணிக்களரி எனப் பெற்ற சீறிடங்களே. மேலும்,

**"இவ்வே பீலி அணிந்து மாலை சூட்டிக்**
**கண்திரள் நோன்காழ் திருத்திநெய் அணிந்து**
**...............................................................................**
**அண்ணல்எங் கோமான் வைந்நுதி வேலே"**[26]

உன்னுடைய வேல்கள் மயில்தோகையும் மாலையும் சூட்டி நெய் பூசப்பட்டு அரண்மனையில் அழகாக உள்ளன. இருக்கும் உணவைப் பிறர்க்கு அளித்து இல்லாத போது, உள்ளதைப் பகுத்துண்ணும் என் தலைவன் அஞ்சியின் வேல்கள் பகைவரைக்குத்தி நுனி முறிந்து கொல்லன் உலைக்களத்தில் கிடக்கின்றன.

இப்பண்டைய தொழிற்சாலைகளில் ஒரு துருத்தியை இட்டுக்கொண்டே செயற்பட்டனர். உருக்குதற்கும் பொருத்துதற்கும் பயன்பட்ட இப்பட்டறைத் தீயில் இரும்புச் சக்கரங்கள், வீட்டுச் சாமான்கள் முதலியன ஆக்கப்பெற்றன.

எண்ணெய் விட்டு எரிய வைத்த இருப்பு விளக்குகளை இக்கொல்லர் செய்தனர். அவ்விளக்குகள் மங்கலாக எரிந்த திரியால் ஒளி தந்தன. தட்டனின் பொன் செய்த நகைகள் வெளிநாட்டாரால் பெரிதும் விரும்பப்பட்டன. தமிழர் செய்த

பொன்னாலான அணிகலங்கள் வெளிநாடுகளுக்குக் கப்பல்களில் ஏற்றி அனுப்ப பெற்றன.

தச்சு வேலை சாதாரணமான ஒரு கைத்தொழில். தலைமுறை தலைமுறையாகப் பயிலப்பட்டு வந்த தொழில்களில் அஃதும் ஒன்று. இதனை,

**"தச்சச் சிறா அர் நச்சப் புனைந்த**
**ஊரா நல்தேர் உருட்டிய புதல்வர்"**[27]

தச்சச் சிறுவர் மூத்தோரிடமிருந்து தான் இளமையில் கற்ற தொழிற்கல்வியைக் கொண்டு சிறுவர்க்குப் பல பொய்ம்மைகளைச் செய்தனர். தச்சா் வீடு கட்டுதல், கப்பல், கட்டுமரம், படகு முதலியனவற்றைக் கட்டுதல், தேர்களைச் செய்தல் முதலிய வேலைகளில் ஈடுபட்டனர்.

வாசம் மிகுந்த சந்தன மரங்களை வெட்டுதலும் முத்துக் குளித்தலும் வட இந்திய, ஐரோப்பிய இலக்கியங்களில் புகழோடு பேசப்படுகின்றன. கடற்கரையோரங்களில் வாழ்ந்து வந்த மீனவர்கள் மீன்பிடிக்கும் தொழிலை ஒரு கைத்தொழிலாகவே மேற்கொண்டனர். மீன்பிடிப்போர் தமது தூண்டிலின் ஒரு நுனியில் அகப்பட்ட மீன்களைப் பிடித்து இட்டுக் கொள்ளுவதற்கு ஒரு சிறு தோப்பை இருந்தது. இதனை பட்டினப் பாலை பின்வரும் பாடல் மூலம் கூறுகிறது

**"நெடுந்தூண்டிலில் காழ்சேர்த்திய**
**குறுங்கூரைக் குடிநாப்பண்**
**நிலவு அடைந்த இருள்போல**
**.........................................................**
**பைந் தழை மா மகளிரொடு**
**பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது**
**உலவுமடிந்து உண்டாடியும்"**[28]

ஆட்டுக்கிடா, கவுதாரி விளையாட்டு ஒரு பக்கம் நடந்து கொண்டிருக்க, கேடயங்களை வரிசையாக வைத்து வேல்களை ஊன்றி, நடுக்கடல் நட்டு அதற்குக் காவல் வைத்தது போல இருக்கும் பரதவர் குடியிருப்புகளில் ஒருபக்கம் மீன் தூண்டில் கால்கள் சார்த்தி வைக்கப்பட்டிருக்கும். தாழ்வான கூரை உடைய குடியிருப்புகளுக்கு நடுவே, நிலவைச் சுற்றி (சிறுவட்டமாக) இருள் இருப்பதைப் போல, வலையை உலர்த்தப் போட்டிருக்கும் சிறு மணல் பரந்த முன்னிடத்தில் தாழைமரத்தின் கீழே இருந்து வெண்தாளிப் பூவால் தொடுத்த மாலை அணிந்து சினை உடைய சுறாமீனின் கொம்பை நட்டுச் செய்து அதைத் தங்கும் இடமாகச்

செய்து அதில் தெய்வத்தை நிறுத்தி தாழைமலரின் மடலை அணிவித்து சருக்கரையுடன் கலந்த பனங்கள்ளைக் குடித்து சிவந்த தலையுடைய பரதவரில் வயது முதிர்ந்த பெரியவர்கள் பரந்த பெரிய கடலில், மீன் பிடிக்கப் போகாது ஊக்கம் குறைந்து அதில் விருப்பம் காட்டாது, பசுந்தழை இலைஉடை அணிந்த தம்முடைய மனைவியருடன், முழுநிலா வில் உண்டு மகிழ்ந்து விளையாடும், புலால் நாற்றம் வீசும் கடற்கரைச் சோலைகளில் புகாரில் ஒரு பக்கம் இருக்கும்.

உப்புக் காய்ச்சுதல், கடற்கரைகளில் மேற்கொள்ளப் பெற்ற மற்றொரு முக்கியமான தொழில் ஆகும். கப்பல்களில் கடல் கடத்தல் பழக்கத்தில் இருந்தமையால், கப்பல் கட்டுதலும் அதனோடு தொடர்புடைய மற்ற தொழில்களும் பெருவாரியாக விற்றாயின.

**வாணிபம்**

தமிழகத்து நடைபெற்ற வியாபார அல்லது வாணிபச் செயற்பாடுகள் சங்க இலக்கியத்தில் விரிவாகக் கூறப்படுகின்றன. வெளிநாட்டு வாணிபத்தை விட உள்நாட்டு வாணிபம் பண்டைக் காலத்தாயிருத்தல் இயற்கையேயாயினும், மிகப் பழைய சங்கப் பாடல்களிலும் வெளிநாட்டு வாணிபத்தைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

முன்னோர்களால் செய்யப்பட்ட குடும்பத் தொழிற்சாலை குலவிச்சையாகத் தொழிலாளர்கள் பயின்று வந்தனர். தொழில்களும் அவற்றை அடுத்து ஏற்பட்ட வாணிபமும் நடைபெற்றனவாயினும், தன் குலத்திற்கென்று ஏற்படாத பிற தொழில்களை மேற்கொண்டவர்களும் உண்டு. அந்தணர் என்று கருதப்பட்ட நக்கீரர் சங்கறுக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தார். வைசியர்களும் வியாபாரிகளும் கவிபாடுவதில் வல்லவர்களாகத் திகழ்ந்தனர்.

கண்ணன் புகுந்தாராயத்தனார் ஓலை வாணிபப், சீத்தலைச்சாத்தனார், கூலவணிகர், பேரிசாத்தனாரும், தாமோதரனாரும் வண்ணக்கர், செல்வமும், பொழுதும் மிகுதியும் படைத்த வாணிபக் குலத்தார்கள் இலக்கியம் யாத்தனர்.

**உள்நாட்டு வாணிபம்**

பெரும்பகுதி வணிகம் பண்டமாற்றாகவே நடைபெற்றது. மிகுதியாகப் பண்டமாற்றுப் பொருளாக ஏற்றுக் கொள்ளப்பட்டது நெல், பெரும்பாலும் கிராமாந்தரங்களில் நன்கு வெண்மையாக்கப் பெற்ற உப்பு நெல்லுக்குப் பதில் மாற்றப்பெற்றது. இதனை பட்டினப்பாலை பாடல் கூறுகிறது.

**“வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**

**நல்லொடு வந்த வல்வாய்ப் ப.்.றி”**[29]

என்றும்,

**“உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு”**[30]

உப்பின் விலையை வைத்து நெல்லுக்கு விலை கூறப்பட்டது. மேலும்,

**“தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யொடு நறவு மறுகவும்**

**தீங் கரும்போடு அவல் வகுத்தோர்**
**மான் குறையொடு மது மறுகவும்”**[31]

தேனும், கிழங்குகளும், மீன் எண்ணெய்கள் என்பவற்றோடு மாறின. கரும்பு, அவல் என்பவற்றை மானிறைச்சி, மது என்பவற்றோடு பண்டமாற்றினர்.

**“கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்**
**மான்தசை சொரிந்த வட்டியும் ஆய்மகள்**
**தயிர்கொடு வந்த தசும்பு நிறைய**
**ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்**
**குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்**
**முகந்தனர் கொடுப்ப, உகந்தனர் பெயரும்”**[32]

பாண்டி நாட்டில், ‘வேட்டுவனது மான்தசை சொரிந்த கடகமும், இடைமகள் தயிர் கொண்டு வந்த மிடமாகவும் நிறைய, உழத்தியினது பெரிய மனையின் கண் அவர் மகளிர் வெண்ணெல்லை முகந்து கொடுத்தனர்.

**“முள்ளெயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த**
**அகன் பெருவட்டி நிறைய மனையோள்”**[33]
**“வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்**
**வராஅல் சொரிந்த வட்டியுள் முனையோள்”**[34]

பாண் மகளின் முன் சொரிந்தது வைத்த வட்டியில் இல்லாள் பெரும் பயிற்றினைப் பெய்தனள். பாண்மகளது மனையாட்டியின்வரால் பெய்த வட்டிலில் மனையோர் வெண்ணெல்லினை நிறைத்தனள்.

சிறுபான்மை நகர்ப்புறங்களிலும் பெரும்பாலும் கிராமப்புறங்களிலும் இன்றும் உணவுப் பண்டங்களை, முக்கியமாக தெருவில் வந்து விற்கும் கூடைக்காரர்களிடமிருந்து காய்கறிகளை, அரிசியோ, நெல்லோ கொடுத்துப் பெறுவது மரபாய் உள்ளது. அளவு குறித்து வாங்கி அவ்வாங்கியவாறே

எதிர்கொடுப்பது’ குறி எதிர்ப்பை என்னும் பெயர்த்து பண்டமாற்று முறை மிக அதிகமாக பழக்கத்தில் இருந்தமையால் வெளிநாட்டு வியாபாரத்திற்கு மட்டும் காசுகள் பயன்படுத்தப்பட்டன. இருவகை வியாபாரிகள் இருந்துள்ளனர். அவை,

- ❖ பண்டங்களை உற்பத்தி செய்து, செய்த இடங்களிலேயே விற்போரும்
- ❖ அப்பொருள்களை ஆங்காங்குக் கொண்டு சென்று விற்போரும் என, சில்லறை வணிகர்கள் பெரும்பாலும் கூடைக்கார வணிகர்களாகவே இருப்பர். இதனை,

**“அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்**
**உல்குடைப் பெருவிழி கவலை காக்கும்”**[35]

மிளகு மூட்டைகளில் கட்டப்பெற்று கோவேறு கழுதை மீது ஏற்றிக்கொண்டு சென்று பல இடங்களில் விற்பனையாயிற்று.

புகார், மதுரை ஆகிய பெருநகரங்களில் இருவகை அங்காடிகள் இருந்தன.
1.காலைச்சந்தையான நாள் அங்காடியும்
2.மாலைச்சந்தையான அல்லங்காடி அல்லது அந்திக்கடையும் இருந்தன. அச்சந்தைகளில் வியாபாரங்களை நடத்தி பொருள்களை விற்று, வாங்கி வந்தனா். அவற்றை இளங்கோவடிகள் ‘‘திருமகள் இல்லம்’’ என்று வர்ணித்தார்.

மதுரை அல்லங்காடியில் கீழ்க்கண்டோர் சுறுசுறுப்பாக வாணிபம் செய்தனர்.

- ❖ கூலவணிகர்
- ❖ சங்கு வளையல் விற்போர்
- ❖ பொற்கொல்லர்
- ❖ பொன்னுக்கும் பொன் அணிகலன்களுக்கும் மாற்றுக் காண்போர்
- ❖ கலிங்கம் முதலிய துணிவகைகளை விற்று வாங்குவோர்
- ❖ செப்பு பண்டங்களை விற்போர்
- ❖ சித்திரக்காரர்கள்
- ❖ நறுமணப் பொருள்களைத் தருவோர்
- ❖ பூவும் சந்தனமும் விற்போர்

என இத்திறத்தவர் பலராயினர். புகார் அங்காடியில் மனமிகு துகள் எழும் சந்தனக் குழம்பும், பூவும் அகில் முதலிய வாசனைக் கட்டைகளும் மிகுதியாக விற்கப்பட்டன. விழாக் காலங்களில் (சிறப்பாக இந்திர விழாக் காலத்தில்) மிகுதியான பூ விற்கப்பட்டமையால் கடைத்தெருவே மலர்வனம் எனப் பொலிந்தது.

சாதாரணமாக அறுவை வணிகர்களும், பூ, சந்தனம் ஆகிய வாசனைப் பொருள்களை விற்போறும், உமணரும், எண்ணெய் வணிகரும், வெண்கலம், செம்பு முதலிய உலோகப் பொருள்களை விற்போரும், தச்சரும், தட்டாரும், ஓவியரும், சிலைகள் வடிப்போரும், பொம்மைகள் செய்வோரும், வண்ணக்கரும், பொய்முடி விற்போறும், ஆடு, மீன், இறைச்சி, என்பன மாறுவோரும், ஆப்பமும், தோசையும், காய்கறி மற்றும் திண்பண்டங்கள் விற்போரும் அங்காடியில் நிறைந்து இருந்தனர்.

**“நெய்வினைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்**

**எருமை நல் ஆன் கருநாகு பெறுஉம்”**[36]

ஆட்டு, மாட்டு இடையர்கள் பால், நெய் முதலிய பண்டங்களைக் குறிஞ்சி நிலக் கிராமங்களில் விற்று அவற்றிற்குப் பதிலாக (பொன் அன்றி) நெல்வாங்கிச் சென்றனர் என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுவதால் அவர்களது சிக்கன அறிவுடை வாணிப மரபுகள் புலனாகின்றன.

**“வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**

**பிறவுந் தமபோற் செயின்”**[37]

பிறர் பொருளையும் தமதே போலக் கருதிக் கொண்டு ஒழுகுதல், வாணிகத்தைச் செய்வார்க்குரிய நல்ல வாணிக மரபாகும் என்று குறள் விளக்கும்.

வணிகர்கள் பல்பண்டம் அவற்றின் விற்பனையால் வரும் லாபத்தை பகிர்ந்து வீசினர். நெறிதவறாத வாணிபத்தால் வியாபாரம் மிகும் என்றும் அதனால் லாபம் மிகும் என்றும் அவர்கள் கருதினர். வியாபாரத்தில் நேர்மையின் தேவையும் பயனும் உணரப்பட்டன.

**வெளிநாட்டு வாணிபம்**

பண்டைக்காலம் தொட்டு தமிழகம் பிற நாடுகளோடு பரந்த வாணிபம் செய்து வந்துள்ளது. வெளிநாட்டுச் சந்தைகளில் எப்போதும் விரும்பி வாங்கப்பட்ட பல அரிய பொருள்கள் தமிழகத்தில் கிடைத்தமையே அவ்வாணிபத்தின் முக்கிய காரணமாகும். உணவுப் பொருள்களில் மிளகு, இஞ்சி, அரிசி, மணமிகு மரங்களின் சந்தனம், அகில், சமயற்காகும் வாசனைப் பொருள்களில் ஏலம், இலவங்கம், மஞ்சள், ஆடம்பர அணிகளுக்குத் தந்தம், முத்து, மரகதம், குருந்தம் முதலிய

விலைபடு கற்கள், உடைக்காகப் பருத்தியும், பருத்தித் துணிகளும், மனையுறை விலங்குகளில் குரங்கு, மாடு, பறவைகளில் மயில், கானுறை விலங்குகளில் சிறுத்தை, புலி, யானை (அவை தரும் தோல் தந்தம் என்பவற்றிற்காக) இப்பொருள்கள் எப்போதும் தமிழகத்தோடு தொடர்புபடுத்தப்பட்டு வந்துள்ளன. பிறநாட்டுச் சந்தைகளில் மிகுதியும் விரும்பப்பட்டன.

பண்டைக்கால எபிரேயர்களோடு தமிழகம் நடத்தி வந்த வாணிபமே மிகப் பழைய வெளிநாட்டு வியாபாரத் தொடர்பு ஆகும். பாண்டியர் நாட்டிலிருந்து கிடைக்கும் சில பொருள்களைக் கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம் குறிக்கிறது.

❖ பாண்டிய கவாடகம் என்பது ஒரு வகை முத்து

❖ மாதுரம் என்பது ஒரு வகைத் துணி

இது மதுரையில் நெய்யப்பட்டது.

**பொழுதுபோக்குகள் விளையாட்டுக்கள் மற்றும் மகிழ்வினைகள்**

வாழ்க்கையை முழுமையாகவும் நன்றாகவும் வாழ விரும்பிய தமிழர்க்கு அவரது ஒழிந்த நேரங்களை கழிக்கப் போதுமான பொழுதுபோக்குகளும் மகிழ்வினைகளும் இருந்தன. நாட்டுப்புறத்தார் தங்கள் பொழுதின் பெரும் பகுதியை விளையாட்டுக்களில் செலவழித்தனர். அவற்றில் சில பண்புமிக்க விரும்பத்தக்கதாகவும் வேறு சில சாதாரணமானதாகவும் கீழ்த்தரமானதாகவும் இருந்தன.

மக்களுக்கு பொழுதுபோக்குக்காக நாடக மேடை இருந்தது. இசை, நாட்டியம், நாடகம் என்பவை கண்ணுக்கும் செவிக்கும் கருத்துக்கும் விருந்தாயின. கடற்கரை நகரங்களில், விழா நாட்களில் அன்றி வெறிதாய்ப் பொழுதுபோக்காகக் கடற்கரைக்குச் செல்லுதல் இன்றும் அன்றும் பயிற்சியிலுள்ள வழக்கமாயின. முல்லை நில ஊர்களில் ஏறுவிடுதல் அல்லது ஏறுதழுவுதல் போற்றப் பெற்றது. இது ஒரு போட்டி. இதில் அப்போட்டிக்கெனவே முரடாக்கப்பட்ட ஏறுகளை அடக்கிப் பரிசு பெறுதல் முக்கியமான அம்சம்.

எருது கட்டவிழ்த்து விடப்பட்டதும், முரசுகளும் சங்கும் ஒலித்தன. இதனால் போட்டி தொடங்குதல் அறிவிக்கப்பட்டது. அன்றியும் ஏறுகள் ஒலியைக் கேட்டு மிரண்டு ஓடத்தொடங்கும். இது திறமை தோற்றும் ஒரு விளையாட்டு. வென்றவனுக்குப் பெரும்பரிசில் தருவதுண்டு. அவ்வெற்றி பெற்றவனுக்கு அழகிய தேர்ச்சி பெற்ற மங்கையை மணமுடிப்பதாக அறிவுறுத்தலும் உண்டு. தங்கள் உயிரையும் பணயம் வைத்து முரட்டுக் காளையை அடக்குவதற்குச் சில

காளையர்க்கு அவாவூட்ட இது போதுமானதாக இருந்தது. இதற்கு மைந்து விரட்டு என்பது பெயர்.

**“உய்த்தனர் விடாஅர் பிரித்து இடைகளையார்**

**குப்பைக் கோழித் தனிப் போர் போல”[38]**

என்றும்,

**“பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பின்**

**கார் ஏறு பொருத கண் அகன் செறுவின்”[39]**

கிராமங்களில் கோழிச் சண்டையும், ஆட்டுக் கிடாச் சண்டையும் பொது மக்களின் விருப்ப விளையாட்டுக்கள். ஒவ்வொரு நகரச் சேரியும் ஒவ்வொரு கிராமமும் தனது கோழி, ஆட்டுக் கிடாச் சண்டைகளுக்கு ஏற்பாடு செய்தது. அவ்விளையாட்டுக்களில் வேடிக்கை பார்ப்போர் பந்தயம் கட்டுவது உண்டோ என்பது தெரியாது. ஆனால் கூட்டத்தினர் இக்கொலைகாரப் பொழுதுபோக்குக்களால் அளவிற் சிறந்த இன்பமும் மகிழ்வினையும் பெற்றனர். சேவல் போன்ற பழகிய பறவைகளிடையேயும் சண்டை பழக்குவதுண்டு.

சூதாட்டம் அவர்கள் அறியாததன்று. அது பெரும்பாலோரால் பயிலப்பெற்றுது. சூதாடுமிடம் அரங்கு அல்லது கழகம் எனப்படும். வட்டும் கவறும் ஒன்றே ‘சூதாடித் தோற்றோ அனுபவத்தால் அறிவு பெறாமல் திரும்பத் திரும்ப ஆடித் தோற்பர்’. மன்னர்களும் அவர்கள் நண்பர்களும் இதனை ஆடினர். ஆட்டத்தில் ஏமாற்றவும் செய்தனர்.

**“மாயிரும் பெடையோடு இரியல் போகிப்**

**பூதம் காக்கும் புகலரும் கடிநகர்த்**

**தூது உண் அம்புறவொடு துச்சில் சேக்கும்**

**முதுமரத்த முரண்களரி வரிமணல் அகன்திட்டை”[40]**

கலந்து கொள்வோரில் ஒருவர் இறந்து படக்கூடிய சண்டை மற்போர் பொழுது போகாத மீனவர்கள். மன்றத்தில் கூடிக் கடும் மற்போரிட்டனர். இது மீனவர்கள் அல்லது அவர்கள் போல் எளியவர்கள் விரும்பிய போர். மற்போரையே தொழிலாகக் கொண்டவர் மல்லர்.

மகளிர், அத்துணைச் சத்தமும் அபாயமும் இல்லாத, ஆனால் அதிக மகிழ்வூட்டும் ஆட்டங்களைப் பயின்றனர். பேச்சுப் பழகிய கிளிகளையும் வானம்பாடிகளையும் பேச்சுப் போட்டிக்கு விட்டனர். அவற்றிற்குச் சில சொற்களைப்

பழக்கி அவற்றைத் திரும்பக் கூறுமாறு பயிற்றனர். இவ்விளையாட்டுக்களில் திறமையும் சூதும் கலந்திருந்தன.

மகளிர் தங்கள் தன்மைக்கேற்ப அடக்கமான பொழுதுபோக்குக்களில் கலந்து கொண்டனர். அம்மானை, கழங்கு, அல்லது வண்ணப்பந்துகள் கொண்டாடுதல் என்பவற்றை அம்மகளிர் பெரிய அளவிற்குச் சிறப்பாகப் பயின்றிருந்தனர். பாடிக் கொண்டே பல பந்துகளை மேலே வீசி வீசி ஆடுவர். கந்துகம் அல்லது பந்து எறிந்து ஆடுதலும் உண்டு. ஊசலாடிக் கொண்டே பாடுதலும் மகளிரிடையே பயின்ற ஒரு பழக்கம். இதனை பின்வரும் புறநானூறு பாடல் கூறுகிறது.

**"இனிநினைந்து இரக்கம் ஆகின்று திணிமணல்**
**செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்**
**தண்கயம் ஆடும் மகளிரொடு கைபிணைந்து**
**தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி**
**மறைஎனல் அறியா மாயமில் ஆயமொடு"**[41]

ஓரையாடுதல் மகளிர்க்குப் பிடித்தமான விளையாட்டு. இதில் மகளிர் கூடிக்கொண்டு நண்டு முதலியவற்றைத் தொந்தரவு செய்து விளையாடுவர். மேலும்,

**"கிளர் பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்"**[42]

குழந்தைகள் குற்றமற்ற விளையாட்டுக்களை ஆடுவர். மிகச்சிறு குழவிகள் கிலுகிலி ஆட்டி மகிழ்வர். இவை வளர்ந்த பனையோலையால் செய்யப்பட்டவை.

இருபால் சிறுவரும் குன்றுகள் மீதேறி உமணர் உப்பு வண்டிகள் ஒழுங்காகப் போவதை எண்ணிக்கையிட்டு வேடிக்கை பார்த்தனர். கடற்கரையில் பரதவர், சிறுவர் வந்து செல்லும் படகுகளை எண்ணி மகிழ்ந்தனர். சிறுவர் யானை, தேர் போன்ற சிறு மரப்பொம்மைகளை இழுத்து விளையாடினர்.

**சங்ககால பழக்கவழக்கங்கள்**

இல்லறத்தானின் வாழ்க்கைக் குறிக்கோள் துறவிகள், பிரம்மச்சாரிகள் என்போர்க்கு உணவளித்துச் சமுதாயத்தைத் தாங்குதலே ஆகும். இவன் ஆற்றும் சிறந்த வேள்வி குன்றாத வள்ளன்மையோடு விருந்தோம்புதல் நடைபெற்றது.

**"இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந்தற்று"**[43]

இனிய சொற்கள் இருக்கின்ற போது ஒருவன் இன்னாத சொற்களைக் கூறுதல். இனிய கனி இருக்கவும் காயைத் தின்பது போன்றதே.

விழாக்காலங்களில் ஏழைகளுக்கு உணவளிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. விருந்தினர் நல்ல ருசியான உணவை நிரம்ப உண்டனர். இதனை குறிஞ்சிப்பாட்டு பின்வருமாறு கூறுகிறது.

**"சாறு அயர்ந்தன்ன மிடா அச் சொன்றி**
**வருநர்க்கு வரையா வளநகர் பொறப**
**மலரத் திறந்த வாயில் பலருணப்**
**பைந்நிணம் ஒழுகிய நெய்மலி அடிசில்**
**வசையில் வான்திணைப் புரையோர் கடும்பொடு"**[44]

விழாக் கொண்டாடப்பட்ட நாட்களில் நடப்பது போல ஒரு பானைச் சோற்றையும், வருபவர்களுக்கு எல்லாம் இல்லை என்னாது தருகின்ற செல்வச் சிறப்புடையது போல, வீடு பொழிந்து தோன்ற எல்லோரும் வந்து உண்டு மகிழ எப்போதும் வாசல் கதவு திறந்தே இருக்கும். அங்கே அருமையாக நெய் ஒழுகக் கறியோடு சேர்த்துச் சமைத்த சோற்றை, குணக்குன்றான பெரியோர்கள், தம் சுற்றமொடு இருந்து உண்டு மகிழ்ந்தனர்.

ஒவ்வொருவரும் தமது ஐம்பெருங்குரவரை (பெற்றோர், தமையன், ஆசிரியர், அரசர்) வணங்க வேண்டும். இவர்களில் தாய்தந்தையரிடம் முதன்மையான பணிவு வேண்டும்.

'தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து முந்தி
இருப்பச் செயல்'
'மகன் தந்தைக்காற்றும் உதவி இவன் தந்தை
என்னோற்றான் கொல் எனும் சொல்'

முதிர்ந்த வயதாகியும் தனது முடி நறையாது இருந்ததற்குக் காரணம் அவர் வீட்டில் இளையோர் அவர் சொல்லுக்கு மாறு கூறான் என்பதே என்று பிசிராந்தையார் கூறினார். மனைவியர்க்கு மட்டும் அவர்கள் கணவரைத் தவிர வழிபடக் கடவுள் பிறர் இலர்.

விருந்தினரை இன்முகத்தோடு வரவேற்று அவர்களை நன்கு உபசரித்து, அவர்கள் செல்லும்போது ஏழடி நடந்து வழியனுப்ப வேண்டும். மேலும்,

**"காலின் ஏழ் அடிப் பின் சென்று கோலின்"**[45]

பெரியோர்கள் நண்பர்களை, வரவேற்கும் போதும் வழியனுப்பும் போதும் ஏழடி முன் சென்று வரவேற்பதும், ஏழடி உடன் சென்று வழியனுப்புவதும் மரபு. எனவே 'காலின் ஏழடி' என்றார்.

விருந்தினர் வந்தால் இல்லறத் தான் இருக்கையை விட்டு எழுந்து உள்ளன்போடு வரவேற்க வேண்டும்.

**"செஞ்சோற்ற பலி மாந்திய**

**கருங்காக்கை கவர்வு முனையின்"**[46]

உணவு உண்பதற்கு முன் காக்கைக்கு ஒருபிடி சோறு ஒதுக்கி வைக்கும் பழக்கம் இருந்தது.

இடைச்சி அவள் வீட்டு நெலிகோலில் (தீக்கடைகோல்) சிக்கிமுக்கிக் கல்லைத் தேய்த்து நெருப்பு உண்டாக்கினாள். இதனை பின்வரும் பெரும்பாணாற்றுப்படை பாடல் கூறுகிறது.

**"ஞெலிகோல் கொண்ட பெருவிறல் ஞெகிழிச்**

**செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்"**[47]

மேலும் நெருப்புண்டாக்க இது ஒரு வழிதான் அவர்களுக்குத் தெரியும் போலும். நெருப்பு உண்டாக்குவதில் உள்ள கஷ்டங்களை உணர்ந்த அவர்கள் நெருப்பை அணையாமல் வைத்திருக்க முயன்றனர். இவ்வாறு அணையாமல் வைக்கப்பட்டிருந்த நெருப்பினை ஒரு தீ வங்கி எனலாம். இதனை 'கடைக் கொள்ளி' என்றனர். நாளடைவில் அது ஒரு சில சமயச்சிறப்புடைய வழக்கமாகிவிட்டது.

பொழுது காண்பதற்கு அவர்களுக்கு பல வழிகள் இருந்தன. சூரியன் இருக்கும் திசை, நீர்வட்டி, நாழிகைப் பொறி, மலர்கள் பூக்கும் நேரம் என்பவை இவற்றில் சில தவறாது கொக்கரித்த சேவல் விடியற்காலையை அறிவித்தது.

**நம்பிக்கைகளும் மூடநம்பிக்கைகளும்**

தமிழர் பல நம்பிக்கைகள் கொண்டிருந்தனர். பண்டைய மக்கள் பலரைப் போல பெருவாரியான மூடநம்பிக்கைகளும் கொண்டிருந்தனர். மக்கள் கனவுகளை நம்பினர். அவை எப்போதும் பலிக்கும் என்றும் கருதினர். கனவு எப்போது பலிக்கும் என்பது அது எப்போது (எந்த சமயத்தில்) நிகழ்கிறது என்பதைப் பொறுத்திருக்கும் என்று கருதினர். இரவு முதல் சாமத்தில் காணும் கனவு ஓராண்டில் பலிக்கும் என்று எதிர்பார்த்தனர்.

இரண்டாம் சாமத்து கனவு எட்டு மாதத்தில் பலிக்கும். மூன்றாம் சாமத்துக் கனவு மூன்று மாதத்திலும் நான்காம் சாமத்தது பத்துநாளிலும் பலிக்கும். கண்ணகியின் கனவு இரவில் இடையாமத்தாதலின் அது விரைவிலேயே பலித்துவிட்டது. சில கனவுகள் வருங்கால நிகழ்வுகளின் பொதுத் தன்மையைக் காட்டும். கீழ்க்காணும் பாடல் மூலம் கனவுகளின் வகைகளை காண முடியும். அவை,

**“திசையிரு நான்கும் உற்கம் உற்கவும்**
**பெருமரத்து இலையின் நெடுங்கோடு பற்றவும்**
**வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவும்**
**அஞ்சுவரத் தகுந புள்ளுக்குரல் இயம்பவும்**
**எயிறுநிலத்து வீழவும் எண்ணெய் ஆடவும்**
**களிறுமேல் கொள்ளவும் காழகம் நீப்பவும்**
**வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்**
**கனவின் அரியன காணா நனவின்**
**செருச்செய் முன்பநின் வருதிறன் நோக்கி**
**மையல் கொண்ட ஏமமில் இருக்கையர்”**[48]

கீழ்க்காண்பவை நிகழுமாயின்:

- கொள்ளிக்கட்டைகள் நாற்புறமும் வீழ்தல்
- பட்டமரம் தீப்பற்றல்
- வானத்தில் பல ஞாயிறுகள் தோன்றல்
- தீச்சகுனம் குறிக்கும் பறவைகள் ஒலித்தல்
- பற்கழன்று தரையில் வீழ்தல்
- எண்ணெய் தேய்த்துக் குளித்தல்
- படைக்கலக் கொட்டிலிலிருந்து படைக்கலம் நழுவி வீழ்தல்
- தன்னைத்தானே ஆடையின்றிக் காணல்
- ஆண்பன்றி மீதேறிச் செல்லுதல்

ஆகியவை தீயபலன் விளையும் என்று கருதினர்.

போர்க்களத்தில் தோல்வி தழுவப் போகும் நாட்டார்க்கு ஒன்பது தீ நிகழ்வுகள் கனவில் தோன்றும் எனும் செய்தி இப்பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. சுவையான இச்செய்தி அக்கால மக்கள் நம்பிக்கையை எடுத்துக்காட்டுகிறது.

அவர்கள் வேறு சில நிமித்தங்களையும் நம்பினர். விரிச்சி என்பது அசரீரி, அச்சொல் நல்லதோ கெட்டதோ அதைப் பொறுத்து நன்மை தீமை விளையும். சுவரேறிச் செல்லும் பல்லியைக் கவனித்து அது எந்தத் திக்கிலிருந்து செல்லுகிறதோ அதைக்கண்டு சகுனம் பார்த்தனர். இதனை,

**"பாங்கர்ப் பல்லி படுதோறும் பரவி"[49]**

என்றும் அதுவும் ஒருவகை அசரீரியே. அரசின் போருக்குப் புறப்படு முன் கணி நிமித்தம் பார்த்தனன். சில பறவைகள், குறிப்பாக காரி எனப்படும் கரிக்குருவி, பறக்கும் திக்கு தவறாத நிமித்தமாகும்.

பிரயாணத்திற்க்கு நல்ல நாள் பார்க்க வேண்டும். பெண்களின் இடது கண் துடித்தலும், ஆண்களின் வலது கண் துடித்தலும் நன்று. பெண்களுக்கு வலக் கண் துடித்தால் அவர்களுக்கு அது தீது. பால் தோயாவிட்டால் அது இடையர்க்குத் தீது. தென்திசையில் வெள்ளி (சுக்ரன்) தோன்றினால் யாவர்க்கும் தீது. காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர். ஒருவன் தும்பினால் யாரோ அவனை நினைப்பதன் அறிகுறி என்று வள்ளுவர் கூறுகின்றார்.

**'வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்**
**யாருள்ளித் தும்மினீர் என்று'**

யான் தும்மினேனாக நூறாண்டு என்று கூறி வாழ்த்தினாள். அடுத்து அதைவிட்டு, எவர் நினைத்ததனாலே நீர் தும்மினீர் என்று கேட்டுக் கேட்டு அழுதாள்.

**"தும்முச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்**
**எம்மை மறைத்திரோ என்று"[50]**

அவள் பிணங்குவாள் என்று பயந்து நான் எழுந்த தும்மலையும் அடக்கினோனாக, உம்மவர் நினைப்பதை எமக்குத் தெரியாதபடி மறைத்தீரோ என்று அவள் அழுதாள் என்று குறள் கூறுகிறது.

மக்கள் வேப்பிலையும், வெண்சிறு கடுகும் பேயினின்றும் மக்களைக் காக்கக் கூடியவை என்று எண்ணினர். இயற்கை கடந்த சக்திகளால் குழந்தைகளுக்குத் தீது நேரிடாமல் மகளிர் தமது தலையில் வேப்பிலையைச் செருகிக் கொண்டனர். தீய சக்திகளிலிருந்து காக்க குழந்தைகளின் தலையில் நெய்யும், வெண்சிறு கடுகும் அப்பினர்.

மனைவியின் பூப்பிற்குப் பின் பதினைந்து நாட்கள் கணவன் அவளை நீங்காமை வேண்டும் என்று விதித்தனர். பூப்புக்காலத்தில் அவளோடு கலவாமை வேண்டும். விஞ்ஞான முறையில் நோக்கினும் இவை வெற்று நம்பிக்கைகளல்ல.

கவனத்தால் பிறந்த அறிவு என்பது போதரும். அம்மூன்று நாட்களும் கூப்பிடு தூரத்திற்கும் அவளை அணுகக்கூடாது. ஈன்றணிய மகளிர் ஊர்ப்பொதுக் குளத்திற்குக் குளிக்கச் செல்வர். தீட்டுக்காலத்தில் அவர்கள் தீண்டாதார் மட்டுமல்லர் நெருங்கற்கும் ஆகார். அவர்கள் வீட்டுப் பாத்திரங்களைத் தொடக்கூடாது. இவ்வாறு சில நம்பிக்கைகளை மக்கள் கடைபிடித்து வாழ்ந்துள்ளனர்.

## தொகுப்புரை

- சங்ககால மக்களின் வாழ்வியலை ஆராயுமிடத்து, புதிய புதிய விளக்கங்கள் நவீன உலகிற்குக் கிடைக்கின்றன. தொடக்க காலத் தமிழர்கள், இயற்கையோடு கொண்டிருந்த உறவு நிலையும், இயற்கையைச் சார்ந்து தம்முடைய வாழ்வியலை அமைத்துக் கொண்ட பாங்கானது பல நூற்றாண்டு இடைவெளிக்குப் பிறகும் தற்போதைய அடிப்படைத் தேவைகளாக அமைகின்றன.
- சங்ககாலத்தில் வாழ்ந்த மக்கள் செல்வச் செழிப்பாக வாழ்ந்துள்ளனர். மன்னர்கள் மக்கள் நலனிற்க்காக ஆட்சி செய்தார்கள். அரசவையில் அரசர் அந்தனர்களை மதித்தனர். நாட்களை கணக்கிடும் நாழிகைக் கணக்கர் அரசவையில் இடம்பெற்று தங்கள் பணியினை செய்துள்ளனர்.
- மக்களின் தொழிலாக உழவே காணப்பட்டது. உண்பதற்க்கு உணவு அவசியமாக இருந்ததால் அனைத்து வகைப் பிரிவினரும் உழவுத் தொழிலை விரும்பி ஏற்றனர். குறிஞ்சி, முல்லை, மருதம் நிலத்தில் வாழ்ந்த மக்கள் உழவுத் தொழிலைச் செய்தனர். நீர்ப்பாசன முறைகளும் தொழிலுக்கு ஏற்ற வகையில் அமைந்து இருந்தது என்பது சங்ககாலப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது.
- பண்டமாற்று முறையில் வாணிபம் நடைபெற்றன. உள்நாட்டு வாணிபம், வெளிநாட்டு வாணிபம் என பண்டமாற்று முறையில் பொருள்கள் ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்பட்டன. வாழ்க்கையை முழுமையாக வாழத் தெரிந்த தமிழர்கள் தங்கள் விருப்பத்திற்க்கு ஏற்ப பொழுதுபோக்கிற்காக சில விளையாட்டுக்களை உருவாக்கினார்கள். அதில் கலந்துகொண்டு தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர்.
- சங்ககாலப் பெண்கள் தங்கள் வீட்டுக்கு விருந்தினர் வருகைக்காக காத்து இருப்பர். அறுசுவை உணவுகளை சமைத்து விருந்தினர்களுக்கு உணவு அளிப்பர். தமிழர்கள் பலர் கூறும் நம்பிக்கைகளை நம்பினார்கள். வாழ்க்கையில் நடக்கும் சில இன்ப, துன்பங்களில் இறைவனுக்குப் பங்கு உண்டு என்று நம்பினர் என்பதை சங்கப் பாடல்கள் வழி அறிய முடிகிறது.

## இயல் மூன்று

## சான்றெண்விளக்கம்


1. பாலையன் அ.ப-புறம்-பா-220
2. மேலது பா-167
3. மேலது பா-58
4. மேலது பா-308
5. மாணிக்கவாசகன் ஞா-பொருநர் ஆற்றுப்படை-பா-64,65
6. மாணிக்கவாசகன் ஞா-மலைபடுகடாம் பா-39,40
7. பாலையன் அ.ப-புறநானூறு பா-43
8. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-261
9. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-1031
10. மேலது-திருக்குறள்-1036
11. பாலையன் அ.ப-புறநானூறு பா-40
12. மாணிக்கவாசகன் ஞா-பத்துப்பாட்டு-மலைபடுகடாம் பா-102-106
13. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-542
14. மேலது-737
15. மேலது-1032
16. மேலது-1033
17. மேலது-1037
18. மேலது-1039
19. பாலையன் அ.ப-புறநானூறு-பா-326
20. மாணிக்கவாசகன் ஞா-பத்துப்பாட்டு-திருமுருகாற்றுப்படை பா-138
21. மாணிக்கவாசகன் ஞா-பொருநர் ஆற்றுப்படை பா-80,81
22. மேலது-திருமுருகாற்றுப்படை பா-15
23. பாலையன் அ.ப-புறநானூறு பா-274
24. மாணிக்கவாசகன் ஞா-திருமுருகாற்றுப்படை பா-126
25. பாலையன் அ.ப-புறநானூறு பா-189
26. மேலது பா-95
27. மாணிக்கவாசகன் ஞா-பெரும்பாணாற்றுப்படை பா-248,249
28. மேலது-பட்டினப்பாலை பா-80-93

29. மேலது-பட்டினப்பாலை பா-29,30
30. செயபால் இரா. முனைவர் பா-60
31. மாணிக்கவாசகன் ஞா-பொருநர் ஆற்றுப்படை பா-214,215,216,217
32. பாலையன் அ.ப-புறநானூறு பா-33
33. புலியூர்க்கேசிகன்-ஐங்குறுநூறு பா-47
34. மேலது பா-48
35. மாணிக்கவாசகன் ஞா-பெரும்பாணாற்றுப்படை பா-80,81
36. மேலது பா-164,165
37. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-120
38. பிரேமா இரா முனைவர் -குறுந்தொகை-பா-305
39. மாணிக்கவாசகன் ஞா-பெரும்பாணாற்றுப்படை பா-209,210
40. மேலது-பட்டினப்பாலை பா-56-60
41. பாலையன் அ.ப-புறநானூறு பா-243
42. மாணிக்கவாசகன் ஞா-சிறுபாண்ஆற்றுப்படை பா-61
43. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-100
44. மாணிக்கவாசகன் ஞா-குறிஞ்சிப்பாட்டு-201-205
45. மேலது-பொருநர் ஆற்றுப்படை பா-166
46. மேலது-183, 184
47. மேலது-பெரும்பாணாற்றுப்படை பா-178, 179
48. பாலையன் அ.ப-புறநானூறு பா-41
49. செயபால் இரா முனைவர்-அகநானூறு பா-9
50. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-1317, 1318

## இயல் நான்கு

## சங்க காலத்தில் பெண்கள் நிலை

- முன்னுரை
- மக்களின் வாழ்க்கை முறைகள்
- இனக்குழு வாழ்க்கை
- குடும்பம்
    - குடும்ப வகைகளும் பயனும்
    - சங்க காலத்தில் குடும்ப நிலை
- ஊழே காதலுக்குக் காரணம்
- தலைவியின் நிலைப்பாடு
- இயற்கைப் புணர்ச்சி
- தோழிக்கு நிகழும் கூற்று
- பெண் கல்வி
- கல்வியின் சிறப்பு
- இலக்கியம்
- நுண்கலைகள்
- சிற்பக்கலை
- அரங்கேற்றக் களம் அமைப்பு
- கூத்து
- சமயம்
    - மூவகைச் சமய மரபுகள்
- சமயத்தில் தோற்ற வழிபாடு
    - முருகன் வழிபாடு
    - நாற்பெருங்கடவுள்
    - பத்தினி வழிபாடு
- சிறுசோற்று விழா
- தெய்வ வாக்கு
- ஆன்மார்த்தக் கொள்கைகள்
- தொகுப்புரை

## இயல் நான்கு

## சங்க காலத்தில் பெண்கள் நிலை

**முன்னுரை**

சங்க இலக்கியங்களை உலக இலக்கியங்களின் இமயம் எனலாம். சிறந்த குறிக்கோளும் கொள்கையும் கொண்டவை சங்க இலக்கிய நூல்கள். சங்ககாலத்தில் மனையின்கண் இருந்து மனையறம் நிகழ்த்தும் உரிமை இல்லறத்தில் தலைமைதாங்கி நடத்திச் செல்லும் சிறப்பு மகளிர்க்கே உரிமையொன்றாக இருந்து உள்ளது. பண்டைய இந்தியப் பெண்மையின் இலட்சியம் அன்பாக அனைவரையும் அரவணைப்பதாக இருந்தது. சங்ககாலத்தில் வாழ்ந்த பெண்கள் கல்வி, வீரம், ஒழுக்கம், இல்லறம் ஆகியவற்றில் சிறந்து விளங்கியுள்ளனர். சங்ககால மக்களின் வாழ்க்கை முறை, குடும்ப வகைகள், பெண் கல்வியின் சிறப்பு, சமயம் ஆகியவற்றைப் பற்றி ஆராய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது.

**மக்களின் வாழ்க்கை முறைகள்**

வாழும் நிலத்தின் தன்மைக்கேற்பவே அங்கு வாழ்க்கை நடத்தும் மக்களின் வாழ்க்கை முறையும் பண்பாடும் அமையும் என்பது பண்டைய தமிழரின் சிறந்த கொள்கைகளுள் ஒன்றாகும். அத்துடன் காலம் என்பதும் அவர்களிடம் பெரிய இடத்தைக் கொண்டிருந்தன. எனவே மக்கள் வாழ்கின்ற இடமும் காலமும் அவர்களுக்குத் தேவையான ஒன்றாகக் கருதப்பட்டது. மக்கள் வாழும் இடத்தின் தன்மைக்கேற்ப அங்கு நிகழும் காலச்சூழல், அதாவது வெப்பம், குளிர், வீசும் காற்று இவைகளின் அடிப்படையிலும் பொருள்கள் தோன்றியுள்ளன. ஓரறிவு உயிர்முதல் ஆறறிவு மனிதன் வரை இடமும், காலமுமே காரணக் கூறுகளாக அமைந்துள்ளன.

கற்காலத்தில் வாழ்ந்த மக்கள் கூட்டம் கூட்டமாக வாழ்க்கை நடத்தினர். இதில் உணவு சேகரித்தலும், வேட்டையாடுதலுமே முக்கியமாகக் கொள்ளப்பட்டன. சங்ககாலச் சமுதாய மக்கள் நிலத்தின் இயற்கைத் தன்மையை ஒட்டியும், தொழிற் பண்பையும் மூலமாகக் கொண்டு அமைந்த சமுதாயமாக வாழ்ந்தனர். சங்ககாலத் தமிழரின் வாழ்க்கை இரும்பின் உபயோகத்தை அறிந்த காலம். எனவே அவர்களின் வாழ்வில் பெரிய மாறுதல் உண்டாயிற்று எனலாம். இக்கால கட்டத்தில் இனக்குழு வாழ்க்கை மாறி விவசாயம் மேற்கொள்ளப்பட்டதால் நிலவுடைமை தோற்றம் கண்டறியப்பட்டது எனலாம்.

உணவைத் தேடுதல் என்ற நிலைமாறி உணவை உற்பத்தி செய்தல் என்பது மக்கள் வாழ்க்கையில் பெரும் மாறுதலைத் தோற்றுவித்தது எனலாம்.

**இனக்குழு வாழ்க்கை**

உணவுக்காக விவசாயமும் கால்நடை வளர்ப்பும் தோன்றிய பிறகு இனக்குழு வாழ்க்கை அழிந்து விட்டது. மருத நிலத்தின் தன்மை உயர்ந்தோங்கி குடும்பம், சொத்துரிமை ஆகியவை தோற்றம் கண்டன. இதனால் அரசாங்கம் உருவானது. போர் புரிவதற்கு அறநெறிகள் உண்டாக்கப்பட்டன. பெண்ணையும், உரிமைப் பொருளாக எண்ணினர். இதன் காரணமாக ஒருவனுக்கு ஒருத்தி என்ற கற்புக்கோட்பாடும் உருவாயிற்று. மக்கள் வாழ்க்கையில் அகம் புறம் என்ற கோட்பாடுகள் வந்தன. அறம், பொருள், இன்பம் என்பன பாடுபொருளாக அமைந்தன. இன்பம் அகமாகவும், அறமும், பொருளும் புறமாகவும் மேற்கொள்ளப்பட்டன.

சங்ககால மக்கள் வாழும் நிலப்பிரிவுகளைக் கொண்டு தொழில்கள் மேற்கொள்ளப்பட்டன. குறிஞ்சி நில மக்கள் வேட்டுவர் என்றும், முல்லை நில மக்கள் ஆயர் என்றும், மருத நில மக்கள் உழவர் என்றும், நெய்தல் நில மக்கள் பரதவர் என்றும் அழைக்கப்பட்டனர். வாழும் இடத்திற்கேற்ப தொழில்கள் மாறுபட்டாலும் உயர்வு தாழ்வு என்ற பாகுபாடுகள் தமிழரிடத்தில் இல்லை. மக்கள் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என நான்கு நிலைகளில் வாழ்ந்தமையைத் தொல்காப்பியம் காட்டுகிறது. இது வேத நெறி கொண்ட ஆரியர் வருகைக்குப் பின் தோன்றியதாகும். இவ்வருணப் பாகுபாடுகள் நெடுங்காலம் தமிழர்களை ஊடுருவவில்லை. அக்காலத்தில் தொழில் அடிப்படையில் பல பிரிவுகள் இருந்தன. ஏற்றத் தாழ்வுகளும் இருந்திருக்க வேண்டும் என்பதை,

**“வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்**
**கீழ்ப்பால் ஒருவன் கற்பின்**
**மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே”**[1]

என புறநானூறு சுட்டுகிறது. இதில் குறிப்பிட்டுள்ளபடி அந்தணர், அரசர், வணிகர் ஆகியோர் மேற்பால் என்றும், வேளாளர் கீழ்ப்பால் என்றும் கருதுதல் வேண்டும்.

**குடும்பம்**

தாய்வழிச் சமூகம், தந்தைவழிச் சமூகம் என வளர்ந்து வந்த மனித மரபு தந்தை வழிச்சமூகம் ஏற்பட்ட பின்பே பல மாற்றங்களைக் கண்டுள்ளது.

**“பொய்யும் வழுவம் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப”**[2]

என்றும்,

**“கற்பனெப் படுவது காணமொடு புணாக்**
**கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்**
**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே”**[3]

என்று வரும் தொல்காப்பியரின் நூற்பாக்களை நோக்கும் போது திருமணம் என்ற மேம்பட்ட உறவே குடும்பம் என்ற அமைப்புக்கு அடிப்படையாக இருந்தது என்பதை அறியலாம். தொல்காப்பியருடைய காலத்திற்குப் பலநூறு ஆண்டுகள் முன்பாகவே குடும்ப அமைப்புகள் தோன்றியிருக்க வேண்டும். அதனால்தான் தன் இலக்கண நூலில் அவைகளைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

குடும்பம் என்ற அமைப்பு மிகவும் பழமையானது என்பதில் ஐயமில்லை. சமூகத்திற்குக் குடும்பம் அடித்தளம். குடும்பத்திற்குத் திருமணம் அடித்தளம். திருமணத்தின் மூலம் உருவாகும் பல குடும்பங்கள் ஒன்று சேர்ந்து வாழும்போது சமுதாயம் தோற்றம் காண்கிறது. குடும்பமில்லாமல் ஒரு சமுதாயம் உயர்வு பெற இயலாது. குடும்ப அமைப்பிலிருந்தே சமூகமும் அதற்கான பண்பாடுகளும் உருவாகின்றன. எனவே குடும்ப அமைப்பே மேம்பட்ட சமுதாயத்தின் அடிப்படைக் கூறு என்பதை உணர முடிகிறது.

கணவன் மனைவி என்ற உறவு பெற்றோர் நிலைக்கு காரணமாகி, உடன்பிறந்தோர் என்ற பல உறவுகள் பின்னிப் பிணைந்திருக்கும் தொகுதியாகும். இது குருதித் தொடர்புடைய உறவுகளாகும். குடும்பம் என்ற கூட்டத்தில் இருக்கும் உறுப்பினர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட பணிகள் தானாகவே உருவாகின்றன. விட்டுக் கொடுத்தல், பிறரை ஓம்பும் தன்மை, பொறுப்புக்களை பகிர்ந்து கொள்ளும் பாங்கு, ஒற்றுமை ஆகிய பண்புகள் குடும்ப அமைப்புகளில் இயல்பாகவும், திட்டமிடப்பட்டும் அமைத்துக் கொள்கின்றனர்.

திருமணம் என்ற அமைப்பின் மீதே குடும்பம் என்பது அமைந்துள்ளதெனினும் திருமணத்துடன் குறுகி விடாமல் தொடர்ந்து வரும் மரபுகளின் இணைப்புகள் கொண்ட பல்வேறு நிலைகளையும் உறவுகளின் தன்மைகளையும் சேர்த்துக் கொண்டுள்ளது. நாகரிகம் தோன்றிய காலத்திலிருந்தே மனித இனத்தின்

நன்மைக்கும், பெருமைக்கும், இன்பம், இனவிருத்திக்கும் தாங்கும் சக்தியாகக் குடும்பமே அமைந்துள்ளது. குடும்ப உறவுகளில் நல்ல பண்புகள் மட்டுமே உருவாகும். தீயன வருவதற்கு வாய்ப்பில்லை. நாட்டின் உந்து சக்தியாக விளங்குபவை குடும்பங்களே. தனி மனித வாழ்வும், ஒரு சமுதாயத்தின் மேம்பாடும் குடும்பங்களின் மூலமே கிடைக்கின்றன எனலாம்.

பல்வேறு நிலைகளில் சமுதாயம் உயர்ந்து வந்தாலும் குடும்பநிலை பிறவற்றினும் மேம்பட்டதாகும். எந்த ஒரு வளர்ச்சி நிலையிலும் சில பல மாறுபாடுகளும் இருக்கத்தான் செய்யும். குடும்பம் என்ற அமைப்பு வளர்ந்து வந்தபோது குருதி, உறவு, குடும்பம், குழுமணக்குடும்பம், தந்தை தலைமைக் குடும்பம் என்ற பல நிலைகள் உருவாகி வந்தன. அனைத்திலும் தாயின் இடம் சிறப்பாக இருந்ததை ஏற்றுக் கொள்ள வேண்டும். கணவன், மனைவி என்று தொடங்கும் குடும்ப வாழ்க்கை மண முறிவினாலும், இறப்பினாலும் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளைத் தொடர்ந்து வரும் குடும்ப அமைப்பு காத்துக் கொள்கிறது. குடும்ப அமைப்பே, உடலைப் பேணுதல், உறவுகளை வளர்த்துக் கொள்ளல், பொருளீட்டல், பிறர்க்கு உதவுதல், சமூகத்திற்குத் துணை நிற்றல் ஆகிய பல்வேறு மாற்றங்களுக்கும் வளர்ச்சிக்கும் உறுதுணையாக இருக்கின்றன.

**குடும்ப வகைகளும் பயனும்**

பாலுறவின் அடிப்படையில் கணவன் மனைவியாகத் தொடங்கும் தனிக்குடும்பமும், பெருகிவரும் குடும்ப அமைப்பு பிரிந்து போகாமல் ஒரே தலைமையின் கீழ் இயங்கி வரும் கூட்டுக் குடும்பமும், குடும்பங்கள் உருவாக அடிப்படையாக இருந்த தாய்த்தலைமைக் குடும்பமும், ஒருத்திக்கு ஒருவன் என்ற நிலை உருவாகக் காரணமாக இருந்த தந்தை, தலைமைக் குடும்பமும், கல்வியிலும், பொருளீட்டுவதிலும் கணவனும் மனைவியும் சமமாக இருந்து நடத்திவரும் சமத்துவக் குடும்பமும் ஆகிய பலவகையான குடும்ப நிலைகள் உள்ளன. இறுதியாகச் சொல்லப்பட்ட சமத்துவக் குடும்பம் இன்றைய நிலையில் சரியானதாகும். ஆண்களுக்கு நிகராகப் பெண்கள் பல துறைகளிலும் மேம்பட்டு, சொத்துரிமை கேட்பதிலும், நீதி கேட்டுப் போராடுவதும், சட்ட நுணுக்கங்களைக் கொண்டு வெற்றி பெறும் தன்மையும் உள்ளதால் இந்நிலை இக்காலத்தில் விலக்க முடியாத ஒன்றாகும்.

பாலின வேட்கையை நிறைவேற்றிக் கொள்ளுதல், இனப்பெருக்கம், குழந்தையின் வளர்ச்சியில் பங்கு, சமூகத்துடன் தொடர்பு, குடும்பத்திற்குள் அன்பு,

அதையும் கடந்து பிற மனிதர்களிடம், பிற உயிர்களிடம் கொள்ளும் அருட்பண்பு, மரபுரிமையைக் காத்தல் ஆகிய பல பயன்களைக் குடும்பத்தின் மூலமாகவே நடைபெறுகின்றது.

**சங்க காலத்தில் குடும்ப நிலை**

சங்க காலத்தில் இருந்த குடும்ப நிலையை அறிய அக்கால அக இலக்கியங்கள் துணை நிற்கின்றன. பெரும்பாலும் தனிக் குடும்ப வாழ்வையே பேசுகின்றன. ஒருவன் ஒருத்தி என்ற தனிக்குடும்ப வாழ்க்கையே அக்காலத்தில் இருந்தது என்பதும், அதையே மேம்பட்டதாகக் கருதினர் என்பதும் புலனாகும். திருமணம் செய்து கொள்ளத்தடை ஏற்பட்ட போது உடன்போக்கு செல்லும் பண்பும், அதற்குப் பின்னர் நடைபெறும் திருமணமும் கொண்டு அறியலாம். இதனை,

**“மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலும்**
**உயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்**
**சுரநனி இனிய வாகுக தில்ல**
**அறநெறி இதுவெனத் தெளிந்தவென்**
**பிறைநுதற் குறமகள் போகிய சுரனே”**[4]

என்றும்,

**“தன்னமர் ஆயமொடு நன்மண நுகர்ச்சியின்**
**இனிதாங் கொல்லோ தனக்கே பனிவரை**
**இனக்களிறு வழங்கும் சோலை**
**வயக்குறு வெள்வேல் அவற்புணர்ந்து செலவே”**[5]

இது போன்று பலபாடல்கள் உடன்போக்கைப் பேசுகின்றன. மேலும்,

**“முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்,**
**கழுவுறு கலிங்கம், கழாஅது, உடீஇக்**
**குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்**
**தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்**
**இனிது எனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே”**[6]

என்னும் இக்குறுந்தொகைப் பாடல் தனிக்குடும்பமாக இருந்து தலைமகள் உணவு சமைக்கும் இயல்பையும், தலைவனின் மகிழ்ச்சியையும் காட்டுகிறது. மேலும் மங்கல வாழ்த்துப் பாடலில் கோவலன் கண்ணகி திருமணத்தை முடித்துக்

காட்டி அடுத்து வரும் மனையறம்படுத்தக் காதையில் தனிக் குடும்பமாக வைத்ததைக் காணலாம். ஒருத்தியோடு வாழ்வைத் தொடங்கும் தலைவன் காதற் பரத்தையோடும், காமக் கிழத்தியோடும் வாழ்ந்ததையும் சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்கள் கூறுகின்றன.

**“மடங்கலிற் சினைஇ மடங்கா உள்ளத்து**
**அடங்காத் தானை வேந்தர் உடங்கு இயைந்து**
**என்னொடு பொருதும் என்ப அவரை**
**ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு**
**அவர்ப்புறம் காணேன் ஆயின் சிறந்த**
**பேரமர் உண்கண் இவளினும் பிரிக”**[7]

என்னும் பாடலும்,

**“தீதுஇல் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்**
**பல்லிருங் கூந்தல் மகளிர்**
**ஒல்லா முயக்கிடைக் குழைக என்தாரே”**[8]

இவ்வரிகளும் ஒருவனும் ஒருத்தியும் வாழ்வதைப் பெரிதாக மதித்ததை அறிய முடிகிறது.

இல்லறம் குடும்பம் என்ற அமைப்பில் பெண்களுக்குச் சிறப்பிடம் தந்துள்ளதை சங்க இலக்கியங்கள் கொண்டும், தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களைக் கொண்டும் தெளியலாம். கூற்றுக்கள் என வருகின்ற போது தாய், செவிலி, தலைவி, தோழியென பெண்பாற் கூற்றுக்கள் அதிகமாகவும், ஆடவரில் தலைவன் தவிர பாங்கன், பாணர், கூத்தர் போன்றோரின் கூற்றுக்கள் காணக்கிடக்கின்றனவே தவிர தந்தை உடன் பிறந்தோர், மாமன் போன்றோர் கூற்றுக்கள் நிகழுமிடம் இல்லையென்றே கூறலாம். தலைவனின் குடும்பத்தைக் காட்டிலும் தலைவியின் குடும்பமே பேசப்படுகிறது. குடும்ப உறவில் அகவாழ்வில் சிறப்பிடம் பெண்ணுக்கும், புறவாழ்வில் ஆணுக்கும் பங்கு உண்டு என்பதை அறிய முடிகிறது. மேலும்,

**“வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்**
**மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என**
**நமக்கு உரைத்தோரும் தாமே**
**அழாஅல் தோழி அழுங்குவர் செலவே”**[9]

இப்பாடல் மூலம் மேற்கூறிய கருத்துக்களை அறிய முடிகிறது.

சங்க காலத்தில் பெற்றோரால் உறுதி செய்யப்பட்ட திருமணமும், காதல் மணமும் நடந்ததோடு தொடர்பில்லாத வேற்றுக் குடும்பங்களின் கலப்பு மணம் நடந்ததையும் பாடல்களின் வழி காணமுடிகிறது.

சங்க காலத்தில் ஏற்றத்தாழ்வைக் கொண்ட செல்வக் குடும்பங்களும், வறுமைக் குடும்பங்களும் இருந்தன என்பதை அக்கால இலக்கியங்கள் மூலம் அறியலாம். இதனை,

**“நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்**
**கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை**
**பொற்காற் புதல்வர் புரவிஇன்று உருட்டும்”**[10]

என்ற பட்டினப்பாலை அடிகளும்,

**“பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்**
**விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப்**
**புடைப்பின் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்**
**உண்என்று ஒக்குபு புடைப்பத் தெண்ணீர்**
**முத்தரிப் பொற்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று”**[11]

என்ற நற்றிணைப் பாடலும் செல்வச் செழிப்புள்ள குடும்பங்களைக் காட்டுகின்றது. அதே வேளையில்,

**“குப்பைக் கீரைக் கொய்கண் அகைத்த**
**முற்றா இளந்தளிர் கொய்து கொண்டு உப்பின்று**
**நீர்உலை யாக ஏற்றி மோரின்று**
**அவிழ்பதம் மறந்து பாசடகு மிசைந்து**
**மாசொடு குறைந்த உடுக்கையள்”**[12]

எனவும்,

**“இல்லுணாத் துறத்தலின் இல்மறந்து உறையும்**
**புல்லுளைக் குடுமிப் புதல்வன் பன்மாண்**
**பாலில் வறுமுலை சுவைத்தனன் பெறஅன்**
**கூழும் சோறும் கடைஇ ஊழின்**
**உள்ளில் வருங்கலம் திறந்து அழக்கண்டு**
**மறப்புலி உரைத்தும் மதியங் காட்டியும்**
**நொந்தனள் ஆகி”**[13]

எனவரும் புறநானூற்று வரிகள் வறுமையின் கொடுமையில் சிக்கித் தவிக்கும் குடும்பங்களையும் எடுத்துக்காட்டுகின்றது. வள்ளல்களையும், அரசர்களையும் பாடி அவர்களிடம் பெறும் பரிசில் பொருட்களைக் கொண்டு வாழ்க்கை நடத்தும் புலவர் குடும்பங்களும், பாணர், பொருநர், கூத்தர், விறலியர் போன்றோரின் கலைக்குடும்பங்களும் சங்ககாலத்தில் இருந்ததையும் இலக்கியங்கள் சுட்டிக்காட்டுகின்றன.

**ஊழே காதலுக்குக் காரணம்**

ஒருவனும் ஒருத்தியுமாகக் கூடி நடத்தும் இல்லறத்தின் பயனாக அவ்விருவரையும் பிறவிகள் தோறும் சேர்த்து வைப்பதும் பிரித்து விலக்குவதுமாகிய இருவகை ஊழினும் இருவர் உள்ளமும் எப்போதும் ஒன்றி வாழ்வதற்குரிய நல்லூழின் ஆணையால் ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் தம்முள் எதிர்பட்டுக் காணப்படுவார்கள். இதனை,

**“ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்த பால தாணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோ னாயினும் கடிவரை இன்றே”**[14]

என்ற நூற்பாவின் மூலம் விளக்கம் தந்துள்ளார்.

தலைவனுக்கும் தலைவிக்கும் உரிய ஒத்த பண்புகளாகப் பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, அழகு, அன்பு, நிறை, அருள், உணர்வு, திரு முதலிய பத்தும் கூறப்படுகின்றன. இக்குணங்களால் தலைவியினும் தலைவன் மிக்கவனாயினும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. மேலும்,

**“பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு**
**உருவு நிறுத்த காமவாயில்**
**நிறையே அருளே உணர்வொடு திருவென**
**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே”**[15]

என எடுத்துக்காட்டியுள்ளார் தொல்காப்பியர்.

ஒருவரையொருவர் எதிர்கொள்ளும் கிழவன் கிழத்தி ஆகிய இருவருள்ளும், உயர்வுடைய தலைவனுக்கு மக்கள் உள்ளான் அல்லன் தெய்வமோ எனத் தலைவி மாட்டு ஐயம் தோன்றுதல் சிறந்ததென்று புலவர் கருதுவர்.

அத்தலைவனினும் குறைந்த தலைவிக்கு ஐயம் உண்டாகுமாயின் இன்பம் நிகழாது தடைப்படும். இழிவும் உண்டாகும். இதனை,

**"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**

**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு"**[16]

என வள்ளுவரும் ஐயம் நிகழ்ந்ததை சுட்டிக்காட்டியுள்ளார்.

உள்ளத்தில் காம விருப்பம் இல்லாத முனிவர்களும் புண்பட்டு மனம் வருந்தும்படி பார்ப்பவள். அதனால் உடல் முழுவதும் கண்ணை உடையவளோ என்று மோர் விற்பவள் மீது காதல் கொள்ளும் பிறர் ஏவிய வினையைச் செய்யும் ஒருவன் அதே தன்மைகொண்ட பெண்ணிடம் காதல்கொண்ட போது ஐயம் தோன்றாமை காணப்படுகிறது. இவ்வையம் அச்சம் காரணமாகத் தலைமகளுக்குத் தோன்றாது. ஆங்கிலேயர்கள் ஆணுக்கும் பெண்ணுக்குமான திருமண பொருத்தங்களாக ABCDE என்று பிரித்து வைத்துள்ளனர். A-Age, B-Beauty, C-Character, D-Dignity, E-Education. இதுவும் ஒரு வயில் ஏற்றுக்கொள்ளும் வகையில் உள்ளது.

தலைவனுக்கு உண்டான ஐயத்தை எவ்வாறு நீக்குவான் எனின் தலைவி சூடிய பூவில் வண்டு மொய்த்தலும், செயற்கையான அணிகலன் அணிந்திருத்தலும், மார்பிலும், தோளிலும் எழுதியுள்ள தொய்யில் ஆகிய கொடியுடையாளாயிருத்தலும், ஓரிடத்தில் நில்லாது சுற்றி வருதலும், கண்ணிமைத்தலும், ஆடவனைக் கண்டு அஞ்சுதலும், தெய்வத்திற்க்கு இல்லை எனலாம். ஆதலின் இவை காரணமாக இவள் தெய்வப் பெண்ணல்லள், மானிட மகளே எனத் துணிதல் தலைவியின் கால் நிலந்தோய்தலும், வியர்த்தலும், நிழலாடுதலும் அவன் ஐயம் நீங்குவதற்குக் காரணம் ஆகும். இதனைத் தொல்காப்பியர்,

**"வண்டே இழையே வள்ளி பூவை**

**கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று**

**அன்னவை பிறவும் ஆங்கண் திகழ**

**நின்றவை களையும் கருவி என்ப"**[17]

என்று கூறியுள்ளார். மானிட மகளே என்று துணிந்த தலைவன் தலைவியின் கருத்தை உணர்வதற்கு அவள் பார்வை ஒன்றே போதும் என்பார்கள். இதனை,

**"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்**

**கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும்"**[18]

என்று தொல்காப்பிய நூற்பா இக்கருத்தை வலியுறுத்தியுள்ளது.

ஐயுற்று இருவர் அறிவையும் ஒன்றுபடுத்த வேட்கையோடு கூட்டிக் கூறும் காமக் குறிப்புச் சொல் தலைவியின் கண்கள் என பின்வரும் குறள் கூறியுள்ளது.

**“இருநோக்கு இவளுண்கண் உள்ளது ஒருநோக்கு**
**நோய்நோக்கு ஒன்று அந்நோய் மருந்து”**[19]

என்று காணமுடிகிறது. ஒருவர் குறிப்பு ஒருவர் நினைந்ததைக் கொள்ளுமாயின் அவ்விடத்தும் கண்ணினான் வரும் குறிப்பு நிகழும் என்பதை,

**“குறிப்பே குறித்தது கொள்ளு மாயின்**
**ஆங்கவை நிகழும் என்மனார் புலவர்”**[20]

என்று தொல்காப்பிய நூற்பா மூலம் அறிய முடிகிறது.

**தலைவியின் நிலைப்பாடு**

**“அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்**
**நிச்சமும் பெண்பாற் குரிய என்ப”**[21]

அச்சம், நாண், பேதைமை ஆகிய இம்மூன்றும் எப்போதும் முதன்மை பெற்று நிற்றல் பெண்களுக்குரிய இலக்கணமாகும். இதனால் வேட்கையுற்ற விடத்தும் புணர்ச்சிக்கு இசையாது வரைந்தெய்து தலையே விரும்பும் எனப்படும்.

பெருமையும் உரனும் உடைய ஆண்மகனும், அச்சமும், நாணமும், மடனுமுடைய பெண்ணும் மணம் விரும்பிய போதும் மெய்யுறு புணர்ச்சியின்றி உள்ளப் புணர்ச்சியோடு நிற்பவரே ஆயினும் சாக்காடு எல்லையாகிய மெய்ப்பாடுவரின் மெய்யுற்றுப் புணர்தலும் நிகழும் என்பதாகும். இதனை உணர்த்த காதலர்க்கு வரும் அவத்தைகளை விவரித்து உள்ளார்.

**“வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்**
**ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்**
**நோக்குவ எல்லாம் அவையே போறல்**
**மறத்தல் மயக்கம் சாக்காடு என்றிச்**
**சிறப்புடை மரபினவை களவென மொழிப”**[22]

போன்றவை ஆகும். வேட்கை முதலாகச் சாக்காடு ஈறாக சொல்லப்பட்ட காமச் சிறப்புடையனவற்றால் மெய்யுற்று புணர்வதால் களவாகும் என்றவாறு அவத்தைகள் பத்து உள்ளன. அவற்றில் காட்சி விகற்பமாகிய ஐயமும் துணிவு முதல் அவத்தையாகக் கொண்டு இங்குக் கூறிய ஒன்பதையும் பின்பு சேர்க்க அவத்தைகள் பத்து ஆவதைக் காண முடிகிறது. சாக்காடு என்றது காதல் போன்ற

துன்பத்தை உள்ளம் சென்ற வழியும், மெய்யுறு புணர்ச்சியும் நிகழும் என்பதை இதன் மூலம் காண முடிகிறது.

**இயற்கைப் புணர்ச்சி**

**“கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி**
**காமஞ் செப்பாது கண்டது மொழிமோ**
**பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்**
**செறிஎயிற்று அரிவை கூந்தலின்**
**நறியவும் உளவோ நீ அறியும் பூவே”**[23]

இதனுள் தும்பி என்றது முன்னிலையாக்கல், கண்டது மொழிமோ என்றது சொல்வழிப் படுத்தல், கூந்தலின் நறியவும் உளவோ என்றது நன்னயம் உரைத்தல், பயிலியது நட்பின் என்றது தந்நிலை உரைத்தல் எனப்படும்.

முன்னிலை யாக்கல் என்பது காமக் குறிப்புண்மை அறிந்த தலைமகன் வேட்கையால் சார நினைத்த போது தலைமகளும் வேட்கைக் குறிப்புடையளாயினும் குலத்தின் காரணமாக வந்த நாணமும் அச்சமும் மேற்பட அக்குறிப்பே இல்லாதவரைப் போல நிற்கும் போது அவளை முன்னிலையாக்கிச் சில கூறுதல் மரபு ஆகும். இதனை,

**“ஒள்ளிழை மகளிரொடு ஓரையும் ஆடாய்**
**வள்ளிதழ் நெய்தல் தொடலையும் புனையாய்**
**விரிழங் கானல் ஒருசிறை நின்றோய்**
**யாரை யோநிற் றொழுதனெம் வினவுதும்”**[24]

எனத் தலைவியை முன்னிலையாக்கிப் புகழ்ந்து வினவியவாறு காணலாம். சொல்வழிப் படுத்தலாவது தான் சொல்கின்ற சொல்லின்வழி அவள் நிற்குமாறு செய்வது கூறுதல் ஆகும்.

**“புலவிளை யாடிய புலவுநாறு வேழத்தின்**
**தலைமருப்பு ஏய்ப்பக் கடைமணி சிவந்தநின்**
**.........................................................................**
**கரும்புடைத் தோளும் உடையவால் அணங்கே”**[25]

எனத் தலைவியின் கண்ணையும் தோளையும் புகழ்ந்து கூறி அவள் விரும்பி நிற்குமாறு செய்தமை காணலாம். நன்னயம் உரைத்தலாவது ‘ஊர்திரை வேலியுழக்கித் திரிவார் பின் கோல்மட வன்னஞ் சேரல் நடையொய்வாய் வார்மின்’

எனத் தலைவியின் நடை அன்னத்தின் நடையிலும் சிறப்புடையது எனத் தலைவன் கூறியுள்ளதை அறிய முடிகிறது.

நகை நகையுறா அந்நிலையறிதல் என்பது தலைமகன் தன் நன்னய முரைப்பக் கேட்ட தலைவிக்கு மனத்தில் உண்டாகும் மகிழ்ச்சியால் புறத்தே தோன்றும் முறுவல் குறிப்புத் தோன்றாத அந்நிலையினைத் தலைவன் அறிதலாகும். மெலிவு விளக்குறுத்தலாவது தலைவன் அகத்தில் எழும் துன்பத்தால் புறத்து நிகழும் தளர்வினைக் குறிப்பால் எடுத்துக் கூறுதல் ஆகும். தன்னிலை யுரைத்தலாவது தன் பொலிவிழந்த நிலையைக் கண்ட தலைமகனிடத்து தன்னுள்ளத்து வேட்கையை எடுத்துக்கூறுகிறது. மேலும்,

**“சொல்லின் சொல்எதிர் கொள்ளாய் யாழநின்**
**திருமுகம் இறைஞ்சி நாணுதி கதுமெனக்**
**காமம் கைம்மிகின் தாங்குதல் எளிதோ”**[26]

எனத் தன்னிலை உரைத்தவாறு காணுதல் வேண்டும். தெளிவகப்படுத்தலாவது தலைவன் முன்னிலையாதல் முதலியன கூறிப் பின்னர் இயற்கைப் புணர்ச்சியினை விரும்பி நின்று அதனை,

**“யாயும் ஞாயும் யார் ஆகியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெயல்நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே”**[27]

என இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்னர் பிரிவர் எனக் கருதி அஞ்சிய தலைமகள் குறிப்பு வேறுபாடு கண்டு தலைமகன் கூறியுள்ளதாகும். மேற்கூறியவை இயற்கைப் புணர்ச்சியின் முன்பு தலைவன் தலைவியர் உள்ளம் ஒத்த பண்பினை கூறியதைக் காண முடிகிறது.

**தோழிக்கு நிகழுங் கூற்று**

அக இலக்கியங்களில் தலைவன் தலைவி இருவரும் ஊழின் காரணமாக கூடும் தன்மை ஏற்பட்டாலும் அதற்குப் பிறகு தலைவியின் இயல்புகளில் மாற்றம் கண்டு தோழி ஐயுற தலைவியின் காதல் தோழிக்குத் தெரியவரும். களவு வாழ்க்கைத் தொடர உறுதுணையாக இருப்பவர்கள் தோழியும், பாங்கனுமாவர். நிலத்தில் விதை விழுந்தாலும் நீரின்றி அது முளைவிட இயலாது. அந்நீர் போல

தலைவனுக்கும் தலைவிக்கும் அமைந்து இருப்பவள் தோழி எனப்படுவாள். இதனை தொல்காப்பியர்,

**“நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்**

**.......................................................................**

**தாங்கருஞ் சிறப்பின் தோழி மேன”**[28]

எனக் கூறியுள்ளார். பூவினாலும், சாந்தினாலும் தலைவனுடன் கூடிய கூட்டத்தாலும், தலைவியிடத்து உளதாகிய நறுநாற்றமும், கூட்டத்தினால் அடைந்த வேறுபாடும், தோழியர் கூட்டத்துடன் முன்போல் சேர்ந்தொழுகாது. தன்னைத் தனியாகப் பேணி ஒழுகுதலும், உண்ணும் அளவில் குறைதலும், தான் செய்கின்ற பூப்பறித்தல், நீராடல் முதலிய வினைகளைத் தோழி அறியாதவாறு மறைத்துத் தனியே செய்தலும் ஆகும். அன்றியும் தலைவன் செய்த கூட்டக் கருமத்தினைப் புலப்படாதவாறு தோழியிடம் மறைத்தலும், எத்திசையிலும் சென்று விளையாடுபவள் இப்பொழுது குறிப்பிட்ட ஓரிடத்திற்கே செல்லுதலும் காணப்படுகிறது. ஓரிடத்திலேயே அதிகமாகப் பழகுதலும், புணர்வதற்கு முந்துற்ற காலத்தை உட்கோடலுமாகிய மன நிகழ்ச்சி ஏழும் துணையாக அறிதலோடு, மெய்யினாலும் பொய்யினாலும் நெறிமுறை பிழையாவாறு பல்வேறு வகைப்பட்ட இருபொருள் பயக்கும் சொற்களாலே ஆராய்தலும், களவொழுக்கத்திலே ஒழுகுவதற்க்கு விரும்பி வந்த தலைமகனை அவனது பெருமைகளைக் கூறி நீக்குதலும், ‘உலகத்தார் பெண் கொள்ளும் முறை போலக் கொள்க’ என்று கூறுதலும், தலைவியை அடைவதற்குள்ள அருமையைக் கூறி நீக்குதலும், தலைவியிடத்துச் சென்று அறிவித்த பின்னர் என்மாட்டு வாவென்று கூறுவதும் ஆகும்.

தோழி உடன்பட்டாலும் தலைவி அதனை அறியும் தன்மையள் அல்லள் எனத் தலைவற்குக் கூறுதலும், தான் அச்சமுற்று அஞ்சிய தன்மையைத் தலைவற்க்கு அறிவித்தலும், நீ காதலிப்பது யாரையோ? என்று வினவிய விடத்துத் தலைவன் ‘இன்னாள்’ எனச் சொல்லக் கேட்ட தோழி ‘அவளும் நின் போன்றே உள்ளாள்’ என இவனோடு கூட்டி உரைத்தலும் ஆகிய ஒழிவின்றிக் கூறிய எட்டுக் கூற்றும் தோழியின்பால் நிகழ்வனவாகும்.

மேலும் தன்முன்னர் வந்து நின்ற தலைவனைத் தோழி பார்த்து நின்றே, வாராதான் போல மாயமேற்றி அதனைப் பொறுத்த காரணம் குறிப்பினாற் கொள்ளக் கூறுமிடத்தும், கூட்டம் முடிந்த பின்னர்த் தோழி தலைவனை வணங்குமிடத்தும்,

தலைவன் குறையுற்று நிற்பதற்கு மனம் நெகிழ்ந்து தான் தலைவியிடத்துக் குறையுறுமிடத்தும், நாணம் மிகுதியினால் வேட்கை மறைத்து நிற்கும் தலைவியிடத்துத் தலைவனோடும், தலைவியோடும் முன்னர் நிகழ்ந்த இயற்கைப் புணர்ச்சி முதலிய கூட்டம் மூன்றினையும் தான் அறிந்தமையைக் குறிப்பால் உணர்த்தி, இரந்து நிற்றல் பலவகையாக வேறுபட்ட விடத்தும், இவ்வழித் தோழியின் கூற்றை தலைவி ஏற்றுக் கொண்டவிடத்து, அதனைத் தலைவற்குக் கூறுதற்கு விரும்புமிடத்தும், எண்ணுதற்கரிய பல நகையாட்டுக்களைத் தலைவனிடம் குறித்த வகையும், பலவாறு தோழி எடுத்துக் கூறிய பின்னரும், தலைவன் புணர்ச்சியை விரும்புமிடத்தும், தலைவன் புணர்ச்சியை விரும்பாது பிரிவை விரும்பியவிடத்தும் தலைவற்குத் தாம் சில கொடுத்தலைத் தலைவி விரும்பியவிடத்தும் தலைவனோடு தலைவி கூடியவிடத்து அல்ல குறிப்படுதலாகிய அறிவு மடம்பட்ட சிறப்பினிடத்தும், தலைவனிடத்தும் தலைவியை பாதுகாத்துக் கொள்வாயாக என்று கூறியவிடத்தும், தோழி செம்மையாகக் கூறும் கடுஞ்சொற்களால் தலைவி நெஞ்சு சிதைவுடைத்தாயினும், தலைவனின் பிரிவால் என்பும் உருகுமாறுள்ள தலைவிக்குத் தன்கடன் செவ்வனே செய்து தலைவனது அன்பு மிகுதியைக் கூறியுள்ளது ஆகும்.

**பெண் கல்வி**

சங்ககாலத்துத் தமிழர் சமுதாயம் முன்னேறிய, பண்பட்ட சமூகம். அது வாணிப வளத்திலும், நுண்கலைத் திறனிலும் மிகுந்த உயர்நிலை எய்தியிருந்தது. ஆட்சியின் பெருமைகளையும் பொறுப்புக்களையும் நன்கு உணர்ந்திருந்தது.

தமிழகத்தின் கல்விமுறை, நூல்களைப் படித்து அறிந்து கொள்வது என்பதோடமையாது கற்றார்பாற் கேட்டலுமாம். இதனை வள்ளுவர்,

**“கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக”**[29]

கற்பதற்குத் தகுதியான நூல்களைப் பழுதில்லாமல் கற்க வேண்டும். கற்றதன் பின்னர் கற்ற அக்கல்வியின் தகுதிக்குத் தகுந்தபடி நடக்கவும் வேண்டும் எனவும்,

**“தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்**
**கற்றனைத்து ஊறும் அறிவு”**[30]

மணலிலே தோண்டும் கிணற்றில் தோண்டிய அளவுக்கே நீர் ஊறும். மாந்தருக்கும் அவரவர் முயன்று கற்றதன் அளவுக்கே அறிவும் ஊறிச் சுரக்கும் என்று கல்வியின் இன்றியமையாமையை கூறியுள்ளார். மேலும்,

**"செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்**
**செல்வத்துள் எல்லாம் தலை"**[31]

**"கற்றிலன் ஆயினும் கேட்க அ∴து ஒருவற்கு**
**ஒற்கத்தின் ஊற்றாம் துணை"**[32]

கேள்வியால் அடைகின்ற அறிவே செல்வங்களுள் சிறந்த செல்வம் ஆகும். அந்தக் கேள்விச் செல்வம் பிற செல்வங்களுள் எல்லாம் முதன்மையானதும் ஆகும். தான் முயன்று கற்கவில்லை என்றாலும், கற்றவரிடம் கேட்டாவது அறிவு பெறவேண்டும். அது ஒருவன் தளர்ச்சி அடையும்போது ஊன்றுகோல்போலத் துணையாகும்.

கற்றாரின் அறிவுடைய கூற்றுக்களைச் செவிமடுத்தலால் ஒருவன் அறிவு பெறுதலோடு, அக்கற்றாரின் முதிர்ந்த அனுபவத்தின் பயன்களையும் துய்க்க இயலும் என்று அவர்கள் கருதினர். கல்வியின் இன்றியமையாமையைப் பற்றி ஓர் அதிகாரத்திலும், கல்லாமையின் தீங்குகளைப் பற்றி மூன்று அதிகாரங்களிலும் குறள் எடுத்தோதுகின்றது.

ஒருவன் கற்றற்பாலவாய நூல்களைக் கசடறக் கற்றல் வேண்டும். பிறகு அக்கல்விக்குத்தக்க நிற்றல் வேண்டும். அறியப்படுவன இருவகைப்படும். வாழ்க்கைக் கலைகளும் விஞ்ஞானமும் என இவற்றில் முந்தியவை மொழி இலக்கியங்களாலும், பிந்தியது கணிதத்தாலும் அறியப்படுவன. இதனை,

**"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்என்ப வாழும் உயிர்க்கு"**[33]

எண் என்று சொல்லப்படுவதும், எழுத்து என்று கூறுப்படுவதும் என்னும் இவை இரண்டும் இவ்வுலகில் வாழும் உயிர்களுக்குக் கண் என்பார்கள் என்று வள்ளுவர் கூறியுள்ளார். நன்று, தீது என்பவற்றைப் பகுத்துக் காணும் அறிவு கல்வியாலேயே வளர்கின்றது. கற்றறிவுடையானுக்கு,

**"யாதானும் நாடாமல் ஊராமால் என்ஒருவன்**
**சாந்துணையும் கல்லாத வாறு"**[34]

கற்றவனுக்கு எந்த நாடும் நாடாகும். எந்த ஊரும் ஊராகும். இதுவே உண்மையாக இருந்தும் ஒருவன் சாகும் வரைக்கும் கல்லாமலிருப்பது எதனால் என்று குறள் மூலம் கூறியுள்ளார். மெய்யாகக் கூறுமிடத்து,

**"கேடுஇல் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**

**மாடுஅல்ல மற்றை யவை"**[35]

அழிவில்லாத சிறந்த செல்வம் என்பது கல்விச் செல்வமே. மற்றைய பொன் பொருள் மண் என்னும் செல்வங்கள் ஒருவனுக்குச் சிறந்த செல்வம் ஆகாது. நல்ல நூல்களைக் கல்லாதான் ஒருவன் அவையின்கண் ஒன்றனைச் சொல்லுதல் அரங்கின்றி இழைக்காமலே வட்டாடினால் போன்ற அறியாமையான செயல் ஆகும். மேலும்,

**"அரங்குஇன்றி வட்டாடி அற்றே நிரம்பிய**

**நூல்இன்றிக் கோட்டிக் கொளல்"**[36]

எனக் கல்வியின் இன்றியமையாமையை விளக்கியுள்ளார். கல்லாதவனுடைய ஒட்பம் ஒவ்வோரமயங்களில் நன்றாக அமையினும், அறிவுடையார் அதனை ஒருவிழுக்காடு என்று கருதி ஏற்றுக்கொள்ளார். கல்லார்கட்பட்ட செல்வம் நல்லார்கட்பட்ட வறுமையினும் தீதாம். மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும் கற்றார் பெருமை இல்லாதவர் ஆவர். கற்றாரே மக்கள் எனப்படுவர். கல்லாதார் விலங்கொடு வைத்து எண்ணப்படும். கற்றலின் அறிவுடையார்பாற் கேட்டலே நன்று. நல்ல ஒழுக்கம் உடையவரது வாய்ச்சொற்கள், வழுக்கம் சேற்றில் வழுக்காமல் செல்ல உதவும் ஊன்றுகோல்போல ஒருவனுக்கு எப்போதும் உதவியாக விளங்கும். இதனை,

**"நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய**

**வாயின ராதல் அரிது"**[37]

நுண்மையான கேள்வி அறிவைப் பெறாதவர்கள், தாம் வணக்கமாகப் பேசும் வாயினர் ஆகுதல் அருமையே. கேள்வியறிவு பெற்றவர்கள் பணிவாகவே பேசுவார்கள். உலகில் கல்வி எக்குலத்தார்க்கும், சாதியர்க்கும், பாலார்க்கும், எந்நிலையார்க்கும் தனி உடைமையன்று. கல்வி தன்னம்பிக்கையையும், பெருந்தன்மையையும் மனிதற்கு எய்துவித்தது என்று கருதப்பட்டது. ஆதலால் அஃது வேண்டப்படுவதாயிற்று.

முதற்கண் பண்டைக்காலத்தில் கற்பிக்கப்பட்ட, கற்ற பாடத்தின் பரப்பும், அதனால் பெற்ற அறிவின் விசாலமும் மிகக் குறைவே. தற்கால அறிவு

முழுமையோடு அதனை ஒப்புக் காணலாகாது அக்காலத்துப் பெண்பால் புலவர்கள் சிலரைப் பற்றி நாம் கேள்வியுறுகிறோமாயினும் மகளிர் கல்விப் பரப்பு ஆடவர் கல்வியினும் மிகக் குறைந்ததாகவே இருந்திருக்க வேண்டும்.

பரம்பரை வைதீகக் கல்வியை அந்தணர்கள் போற்றியிருத்தல் வேண்டும். அரசர் சற்று வேறுபட்ட பாடத்திட்டத்தைப் பின்பற்றியவராதல் வேண்டும். அவர்கள் விற்பயிற்சி, குதிரையேற்றம், மற்போர் முதலியவற்றையும் பயின்றிருத்தல் வேண்டும். வைசியரும் அரசாங்க ஊழியர்களும் கணிதத்தில் அவர்கள் தொழில் காரணமாகச் சற்று மிகுதியான அக்கறை காட்டியுள்ளனர். பார்ப்பனர் கிரகணங்களின் நிகழ்ச்சியை வருமுன் கூறும் அளவிற்கு வானியல் கல்வி கற்றனர். அஃதும் அவர்கள் தொழில் தேவையின் பாற்பட்டதே ஆகும். அதற்கெனச் சிறந்த தொழிலாளர்களும், கணிகையரும் நுண்கரைகளைப் பயின்றனர். கல்வியறிவுடையார் இகழப்படவில்லை. ஆனால் அன்னார் எச்சாதியினராயினும் நன்கு மதிக்கப்பட்டனர். அரசனும் அவர் அறிவுரைகட்குச் செவிசாய்த்தான்.

ஆசிரியர் கணக்காயர் எனப்பட்டார். அஃதாவது மாணவர்கள் குழாம் ஒன்றைக் கூட்டி அதற்கு நெடுங்கணக்குக் கற்பிப்பவர் என்பது (அகர முதல எழுத்துக்களும் அவற்றால் நடைபெறும் இலக்கியமும் என்க) சங்ககாலத்தில் சில கணக்காயர்களைப் பற்றிக் கேள்வியாகின்றது. நக்கீரனார் என்னும் புலவரின் தந்தையார் ஒரு கணக்காயர் அன்றியும் 'கணக்காயர் இல்லாத ஊழ்பாழ்' எனவும் பட்டது. ஆசிரியர், ஆசார், உவாத்தியார் என்பனவும் கற்பிப்பார்க்குப் பிற பெயர்கள் உள்ளன. கற்பான் மாணவன் அல்லது பிள்ளை எனப்பட்டான். பெருவாரியான மாணவர்களைக் கூட்டிப் பெரியதொரு கல்விச் சூழ்நிலையையாக்கும் ஆசிரியர்கட்குக் குலபதி என்பதொரு பெயர் உண்டு. கிடங்கில் குலபதி நக்கண்ணனார் என்றொரு சங்கப் புலவர் இருந்தார். கற்குமிடத்திற்குப் பள்ளி என்பது பெயர். பெரும்பாலும் ஆசிரியர் மனையின் தெற்றி, திண்ணை என்பனவே பள்ளியாயின.

உலர்ந்த, நறுக்கித் தரிக்கப்பட்ட நீண்ட, குறுகிய பனை ஓலைத் துண்டுகளில் (ஒரு அடி நீளம், ஈரங்குல் அகலம்) மாணவர்கள் எழுதினர். அவை ஒரு மூலையிலோ இரு மூலைகளிலுமோ தொளையிடப்பட்டன. அவற்றிற்குப் பக்கம் இட்டு அவற்றை ஒன்றாகக் கோத்துக் கெட்டியான கயிறுகளால் பிணித்தனர். பல பக்கங்களை இவ்வாறு சேர்த்துக் கட்டிய பின் அக்கட்டுக்களை

அதே அளவுள்ள இரு பலகைகளுக்கிடையே இட்டுக் கட்டினர். இப்பக்கங்கள் ஓலை எனப்பட்டன. அக்கட்டிற்குச் சுவடி என்பது பெயர்.

அவர்களது எழுதுகோல் நீண்ட கூரிய திரண்ட ஊசி போன்றது. அது ஒரு மரப்பிடியில் செருகப்பட்டது. அதனை ஊசி அல்லது எழுத்தாணி என்றனர். இக்கூரிய எழுதுகோலைக் கட்டை விரலால் அழுத்திப் பிற விரல்களுக்கு இடையே செருகிக் கொண்டு மாணவர்கள் அவ்வுலர்ந்த சருகுகளில் எழுதினர். ஓலையின் ஒரு புறத்தில் மட்டும் அவர்கள் எழுதினர். அவ்வோலைத் துணுக்குக்களின் மீது ஒருமுறை எழுதியதை அழிக்கவோ மாற்றவோ வரிபிளந்தெழுதவோ இயலாததாகையால் அவர்கள் எழுதுவோரால் நிகழும் எழுத்துப் பிழைகள் பாராவண்ணம் எழுதினர்.

**கல்வியின் சிறப்பு**

கற்போர் ஆசிரியருடைய சொந்த மாணவர்களே. இளமையில் கல்வி கற்கத் தொடங்க வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டது. கல்வியின் பயன் ஆன்மார்த்தம் என்றும் அஃது உலகியலை ஒட்டியதன்று என்றும் அவர்கள் எண்ணினர்.

மாணவர்கள் ஆசிரியருக்குக் காசாகவோ பொருளாகவோ குருதட்சணை அளித்தனர். கல்வியின் நிலை பற்றி பின்வரும் புறப்பாடல் வழி அறியலாம்.

**"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**

**..................................................................................**

**மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே"**[38]

கற்பிக்கும் ஆசிரியர்க்குத் துன்பம் நேர்ந்த போது அதைக் களைவதற்கு உதவுதல் வேண்டும். ஆசிரியர் தேவையறிந்து பொருள் கொடுக்க வேண்டும். கற்கும் போது வெறுப்பின்றிப் பணிவுடன் கற்றல் வேண்டும். பல பிள்ளைகளைப் பெற்ற தாய் கல்வியில் சிறந்தானையே பெரிதும் விரும்புவாள். ஒரே குடியில் பிறந்த பல பிள்ளைகளுள் கற்காத மூத்தவனை அரசன் மதிக்கமாட்டான். கல்வி கற்ற இளையவனையே மதிப்பான். வேறுபாடு உடைய நான்கு குலத்துள் கடைக்குலத்து ஒருவன் கல்வி கற்றுவிட்டால் மேற்குலத்தவனும் கல்வி கற்றவனை மதித்து மரியாதை செய்வான்.

இசை, கூத்து, நாடகம், ஓவியம், கட்டடக்கலை, சிற்பம் முதலிய நுண்கலைகளைப் பரம்பரை பரம்பரையாக அவற்றைப் பயின்று வந்த குலத்தார் நுண்ணிதில் கற்றுக் கொண்டனர். கல்வி கற்பித்தல் பெரும்பாலும் பேச்சு மூலமாகவே நிகழ்ந்தது. மனை எனப்படும் ஒரு பாய், பலகை அல்லது தெற்றி

மீது ஆசிரியர் பாடம் கூறுங்கால் வீற்றிருந்தார். அவர் எதிரில் மாணவர்கள் வரிசையாக நின்றனர். அவர் கூறுவதை மரியாதையுடன் செவிமடுத்துக் கேட்க வேண்டும். இதுவே சாதாரணமாகக் கற்பிக்கும் மற்றும் கற்கும் முறையாக அமைந்தது.

மாணவர்கள் எழுதிப் பயின்றது குறைவே. ஆனால் படித்த யாவற்றையும் நெட்டுருச் செய்தனர். ஞாபகத்திறமையை வளர்த்தல், ஆயிரக்கணக்கான பாடல்களை மனப்பாடம் செய்து வரி பிறழாமல் ஒப்பித்தல், அன்றியும் ஆசிரியரிடமிருந்து கேட்ட ஒவ்வொரு சொல்லையும் சற்றும் மாறாமல் திருப்பிச் சொல்ல இயலுதல் முதலியவை நல்ல மாணவனின் அடிப்படைத் தகுதியாம். அக்காலத்து இலக்கியங்கள் நல்ல முறையில் பாதுகாத்து வளர்க்கப்பட்டமைக்குக் காரணம் அக்கால மாணவர்களின் வியக்கத்தக்க நினைவாற்றலேயாம். அக்காலத்தில் எழுத்துச் சாதனங்கள் மிகக் குறைவாயிருந்த போதிலும் இது நிகழ்ந்தது போற்றத்தக்கது ஆகும்.

**இலக்கியம்**

தமிழ்ச் சங்ககாலத்தைத் தமிழ் இலக்கியத்தின் அகஸ்டஸ் காலம் (பொற்காலம்) என்று கூறியுள்ளனர். சங்க இலக்கியம் தமிழருடைய தன்மை, வாழ்க்கை நெறி மனப்பான்மை, உள்ளக்கிளர்ச்சிகள், எண்ணங்கள், உலகியல் மற்றும் சமய நிலையங்கள் ஆகியவற்றைப் பற்றிய 'கலப்படமில்லாத இலக்கியமாக' அமைந்துள்ளது.

சங்க இலக்கியம் உலகியலோடுபட்ட பொது சமூகச் செயற்பாடுகளையும், அரசு, போர், ஈகை, துறவு, வழிபாடு, வாணிபம், உழவு, மலைகளையும், ஆறுகளையும் போன்ற இயற்கைத் தோற்றங்கள் ஆகியவையும் தனிப்பட்டவர்களுடைய எண்ணங்கள் சொற்கள் கணவன் மனைவியரிடையே தோன்றும் அன்பு குடும்பத்தின் நெருங்கிய உறுப்பினர்களுடைய உளமார்ந்த குடும்ப வாழ்க்கை முதலிய போன்றவற்றையும் பற்றியது. அவற்றை,

- ❖ தமக்கு வெளியேயுள்ள பொருள்களைப் பற்றிய புறக்கூற்றுக்கள்
- ❖ தன்னுள்ளத்தாலேயே துய்த்து உணரக்கூடிய உளமார்ந்த அனுபவங்களோடு தொடர்புடையவற்றில் சிறப்பாகத் தலைவன் தலைவியரிடையே தோன்றும் காதலைப் பற்றியது ஆகும்.

இலக்கியத்தை அறம், பொருள், இன்பம், வீடு என்று இன்னுமொரு வகையாக பார்க்கும் மரபு தமிழர் அறிந்தது. இது வடமொழியில் காணும் தர்மம்,

அர்த்தம், காமம், மோஷம் என்னும் பாகுபாட்டையொட்டியது. இவை நான்கும் வாழ்க்கையின் உறுதிப் பொருள்கள் எனப்பட்டன. அறம், பொருள், வீடு என்பவை புறத்துள்ளும், இன்பம் அகத்துள்ளும் அடங்கும். அவர்கள் மொழி இன்றுபோல் அன்றும் தமிழ் எனப்பட்டது.

மக்களுடைய சமுதாய வாழ்க்கையில் புலவர்கள் பெரும்பங்கு ஏற்றனர். பொதுக்கல்விக்கு அவர்கள் ஒரு நிலைக்களனாயிருந்தனர். அன்றியும் அவர்கள் தலைவனான ஆண் மகனைப் பாடாண்திணையில் புகழ்ந்து பாடியதோடு, அவர்கட்குச் செவியறிவுறுத்தியும் வந்தனர். கோவூர்க்கிழாரைப் போல அவர்கள் இரக்கமில்லா அரசர்களது பிடியினின்றும், இரங்கத்தக்க மானிட உயிர்களைக் காப்பாற்றவும் செய்தனர். மிகவும் குதர்க்கமும், பிடிவாதமும், இரக்ககுணமும் நிறைந்த மன்னர்கள் கூடச் சில புலவர்களின் இன்சொல்லுக்கு இணங்கினர் என்பது இதனால் பெறப்படும்.

கலைகள், விஞ்ஞானம், மற்றும் பிற அறிவுத் துறைகளில், தத்தம் தனித்துறையில் தமக்கிருந்த ஒப்புயர்வற்ற திறமையை உலகத்தாரிடையே நிறுவ விரும்பிய அறிஞர்கள், பலர் முன்னிலையில் விவாதங்கள் நடத்தினர். அவ்விவாதம் நடந்த இடத்தின் மேலே அவரவர் கொடி கட்டிப் பறந்தனர்.

தமிழ்ச் செய்யுளியல் மரபுப்படி அறுவகை யாப்புக்கள் விதிக்கப்பட்டுள்ளன. அவை வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியப்பா, மருட்பா, பரிபாடல் என்பவை. பிற பாலினங்களின் மருஉ மருட்பாவாகும். வழிபாட்டுப் பாடல்களையும், தத்துவப் பொருள்களை எடுத்தோதும் பாடல்களையும் ஓதப் பரிபாடல் உகந்தது. அவ்வகைப் பாடல்கள் வேத சூக்தங்களைப் போல இசைப்படுத்தப்பட்டன. சூத்திர முறையில் இயற்றப்பெறுவது நூற்பா. தேவார காலத்தில் (கி.பி.7-ஆம் நூற்றாண்டின் தொடக்கம்) மிகுதியாகப் பயிலப்பெறும் விருத்தப்பா வடமொழிச் செல்வாக்கால் ஏற்பட்டது. அப்போதிலிருந்து எதுகை, மோனை மிகுந்த ஆரவார இலக்கியம் தமிழில் மிகுவதாயிற்று.

இலக்கியத்தை அகம், புறம் என்று பிரித்தல் தமிழுக்கே உரிய மரபு. ஆதலால் திணைகளைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்று பாகுபடுத்திப் பிரித்த அகத்திணை இலக்கணமும், தமிழர்க்கே உரியதாகும். அவ்வாறே புறத்திணையுள் வெட்சி, வஞ்சி, தும்பை, வாகை, நொச்சி, உழிஞை, காஞ்சி மற்றும் பாடாண் என்று பிரித்ததும் அவ்வாறேயாகும்.

தொல்காப்பியரின் ஆசிரியரும் தமிழ் இலக்கணத்தின் மிக பண்டைய ஆசிரியரும் ஆகிய அகத்தியரால் இயற்றப் பட்டதாகக் கூறப்படும். அகத்தியம் இயல், இசை, நாடகம் என்னும் மூவகைத் தமிழைப் பற்றி கூறியுள்ளது. திருவள்ளுவரால் இயற்றப்பெற்ற குறள் தமிழிலுள்ள மிக முக்கியமான ஒரு நூல். அ∴து முப்பாலாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அறம், பொருள், இன்பம் என ஒவ்வொரு பாலும் பல இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

அறத்துப்பால், இல்லறத்தான் இயல்பையும் அவன் ஆற்ற வேண்டிய கடமைகளையும் கூறும். இல்லறவியல், துறவியின் கடமைகளைக் கூறும் துறவறவியல் என்று இரண்டு இயல்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவற்றிற்குப் பின் ஊழ் பற்றி ஓரதிகாரம் இணைக்கப்பட்டுள்ளது. பொருட்பால் அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்று பகுக்கப்பட்டுள்ளது. இவை முறையே அரசர்கள், அமைச்சர்கள், மற்றும் பிற ஆட்சி உறுப்புக்கள் என்பவற்றைப் பற்றி ஆய்கின்றன. மூன்றாவதான இன்பத்துப்பால் என்பதைக் காமத்துப்பால் என்றும் கூறலாம். அது களவியல், கற்பியல் என்று இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. நூல் முழுமைக்கும் முன்பு ஒரு பாயிரம் அமைந்துள்ளது. இயல்கள் பத்துபத்துப் பாடல்களால் இயன்ற அதிகாரங்களால் ஆனவை. குறள் முற்றிலும் 1330 பாக்களால் இயன்றது. அவை யாவும் குறள் வெண்பா அடிகளால் அமைந்தவை.

தமிழ்ச் சங்ககால வாழ்வியலைக் கற்பார்க்குக் குறள் முக்கியமானது. அவர் மநு, கவுடில்யர், வாத்ஸ்யாயனர் என்போரை அறிந்திருப்பாராயினும் அவர் தமது முடிபுகளைத் தாமே கண்டார். கீழ்க்கணக்கில் காணும் அறநூல்களில் ஆசாரக்கோவை வடமொழிக் கருத்துக்களைப் பெரிதும் கூறுகின்றது. நாலடியார் வெளிப்படையாகச் சைனக் கோட்பாடுகளை உரைக்கின்றது.

பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து, புறநானூறு என்னும் தொகை நூல்கள் அக்காலத்து அரசியல், சமுதாய மரபுகள் என்பவற்றைத் தெளிவாகவும் விரிவாகவும் கூறுதலால் அவை வரலாற்றாளர்க்குப் பயனுடையவை. நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படையும், திருமாலையும், முருகனையும் பாடும் பரிபாடலும், சிலப்பதிகாரத்தில் காணும் ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை, வேட்டுவவரி என்பவையுமே தமிழ்ச்சங்க இலக்கியத்தில் காணப்பெறும் வழிபாட்டு இலக்கியங்களாகும். தொகை நூல்களுக்கு முன் காணும் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் பாரதத்தைத் தமிழாக்கிய பெருந்தேவனார் என்பவரால் இயற்றப்பெற்றவை. அவர் ஒரு சங்கப்புலவர் ஆவார்.

தமிழக அரசர்கள் இலக்கியத்தைப் போற்றினர், வளர்த்தனர், இயற்றினர். ஆடவர், மகளிர், மன்னர்கள் (சேர, சோழ, பாண்டியர்கள்) துறவியர், இல்லறத்தார், வணிகர், போர்வீரர் எனச் சமுதாயத்தின் எந்நிலையிலும் புலவர்கள் இருந்தனர். தொகுத்த பேரறிவாளர் அவற்றைத் தரம் கண்டு பொறுக்கித் தொகுத்துள்ளனராதலாலும், அவர்கள் இரண்டாந்தரக் கவி ஒன்றையும் சேர்க்க உடன்படாதராதலாலும், கிடைக்கும் இலக்கியத்தின் தரம் மிக சிறந்ததாயுள்ளது.

காக்கைப்பாடினியார் இயற்றிய காக்கைப்பாடினீயம், தொல்காப்பியரும் பிற பதினொரு புலவர்களும் சேர்ந்து போரைப் பற்றிய 12 துறைகளை விளக்கிய பன்னிருபடலம், பொன்முடியார் அரிசில்கிழார் முதலியோர் அதியமான் அஞ்சியின் தலைநகரைப் பெருஞ்சேரல் இரும்பொறை படையெடுத்துத் தாக்கிய வரலாற்றைப் பாடிய தகடூர் யாத்திரை, பெருந்தேவனார் பாரதம் என்பவை இயற்றமிழில் சில. இவற்றில் அங்கும் இங்கும் சில பாடல்களைத் தவிரப் பிற அழிந்துபட்டன.

இசைத்தமிழைச் சேர்ந்த பரந்த இலக்கியத்தில் அடியார்க்கு நல்லார் பெருநாரை, பெருங்குருகு, நாரதர் இயற்றிய பஞ்சபாரதீயம், சிகண்டி ஆக்கிய இசை நுணுக்கம், இந்திர காளீயம், பஞ்சமரபு, பரதசேனாபதீயம் என்பவற்றை முக்கியமாகக் குறிக்கின்றார். அக்காலத்துப் புலவர்கள் தொல்காப்பியர், வள்ளுவர், இளங்கோ அடிகள், சீத்தலைச் சாத்தனார், நக்கீரனார், கபிலர், பரணர், ஔவையார், மாங்குடி மருதனார் போன்றவர்கள் ஆவார்கள்.

**நுண்கலைகள்**

நுண்கலையில் ஓவியம் பெரிதும் போற்றப்பெற்றது. வரைதற்கலை ஓவியக்கலை எனப்படும். வரையப்படுவது ஓவியம். வரைவோர் குழாம் ஓவியர், செல்வந்தர், கணிகையர் என்போர் மனைச்சுவர்களில் அவ்வவ்விடத்தைப் பொருத்தமாக ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன.

நாடக மன்றங்களில் ஏற்ற ஓவியங்களை ஏற்ற எழினிகள் அசைந்தன. அவற்றை ஓவிய எழினி என்றனர். (ஓவியம் வரையும் துணியையும் அவ்வாறு கூறினர் எனலுமாம்) இக்கலைப் பற்றி ஓவிய நூல் என்றொரு நூலிருந்தது. அதில் பண்டைய ஓவிய மரபுகள் கூறப்பட்டன. அன்றியும், அசையும் மற்றும் அசையாப் பொருள்களை வரையும் விதமும் கூறப்பட்டது. மனைகள், அரண்மனைகள் இவற்றின் மேல் பல பொருள்களும் காட்சிகளும் வரையப்பட்டன. தமது துதிக்கையில் ஆம்பல் மலரேந்திய களிறுகள் புடைசூழ வீற்றிருக்கும் ‘திரு’ பல

முறை ஓவியர் எழுதிய உரு. இயற்கைப் பொருள்களான மலர்கள், கொடிகள் என்பவற்றை வரைதலும் மரபு ஆகும்.

**சிற்பக்கலை**

சிற்பக்கலை ஓர் ஆக்கக்கலையாகும். அக்கலைஞர்கள் மண்ணீட்டாளர் எனப்பட்டனர். சுதையில் (சுண்ணத்தில்) உருவங்கள் ஆக்குவதில் அவர்கள் வல்லுநர். அதாவது தமிழரது சிற்பக்கலை எளிய பானை வனையும் தொழிலிலிருந்து உருவாயிற்று எனலாம். அக்கலைஞர்களைச் சிற்பாசாரிகள் என்று அழைப்பர். உண்மையில் ஓவியம் தீட்டிய தூண்களும் சுவர்களும் சிற்பக்கலைஞர் கையாண்ட சுதையும் எளிதில் அழியக் கூடியவையாய் இருந்தமையால் சங்ககால ஓவியங்கள் சிற்பங்கள் போன்றவைகளைப் பற்றிய சான்றுகள் இருந்தன.

நாட்டியம், நாடகம், இசை என்னும் ஒன்றிற்கொன்று தொடர்புடைய மூவகைக் கலைகள் மிகுந்த ராஜரீகமான ஆதரவு பெற்று உயரிய நிலையையடைந்தன. இசையின்றி நாடகமும் நாட்டியமும் நடைபெறாது. இசை, அவ்விரண்டு உடன்பிறந்த கலைகளின் உயிர்நாடி. ஆகையால் மாதவி நன்கு கற்றுக்கொண்ட கூத்தின் முறையோடு இசை மரபைப் பற்றிய விளக்கமும் அதில் காணப்பெறும். அவள் கூத்தைக் கண்டு வியந்த மன்னவன் 1008 கழஞ்சுப் பொன் பரிசை அவளுக்கு அளித்தான்.

ஆடவரும் மகளிரும் கூத்து ஆடுவதுண்டு. கரிகாலன் மகளான ஆதிமந்தியின் புகழ்பெற்ற கணவன் அத்தி என்பான் ஒரு கூத்தன். தமிழகத்தின் சிறப்புக் கூத்துக்களை நன்கு பயின்ற மதுரைப் புலவர் ஒருவர் பெயர் மதுரைத் தமிழ்க் கூத்தனார். கூத்து, நடனம், நடம் என்னும் வடமொழிப் பெயர் பெற்றது. நடிக்கப்பட்டது நாடகம். தமிழில் கூத்து என்பது இவ்விரண்டிற்கும் பொதுவாயிற்று. கூத்தன் அல்லது நடிகன். கூத்தி ஒரு நடிகை. சாதிக்கூத்து என்னும் ஒருவகைக் கூத்தில் சிறப்புப் பயிற்சி பெற்ற ஒருவகைக் கூத்தர்கள் கண்ணுளர் எனப்பட்டனர். கூத்தனை ஆட்டன் என்றும் கூறுவர்.

ஒரு உயரமான மூங்கில் மீது தராசு முனைபோல நின்று ஆடும் கழைக்கூத்து விழாக்காலங்களில் கிராமத்து மக்களுக்குப் பொழுது போக்காயிற்று. இதைக் காணப் பெருங்கூட்டம் கூடும். இருமூங்கில் உச்சிகளுக்கிடையே இறுக்கிக் கட்டப்பெற்ற கயிற்றின் மீது நின்றாடும் ஆரியக்கூத்தை ஆடினோர் ஆரியக் கூத்தர். அரங்கேற்று காதையில் விளக்கமுறும் அவிநயம் ஆதிய நடன முத்திரைகளை நோக்குங்கால் நடனக்கலை அக்காலத்தில் முற்றிய சிறப்பு பெற்று இருந்தது.

கூத்துப் பயிலுவோன் அக்கலையை ஐந்தாம் வயதில் தொடங்கிப் பேராசிரியரிடம் ஏழாண்டு கற்று, பன்னிரண்டாம் அகவையில் அரங்கேறினான்.

**அரங்கேற்றக் களம் அமைப்பு**

ஆடுகளம் அரங்கு எனப்பட்டது. மேடை 48' 42' அளவினதாய் நிலமட்டத்திலிருந்து 6' உயரத்தில் அமைந்தது. மேடை உட்கூரையிலிருந்து 24' கீழே அமைய வேண்டும். மேடைக்கு உட்புக ஒரு வழியும் அதனின்று வெளிச்செல்ல ஒரு வழியும் இருந்தன. மூவகை எழினிகள் இருந்தன. ஒன்று மேலிருந்து கீழ் வருவது மற்றொன்று இடமிருந்து வலமோ வலமிருந்து இடமோ நகரும் ஒற்றை எழினி.

மூன்றாவது இரு எழினிகள் இருபுறங்களிலிருந்து வந்து இடையில் கூடுவது. தற்கால அரங்குகளிலும் இம்மூவகை எழினிகளே பயிற்சியில் உள்ளன. நாடக சாலையில் நாடகம் பார்ப்போர் வீற்றிருக்கும் இடம் இருவகை உள்ளன. ஒன்று மன்னர்க்கும் ஏனைய செல்வர்க்கும் உண்டான இடம் மற்றொன்று பொது மக்கட்கு உண்டான இடம் ஆகும். எல்லாக் கூத்திலும்,

- கூத்தி
- ஆடலாசிரியன்
- இசை ஆசிரியன்
- கவிஞன்
- குழலோன்
- தண்ணுமை ஆசிரியன்
- யாழோன்

என்போர் கலந்து கொள்வார்கள். கூத்துக்காண மன்னர் வருவதாயின், அவர் வருமுன் ஆட்டம் தொடங்காது. பிறகு அரங்கேறவிருக்கும் கூத்தில் வலப்புற நுழைவாயின் வழியே தனது வலக்காலை முன்வைத்து அரங்கு ஏறுவாள். ஆட்டம் கடவுள் வாழ்த்தோடு தொடங்கும்.

**கூத்து**

கூத்துக்கள் பொதுவாக இருவகையாகப் பிரிக்கப்பட்டன.

- வேத்தியல், பொதுவியல்
- போற்றுபவை, தூற்றுபவை
- தமிழக் கூத்து, ஆரியக்கூத்து
- இயற்கையும் எளியவும்

என்று பிரிப்பதுமுண்டு. நாடகத்தினின்றும் கூத்து (நாட்டியம்) ஓரளவே வேறுபடுத்தப் பெற்றது. இசையும் அவிநயமும் இரண்டிற்க்கும் பொது. இவற்றில் நாட்டியமாவது 'பாடலின் கருத்தை இசையோடு கூடித் தாளத்திற்குட்பட்ட அவிநயத்தால் தோன்றுவது' என்றும், நாடகமாவது 'ஒரு கதையை அரங்கில் இசையோடு பொருந்தத் தோற்றுவது' என்னும் வேறுபாடு கண்டனர். முந்தியது அவிநயக் கூத்து, பிந்தியது நாடகம்.

குமரிக்கூத்து என்பது தழு அயர்தல் எனப்பட்டது. இப்பெயர் ஆட்டம் ஆடுவோர் ஒருவரையொருவர் தழுவியாடுவர். துணங்கை கூத்து என்பது பெரும்பாலும் மகளிர் ஆடும் கூத்து. ஆயினும் ஆடவரும் ஆடலாம். அரங்கில் தோற்றுதற்கு ஏற்றனவாகக் கருதப்பட்ட பதினொரு வகை ஆடல் கூறப்படுகின்றன.

- ❖ அல்லியம்
- ❖ குடம்
- ❖ மால்
- ❖ மரக்கால்

இவை திருமால் ஆடியவை

- ❖ கொடுகொட்டி
- ❖ பாண்டரங்கம்

இவை சிவனார் ஆடியவை

- ❖ குடை
- ❖ துடி

இவை முருகன் ஆடியவை

- ❖ பாவை-இவை திருமகள் ஆடியது
- ❖ கடையம்-இது இந்திராணி ஆடியது
- ❖ பேடு-இது காமன் ஆடியது

இப்பதினொரு வகை ஆடல்களை நான்கு பகுதிகளாகப் பிரிக்கலாம். திருமகளைத் திருமாலிலும், முருகனைச் சிவனிலும் காணலாம். அதாவது,

**சைவக்கதைகள்**

- ❖ சிவன் திரிபுரங்களை எரித்தல்
- ❖ திரிபுரதகனத்திற்குப் புறப்பட்ட சிவன் பிரமன் கொணர்ந்த தேரேறுதல்
- ❖ முருகன் அசுரர்களை வெல்லுதல்
- ❖ முருகன் பகையழித்தல்

❖ இறைவி (காளி) அசுரரை அழித்தல்

**திருமாலுக்குரியவை**

❖ கண்ணன் கஞ்சன் அனுப்பிய களிற்றினை ஒழித்தல்

❖ கண்ணன் வாணனொடு மற்போர் புரிந்து அவனைக் கோறல்

❖ கண்ணன் வாணனது கோட்டையை அழித்தல்

❖ திருமகள் அசுரரை ஏய்த்தல்.

❖ காமதேவன் தன்மகன் அநிருத்தனைக் காக்க விரும்பி வாணனது கோட்டையில் பேடு போல் வேடமணிந்து சேறல்.

❖ இந்திரன் மனைவியான அயிராணி வாணன் கோட்டையின் வடக்கு வாயிலில் தோன்றுதல்.

சைவ நடனமான கொடுகொட்டியைக் கொடுகொட்டு என்றும் கூறுவர். இது யாவற்றையும் சங்கரித்த பின் சிவபெருமான் ஆடிய கூத்து.

பண்டைத் தமிழ் இசை உயர் மக்களுடைய விருப்பக்கலை. அது பிரத்யேகமான இசை நுகர்வோர்கட்காகவே ஏற்பட்டது. வாய்ப்பாட்டும், கருவிப்பாட்டும் பெரிதும் அறிந்து பயிலப் பெற்றன. சங்கீதம் இசை எனப்பட்டது. ஸ்வரமும் இசையே, ஏழு ஸ்வரங்கள் கூறப்பட்டன. அவை குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பவை. அவை வடமொழியில் முறையே ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் எனப்பெறும்.

ஆயினும் இந்த ஸ்வரங்கள் (குரல் முதலியவை) ஸரிகமபதநி என்றே ஓரெழுத்துக் குறிப்புக்களாக எழுதிக் காட்டப்பெற்றன. ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் குறியீடுகளும் ஆளப்பட்டன. இந்த ஏழு ஸ்வரங்களுக்கு 22 சுருதிகள் அல்லது மாத்திரைகள் கூறப்பட்டன. குரல்-4, துத்தம்-4, கைக்கிளை-3, உழை-2, இளி-4, விளரி-3, தாரம்-2, மொத்தம்-22.

ஏழு ஸ்வரங்களை தாரம், மத்யமம், உச்சம் என்னும் 3 இடங்களில் இசைக்க எழும் ‘இருபத்தொரு நிலைகளே இத்துறைகள்’ என்று உரையாசிரியர் விளக்குவார். அன்றி 21 என்னும் எண் பேரியாழின் 21 நரம்புகளைக் குறிக்கும் என்றும் கூறுவர். கருவி (வாத்திய) இசை மிக உயரிய முற்றுச் சிறப்புப் பெற்றது. அவர்கள் பயின்ற இசைக் கருவிகளும் மிகப் பலவாம். இசைக்கருவி இயம் எனப்பெற்றது. யாழ் (வீணை இதனினும் சற்று வேறுபட்டது) ஒரு நரம்புக் கருவி.

கடை என்னும் வெண்மையான பிறை போன்ற சிறு கட்டையால் நரம்புகள் சுருதி கூட்டப்பட்டன. இதனை,

**“சீறியாழ் செவ்வழி பண்ணி நின்வன்புல”**[39]

என புறநானூறு பாடல் கூறுகிறது. சிறிய யாழில் செவ்வழிப் பண்ணை வாசித்து உன் மலைநாட்டை யாம் பாடும்போது நீ பரிசில் தர விரும்பினால் நான் கேட்பதைச் செய்க என பேகனிடம் யாழ் இசைத்தவர் கேட்பர். 21 நரம்பு கொண்ட பேரியாழ், 19 நரம்பு கொண்ட மகரயாழ், 14 நரம்பு கொண்ட சகோடயாழ், 7 நரம்பு கொண்ட செங்கோட்டுயாழ் என யாழ் நான்கு வகைத்தது. ஆதியாழ் என்பது 1000 நரம்புகளால் இசைக்கப்பட்டதென்பர்.

பாணரை யாழ்ப்பாணர் என்றனர். முழா, யாழ், பெருவங்கியம், சல்லி, சிறுபறை, பதலை என்னும் பாணர் பயின்ற சில இசைக்கருவிகளைப் பற்றி வன்பரணர் குறிக்கின்றார். இசையைப் பெரிதும் பயின்று பாடியவர்கள் கணிகையரே, சிலப்பதிகாரம் பாண்டி நாட்டிலிருந்த சில இசையைத் தொழிலாகக் கொண்ட இசை மறையவர்களைப் பற்றிக் குறிக்கின்றது.

ஓவியம், பொருநர், குரவை, துணங்கை, இசை, தலைக்கோல், யாழ், பண், கண்ணுள்வினை, கூத்து, முழவு, குழல், களம், திரை, எழினி, குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் போன்றவை சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்றன.

**சமயம்**

பொதுவாகப் பார்க்குமிடத்து, இந்தியாவில் சமயம் என்பது மக்களின் தீவிரமான செயற்பாடுகளில் ஒன்றாக இருந்துள்ளது. சமுதாயத்தில் சமயம் என்பது இரண்டு விதங்களில் முக்கியமாக விளங்கக்கூடும். ஒன்று மனிதனின் எண்ணங்கள், செயல்கள் யாவற்றையும் சமயமே ஈர்த்துக் கொண்டு பிறவற்றைப் பற்றி எண்ணவும் அவனுக்கு இயலாதவாறு அது செய்து விடலாம். அன்றி சமய வெறியை மக்களிடையே தூண்டிவிட்டு, அவர்களுக்குள் சமூகப் பூசல்களை விளைக்கக்கூடும்.

சங்கத் தமிழர் சமுதாயத்தில் சமயம் முக்கியமான இடம் பெற்றிருந்தது. சங்ககாலத்திற்க்கு அடுத்த காலத்தை நோக்க, சங்கத் தமிழர் சமயம் அதனினும் வேறுபட்ட சற்று அமைதியான பல்லோரையும் அரவணைத்த முறையில் அமைந்தது எனல் வேண்டும். அக்காலத்தில் சமயம் சடங்குகளோடும், இறப்பிற்குப் பிறகு மனிதன் கதியைப் பற்றிய எண்ணங்களோடும் தொடர்பு பட்டதாயிருந்தது.

சங்கத் தமிழரின் சமயம் ஒரே படித்தானதன்று. ஆயினும் சமயக்கருத்து என்பது ஒன்று மக்களில் பெரும்பாலோரை மதப்பழக்கங்களை ஓரளவேனும் மேற்கொள்ளச் செய்து ஒற்றுமைப்படுத்திற்று. இவற்றின் அடிப்படை பழைமையில் மறைந்து போயிற்றாயினும், அவை அக்காலத்தில் தமிழகத்துப் பண்டைய சுதேச வாழ்க்கை நெறியிலும், வேறிடங்களிலிருந்து வந்த புதுமைகளில் சிறந்தனவாக அவர்கள் கருதியவற்றைச் சேர்த்து உருவானவை என்பது தெளிவு பெறும்.

மனிதன் கட்புலனாகி இயற்கையின் பாற்பட்டவன். கடவுள் கட்புலனாகாது இயற்கைக்கும் புறம்பானது. இவ்விரண்டிற்கும் இடையே ஓர் உறவை உருவாக்கும் முயற்சியே சமயம் என்பது. சங்க காலத்து மக்கள் சடங்கு வாயிலாகவும், வழிபாடு வாயிலாகவும் நிகழும் சமய மரபுகளை அறிந்து கூறி வைத்தனர். உயிர்ப்பொருள்களை வணங்குவதும் உருவ வழிபாடு செய்வதும் அவர்கள் சமயச் சடங்குகளில் சில. அன்றிச் சடங்கோடு பொருந்தாத தியானத்தோடு ஒன்றிய அவர்கள் அறிந்து பயின்றனர்.

பிறப்பை விட இறப்பின் தன்மையை அவர்கள் மிகத் தெளிவாக உணர்ந்தனர். பிந்தியது அவர்களை அச்சுறுத்தித் துன்புறுத்தியமையால், அதைக் கண்டு கூசினர். ஆகவே அதன் உண்மைத் தன்மையைப் பற்றி அறிந்து கொள்ளவும் அந்நிலையைப் பற்றிய கருத்துக்களை ஆக்கவும் விரும்பி முயன்றனர். மறுபிறப்புக் கோட்பாடு, வீரக்கல் நடுதல், விளிந்தோரை வணங்கல் (சிராத்தம்), பத்தினிக் கடவுளைப் போற்றுதல் என்பவை யாவும் இறப்போடு தொடர்பு கொண்டவை. பிறப்பிற்கு முன்பிருந்த நிலையைவிட இறப்பிற்க்குப் பிறகு தோன்றும் நிலையைப் பற்றிய கவலை பெரிதாயிற்று. அவர்கள் ஒவ்வொரு பிறப்பிற்க்கும் முன்பு ஓர் இறப்பு இருந்தது என்று நம்பினர்.

ஆன்மவாதச் சமய வழிபாடு மறுபிறப்பு, வீடு, துறக்கம், நரகம் என்பவற்றை ஒன்றாகப் பிணைத்து ஒரு சமயக் கலாச்சார அடிப்படையை அமைத்து, தீ, வெள்ளம், காற்று, இடி என்னும் இயற்கையின் கடுந்தோற்றங்களைக் கடவுளாகக் கருதும் பிரபினை அதன் மீதேற்றினர். இவற்றின் சேர்க்கையால் தோன்றியவை அறிவிற்குப் புறம்பான பல நம்பிக்கைகள். பிற்காலத்தில் இதனையும் மாற்றி காணப்பெறும். மரங்களையும், கற்களையும், தண்ணீரையும், விலங்குகளையும், விண்மீன்களையும், கோள்களையும் வழிபடுதல் சமயத்தின் ஒருவகை ஆகும். இவையாவும் கடவுள் தன்மை வாய்ந்தவையாகக் கருதப்பட்டன. கருத்தளவில்

‘ஒரே கடவுள் கொள்கை’யும், நடைமுறையில் பல தெய்வ வழிபாடும் அவர்கள் வரலாறு முழுவதும் ஒருங்கே காணப்படுவனவாகும்.

**மூவகைச் சமய மரபுகள்**

சங்க காலத்தில் மூவகைச் சமய மரபுகள் விரவியிருந்தன.

- ❖ தமிழரது சுதேசிக் கடவுளரும், வழிபாட்டு முறையும்.
- ❖ வேற்றிடங்களிலிருந்து வந்த கடவுட் கொள்கைகள், வழிபாட்டு முறைகள்.
- ❖ வேற்றிடமிருந்து புகுந்த இந்து சமயத்திற்குப் புறம்பான சமயக் கருத்துக்கள் மரபுகள் என்பவை.

இவையெல்லாம் ஒருங்கே அச்சமுதாயத்தில் காணப்பட்டன. ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் மதத்தைப் போற்றினராயினும் அவற்றிடையே கடுமையான, வெளிப்படையான பூசல்கள் தோன்றவில்லை. எந்தவொரு சமயமும் பிற சமயங்களை நாட்டைவிட்டுத் துரத்த முற்படவில்லை. எந்தவொரு மன்னனும் ஏதேனும் ஒரு சமயத்தைப் பற்றோடு மேற்கொண்டு பிற மதங்களை ஒடுக்கவில்லை. சமயப்பொறை என்னும் எதிர்மறைப் பண்புகூட அக்காலத்தில் பேசப்படவில்லை. எல்லாச் சமயங்களையும் அவை விரும்பியவாறு திகழ இடமளித்தனர்.

**சமயத்தில் தோற்ற வழிபாடு**

அக்காலத் தமிழரும் சமயத்தில் வழிபாட்டை நம்பினர். (தோற்றம்: Totem) மரம், விலங்கு, ஊர்வன போன்ற பொருள்களிலும் கடவுள் ‘தோற்றம்’ உண்டு என்று நம்பி அவற்றை வழிபடுதல் ‘தோற்ற’ வழிபாடு எனப்படும். பாண்டியர் மீனும், சோழர் புலியும், சேரர் வில்லும், பலகுடிகளில் கடிமரங்களும் ‘தோற்ற’ங்களே ஆகும். இறந்தோர் வழிபாடும், ‘தோற்ற’ வழிபாடும் இணைந்தவை. இறந்த வீரரை வழிபடுதல் முன்னோரை வழிபடுதலின் ஒருவகையே. இவையெல்லாம் சங்ககாலத்திற்கு மிக முன்பே தோன்றியவை. சங்ககாலத்தில், ஆதிகால மக்களைத் தவிர மற்றவரிடத்துக் கடவுள் கோட்பாடும் வழிபாடும் உயரிய நிலையை அடைந்துவிட்டன.

> **“தூம்பு உடைத் திரள்தாள் துமித்த வினைஞர்**
> **பாம்பு உறை மருதின் ஓங்குசினை நீழல்”**[40]

கடுக்கும் வலி உண்டாகக் கொட்டும் குளவிக் கூட்டம் போல விளைந்த மற்றிய நெல்லின் பசுந்தாளை அறுத்த உழவர்கள் பாம்புகள் கிடக்கும் மருத மரத்தின் உயர்ந்த கிளைகளின் கீழ் நிழலில் அங்கே வாழ்கின்ற

தெய்வங்களுக்குப் படைப்பதற்காக நெற்களத்திலே போட்டுப் போராகக் குவிப்பார்கள்.

மரப்பொந்துகளில் கடவுள் உள்ளன என்ற உண்மை ஆதிமக்களால் நம்பப்பட்டது. இப்பொந்துகளில் உறையும் பாம்புகள் உள்ளன என்று கூறப்படுதலால் அவையும் வழிபடப்பெற்றன. சங்ககாலத் தமிழகத்தில் நாகர்களைப் பற்றி நாம் கேள்வியுறுகிறோமாதலாலும், நாகர்கள் நாகத்தை வழிபட்டனராதலாலும் இது உண்மையாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

நடப்பட்ட ஒரு மரக்கட்டை 'கந்து' எனப்பட்டு வழிபடப் பெற்றது. அக்கட்டையில் தெய்வம் இருப்பதாக நம்பப் பட்டமையின், அது கடவுளாகவே கருதப்பட்டது. அ்.து ஆலமரம் போன்ற பெரிய மரத்தடியில் இருத்தல் வேண்டும். ஆதலால் சிவபெருமானும் ஆலமரத்தடியில் அமர்ந்தார் என்பதை,

**"ஆல்கெழு கடவுள் புதல்வ மால்வரை"**[41]

என்று திருமுருகாற்றுப்படை பாடல் கூறியுள்ளது. அங்ஙனமே ஆலும், கடம்பும் நராவும் பிறபல கடவுள்ர்க்கு இடம் தந்தன என்பதை,

**"கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்**
**நெருநல் உண்டனம் என்னாது பின்னும்**
**செலவுஆ னாவே, கலிகொள் புள்ளினம்**
**அனையர் வாழியோ இரவலர் அவரைப்**
**புரவுஎதிர் கொள்ளும் பெரும்செய் ஆடவர்**
**உடைமை ஆகும் அவர் உடைமை**
**அவர் இன்மை ஆகும் அவர்இன் மையே"**[42]

என்ற புறப்பாடல் வழி அறிய முடிகிறது. தெய்வம் உறையும் ஆலமரத்துப் பழங்களை நாடிச் செல்லும் பறவைக் கூட்டம் நேற்றுச் சென்றோமே எனக் கருதாது. பழம் இருக்கும் வரை அங்கேயே செல்லும். அத்தன்மையரே இரவலரும் இரவலர்களுக்கு உதவும் பெருஞ்செல்வர்களின் செல்வத்தைத் தமதாகவே கருதுவர் இரவலர். செல்வர்கள் வறுமையுற்ற காலத்தும் இரவலர்கள் அவர்கள் கூடவே இருந்து வறுமையிலும் பங்கு கொள்வர்.

மரங்கள் 'தோற்ற'ங்கள் ஆதலின் சிற்சில மரங்கள் சிற்சில தேவர்கட்கும் கோயில்கட்கும் உரியனவாகக் கருதப்பட்டன. இவ்வாறே முருகற்குக் கடம்பும், திருமாற்குக் காயாம் பூவும், சிவனார்க்குக் கொன்றையும் வில்வமும் சிறப்பு மலர்களாயின. பிற்காலத்தில் கோயில்களில் தல விருச்சங்கள் (ஓரிடத்திற்குரிய

மரங்கள் என்பதே பொருள்) நடப்பட்டமை இப்பழக்கத்தின் அடிப்படையில் தோன்றியிருக்கக் கூடும் எனக் கூறப்படுகிறது.

**முருகன் வழிபாடு**

காட்சிக்குப் புலனாய் வாழ்க்கைக்குப் பயன்படும் ஞாயிறும் திங்களும் வழிபடப்பட்டன. அவையிரண்டிலும் திங்களே மிகுதியும் போற்றப் பெற்றது. சிலப்பதிகாரத்தில் 'திங்களைப் போற்றுதும்' என்று முதற்கண் கூறிப் பிறகே 'ஞாயிறு போற்றுதும்' என்றார். பெரும்பாலும் பிறைச் சந்திரனே வழிபடப் பெற்றது. முக்கண் செல்வரான சிவனாரும், முருகனும், திருமாலும், பலராமனான வாலியோனும், இந்திரனும் கரணமமைந்த வழிபாடு பெற்ற தெய்வங்களில் சிறந்தவர்கள். தமிழர்க்குச் சிறந்த கடவுள் முருகன். முருகன் கோயில்களைப் பற்றி திருமுருகாற்றுப்படை மிக விரிவாகக் கூறும்.

- திருப்பரங்குன்றம்
- திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)
- திருவாவினன்குடி (பழனி)
- திருவேரகம் (திருத்தனி)
- சுவாமிமலை
- பழமுதிர்ச்சோலை

இறுதியில் கண்டது அழகர்மலை எனப்படும்.

முருகன் வழிபாட்டிற்குப் புகழ்பெற்ற திருச்செங்கோட்டில் அர்த்தநாரீஸ்வரர் வழிபாடு நடைபெறுவது காணப்படுகிறது. முருகன் வழிபாடு ஆதிகால முறையிலும் சீரிய, பிராமணர்க்குரிய, முறையிலும் நடைபெற்றது. கடம்பனுக்கு நெல்லையும் பூவையும் பரப்பி, தினையும் தேனும் அளித்து வேலன் வழிபட்ட முறை பண்டையது. வேலன் முருகற்கு ஆட்டுக்கிடா பலியிட்டும் வழிபட்டனர்.

முருகன் உருவத்தை நிறுவுவதற்க்கு வேங்கையின் நிழல் உகந்ததாகக் கருதப்பட்டது. அவனது அடியார் தொண்டகம் கொட்டி, கொம்பு ஊதி, மணியடித்து, பூவைச் சுற்றிலும் தூவி வழிபட்டனர். அவ்விடத்தில் நறும்புகை சூழ்ந்து கமழ்ந்தது. இவ்வடியார்கள் காலில் (காப்புக்) கழல் அணிந்தனர். ஒவ்வோரமயங்களில் மகளிரும் வெறியாடினர். ஆறெழுத்துப்பட்ட மந்திரம் ஓதி முருகனை வழிபட்டனர்.

**நாற்பெருங்கடவுள்**

சிவன், வாலியோன், மாயோன், சேயோன் என்பவரே நாற்பெருங்கடவுளர். இவர்களில் சிவன் வெகுளிக்கும், வாலியோன் வன்மைக்கும், மாயோன் புகழிற்கும்,

சேயோன் வெற்றிச் சாதனைக்கும் சிறந்தவர். கொன்றை மலரும் இடபக் கொடியும் சிவனார்க்கும், கடம்ப மலரும் கோழி அல்லது மயில்கொடியும் முருகற்கும், கருடக்கொடி திருமாலுக்கும் உரியது ஆகும்.

இந்திரன், யமன், வருணன், சோமன் (குபேரன்) என்போர் நாற்றிசை காக்கும் தேவர்கள். கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்பன. அவற்றை,

**“நாற்பெரும் தெய்வத்து நல்நகர் நிலைஇய**

**உலகம் காக்கும் ஒன்றுபரி கொள்கை”**[42]

என்ற பாடல்வழி அறிய முடிகிறது. பிரம்மன், திருமால், சிவன், தேவேந்திரன் ஆகிய நான்கு பெரும் கடவுள்களுள் தேவலோகத்தில் இருந்து உலகம் காப்பதைக் கடமையாகக் கொண்டவர்கள். சிலப்பதிகாரத்தில் தெய்வங்கள் சாதி அடிப்படையிலும் குறிக்கப் பெறுகின்றனர். அந்தணர், அரசர், வைசியர், வேளாளர் என்பன. நான்முகக் கடவுளான பிரம்மன் முப்பத்து மூன்று வகைத் தேவர்கள், பதினொரு கணங்கள் என்போரும் திருமுருகாற்றுப்படையில் குறிக்கப்படுகின்றனர். உமை, திருமகள், கலைமகள், அயிராணி (இந்திரனின் மனைவி) என்போர் மக்கள் வணங்கிய பெண்பாற் கடவுள்கள் ஆவார்கள். ஒரே கடவுள்க்கு வடமொழியிலும் தமிழிலும் வெவ்வேறு பெயர்கள் காணப்பெறுகின்றன.

முருகன் - சுப்ரமணியன்

திருமால் - விஷ்ணு

சிவன் - ருத்ரன் என்பதாகும்.

**பத்தினி வழிபாடு**

பத்தினி வழிபாடு மிகப்பண்டைய மரபு. அது வீரர் வழிபாட்டின் ஒருவகை. செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் எடுப்பித்த பின் அம்மரபு தெற்கே இலங்கைக்கும், வடக்கே மாளவத்திற்கும் பரவிற்று. பத்தினித் தேவியின் உருவம் அண்மைக்காலம் வரை கோயில்களில் காணப்பட்டது.

இலங்கையில் பழஞ்சிற்பக் கலைக்கு உதாரணமாகக் கூறப்படுவது இத்தெய்வீகப் பெண்மணியின் உருவங்கள். துளு நாட்டில் கோசர் என்போர் மங்கல மடந்தைக்கோர் கோட்டம் எடுப்பித்தனர். மேலைக் கடற்கரையிலுள்ள அவ்வூர் பிற்காலத்தில் மங்களாபுரி அல்லது மங்களூர் என்றாயிற்று.

கோயில் என்பது கோட்டம் அல்லது புறை (தேவாலயம்) எனப்படும். கோன், இறைவன், கடவுள் என்பன ஒரு பொருள். கோயில்கட்டு அணிகலன்கள் முதலிய

வெகுமதிகளை ஈதல் மன்னர்க்குத் தக்கது என்று கருதப்பட்டது. கோயிலில் தெய்வத்திற்குப் படையல் இடும் இடம் பலிபீடம் எனப்பட்டது. கோயில் உச்சியில் கொடி பறந்தது. மனைகளில் இல்லுறை தெய்வங்களை வணங்குதலும் உண்டு. கோயிலில் தெய்வத்தை நிறுவுவதற்கு கடவுள் மங்கலம் என்று பெயர். கல்லில் கடவுள் உருவம் ஆக்குதல் கடவுள் எழுதல் எனப்பட்டது.

நகரங்களான மதுரையிலும் புகாரிலும் வஞ்சியிலும் பல விழாக்கள் கொண்டாடப் பெற்றன. இவற்றிற்கு விழவுமலி மூதூர் என்று பெயர். விழாத் தொடங்கும் சடங்கு கால்கோள் எனப்படும். கால் கொண்ட ஏழாம் நாளில் கடவுள் உருவம் நீர்ப்படுத்தப் (அபிஷேகம் செய்யப்) படும். இதனை,

**"கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி**

**ஆடு துவன்று விழவின் நாடு ஆர்த்தன்றே"**[43]

என்று மதுரைக்காஞ்சி பாடல் மூலம் அறிய முடிகிறது.

விழாக் காலங்களில் பொதுமக்கள் நாடகம், நாட்டியம், இசை, முதலியவற்றை கண்டும் கேட்டும் களித்தனர். மறவர் மற்போரிட்டனர். இவ்விழாக்கள் ஆண்டிற்கொருமுறை தான் வரும். அவ்விழா அடிக்கடி கொண்டாடப் பெற்றன. ஏறத்தாழ நாடோறும் கடவுள் படிமங்கள் குழல், யாழ், மத்தளம் ஒலிக்க நகர்வலம் வருதல் உண்டு. அவ்வுலா புகாரில் கடைத்தெருவழியே சென்றது. மகளிர் அவர்கள் வீட்டுச் சாளரங்களின் பின் ஒதுங்கி நின்று இந்நகர்வலங்களை இன்று போல அன்றும் தரிசித்தனர் என்பதை,

**"வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்**

**குழல் அகவ யாழ் முரல"**[44]

என்ற பட்டினப்பாலை பாடல் மூலம் காணலாம்.

**சிறு சோற்று விழா**

சமூக நிலையில் கொண்டாடப் பெற்ற எளிய பிற விழாக்களும் உண்டு. தூயநீர் நிலைகளில் ஆடுதல் நீர்விழா எனப்பட்டது. நல்ல நேரங்களில் கடை முகத்து (காவிரி கடலொடு கலக்குமிடத்தில்) நீராடுதல் இன்றும் பயிலப்படும். அந்திவிழா என்பது மாலைக் காலத்தில் நிகழ்வது. அப்போது கலன் அணிந்த மகளிர் இசைக்கருவிகள் இசைத்துவர பூசைக்குரிய மலர், அகில் முதலியவை கொண்டு கோயிற்குச் செல்லுதல் மரபு. இவ்விழா இந்து, பௌத்த சமய வழிபாட்டிடங்களில் நடைபெற்றது. பூசைக்காலத்தில் மணி அடித்தல்

அக்காலத்தும் நடைபெற்றது. சோற்றுருண்டைகளை நெய்யொடும், தயிரொடும் கலந்து விருந்தினர்க்குப் பகிர்ந்தளித்தல் சிறு சோற்று விழா எனப்பட்டது.

**தெய்வ வாக்கு**

தெய்வமேறிய பூசாரிகள் (ஆண், பெண்பாலோர்) கடவுள் தம் வாயிலாகப் பேசுவது போலப் பேசிப் பேய்க் கூத்தாடுவர். இச்சொற்களை அக்காலத் தமிழர் தெய்வ வாக்கென்று நம்பினர். ஆட்டுப்பாலொடு கலந்த மண்ணை நோயாளிகளின் நெற்றியில் வேலன் இட்டால் நோய் தீரும் என்றும் நம்பினர்.

வேலனுக்கும், கட்டுவிச்சிக்கும் எதிர்கால நிகழ்ச்சிகளை அறிந்து கூற முடியும் என்று மக்கள் நம்பினர். அவர்கள் சிறிது நெல்லை ஒரு மூங்கில் தட்டில் பரப்பி அதனை எண்ணிப் பார்த்துக் காணாத காரணங்களையும் கண்டு எதிர்காலத்தை எடுத்துரைத்தனர். இதற்குக் கட்டு என்பது பெயர். கழற்சிக் காயையும் நெல்லையும் எண்ணுதல் மரபு. சங்ககாலத் தமிழர் மகளிர்க்குச் சுகப்பிரசவம் வேண்டிக் கடவுளை வழிபட்டனர்.

**ஆன்மார்த்தக் கொள்கைகள்**

சங்கத் தமிழர் சில தத்துவ ஆன்மார்த்தக் கொள்கைகளை அறிந்திருந்தனர். உயிர் (ஆவி) உடலி (மெய்) னின்றும் வேறுபட்டது. இவ்விரண்டும் பிரிதலே சிறப்பு என்பவற்றை அவர்கள் அறிந்தனர். உயிரெழுத்து என்று நெடுங்கணக்கில் சிலவற்றைக் கூறிய எடுத்துக்காட்டு முற்றிலும் பொருந்துவதே. ஏனெனில் உடலின்றி உயிரியங்கும் ஆயினும் உயிரின்றி உடலியங்காது. யமனுக்குக் கூற்றம் என்று பெயர். உயிரை உடலினின்றும் கூறுபடுத்துபவர். அவர்கள் சில சீரிய அடிப்படைக் கோட்பாடுகளைக் கொண்டவர்கள். தன்மானம், தனி மனிதன் பெருமை என்பவை ஆண் மக்கட்கு உயிரினும் சிறந்தவை. மகளிர்க்குக் கற்பு உயிரினும் சிறந்தது. குடும்பம், குடி, இறை ஆகியவற்றிடம் விசுவாசம் வைத்தல் சமூக வாழ்க்கையின் சிறந்த பண்பு. இக்கொள்கைகளை மேற்கொண்டவர்கள் புகழ் பெறுவர். புகழ் உயிரினும் சிறந்தது. ஆயினும் யாவற்றிலும் மேலாக ஊழின் பெருவலியுணரப்பட்டது. ஊழை உட்பக்கம் காண இயலாது என்னும் கருத்தை உட்கொண்டு பிறந்தது சிலப்பதிகாரக் கதை. போர்க்களத்தில் வீரன் இறத்தல், கற்புடை மனைவி கணவனோடு மரித்தல் போன்ற நோன்புகள் துறக்கத்தில் செலுத்தும். துறக்கம் என்பது சுவர்க்கம். அது தமிழரால் புத்தேளிர் உலகம் எனப்பட்டது.

கணியன் பூங்குன்றன் என்னும் புலவர் இன்ப வாழ்க்கையை வெறுத்துப் பாடினார். அவர் உண்மையை உணர்ந்ததால்,

**"பெரியோரை வியத்தலும் இலமே**

**சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே"**[45]

யாம் செல்வத்தால் மிக்கோரை மதித்தலும் இல்லை. செல்வம் அற்ற வறியவரைப் பழித்தலும் இல்லை என்றும் கூறியுள்ளார். நரிவெரூஉத்தலையார் 'நன்மை செய்ய இயலாவிடினும் தீமை செய்யாமல் இருக்க வேண்டும்' என்பதை வற்புறுத்தினார். துறவும், வாழ்க்கை இன்பங்களின் நிலையாமையும் வற்புறுத்தப் பெற்றன. மனிதர் விருப்பங்களின் உள்ளீடின்மையும் கூறப்பட்டது.

## தொகுப்புரை

- சங்க காலத்தில் பெண்களுக்கு உயர்ந்த இடம் அளிக்கப்பட்டிருந்தது. வீரம், கல்வி, திட்டமிடுதல், சுற்றத்தாரைப் போற்றுதல், வறுமையிலும் செம்மையாக வாழ்தல், குடும்பத்தில் முக்கியத்துவம் அளித்தல் ஆகியவற்றில் வளர்ச்சி அடைந்து இருந்தனர். சங்க காலத்தில் வாழ்ந்த பெண்கள் மிகவும் சிறப்பாக வாழ்ந்து வந்தனர். மனைவி என்பவள் இல்லத்தில் பணிப்பெண்ணாக, மருத்துவராக, உளவியல் வல்லுநராக, நிதிப் பொறுப்பாளராக, இல்லத்தைப் பாதுகாப்பவராக, இன்பதுன்பத்தில் பங்கேற்கும் வாழ்க்கைத் துணையாக, மனைவியாக, தாயாக விளங்கி இல்லத்தின் வழியாக சமுதாயத்தைப் பேணி வந்த பாங்கு புலனாகின்றது.

- காதல், வீரம் இரண்டினையும் பாடு பொருளாக்கிய பெருமை சங்ககாலப் பெண்பாற் புலவர்க்குரியது. தொல்காப்பியம், திருக்குறள், சங்ககால நூல்கள் போன்றவற்றின் மூலம் மக்களின் வாழ்க்கை முறைகள், கல்வியின் நிலை, தலைவன், தலைவியின் இயற்கைப் புணர்ச்சி ஆகியவற்றை அறிய முடிகிறது. சங்ககால மக்கள் இறைவன் மீது அதிக நம்பிக்கை கொண்டவர்களாக திகழ்ந்து உள்ளனர்.

## இயல் நான்கு

## சான்றெண்விளக்கம்

1. பாலையன் அ.ப.-புறநானூறு-பா-183
2. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-கற்பியல்-நூ-4
3. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-கற்பியல்-நூ-1
4. புலியூர்க்கேசிகன்-ஐங்குறுநூறு-பா-371
5. புலியூர்க்கேசிகன்-ஐங்குறுநூறு-பா-379
6. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை-பா-167
7. பாலையன் அ.ப.-புறநானூறு-பா-71
8. பாலையன் அ.ப.-புறநானூறு-பா-73
9. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை-பா-135
10. மாணிக்கவாசகன் ஞா.-பட்டினப்பாலை-பா-22
11. பாலையன் அ.ப.-நற்றிணை-பா-110
12. பாலையன் அ.ப.-புறநானூறு-பா-159
13. மேலது பா-160
14. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-களவியல்-பா-2
15. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-மெய்ப்பாட்டியல்-பா-25
16. புலியூர்க்கேசிகன்-குறள்-1081
17. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-களவியல் பா-4
18. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-களவியல் பா-5
19. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-1091
20. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-களவியல் பா-6
21. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-களவியல் பா-8
22. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-களவியல் பா-9
23. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-2
24. பாலையன் அ.ப.-நற்றிணை பா-155
25. பாலையன் அ.ப.-நற்றிணை பா-39
26. பாலையன் அ.ப.-நற்றிணை பா-39
27. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-40
28. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம் களவியல்-பா-24

29. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-391
30. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-396
31. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-411
32. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-414
33. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-392
34. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-397
35. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-400
36. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-401
37. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-419
38. பாலையன் அ.ப.-புறநானூறு-பா-183
39. பாலையன் அ.ப.-புறநானூறு-பா-146,147
40. மாணிக்கவாசகன்.ஞா-பெரும்பாணாற்றுப்படை-பா-231,232
41. மாணிக்கவாசகன்.ஞா-திருமுருகாற்றுப்படை-பா-256
42. மாணிக்கவாசகன்.ஞா-திருமுருகாற்றுப்படை-பா-160,161
43. மாணிக்கவாசகன்.ஞா-மதுரைக்காஞ்சி-பா-427,428
44. மாணிக்கவாசகன்.ஞா-பட்டினப்பாலை-பா-155,156
45. பாலையன் அ.ப-புறநானூறு-பா-192

## இயல் ஐந்து

## சங்க இலக்கியங்களில் வரைவின் மகளிர் நிலை

- முன்னுரை
- சங்க இலக்கியம் சுட்டும் மகளிர்
- வீரமகளிர்
- மகளிரின் கல்வி
- மகளிரின் நாட்டுப்பற்று
- மகளிர் திட்டமிடுதல்
- குடும்ப அதிகாரத்தில் மகளிர்
- மகளிர் மதிப்பு
- கைம்மை மகளிர்
- மகளிரின் ஒப்பனை
- பதிற்றுப்பத்தில் விறலியர்
    - விறலியர்
    - விறலியரின் இளமை
- விறலியாற்றுப்படை
- விறலியரின் பணிகள்
- பரத்தையர் நிலை
- விறலியர் பரத்தையராகயிருத்தல்
- விறலியின் வருணனை
- விறலியர் பெற்ற பரிசுகள்
- வரைவின் மகளிர்
    - ஒத்த கிழத்தியர்
    - இழிந்தாராவார்
    - வரையப்பட்டார்
- பரத்தையரைக் குறிக்கும் வேறு பெயர்கள்
- காதலின் தன்மை
- பெண்ணின் பெருமைகள்

- மங்கல அணிகலன்கள்

- தாலி
- பொட்டு
- மிஞ்சி

❖ ஆண் குழந்தைக்கு வீரம், கல்வி, பெண் குழந்தைக்கு ஒப்பனை என முக்கியத்துவப்படுத்துதல்
❖ பெண் வயதிற்கு வரலும் ஆணின் ஆதிக்க மரபும்
❖ பெண் ஆணைச் சார்ந்து வாழ்தலும், ஆண் பெண்ணைக் கேலிச்செய்தலும்
❖ திருமணத்திற்குப் பின் பெண்ணின் வாழ்வியல் சிக்கல்கள்
❖ தமிழிலக்கியத்தில் பாலியல் வல்லுறவு
❖ விலை மகளிர்

- குடும்ப தாசி
- அழகு தாசிகள்
- கணிகை

❖ காதல் மணமே சிறந்தது
❖ திருக்குறளில் வரைவின் மகளிர்
❖ பெண்களுக்குரிய பழமொழிகள்
❖ தேவதாசிகள்
❖ பொட்டுக்கட்டுதல்
❖ தேவதாசி மரபின் முடிவு
❖ தேவதாசி கலைகள்
❖ விலை மாதர்கள் நிலை

- விலை மாதர்களின் தேவை

❖ பெண்களின் அவசரகால திருமணம்
❖ பெண்களின் சுதந்திரப் பார்வை
❖ பண்டைக்கால மகளிர் வாழ்க்கை
❖ அழகான பெண்கள் வரைவின் மகளிர்
❖ தொகுப்புரை

## இயல் ஐந்து

## சங்க இலக்கியங்களில் வரைவின் மகளிர் நிலை

**முன்னுரை**

சங்க காலத்தில் மகளிர்க்கு உயர்ந்த இடம் அளிக்கப்பட்டிருந்தது. வீரம், கல்வி, தூது, நாட்டுப்பற்று, திட்டமிடுதல், குடும்பத்தில் அதிகாரம் ஆகியவற்றில் பெண்கள் வளர்ச்சி அடைந்துள்ளனர். ஔவையார், பொன்முடியார், நச்செள்ளையார், ஒக்கூர் மாசாத்தியார் போன்ற வீரப் பெண்மணிகள் பாடிய மூதின் முல்லைப் பாடல்கள் கோழையையும் வீரம் செறிந்தவனாக மாற்றம் செய்யும் வல்லமையுடையன.

வேங்கை, வெட்சி, குவளை, மல்லிகை, ஆகிய மலர்களைப் பெண்கள் விரும்பிச் சூடினர். சந்தனம், குங்குமம் ஆகியவற்றை மகளிர் பூசிக் கொண்டனர். சங்ககால மக்கள் அழகுப்படுத்தல் எனும் ஒப்பனை செய்தலைத் தங்களின் வாழ்க்கையில் ஓர் அங்கமாகக் கொண்டு பண்பாடு, நாகரீகத்தின் வளர்ச்சிப் படி நிலையைக் காட்டுகிறது. அதில் மகளிர் தங்களை அழகு செய்து கொள்வதில் மிகுந்த ஈடுபாடு கொண்டு இருந்தனர். தலை முதல் பாதம் வரையிலான அனைத்து உடல் பாகங்களுக்கும் ஆடைகளில் தொடங்கி அணிகலன் வரையிலான பலவிதமான ஒப்பனையைக் கையாண்டு தம்மை மேலும் அழகுப்படுத்திக் கொண்டனர். அழகு என்றால் பெண்கள். பெண்கள் என்றால் அழகு என்ற வகையில் அழகுக்கு அழகு சேர்ப்பது அவர்களின் ஒப்பனையே ஆகும்.

விறலியரின் இளமைக் காலம், பரத்தையர் நிலை, வரைவின் மகளிர் செயல்பாடுகள், பெண்களுக்குரிய அணிகலன்கள், தேவதாசிகள், விலை மாதர்கள் நிலை, பெண்களின் சுதந்திரம் ஆகியவை பற்றி சங்க இலக்கியங்களில் வரைவின் மகளிர் நிலை என்னும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

**சங்க இலக்கியம் சுட்டும் மகளிர்**

தமிழகத்தைப் பொறுத்தவரையில் சங்க காலம் என்பது தமிழரின் நாகரிகத்தையும், பண்பாட்டையும் சமூக நிலைகளையும் பறைசாற்றும் வரலாற்றுப் பெட்டகமாகும். தமிழ்நாட்டு வரலாறு, சங்ககாலம் முதற்கொண்டுதான் தெளிவாக வருகிறது. இச்சங்க காலத்தில் மகளிர் நிலை எவ்வாறு இருந்திருக்கிறது என்பதனை,

**“வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்**
**மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர்”**[1]

என்னும் குறுந்தொகை அடிகள் காட்டுகின்றன. அதாவது, சமூக வாழ்விற்குத் துணை செய்யும் கடமைகள் ஆணுக்கு உயிர் போன்றது என்றும், அத்தகு ஆடவரை உயிராகக் கருதுதல் பெண்ணுக்குரிய கடமை என்றும்

உணர்த்துகின்றன. திரு.வி.க. பெண்மையைத் தாய்மை, இறைமை என்றே கண்டார். மகாகவி பாரதி பெண்மை வாழ்கவென்றே போற்றினார். ஆனால், ஒருபுறம் இன்று அப்பெண்மையின் நிலை இந்நாட்டில் அட்டையில் போடவும் சட்டையில் ஒட்டவும் கட்டாயம் தேவை. பெண்களின் படம் என்ற அவலநிலைக்கு மாறியிருக்கிறது. மறுபுறம் பெண்கள் வீரம் செறிந்தவராக, விமான ஓட்டிகளாக, கல்வியாளராக, மருத்துவராக, காவல் துறையினராக, நாட்டை ஆள்பவராகப் பன்முகத் தன்மையில் வளர்ச்சியடைந்துள்ளனர்.

**வீரமகளிர்**

பண்டைக் காலத்தில் பெண்கள் காதலையும் வீரத்தையும் தம் இருகண்களாக போற்றினர். வீரக் குடும்பத்தில் பிறந்த பெண்ணிடம் வேறுவொரு பெண் உன் மகன் எங்கே? என்று கேட்கிறாள். அவன் எங்குள்ளான் என்பதை அறியேன், புலி தங்கி சென்ற குகைபோல் அவனைப் பெற்ற வயிறு இதோ, அவன் போர்க்களத்தில் தோன்றுவான் எனப் பெருமிதத்தோடு கூறுகின்றாள். இதனை,

**“சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்**
**யாண்டுள னோவென வினவுதி என்மகன்**
**யாண்டுள ன்ஆயினும் அறியேன் ஓரும்**
**புலிசேர்ந்து போகிய கல்அளை போல**
**ஈன்ற வயிறோ இதுவே**
**தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே”**[2]

என்ற புறநானூறு பாடல் மூலம் காணலாம். போர்க்களத்தில் போர் தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. எங்கிருந்தோ ஒருவன் ஓடி வருகின்றான். ‘உன் மகன் புறப்புண்பட்டு இறந்தான்’ என்ற செய்தியைக் கூறுகின்றான். அவ்வீரத்தாய் மகனின் இறப்பிற்குக் கலங்கவில்லை மாறாக, புறப்புண்ணுக்கு நாணுகிறாள். என் மகன் புறப்புண்பட்டு இறந்திருந்தால் அவனுக்கு உயிர் அமுதமாகப் பாலூட்டிய எனது மார்பகங்களையே வெட்டி எறிவேன் என்கிறாள். மேலும்,

**“நரம்புஎழுந்து உலறிய நிரம்பா மென்தோள்**
**முளரி மருங்கின் முதியோள் சிறுவன்**
**படைஅழிந்து மாறினன் என்றுபலர் கூற**
**மண்டுஅமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்**
**முலை அறுத்திடுவென் யான் எனச் சினைஇக்**
**கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்**

**செங்களம் துழவுவோள் சிதைந்துவே றாகிய**

**படுமகன் கிடக்கை காணூஉ**

**ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே”[3]**

என்ற புறநானூறு பாடல் மூலம் அறிய முடிகிறது.

**மகளிரின் கல்வி**

சங்ககாலத்தில் பெண் கல்வி உயர்ந்து இருந்தது. பெண்கள் கல்வியில் உயர்ந்திருந்தனர் என்பது ஔவையார், காக்கைபாடினியார், வெள்ளிவீதியார் போன்ற பெண்பாற் புலவர்களின் பாடல்களால் புலனாகிறது. அதியமான் என்ற அரசன் தான் அரிதிற் பெற்ற நெடுநாள் வாழவைக்கும் நெல்லிக்கனியை ஔவையாருக்கு வழங்கியதிலிருந்து பெண்பாற் புலவரை அக்கால அரசர்கள் போற்றிய திறத்தைப் பின்வரும் பாடலால் உணரலாம்.

**“சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது**

**ஆதல் நின்னகத்து அடக்கிச்**

**காதல் நீங்க எமக்கு ஈத்தனையே”[4]**

**மகளிரின் நாட்டுப்பற்று**

போர்க்களத்தில் போர் முரசு கொட்டிக் கொண்டே இருக்கிறது. வீட்டுக்கொரு ஆண்மகன் வேலெடுத்து போர்க்களம் நோக்கிச் சென்ற வண்ணம் இருக்கின்றனர். ஒரு தனி இல்லம்-வீரமங்கை ஒருத்தி இருக்கின்றாள். முதல் நாள் போருக்குத் தந்தையை அனுப்பினாள். இரண்டாம் நாள் போருக்குச் சகோதரனை அனுப்பினாள். மூன்றாம் நாள் போருக்குக் கணவனை அனுப்பினாள். மூவரும் ஒருவர் பின் ஒருவராகப் போர்க்களத்திலேயே வீர சொர்க்கம் அடைந்தனர். மறுபடியும் போர் முரசு ஒலிக்கின்றது திகைக்கின்றாள். அவரது நாட்டுப்பற்று பின்னின்று தள்ள வெற்றுடலோடு தெருவில் விளையாடிக் கொண்டிருக்கும் ஒரே மகனை அழைத்து முதலில் வேலினைத் தருகின்றாள். பின்னர்தான் உணருகிறாள் புதல்வன் ஆடை கட்டவில்லையென்று பிறகு வெள்ளாடையை இடுப்பில் கட்டி, பறந்துகிடக்கும் குடுமிக்கு எண்ணெய் தடவி, முடிந்து, போர்க்களம் நோக்கி ஓடு என்று ஆணையிடுகின்றாள். இதனை,

**“கெடுக சிந்தை கடிதுஇவள் துணிவே**

**...........................................................................**

**செருமுக நோக்கிச் செல்க என விடுமே”[5]**

என்ற பாடலின்வழி அறியலாம்.

**மகளிர் திட்டமிடுதல்**

பெண்கள் குடும்பத்தின் வளர்ச்சியில் திட்டமிட்டுச் செயல்பட்டதைக் காண முடிகின்றது. சங்ககாலம் பெண்பாற் புலவர்களில் ஒருவரான பொன்முடியார் மிக ஆணித்தரமாக ஒரு மனிதன் வாழ்வுபெற சமுதாயத்தில் ஒவ்வொருவரும் திட்டமிட்டுச் செயல்பட வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார்.

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
**நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
**களிறுஎறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"**[6]

இப்பாடலில் சமூகத்தில் தாய், தந்தை, கொல்லர், வேந்தர், இளைஞர் ஆகியோரின் கடமைகளைப் பற்றிக் குறிப்பிடப்படுகின்றது.

**குடும்ப அதிகாரத்தில் மகளிர்**

தலைவன் செய்வன எல்லாம் சரியானவை என்று அப்படியே ஏற்றுக்கொள்ளும் வழக்கம் சங்க காலத்தில் இல்லை. தலைவன் பரத்தையிடம் சென்று வந்தால் அக்காலச் சமுதாயத்தில் அது வழக்கமான ஒன்று என்று தலைவி கருதியது இல்லை. எனவே, தலைவியானவள் மீண்டு வந்த தலைவனைப் பார்த்து யார் நீ? என்று முன்பின் அறியாதவள் போல் வினா எழுப்புவாள். பின் 'உன் செயலைக் கண்டு நான் பொறுத்துக் கொள்ளேன்' என்பாள். அக்கால மகளிர் தன் கணவனே தவறு செய்தாலும் கேள்வி கேட்கும் அதிகாரம் பெற்றிருந்தாள்.

'எமக்கு நீ என்ன உறவு உடையவன்? நீயோ பெரியவன். துயரால் ஆற்றாது துடிக்கும் நான் என்ன உன் அடியாளோ? என்னைவிட்டு விலகிப் போவாய் என்பாள்.

**"யாரை நீ எம் இல் புகுதர்வாய்**
**எம் வீட்டினுள்ளே நுழைபவனே நீயார்?"**[7]

இங்குத் தலைவி எழுப்பிய கேள்விகளால் சங்ககாலத்தில் பெண்களுக்கு உரிமை வழங்கப்பட்டதை நன்கு அறியலாம். வீட்டைப் பொறுத்தவரையில் அது தலைவியினுடையதேயாகும். தலைவன் 'என் வீடு' என்று குறிப்பிடுவதில்லை. தலைவி உரிமையுடன் 'எம்மனை', 'எம் இல்' என்று குறிப்பிடும் வழக்கமுண்டு.

**மகளிர் மதிப்பு**

இன்றைய விஞ்ஞான யுகத்தில் குழந்தை பிறந்தவுடன் முதல் கேள்வி குழந்தை ஆணா, பெண்ணா? என்பது தான். ஆண் குழந்தை பிறந்தால் மகிழ்வர். ஆனால், இதே நிலைதான் சங்க காலத்திலும் இருந்துள்ளது. ஆண் குழந்தை பிறந்தால்தான் மதிப்பாகக் கருதினர். இக்குழந்தையைப் பெற்ற பெண்ணே சிறப்புப் பெற்றாள் என்பதனை,

**"பாஅல் இன்மையிற் பல்பாடு அவைத்து**

**முலைக்கோள் மறந்து புதல்வனோடு"[8]**

என்ற பாடலின் வழி அறிய முடிகின்றது. இதற்குக் காரணம் இறந்தவர்களுக்கு மறுமைக்கடன் செய்யும் உரிமை புதல்வனுக்கு இருந்தது. அதனால் புதல்வியை வெறுக்கும் அவலம் காணப்பட்டது.

**கைம்மை மகளிர்**

கற்புக்கு அணிகலனாக விளங்கிய மங்கையர் தம் தலைவன் இறந்துவிட்டால் அவரோடு உயிர் துறப்பது வழக்கமாகயிருந்தது. கணவன் இறந்ததும் சில பெண்கள் தீப்பாய்ந்து உயிர் துறந்தனர். இதற்குச் சேரலாதன் மனைவி நற்சோனையை உதாரணமாகக் கூறலாம். சில பெண்கள் கைம்மை நோன்பினைக் கடைப்பிடித்து உடலை வருத்தி உயிர் வாழ்ந்தனர். கைம்மை மகளிர் வெந்த வேளைக்கீரையும், அல்லியரிசியையும் உண்டனர். இவர்களது கூந்தலை மழிப்பதும், வளையல்களைக் கழற்றுவதும் சமூக வழக்கங்களாக இருந்தன. தன்னுடைய காதற் கணவனுடன் ஒருத்தி சுரத்திடைச் சென்றாள். அங்கு நடந்த போரில் அவளுடைய கணவன் உயிர்விட்டான். கொழுகொம்பிழந்த கொடிபோல் தனிமையுற்று வருந்தும் அவள் கலம் வனையும் குயவனைக் கண்டாள். அக்குயவனிடம் நானும் எம் தலைவனோடு இறக்க விரும்புகின்றேன். ஆதலால் எமக்கும் அவருடன் இருக்க இடம் அமையுமாறு பெரியதொரு தாழி புனைய வேண்டும் என்கிறாள். இதனை,

**"வியன்மலர் அகன்பொழில் ஈமத்தாழி**

**அகலிது ஆக வனைமோ**

**நனந்தலை மூதூர்க் கலம்செய் கோவே"[9]**

என்று சுட்டுகிறது. இல்வாழ்வில் ஒன்றிய ஆடவன் மறைந்தால் பெண்டிர் தன் திருமண அடையாளச் சின்னமாக இருந்த இழைகளைக் களைகின்றனர். அத்துடன் தன் கூந்தல் களைந்து சுவையற்ற எளிய உணவை நேரம் தவறி உண்டும்,

பரல்கள் பொதிந்த இடத்தில் பாயின்றித் தூங்கியும் வாழ்கின்ற துன்பநிலையை அறியும்போது மனிதநேயம் உடைய யாரையும் வருந்த செய்கின்றன.

**மகளிரின் ஒப்பனை**

இளம் மகளிர் கூந்தலுக்கு நெய்தடவி அதை ஐந்து பிரிவாக வகுத்துப் பின்னினர். முதுமகளிர் கூந்தலை வாரிமுடித்துக் கட்டினர். மகளிர் நீராடிய பின் கூந்தலுக்கு அகிற்புகையிடுவது வழக்கத்தில் இருந்தது. கண்களுக்கு மைதீட்டுவதும் காணப்பட்டது.

**பதிற்றுப்பத்தில் விறலியர்**

ஒளி-இருள், பகல்-இரவு, மலை-மடு, பள்ளம்-மேடு, நீர்-நெருப்பு, ஆக்கம்-அழிவு, தோற்றம்-மறைவு என்பன போன்ற இருமைகள் உலகை இயக்குகின்றன. உலகின் உயிரோட்டம் உயிரினங்களின் ஆண்-பெண் என்னும் இருமையால் இயல்கின்றது.

ஒரு முழுமையின் சமக்கூறாக இவ்விருமைகள் அமைகின்றனவேயன்றித் தம்முள் உயர்வு தாழ்வு கற்பிப்பனவல்ல என்பது இயற்கை நியதி. ஆனால், இன்றைய உலகு ஆணாதிக்கச் சமுதாயமாக, ஆண் பெண்ணைவிட மேலானவன் என்ற கருத்தில் செயல்படுவதாகப் பெண்ணியவாதிகள் குறிப்பிடுகின்றனர். இத்தகைய சிந்தனை தனித்த ஆய்வுக்குரியது. இங்குக் கி.மு.ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பிலிருந்து சங்ககால மகளிர் நிலைப் பற்றி ஆய்வு செய்து பல்வேறு தகவல்களை ஆராய்ச்சியாளர்கள் கொடுத்து உள்ளனர்.

இயற்றமிழின் பொற்காலம் சங்ககாலம் என அனைவரும் கூறுவர். ஆயினும், இசைத்தமிழுக்கும், நாடகத் தமிழுக்கும் கூடப் பொற்காலம் அதுவேயாகும். தொல்குடியைச் சார்ந்த பெண் கலைஞரான விறலியர் கலை, மருத்துவம், அரசியல், சமூகத்தொண்டு எனப் பன்முகத் திறன் பெற்றிருக்கின்றனர். அதனால்தான் தொல்காப்பியர் புறத்திணையில் ஆற்றுப்படையின் இலக்கணத்தைக் கூறும்போது ஆற்றுப்படுத்துவர்களில் ஒருவராகவும், அகத்திணையில் தலைவன் தலைவி இருவருக்கும் இடையே ஏற்படும் ஊடலைத் தீர்க்கும் வாயில்களாகவும் குறிப்பிடுகிறார். எனவே, இத்தகைய சிறப்புகளைப் பெற்ற விறலியர்களின் வாழ்க்கையைப் பதிற்றுப்பத்தில் மானுடவியல் நோக்கில் ஆராயப்பட்டுள்ளது.

**விறலியர்**

விறல் என்றால் வெற்றி, பெருமை, சிறப்பு, வலிமை, வீரம், உடல் வேறுபாடு என்று மெய்யப்பன் தமிழ் அகராதி பொருள் தருகின்றது. விறலில் சிறப்பாக

உள்ளக் குறிப்பை வெளிப்படுத்தும் பாங்கு பெரும்பாலும் மகளிர்க்கே உரியது. ஆகவே, **“விறல்பட ஆட வல்ல மகளிருக்கு விறலி எனப் பெயர் ஏற்பட்டிருக்கலாம். விறலி என்பவள் உள்ளக் குறிப்புப் புறத்து வெளிப்பட ஆடுபவள்”**[10] என்கிறது தமிழ் லெக்ஸிகன். விறலி என்பவள் பாணர்குலப் பெண், பதினாறு அகவைப் பெண் என்று செந்தமிழ் அகராதியும் குறிப்பிடுகின்றது. **“எண் வகைச்சுவையும் மனத்தின் கண்பட்ட குறிப்புகளும், புறத்துப் போந்து புலப்பட ஆடுதல் விறலாதலின் அதனையாடுபவள் இவள் விறலி எனப்பட்டாள்”**[11] என்கிறது அபிதான சிந்தாமணி.

விறலியர் என்பார் பெண்பால் கூத்தரும், பாடகரும் ஆவர். இச்சொல் கூத்தர், பொருநர் என்பனவற்றின் பெண்பாற் சொல்லாகவே எப்போதும் விளக்கப்பட்டுள்ளது. இவர்கள் கூத்தர்கள், புலவர்களின் மனைவியர் என்பதில் ஐயமில்லை. தலைவனது புதுப்புதுப் பரத்தை உறவிற்குத் துணையாக ஒரு விறலி இருந்தாள். விறலியர் தலைவன், தலைவியிடம் மட்டுமின்றி பரத்தையரிடமும் நட்பு கொண்டிருந்தனர் என்பது இதனால் புலனாகின்றது. பதிற்றுப்பத்தில் விறலி அகம், புறம் என்னும் இருநிலைகளிலும் பேசப்படுகிறாள்.

**விறலியரின் இளமை**

பொதுவெளி ஆண் சமூகத்தில் நிகழ்த்தப்படும் கலைகள் பெரும்பாலும் இளமையும் அழகுமுடைய பெண் கலைஞர்களையே விரும்புவது இயல்பு. ஆகவே, ஆடல், பாடல், இசைத்தல், உரைநிகழ்த்துதல் ஆகிய தொழில்களில் சிறப்புப் பெற்ற விறலியர் இளமை உடையவர்களாகவே இருந்து உள்ளனர். ‘சில்வளை விறலியர்’ என்றும் ‘நல்நுதல் விறலியர்’ என்றும் கலைத் தொழிலில் ஈடுபடும் விறலியர்களின் இளமையை அடையாளப்படுத்தும் விதமாக அமைகின்றது. ‘சில்வளை விறலி’ என்பதற்க்கு உரையெழுதும் பொழுது பெயர் தெரியாத பழைய உரையாசிரியர் இது அவளது இளம் வயதைக் குறிக்கிறது என்கிறார். சில வளையல் அணிவது பெதும்பைப் பருவம். அதாவது 9 வயதிலிருந்து 10 வயது வரை.

சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய சிலப்பதிகாரத்தில் மாதவி அழகும் இளமையும் உடைய கணிகையர் குலப்பெண். வேந்தனுக்குக் கோவலன் 1008

பொன் கழஞ்சு கொடுத்துவிட்டு திருமணம் செய்து கொள்ளாமலே இன்பம் துய்த்து ஒரு மகவையும் பெற்றெடுக்கிறான். எனவே, சங்க மருவிய காலத்திற்கு முன் விறலியை உடமைப் பொருளாக்கிக் கொள்ள 'வளையல்' என்பது அவளது இசைவினைக் கேட்கும் குறிப்புப் பொருளாக இருக்கலாம்.

- ❖ செந்தமிழ் அகராதியும் ஒருபடி மேலே சென்று 'விறலி' என்பவள் 'பதினாறு வயதுடையவள்' என்கிறது. எனவே, இங்கு விறலி என்பவள் இளம் வயதுடைய பெண் என்பது உறுதியாகின்றது.
- ❖ 'நல்நுதல் விறலியர்' என்னும் தொடருக்குப் பெரும்பாலும் உரையாசிரியர்கள் 'ஒளிபொருந்திய நெற்றியை உடையவள்' எனப் பொருள் தருகின்றனர். விறலியின் நெற்றி செயற்கையில் ஒளியுண்டாகாமல் இயற்கையில் ஒளியுண்டாகியிருப்பதற்குக் காரணம் அவளது இளமையே. இளமையுடைய பெண்களுக்கே தோலில் சுருக்கமில்லாமல் நெற்றி பளபளப்பாக இருக்கும். எனவே 'நல்நுதல் விறலியர்' என்பது ஒன்பது வயதிலிருந்து பதினாறு வயதுடைய பெண்ணைக் குறிக்கும் அடையாளமாகும்.

**விறலியாற்றுப்படை**

விறலி ஒருத்தி, மற்றொரு விறலியிடம் தான் வேந்தனிடம் பெற்ற பரிசால் தன் வறுமையைப் போக்கிய நிலையைக் குறிப்பிட்டு, அவளையும் அவ்வேந்தனிடம் ஆற்றுப்படுத்தும் நிகழ்வு விறலியாற்றுப் படையாகும். இவற்றின் மூலம் விறலி கலைக்குழுவில் பெற்றிருந்த தனித்தன்மைகளையும் அவளது தலைமைப் பண்புகளையும் வெளிப்படுத்தும் விதமாக அமைகின்றன. தொல்காப்பியர் புறத்திணையில் ஆற்றுப்படையின் இலக்கணத்தைக் கூறி, கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகியோர்கள் ஆற்றுப்படுத்துபவர்களாகக் குறிப்பிடுகின்றார். ஆகவே, இவர்களுடைய வாழ்வியல் சார்ந்த கருத்துகள் சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையில் விரவிக் காணப்படுகின்றது.

இக்கருத்துக்களையெல்லாம் தொகுத்து பிற்காலத்தில் தொகை நூலாகப் 'பத்துப்பாட்டு' என்னும் பெயரில் சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படையென முழுமையாகப் பேசினர். ஆனால், பத்துப்பாட்டில் விறலியின் வாழ்க்கை குறித்த தனியான ஆற்றுப்படை நூல் இடம்பெறவில்லை.

தாய்வழிச் சமூகம் மறைந்து தந்தை வழிச் சமூகம் தோற்றம் பெற்ற சூழலில் பெண்ணைத் தன் கட்டுக்குள் வைப்பதற்காகக் குடும்பத்தில் பெண்கள் இரண்டாந்தரக் குடியுரிமை, கணவன் இறந்த பிறகு பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகள், பெண்கள் தம் விருப்பத்திற்கேற்ப எங்கும் சுதந்திரமாகச் செல்ல முடியாதநிலை, தகுந்த ஆடவருடைய பாதுகாப்பிலே செல்ல வேண்டிய அவலம் முதலிய காரணங்களால் பெண்களை அடிமைப்படுத்தினர். அதனால் விறலியருக்கு அவர்களின் வாழ்க்கை குறித்த நூல் தனியாகத் தொகுக்கப்படவில்லை. ஆனால், எட்டுத் தொகையிலுள்ள புறப்பாடல்களான புறநானூற்றிலும் (64,103,105,133), பதிற்றுப்பத்திலும் (40,49,57,60,78,87) பத்துப் பாடல்கள் விறலியாற்றுப்படைத் துறையில் இடம்பெற்றுள்ளன.

விறலியை முதன்மைப்படுத்திப் பாடப்படும் இந்தப் பாடல்களிலும் கூட விறலி தனியே ஆற்றுப்படுத்தப்படுவதும், விறலியை உடன் அழைத்துச் செல்வதும் என்னும் இருவேறுபட்ட நிலைகளில் அமைந்துள்ளது.

**விறலியரின் பணிகள்**

பதிற்றுப்பத்தில் விறலியரின் பணிகளைக் கலைப்பணி, சமூகப்பணி என இரண்டு வகையாகப் பாகுப்படுத்தலாம். கலைப்பணியில் ஆடல், பாடல், இசைத்தல், உரைநிகழ்த்துதல் ஆகியனவும், சமூகப்பணியாகப் போர்க்களத்தில் வீரர்களுக்கு எழுச்சியூட்டுதல், வேந்தன் வழங்கும் விருந்திற்கு உணவு சமைத்தல், போரில் காயமுற்ற வீரர்களுக்கு மருத்துவ உதவி செய்தல், போர்க்களத்தில் இறந்து அல்லது சிதறுண்டு கிடக்கும் வீரர்களின் உறுப்புகளை அப்புறப்படுத்துதல் ஆகியனவும் அமைகின்றன. விறலி ஒருத்தி ஆடல் நிகழ்த்திய அரங்கினையும் அவளின் ஆடலின் முறைமையினையும் பின்வரும் பாடல் உணர்த்துகின்றது.

> **“வண்டு இறைகொண்ட தண் கடற்பரப்பின்**
> **அடும்ப அமல் அடைகரை அலவன் ஆடிய**
> **..................................................................**
> **பாடல் சான்று நீடினை உறைதலின்**
> **வெள்வேல் அண்ணல் மெல்லியன் போன்ம்”**[12]

இப்பாடல் மனைமரக் கொண்டைகளில் நெய்தல் மற்றும் நரவம் பூக்கள் கொடியெனப் படர்ந்து அவற்றின் மலர் மணம் வீசுகின்றன. பனைமரங்களின் அருகருகே வேந்தர்கள் புடைசூழ அமர்ந்து பார்வையாளர்களாகப் பார்க்கின்றனர். வட்டக்களறியில் ஆடுமகளான விறலி ஆடவும் பாடவும் செய்கிறாள். அதற்கேற்ப

இசைக் கருவிகளின் வாசிப்பு நிகழ்கிறது. முதலில் விறலி சுற்றிலும் அமர்ந்துள்ள வேந்தர்கள் உள்ளிட்ட பார்வையாளர்கள் அனைவரையும் வணங்கிக் கொள்கிறாள். பாடிக்கொண்டே ஆடுகிறாள். இவளுடைய ஆடல் பாம்பு அசைந்தாடுவதைப்போல காணப்படுகின்றது.

கிழக்கும் மேற்கும் இடையிலும் என ஆடுகளத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கைகளைக் குவித்து வணங்கியவாறு கண்களை இடப்புறமும் வலப்புறமும் அசைத்தவாறு கால் மணி குலுங்க ஆடுகிறாள். மலர்ந்த நெய்தல் மலர் போன்ற கண்களால் வேந்தனையும் பிறரையும் கண்டவாறு புன்முறுவலுடன் அமர்ந்தும் குதித்தும் ஆடுகிறாள். நின்றாடல், அமர்ந்தாடல், குதித்தாடல், சுழன்றாடல், வீழ்ந்தாடல், உருண்டாடல் போன்ற ஆடல் முறைகளையெல்லாம் அவள் ஆடுவது பாம்பு நடனத்துடன் ஒப்புமையாகின்றது.

வேந்தன், தான் போரில் பெற்ற வெற்றியைக் கொண்டாடுகிறான். இக்கொண்டாட்டத்தில் குறுநில மன்னர்களுக்கும், படைவீரர்களுக்கும் விருந்து கொடுப்பது வழக்கம். இவ்விருந்திற்குத் தேவையான உணவினை ‘கூந்தல் விறலியர்’ சமைத்திருக்கின்றனர். இதனை,

**“உண்மின் கள்ளே அடுமின் சோறே**
**எறிக திற்றி ஏற்றுமின் புழுக்க**
**........................................................**
**கூந்தல் விறலியர் வழங்குக அடுப்பே**
**பெற்றது உதவுமின் தப்பு இன்று பின்னும்”**[13]

இப்பாடல், கூந்தல் விறலியர் சைவம், அசைவம் என்னும் இருமுறைச் சமையல் கலையிலும் சிறப்புப் பெற்றிருந்ததனைக் குறிப்பிடுகின்றது.

பொறையன் என்னும் சேர வேந்தன் போர்க்களத்தில் பகைவர்களுடைய உடல்களை வெட்டி வீழ்த்தியும், அதில் வெளிப்படும் குருதி வாடையையும் பொருட்படுத்தாமல் அடங்காத சினமுடையவனாகத் திகழ்கிறான். அவனுடைய சினத்தைத் தணிக்கும் அருமருந்தாக விறலியர்களின் ஆடல் அமைகின்றது. இதனை,

**“உறலுறு குருதிச் செருக்களம் புலவக்**
**கொன்றமர்க் கடந்த வெந்திறற் றடக்கை**

.......................................................................

**சாந்து வருவானி நீரினும்**

**தீந்தண் சாயலன் மன்ற தானே"**[14]

இப்பாடல் போர்க்களத்தில் குருதி சிந்திய வீரர்களின் உடல்களையும், இறந்துபட்ட வீரர்களின் உடல்களையும் அப்புறப்படுத்தும் பணிகளில் விறலியர் ஈடுபட்டுள்ளதை அறியமுடிகின்றது.

**பரத்தையர் நிலை**

பரத்தமை ஒழுக்கம் சங்ககாலச் சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது. தலைவனின் இப்போற்றா ஒழுக்கத்தைச் சார்ந்த நிகழ்ச்சிகளைப் பல பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. தலைவியைக் காட்டிலும் இளமை உடையவளாகவும், தலைவி பூப்பு நீராடிய காலத்தில் மகப்பேறு வேண்டி தலைவனை அவளிடத்து அனுப்புகின்றவளாகவும், தலைவனையும் தலைவியையும் ஆற்றாது உரைப்பவளாகவும் அகப்பாடல்களில் பரத்தை காட்டப்பட்டுள்ளாள். 'தலைவனோடு நான் புனல் விளையாடச் செல்லப் போகிறேன் இயலுமானால் தலைவி தன் கணவனை என்னிடமிருந்து மீட்டுக்கொள்ளட்டும்' என்று பரத்தை ஒருத்தி இறுமாப்புடன் கூறுவதைக் குறுந்தொகைப் பாடல் பின்வருமாறு கூறுகிறது.

**"கூந்தல் ஆம்பல் முழு நெறி அடைச்சி**

**பெரும் புனல் வந்த இருந்துறை விரும்பி**

.......................................................................

**முனை ஆன் பெருநிரை போல**

**கிளையொடு காக்க தன் கொழுநன் மார்பே"**[15]

பரத்தையிற் பிரிந்து மீண்ட தலைவனை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டும் தோழி, தலைவியிடம் கூறும்போது,

**"தன் துறை ஊரன் பெண்டினை ஆயின்**

**பல ஆகுக நின்நெஞ்சில்பரரே**

**சில ஆகுக நீதுஞ்சும் நானே"**[16]

என்கிறாள். இங்கும், 'பெண்டினை ஆயின்' என்ற சொல் தலைவனின் குற்றங்களுக்காக வருந்துவதும் அமைதி இழந்து தூங்காது இருப்பதுவுமே கற்புடைய பெண்ணின் கடமை என்று அறிவுறுத்தப்பட்டுள்ளது.

**விறலியர் பரத்தையராகயிருத்தல்**

பொதுவாக கலையும் காமமும் இணைந்தே வளருபவை. ஆகவே, அழகும் இளமையும் உடைய விறலியர்கள் வேந்தர்களின் காமக்கிழத்தியராகவே வாழ்ந்திருக்கின்றனர். இதனை,

**"கடும்பின் அடுகலம் நிறையாக நெடுங்கொடிப்**
**பூவா வஞ்சியும் தருகுவன் ஒன்றோ?**
**வண்ணம் நீவிய வணங்கு இறைப் பணைத்தோள்**
**ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகஎன**
**மாட மதுரையும் தருகுவன் எல்லாம்**
**பாடுகம் வம்மினோ பரிசில் மாக்கள்"**[17]

எனச் சோழன் நலங்கிள்ளியை வாழ்த்தி பாடும்போது கோவூர்கிழார் குறிப்பிடுகிறார். இங்கு வேந்தன் விறலியருக்குப் பூவின் விலையாக மாடமதுரையைத் தருவான் என்பது சுட்டத்தக்கது. விறலியின் பூவை விலையாக வாங்கும் வேந்தன், அந்த விறலியோடு அன்றிரவு உறவாடி மகிழ்வான் என்பது பொருளாகும். இது விறலி பரத்தையாக மாறும் கட்டத்தின் முதற்படியாகும்.

**"ஆடுநடை அண்ணல் நிற்பாடு மகள்காணியர்**
**காணிலியரோ நிற்புகழ்ந்த யாக்கை**
**...........................................................**
**மன்னர் மறைந்த தாழி**
**வன்னி மன்றத்து விளங்கிய காடே"**[18]

இவற்றில் 'உனது உடலை நோயோ, சாவோ அணுகாது விறலியே அணைந்திருப்பாள்' என்று கூறப்படும். வேந்தர்கள் விறலியுடன் திளைத்திருந்தமை இதிலிருந்து தெரிய வருகின்றது. விறலியர் அரசவை மகளிராகவும் காமக் கிழத்தியராகவும் மாறினர். இடைக்காலத்தில் அவர்கள் பரத்தையராகவும் விலை மகளிராகவும் தாழ்ந்தனர்.

கடற்கரையில் ஓங்கி வளர்ந்த பனைகள் நிறைந்த படப்பையில் பெரும் பந்தரிட்டுச் சேரன் நீண்ட நேரமாக விறலியரின் நடனத்தைக் கண்டு கழித்ததையும் அதனால் அவன் மனைவி ஊடல் கொண்டதையும் காக்கைபாடினியார், நச்செள்ளையார் குறிப்பிடுகின்றார்.

**"சுடரும் பாண்டில் திருநாறு விளக்கத்து**
**முழா இமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணையாக**
**...........................................................**

**உருபு கிளர் வண்ணம் கொண்ட**

**வான்தோய் வெண்குடை வேந்தர் தம் எயிலே"[19]**

தலைவன் தன் இருக்கையை விட்டு ஆட்டம் ஆடும் துணங்கையரோடு தோள்களையும் கைகளையும் தழுவிக்கொண்டு ஆடுகிறான். இதைக் கண்டத் தலைவி வருந்துகிறாள். தலைவி வருந்துவதை ஆடிக் கொண்டிருக்கும் தலைவன் உணருகிறான். 'உடனே ஆட்டக் கலைஞர் அணிந்திருந்த மலர்களில் செங்குவளைப்பூ ஒன்றை எடுத்து வருத்தம் தோய்ந்த தன் தலைவியை அணுகி அன்பின் காணிக்கையாக, இக்குவளைப் பூவினைப் பெற்றுக் கொள்வாயாக' எனத் தன் பார்வையினாலே வேண்டிக் கொள்கிறான். தலைவியோ, நீ எமக்கு யாரையோ? ஆட்டக்காரியோடு சேர்ந்து ஆடிக்கொள், 'வாழ்க நின் கண்ணி! வாழ்க நின் இளமையும் இரசனையும் இன்பமும்' எனக் கூறிச் சூரியனைப் போல் முகம் சிவந்து காணப்பட்டாள். இதிலும் விறலி நேரடியாகச் சுட்டப்படவில்லை.

ஒரு நாட்டினை ஆளும் வேந்தன் அவனுடைய செயல் மக்களுக்கு முன்மாதிரியாக இருந்திருக்க வேண்டும். ஆனால், அவனோ பொது வெளியில் நடனப் பெண்களுடன் ஆடுவது என்பது நகைப்புக்குரியதாகும். ஒரு வேந்தன் முன்பின் அறிமுகம் இல்லாத நடனப் பெண்களுடன் சேர்ந்து ஆடிடமுடியாது. எனவே, வேந்தனுக்கு முன்பே அப்பெண்களுடன் தொடர்பு இருந்திருக்க வேண்டும். மேலும், வேந்தனின் இச்செயலைக் கண்ட அவனுடைய மனைவி தன் கணவனின் பாலியல் வேட்கையினை அறிந்திருப்பவள். அதனால்தான் கடும் சினத்துடன் ஊடல் கொள்கிறாள். இதனால் வேந்தன் நடனப் பெண்களுடன் அவன் முன்பு கொண்டிருந்த உறவை உறுதிப்படுத்துகின்றது.

பெருங்குன்றூர்கிழார், பெருஞ்சேரலிரும் பொறையின் மகனைப் பாடியபோது, 'வதுவை மகளிர்' என்னும் காமக்கிழத்தியர் உறவை விடுத்து மனைவியோடு சேர்ந்து வாழுமாறு அறிவுறுத்துகிறார். இதனை,

**"கனவினும் பிரியா உறையுளொடு தண்ணெனத்**

**தகரம் நீவிய துவராக் கூந்தல்**

**வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து**

**வாழ்நாள் அறியும் வயங்குசுடர் நோக்கத்து**

**மீனொடு புரையும் கற்பின்**

**வாள்நுதல் அரிவையொடு காண்வரப் பொலிந்தே"[20]**

இப்பாடல், விறலி என்று நேரடியாகக் குறிப்பிடாமல் ‘வதுவை மகளிர்’ எனப்படும் பரத்தையராகக் குறிப்பிடுகின்றது. ஆகவே, இப்பரத்தையராகிய விறலியர்கள் குறிப்பிட்ட காலம் வரை வேந்தனுக்குக் காமச் சேவை புரிந்ததையே குறிப்பிடுகின்றது.

**விறலியின் வருணனை**

விறலியாற்றுப்படையில் விறலியின் உறுப்பு வருணனைகள் இடம்பெறவில்லை. ஆனால், விறலி ஆணின் பின் செல்பவளாக மாற்றம் பெற்ற பாணாற்றுப்படைகளில் அவளது உறுப்பு வருணனைகளாக அமைகின்றன. பெண் மகவு பிறப்புப் பற்றிப் பேசாத சங்க இலக்கியம்-ஆண் மகவைக் குலவிளக்கு எனப் பேசி மகிழும் சங்க இலக்கியம், அத்தகைய ஆண் மகனின் அழகை வருணிப்பதில் அக்கறை காட்டவில்லை. மாறாக இளம் பெண்ணை வருணிப்பதில் அக்கறையும் திறமையும் காட்டி நிற்கிறது. ஒவ்வோர் உறுப்பையும் கவனம் கொள்ளும்படியாக வருணிக்கிறது. பல பரிமாணங்களோடு அழகும் உணர்வும் தளும்பும் படியாகப் புனைந்துரைக்கிறது. என்ன இது முரண்பாடு என்று கேட்கலாம். ஆனால், ஆண் மேலாண்மை என்ற நிலைமைக்கு உட்பட்ட பார்வைத் தளமே இது. ஆண் மகனுடைய தேவை, அவனுடைய ரசனை, அவனுடைய விருப்பம், அவனுடைய பார்வைக் கோணம், இவையே பெண்ணுடல் அதிகமாகவும் விவரமாகவும் சொல்லப்படுவதற்குக் காரணங்கள் ஆகும். விறலியின் உடல் வருணனைக் கீழே அமைகின்றது.

**“சுடர்நுதல் மட நோக்கின்**
**வாள்நகைஇலங்கு எயிற்று**
**அமிழ்து பொதி துவர்வாய் அசைநடை விறலியர்”**[21]

என்றும்,

**“வீங்கு இறைத் தடைஇய அமைமருள் பணைத்தோள்**
**ஏந்தெழில் மழைக்கண் வனைந்துவரல் இளமுலை**
**பூந்துகில் அல்குல் தேம்பாய் கூந்தல்**
**மின்னிழை விறலியர் நின்மறம் பாட”**[22]

காட்சி வாழ்த்திலும், வஞ்சித் துறைப் பாடாண்பாட்டிலும் அமைந்த துறைகளில் விறலியின் உறுப்புகள் பாடப்பட்டுள்ளன. இப்பாடல்களில் விறலியின் நெற்றி, பல், வாய், தோள், கண், முலை, அல்குல், தலை, காது ஆகிய உறுப்புகள் வருணனையாகின்றன. பெண்ணின் தோற்றப் பொலிவு ஆணின் உணர்வு

நிலைகளையும் விருப்பங்களையும் எடுத்துரைக்கவும், பாலியல் உணர்வுகளை வெளிப்படுத்திக் கொள்ளவும், உறவுகளை முறைப்படுத்திக் கொள்ளவும் கூடிய தகவலியலாக அறியப்படுகிறது. எனவே, ஆணின் பாலியல் வேட்கையினைத் தணித்துக் கொள்ள பெண்ணின் தோள், முலை, அல்குல் ஆகிய உறுப்புகள் இடம் பெறுகின்றன.

**விறலியர் பெற்ற பரிசுகள்**

சங்க இலக்கியங்கள், புலவர்களின் வறுமையைப் போக்க, வேந்தர்கள் அவர்களுக்குப் பல பரிசுகள் வழங்கியதைச் சுட்டுகின்றன. பதிற்றுப்பத்தில் கிண்ணரப் பறவையை ஒத்த சிறகுகளைப் போன்ற நரம்புகள் பின்னப்பட்ட யாழினைக் கொண்டு இசையினை எழுப்பி நல்ல குரலில் பாடுகின்ற விறலிக்கு வேந்தன் பெண் யானையைப் பரிசாகக் கொடுக்கின்றான். இதனை,

**"ஆடுசிறை அறுத்த நரம்புசேர் இன்குரல்**
**பாடு விறலியர் பல்பிடி பெறுக"**[23]

இப்பாடல் விறலியர் இசைக்கருவியினை மீட்டும் திறனையும், இனிமையான குரலில் பாடும் வல்லமையையும் குறிப்பிடுகின்றது.

**"ஒள்நுதல் விறலியர்க்கு ஆரம் பூட்டிக்"**[24]

பாடும் தொழிலால் சிறப்பு பெற்ற விறலியை ஊக்கப்படுத்தும் விதமாக வேந்தன் பொன்னால் செய்யப்பட்ட மாலையைப் பரிசாக வழங்கியதை அறிய முடிகின்றது.

**வரைவின் மகளிர்**

வரைவின் மகளிரைக் காமக்கிழத்தியர் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். இவர்களின் செயல்பாடுகளை கற்பியலில் வைத்துத் தொல்காப்பியர் கூறியுள்ளார். காமக்கிழத்தியராவார் பின்முறை வதுவை ஆக்கிய கிழத்தியர், அவர் மூவகைப்படுவர். ஒத்த கிழத்தியரும், இழிந்த கிழத்தியரும், வரையப் பட்டாரும் எனவாகும்.

- **ஒத்த கிழத்தியர்**

முன்பு மணம் செய்து கொண்ட மனைவியைத் தவிர காமம் காரணமாகப் பின்னுந் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைந்து கொள்ளுதல் ஆகும்.

- **இழிந்தாராவார்**

அந்தணர்க்கு அரச குலத்திலும், வணிக குலத்திலும், வேளாண் குலத்திலும் கொடுக்கப்பட்டாரும், அரசர்க்கு அவருக்குக் கீழுள்ள ஏனை இரண்டு குலத்தினும் கொடுக்கப்பட்டாரும், வணிகர்க்கு வேளாண் குலத்தில் கொடுக்கப்பட்டாரும் என்பர்.

- ❖ **வரையப்பட்டார்**

செல்வராயினார் கணிகைக் குலத்திலுள்ளார்க்கும் இல்லறச் சிறப்புக் கொடுத்து மணந்து கொள்வதாகும். அவர் கன்னியில் மணந்து கொண்டவரும், அதன் பின்பு மணந்து கொண்டவரும் என இருவகைப்படுவர். இவ்விருவரும் உரிமை பூண்டவர் ஆதலின் காமக்கிழத்தியர் எனப்பட்டனர்.

பரத்தையர் என்பார் யாரெனில் அவர் ஆடலும் பாடலும் வல்லவராகி, அழகும் இளமையுங் காட்டி, இன்பமும் பொருளும் வெ∴கி ஒருவர் மாட்டுந் தங்காதார். இவருள்ளும் ஒருவரைப் பற்றி மறுதலைப் பெண்டிரைச் சார்த்திக் கூறுவனவும் காமக் கூற்றின் பாற்படும். இச்சூத்திரத்தால் காமக்கிழத்தியென ஓதாது 'கிழத்தியர்' என ஓதுதலாலும் பலவகையார் என்று கொள்ள வேண்டும்.

**பரத்தையரைக் குறிக்கும் வேறு பெயர்கள்**

பரத்தையரைப் பொதுமகளிர், கணிகை, விலைக்கணிகை, விலை நலப் பெண்டிர், கொண்டி மகளிர் போன்ற பெயர்களால் சங்க இலக்கியங்களில் சுட்டப்படுகின்றனர்.

**"நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்"**[25]

**"விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற"**[26]

**"பரத்தையுள் ளதவே பண்புறு கழறல்**
**தோள்புதி துண்ட பரத்தையிற் சிவப்புற"**[27]

**"மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை"**[28]

**"பரத்தை ஆயம் கரப்பவும் ஒல்லாது"**[29]

**"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்"**[30]

**"இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்"**[31]

போன்ற நூல்களில் பரத்தையரைக் குறிக்கும் பெயர்களைப் பற்றி கூறப்பட்டுள்ளது.

**காதலின் தன்மை**

காமப் பருவம் எய்திய நங்கை, தாய் ஏவற்படி தினைப்புனம் செல்கின்றாள். தோழியரும் உடன் செல்கின்றனா். முற்றிய கதிர்களைக் கவரும் கிளிக்கூட்டத்தைத் தட்டைக் கருவிகொண்டு வெருட்டுகின்றனா். அருவி ஆடியும், கழை கொய்தும், மலா் தொடுத்தும் வந்து அசோகந் தண்ணிழலில் அமா்கின்றனா். குமரப்பருவம் எய்திய நம்பி தன் வேட்டை நாயொடு மலையெலாம் சுற்றித் திரிகின்றான். மலா் மணம் கமழும் தலமாலை அணிந்து இவ்வேட்டுவ குமரன் நங்கை இருக்குமிடத்துக்குத் தானாக வந்து சேருகிறான். தன் அம்பால் புண்பட்ட மதயானை இப்பக்கம் போந்ததுண்டோ? என்று மலரூதும் வண்டின் இசைக்கு செவி கொடுத்திருந்த இளம் பாா்க்கிறான். அப்போது அவனுக்குக் காதற் குறிப்பு இல்லை. மாா்பில் செங்கழுநீரும், தலையில் வெட்சிப் பூவும், அகத்துச் சந்தனப்பூச்சும் கையில் வில்லம்பு கொண்டு முன்னிற்கும் இளைஞனுக்கு முன்னே இளமாதா்கள் நிற்கக் கூசினா். வினாவுக்கு மறுமொழி கூற அன்னோா் நா எழவில்லை. இதற்கூடே நம்பியின் கண்ணும் நங்கையின் கண்ணும் நட்புக் கொண்டன.

கண்டதும் காதல் என்பது இதுவே. ‘கண்தரவந்த காம ஒள்ளெரி’ என்று குப்பைக் கோழியாா் காமத்தின் பிறப்பிடமாகக் கண்ணைக் கூறுவா். கல்லொடு கல்சோ்ந்து தீ உண்டாவது போலக் கண்ணொடு கண்சோ்ந்து தீ உண்டாவது காமத்தீயாம் என்று குறிப்பா். ஒன்றுபட்ட உள்ளக் குறிப்பைத் தலைவன் பாா்வை தலைவிக்கும், அவள் பாா்வை அவனுக்கும் உரைக்கின்றன. ஒரு கருத்தை வாயாற் சொன்னால் வெளிப்படையாக நன்கு விளங்கும். வாயாற் சொல்லிக் கொள்ளுதல் காதலுலகிற்குப் பொருந்தாது. காதல் நோயை வளா்க்கும். ஆதலின் காதலா் உள்ளக் கருத்தை கண்ணால் சொல்லிக் கொள்வா். அ∴து அவா்கட்கு வாயாற் சொல்லிக் கொள்வது போலப் புரியும்.

உளவியல் தன்மையின் படியும், உலக இயற்கையின் படியும் காதல் என்பது இரு உள்ளங்களை எவ்விதம் பிணைத்து விடுகின்றது என்பதை அறியலாம்.

பால்வேறுபட்ட ஆண்மையும், பெண்மையும் பாா்த்ததும் உள்ளம் பறி கொடுத்துக் காமப் பித்தேறுதற்குக் காரணம் என்கொல்? இவ்வினா இன்னும் தீராவினாவே. காதல் காரணம் என்று எளிதாகச் சொல்லி விடுகிறோம். காதல் என்பதுதான் யாது? இதற்கு அறிவியலும் விடைகூற ஒண்ணாமையைக் கென்னத்து வாக்கா் ‘பாலுடவியல்’ நூலில் ஒப்புக் கொள்கிறாா். பாலுணா்வு பற்றி ஒரு

பொருத்தமான கொள்கையை நாம் கூறுவதற்கு இயலவில்லை என்பதை ஒத்துக் கொள்ள வேண்டும். பெண்ணொருத்தியைக் காண்கிறான்.

அவள் மொழியைக் கேட்கிறான். அவள் மணத்தை மோக்கின்றான். அவள் மெய்யைத் தீண்டுகின்றான். கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து உற்றறியும் போது உள்ளம் காமத்தின் கொள்கலம் ஆகிறது. உடம்பில் சில மாற்றங்கள் நிகழ்கின்றன. இவையெல்லாம் புணர்ச்சியில் போய் முடிவடையும் காதல் புறநிலைகளைக் கண்டு கூறுமளவே அறிவியல் செய்யக் கூடியது. அதன் தோற்றத்தை இது தெளிவாக்குமோ? இல்லவே இல்லை. ஏராளமான இளைய ஆண்களும், பெண்களும் நாள்தோறும் சாலையிலும், சோலையிலும் ஒருவரை ஒருவர் காண்கின்றனரே, கண்டும் ஒருவன் யாரோ ஒருத்தி மேல் காதல் கொள்கின்றான். ஒருத்தி எவனோ ஒருத்தன் பால் கண்சாய்க்கின்றாள். பலரை விலக்கி ஒருவரைத் தேர்ந்து விரும்பும் இச்சிறப்புப் பார்வைக்குக் காரணம் இதுவென உயிரியல் நூலும் செல்ல முடிவதில்லை.

இ ்.து ஆய்வுக்குரிய சிக்கல் என்று நம் முன்னோரும் கருதினர். வாளாவிராது காரணங்காண முயன்றனர். ஆண், பெண் என்பன படைப்புத் தொடக்கத்து ஒரே ஒரு பொருளாம் என்றும், தெய்வ சாபத்தால் பிளவுபட்டு இரண்டாயின என்றும், அன்று முதல் ஒன்றாய் இணையப்பாடுபடுகின்றன என்றும் காதலுக்கு விளக்கம் கூறுவர் பிளேட்டோ.

இது உமையொருபாகம் அர்த்தநாரீசுவரன் எனச் சிவனுக்கு ஆண்பாதி பெண்பாதி உருவம் கற்பிக்கும் இந்துப் புராணத்தைப் போன்றது.

**“ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்த பால தாணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோ னாயினும் கடிவரை இன்றே”**[32]

என விதியின் காரணமாகவே காதற்காட்சி நடைபெறும் எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார். இவரைப் பின்பற்றியே சங்கப்புலவர்களும் பாடியுள்ளனர்.

**“பால்வரைந்து அமைத்தல் அல்லது அவர்வயின்**
**சால்பு அளந்து அறிதற்கு யாஅம் யாரோ?”**[33]

எனப்பேரிச் சாத்தன் குறிஞ்சித் திணையில் வைத்துப் பாடுவதும்,

**“பிறிதொன் றாகக் கூறும்**

**ஆங்கும் ஆக்குமோ வாழியே பாலே”**[34]

என நெய்தல் திணையில் வைத்து அம்மூவனார் பாடுவதையும் காணலாம்.

காதலராவார் வேறு வேறு இடத்தில் பிறந்தவர்களாக இருக்க வேண்டும் என்றில்லை. முன்பின் அறிமுகம் இல்லாதவர்களாக இருக்க வேண்டும் என்ற நியைதியும் இல்லை. ஒவ்வொரு நாளும் பழகிக் கொண்டு வரும் சிறுவனும் சிறுமியும் வயது வந்த நிலையில் காதல் பார்வை பார்க்கலாம். குழந்தைகளாய் இருந்த பருவத்தில் அவ்விருவரும் தலைமுடி பற்றியிழுத்து அடித்துக் கொள்வர். செவிலியர் இடையே புகுந்து விலக்கினாலும் விடாது சண்டையிடும் இயல்புடையவர்கள். இன்று மாலையில் தொடுக்கப்பட்ட மலர்களைப் போல மணமக்களாக உள்ளனர். இது நல்லூழின் செயலாகும். இதுவென்று தலைவன் தலைவியைச் சிறுபருவம் முதல் பழகியோர் உடன்போக்கைக் கண்டு விதியின் செயலை வியக்கின்றார். இதனை,

**“இவன் இவள் ஐம்பால் பற்றவும் இவள் இவன்**
**புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்**
**காதற் செவிலியர் தவிர்ப்பவும் தவிராது**
**ஏதில் சிறுசெரு உறுப மன்னோ**
**நல்லை மன்றம்ம பாலே-மெல்இயல்**
**துணைமலர்ப் பிணையல் அன்னஇவர்**
**மணம் மகிழ் இயற்கை காட்டி யோயே”**[35]

என மோதாசனார் காதலின் அழுத்தத்தை ஒரே பாடலில் எடுத்துச் சொல்லி விடுகின்றார். தொல்காப்பியரின் நூற்பாவிற்கு எடுத்துக்காட்டாய் வருவதை உணரலாம். இப்படி களவில் தலைவனும் தலைவியும் சந்தித்துப் புணர்வதைத்தான் ‘இயற்கைப் புணர்ச்சி’ என்று இலக்கண நூல்களும், கோவையிலக்கியங்களும் பேசும்.

வெண்மை என்ற ஒரு வண்ணம் பல்வேறு நிறங்களைத் தன்னுள் அடக்கியிருப்பதைப் போல காதல் என்பதும் பல்வேறு உணர்வுகளை உள்ளடக்கி விதி என்னும் வெண்மை நிறத்தில் வெளிப்படுகின்றது. அமைதியும், சீற்றமும், விழிப்பும் மானமும், தவிப்பும் பாதுகாப்பும், கொந்தளிப்பும் மயக்கமும் எனப் பல மன நிலைகளை உள்ளடக்கிக் கொண்டிருக்கிறது காதல். அதனால்தான் வள்ளுவரும்,

**“மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்**

**செவ்வி தலைப்படு வார்"[36]**

அனிச்சமலரைக் காட்டிலும் காமம் மிக மென்மையானது. அதன் தன்மை அறிந்து, அதன் சிறந்த பயனையும் பெறக் கூடியவர்கள் உலகத்தில் சிலரேயாவர் என்று கூறியுள்ளார். ஆண், பெண் உறவுக்குக் காரணம் காதல். காதலுக்குக் காரணம் பால் என்னும் விதி.

காதலுக்கு மனப்பொருத்தம் அவசியம் என்பர். நாட்டுப்புற மக்கள், இதனையே இலக்கியங்கள் உள்ளப் புணர்ச்சி என்கின்றனர். உள்ளப்புணர்ச்சி யென்றாலே தலைவி கற்புக்கடம் பூண்டவளாகின்றாள். மெய்யுறு புணர்ச்சியும் களவில் நிகழ்வதால் கற்புநிலை உடையவளாகின்றாள் தலைவி. உள்ளம் உள்ளினாலே செயலாகச் சொல்வது நம் இலக்கியங்கள் ஆகும்.

**பெண்ணின் பெருமைகள்**

பெண் பிறப்பாலும் எண்ணிக்கையாலும் ஆணுக்கு நிகரானவள். அவள் ஆணின் வாழ்வில் தாயாக, சகோதரியாக, மனைவியாக, மகளாக இணைந்து வாழ்கிறாள். மனித சமூகத்தைத் தன் கருவில் சுமந்து, தன் இரத்தத்தையும் அன்பையும் ஊட்டி அதனைச் செம்மைப்படுத்துபவளும் பெண்தான். **"அப்பெண் பிறவியின் விழுமிய நோக்கம் அன்பாய் ஒருவனை மணந்து, ஒழுங்குபட்ட இல்வாழ்க்கை என்னும் இயற்கை வாழ்வு நடத்துவதில் நிறைவேறும்"[37]** என்பார் திரு.வி.கலியாணசுந்தரனார். இவ்வாறு பலவகையில் பாராட்டுகளைப் பெற்றிருக்கும் பெண்கள் வீட்டில் அடிமைகளாக வாழ்கிறார்கள். ஆண்கள் பெண்ணின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு வாழ்ந்தால் அவர்களின் வாழ்வு செழிப்படையும்.

**மங்கல அணிகலன்கள்**

பெண்ணை அழகுப் பதுமையாகக் காட்சிப்படுத்துவதற்கு அணிகலன்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. காலங்காலமாகப் பெண்ணை அடிமைப்படுத்துவதற்கு ஆண்களால் பூட்டப்பட்ட அடிமைச் சின்னமே அணிகலன். இந்த அடிமைச் சின்னம் பருவத்திற்கேற்ப, காலத்திற்கேற்ப வேறுபட்டது. திருமணத்திற்குப் பின் தாலி, குங்குமம், மிஞ்சி, வளையல் போன்றவை மங்கலச் சின்னமாக வலியுறுத்தப்பட்டு கணவன் இறந்த பிறகு அவற்றை அணியக் கூடாது என்று சொல்லும் அவலம் பெண்ணுக்கு மட்டும் இழைக்கப்படுகிறது. இந்த அவலங்களுக்குச் சமூகக் கட்டமைப்பும், பெண்ணின் அறியாமையும் காரணமாக அமைகின்றன.

- ❖ **தாலி**

திருமண நிகழ்ச்சியில் தாலி கட்டுவது மங்கலக் குறியீடாகும். சங்ககாலத்தில் இழையணி, தொடி, மங்கலவணி போன்ற சொற்கள் தாலியைக் குறிப்பதாக அறிஞர் பெருமக்கள் குறிப்பிடுவர். தாலி என்பது பெண்ணுக்கான வேலியாக வலியுறுத்தப்பட்டது. நாட்டுப்புறப் பெண்கள் எதை வேண்டுமானாலும் இழப்பர். ஆனால் தாலியை மட்டும் இழக்க விரும்பமாட்டார்கள். அப்படி இழப்பதாகயிருந்தால் கணவன் இறந்த பிறகே இழப்பர். தாலியை நாட்டுப்புறங்களில் மாங்கல்யம் எனக் குறிப்பிடுவர். தாலியை மஞ்சள் கயிற்றிலும் பொன்னால் செய்யப்பட்ட சங்கிலியிலும் கோத்து அணிவர். பெண்கள் சிலர் தாலிக் கயிற்றைத் தாலிச்சரடு, மஞ்சள் சரடு எனக் குறிப்பிடுவர். நாட்டுப்புறங்களில் கணவன் இறந்த பிறகு பிணத்தைத் தூக்குவதற்கு முன் மனைவிக்குப் புதுத்தாலி கட்டி, மஞ்சள், பூ, பொட்டு, வளையல் போன்றவற்றை அணிவித்து உடனே அனைத்தையும் பறித்துப் பிணத்தின் (கணவன்) கையில் கொடுத்துவிடுவர்.

**“மஞ்சள் பட்டு சேலையிழந்து**
**மதித்த நகையிழந்து**
**மஞ்சள் சரடு இழந்து**
**மஞ்சளிட்ட பொட்டிழந்து”**[38]

என்ற பாடலில் ஒரு பெண் கணவன் இறந்தவுடன் சேலை, நகை, தாலி, பொட்டு போன்றவற்றை இழந்ததனைக் குறிப்பிடுகிறாள்.

❖ **பொட்டு**

பெண்களின் ஒப்பனைப் பொருளாக விளங்கும் பொட்டு காலப்போக்கில் மங்கலக் குறியீடாக வளர்ச்சி பெற்றுவிட்டது. சங்ககாலத்தில் பொட்டினைத் திலகம் எனக் குறிப்பிட்டனர். நெற்றியில் திலகமிடும் வழக்கத்தினை,

**“நெற்றி விழியா நிறைதிலகம் இட்டாளே**
**கொற்றவை கோலங் கொண்டு ஓர் பெண்”**[39]

என்று பெண்கள் நெற்றியில் திலகமிட்ட வழக்கத்தினைக் குறிப்பிடுகிறது.

**“ஊசிபோல வாவெடுத்து**
**என்னைத்தேடிய ராசாவே-நா**
**உன்னிதமாய் பொட்டு வைத்தே-நீ**
**கண் மறைந்த நாழிகைக்கு-நா**

**ஊசி முனை இழந்தே-நா**

**உன்னிதமாய் பொட்டிழந்தே”**[40]

என்னும் பாடல் கணவனின் மறைவிற்குப் பிறகு பெண்கள் பொட்டு வைக்காத மரபைச் சுட்டுகிறது.

❖ **மிஞ்சி**

நாட்டுப்புறப் பெண்கள் பெருவிரலுக்கு அடுத்த விரலில் ‘மிஞ்சி’ என்னும் அணியை வெள்ளியால் செய்து அணிவர். இதனை மெட்டி என்று அழைப்பர். திருமணத்திற்குப் பின் இவ்விரலில் மெட்டி அணிவதற்குக் காரணம். இவ்விரலுக்கும் கருப்பைக்கும் தொடர்பிருப்பதாலும், மெட்டி அணிவதால் கருப்பை வளர்ச்சியடைவதாலும் கால் விரலில் அணிகின்றனர்.

**“வட்ட வட்டப் பாறையிலே**

**வரகரசி தீட்டையிலே**

**குட்டப்புள்ள காலமிஞ்சி**

**கண்ண நல்லா பறிக்குதல்லோ”**[41]

எனும் பாடலில் கால் விரலில் மிஞ்சி அணியும் வழக்கம் குறிப்பிடப்படுகிறது. இவ்வணிகலனும் கணவன் இறந்த பிறகு பறிக்கப்படுகிறது. தமிழ்ப்பெண்கள் காலங்காலமாக ‘கணவனே கண்கண்ட தெய்வம்’, ‘கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்’ என்ற மனநிலையிலேயே வாழ்கின்றனர்.

**ஆண் குழந்தைக்கு வீரம், கல்வி, பெண் குழந்தைக்கு ஒப்பனை என முக்கியத்துவப்படுத்துதல்**

ஆண் குழந்தை ஆயிரம் தாலாட்டுகளில் புகழ்ந்து பேசப்படுகிறது. அவன் எதிர்கால வெற்றிகள் முன்கூட்டியே கற்பனை செய்து சொல்லப்படுகின்றன. ஆனால் பெண் குழந்தையாக இருந்தாலோ தாலாட்டு ஊமையாகிவிடுகிறது. பெருவாரியான தாலாட்டுப்பாடல்களில் ஆண் குழந்தைக்கு வீரமும், கல்வியும் புகட்டுகின்றனர். ஆனால், பெண் குழந்தைக்கு அவர்கள் அணியக்கூடிய ஆபரணங்களையும், ஒப்பனைகளையும் பாடுகின்றனர். இதனை,

**“செம்பேறும் எழுத்தாணி ஏங்கண்ணே**

**உனக்கு சேமம் குருத்தோலை**

**குருத்தோலை வாசிக்க ஏங்கண்ணே**

**நீங்க கருத்தா பிறந்தாரோ**

**வெள்ளியினால பேனாவோ ஏங்கண்ணே உனக்கு**

**வெண்கலத்தால் மை கூடோ-நீ**
**சாஞ்சு கணக்கெழுத ஏங்கண்ணே உனக்கு**
**கொண்டு வந்தார் தாய்மாமே”[42]**

என்ற பாடலில் தன் மகன் ஓலையால் எழுத்தாணி கொண்டு எழுதும் முறையினைக் கற்கப் பிறந்தவன் எனவும், பேனாவையும், வெள்ளியால் செய்யப்பட்ட மைக்கூட்டினையும் குறிப்பிட்டு, அதனைத் தன்னுடைய சகோதரன் தன் மகனுக்கு வாங்கி வருவதாகச் சொல்லி ஆண் குழந்தையின் எதிர்காலத்தில் கல்வியை முதன்மைப்படுத்துகிறாள் தாய்.

**“காட்டை கிளச்சிவிட்டு தம்பிக்கு**
**கடிநாயை ஏவிவிட்டு**
**வேட்டைக்குப் போராரு தம்பி**
**பன்றி மலை கானகத்தே”[43]**

என்ற பாடலில் நாயை அழைத்துக் கொண்டு திண்டுக்கல் மாவட்டத்தில் உள்ள பன்றிமலைக் காட்டிற்கு வேட்டைக்குச் செல்வதாகத் தன் ஆண் குழந்தையின் வீரத்தை உவமைப்படுத்திப் பாடுகிறாள்.

**“பட்டி திறந்து பிடித்த பிடி பொன்னெடுத்து**
**ஆத்திக்காய் வாளி செய்து ஏ பொண்ணுக்கு**
**மலர்ந்த சிமிக்கி செய்து”[44]**

என்ற பாடலிலும்,

**“வாருமய்யா வளையல் செட்டி-எங்கம்மாவுக்கு**
**வண்ண வண்ண வளையிலிட”[45]**

என்ற பாடலிலும் பெண் குழந்தைக்கு அணியக்கூடிய அணிகலன்களைப் பாடுகின்றனர். இவ்வாறு சிறுவயது முதலே ஆணுக்கு உயர்வாகவும், பெண்ணுக்குத் தாழ்வாகவும் வேறுபாடு காட்டி வளர்க்கப்படுவதால் வளர்ந்த பிறகு ஆண்மகன் பெண்ணை அடிமைப்படுத்தவே கருதுவான். எனவே, பால் வேறுபாடின்றி ஆண், பெண் இருவருமே சமம் என வேறுபாடு கருதாது பாடினால் எப்படி ஜீஜீபாய் சிவாஜிக்குத் தாலாட்டின் மூலம் வீரத்தைப் புகட்டி தன் நாட்டை கைப்பற்றினாளோ அதைப்போல் பெண்ணையும் வீரம் செறிந்தவளாக வளர்க்க முடியும்.

### பெண் வயதிற்கு வரலும் ஆணின் ஆதிக்க மரபும்

பெண் பருவம் அடைகின்ற அதாவது முதல் மாதவிடாய் நிகழ்ச்சியைப் பூப்படைதல் அல்லது வயதிற்கு வரல் என்று குறிப்பிடுகின்றனர். பெண் வயதிற்கு

வந்த பிறகு பெற்றோர்கள் அந்தப் பெண்ணின் மீது தன் முழு ஆதிக்கத்தையும் செலுத்துகின்றனர். அது தொடர்பான ஆதிக்க மரபுகள் பின்வருமாறு.

- ❖ வயதிற்கு வந்த பெண் ஆணைவிடப் புனித மற்றவள் எனக் கருதுதல்
- ❖ அவளைத் தொடுதல் கூடாது. அப்படித் தொட்டுவிட்டால் தீட்டு ஒட்டிக் கொள்ளும் என நம்புதல்
- ❖ பெண்ணைத் தனிமைப்படுத்துதல்
- ❖ குலவையிட்டுப் பெண்ணை நுகர்பொருளாக ஏலம் போடுதல்

பெண்ணிடமிருந்து வெளியேறும் இறந்த கருமுட்டைகளின் கழிவு பெண்ணை இருட்டறைக்குள்ளே சிறைப்படுத்துகிறது. இதுமட்டுமல்லாது பெண் பூப்படைந்த போது செருப்பு, விளக்குமாறு, இரும்பு போன்ற பொருட்களைக் காவல் வைப்பதும், முறைப் பையன் மாலை போடுவதும், நாத்தனார் பேய் பிடித்துவிடும் எனக் கருதி விளக்குமாற்றால் தலையைச் சுற்றுவதுமான செயல்களைச் செய்வர். இவையும் இவைபோன்ற பிற செயல்களும் பெண்ணை இழிவுபடுத்துவது மட்டுமல்லாது அவள் எப்பொழுதும் பிறரைச் சார்ந்தே வாழவேண்டுமென அறிவுறுத்தவும் செய்கின்றன. பெண்ணின் இறந்த கருமுட்டை வெளியேறுவதற்கு இப்படிச் செய்யப்படும் சடங்குக்கு மாறாக ஆணிடமிருந்து வெளியேறும் விந்திற்கு எந்தச் சடங்கும் செய்யப்படுவதில்லை. இப்படி ஆணை மேன்மைப்படுத்தியும் பெண்ணை இழிவுபடுத்தியும் செயல்படுவது ஆணாதிக்கத்தின் வெளிப்பாடாகும்.

**"தண்ணிக்குப் போ மகளே**
**தடம் பாத்து வா மகளே**
**தட்டுவாணி பயல கண்டா**
**எட்டி வச்சு வாமகளே"**[46]

என்ற பாடலில் பருவம் அடைந்த பெண் மீது சமூகத்தின் பார்வைபடுவதால் 'கற்பு' என்ற பெண்ணின் அடையாளத்தைத் திருமணமாகும் வரை காப்பது தாயின் கடமை என்ற கருத்து விளக்கம் பெறுகிறது. அப்பெண் தன் தாய்க்குத் தெரியாமல் தடம்மாறி தவறு செய்துவிட்டால் அந்த அவப்பெயர் ஆணைப் பாதிப்பதில்லை. அது அக்குடும்பத்திலுள்ள பெண்களை மட்டுமே பாதிக்கிறது. எனவே, கற்பைப் பாதுகாப்பது அப்பெண்ணைவிட அவளுடைய தாயே என்பது இப்பாடலின் வழி புலப்படுத்துகிறது.

**பெண் ஆணைச் சார்ந்து வாழ்தலும், ஆண் பெண்ணைக் கேலிச்செய்தலும்**

பெண் என்பவள் சமூகத்தில் இரண்டாம் தரக் குடியுரிமையுடையவள் எனக்கருதி அவளை ஆண்கள் கேலி செய்கின்றனர்.

வன்மை, கோபம், ஆளுந்திறம், ஆண்களுக்குச் சொந்தமென்றும், சாந்தம், அமைதி, பேணுந்திறம் பெண்களுக்குச் சொந்தமென்றும் சொல்வதானது கூறப்பட்டுள்ளது. வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம், புலிக்குச் சொந்தமென்றும், சாந்தம், அமைதி, பேணுந்திறம் ஆட்டுக்குச் சொந்தமென்றும் சொல்லப்படுகிறது. நாம் வேண்டும் பெண் உரிமை என்பது என்னவெனில், ஆணைப் போலவே பெண்ணுக்கும் வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம் உண்டென்பதை ஆண் மக்கள் ஒப்புக் கொள்ள வேண்டும் எனக் குறிப்பிட்டார் பெரியார். ஆனால் இக்கருத்தை இன்னும் ஏற்றுக்கொள்ளாமல் சாந்தம், அமைதி, பேணுந்திறம் போன்றவை பெண்ணுக்கே உரியவை எனக் கருதி பெண் ஆணைச் சார்ந்து வாழச் செய்வதும், ஆண் பெண்ணைக் கேலி செய்வதும் நடைமுறை வாழ்வில் வழக்கமாக நிகழ்கின்றன.

**“குத்தடி குத்தடி சைனக்கா**
**குனிஞ்சு குத்தடி சைனக்கா**
**பந்தலிலே பாவக்கா**
**தொங்குதடி தோலாக்கு**
**பைய வாரா பாத்துக்கோ**
**பணம் கொடுத்தா வாங்கிக்கோ**
**சில்லறையை மாத்திக்கோ**
**சுருக்குப் பையில போட்டுக்கோ**
**சிலுக்கு சிலுக்கென ஆட்டிக்கோ”**[47]

என்ற விளையாட்டுப்பாடல் நாட்டுப்புறப் பெண்கள் தம் உடல் உழைப்பால் கிடைத்த கூலியை ஆணிடம் ஒப்படைத்து விட்டுத் தம் சுய தேவைகளுக்கு ஆணையே (கணவனை) எதிர்பார்த்திருக்கும் நிலையினை உணர்த்துவது மட்டுமல்லாது பெண் என்பவள் ஆணுக்குரிய போகப்பொருள் என்ற கருத்தையும் பெண்ணின் நடையைக் கேலி செய்வதன் மூலம் சுட்டுகிறது.

**திருமணத்திற்குப் பின் பெண்ணின் வாழ்வியல் சிக்கல்கள்**

திருமணத்திற்குப் பின் ஒரு பெண் மனைவியாக மட்டுமில்லாமல் தாய் என்ற பொறுப்பையும் பெறுகிறாள். காலங்காலமாகத் தந்தை, தமையன், கணவன், மகன் என்ற அடிப்படையில் அடிமைப்படுத்துவது மட்டுமல்லாமல் பெண்

திருமணத்திற்காகவே பிறப்பெடுத்தவளாகக் கருதி, ஆணின் பாலுறவுத் தேவைகளை நிவர்த்தி செய்பவளாக, காலம் முழுவதும் அவனுக்குப் பணிவிடை செய்பவளாகத் திகழ வேண்டுமெனச் சமூக மரபுச் சட்டங்கள் ஆணைப் பாதுகாக்கவே எழுதப்பட்டுள்ளன. ஆணைப் பாதுகாக்கும் சமூக அமைப்பில் பெண்ணுக்கு ஏற்படும் சிக்கல்களாகப் பின்வருவன அமைகின்றன.

- ❖ இளமைத் திருமணம்
- ❖ கிழவனுக்கு வாழ்க்கைப்படுதல்
- ❖ பொருத்தமில்லாத கணவனிடம் துன்புறுதல்
- ❖ வரதட்சணைக் கொடுமை
- ❖ பெண் சிசுக்கொலை
- ❖ கணவன் மனைவி உறவில் சிக்கல்
- ❖ பெண் கல்வி மறுப்பு
- ❖ பெண்ணுக்கு மட்டும் கற்பு வலியுறுத்தப்படுதல்
- ❖ பெண்ணின் உடல் உழைப்பைச் சுரண்டுதல்
- ❖ மாமியார் கொடுமை
- ❖ குழந்தைப்பேறு இயலாத நிலையில் பெண் எதிர்கொள்ளும் சிக்கல்கள்
- ❖ சொத்துரிமையின்மை
- ❖ விதவைக் கொடுமை
- ❖ மரபுக்குள் பெண் அடிமையாதல்

போன்றவையாகும்.

**தமிழிலக்கியத்தில் பாலியல் வல்லுறவு**

இலக்கியம் என்பது சமுதாயத்தைப் பிரதிபலிக்கும் காலக்கண்ணாடி. இக்காலக்கண்ணாடி காலந்தோறும் சமூகத்தில் நிகழும் இன்பதுன்பங்கள், ஏற்றத்தாழ்வுகள், நிறைவேறாத ஆசைகள், போர் முறைகள், வழிபாடுகள், இயற்கை பேரழிவுகள் முதலியவற்றை ஆவணப்படுத்துகின்றது. இவை பிற்காலத்தில் வரலாறாகிறது. குறிப்பாகத் தமிழரின் திருமணமுறை எங்ஙனம் நிகழ்ந்தது என்பதை அறிய வேண்டுமெனில் நமக்கு சங்க இலக்கியமான அகநானூறு துணைநிற்கிறது. இருபத்தோராம் நூற்றாண்டிலும் ஒரு புதிய பிரச்சினையோ அல்லது ஒரு புதிய கருத்தாக்கமோ உருபெற்றால் நமக்கு ஆதாரமாக இருப்பது தொல்காப்பியமும் சங்க இலக்கியமுமே ஆகும். ஆகவே,

இன்றைய சூழலில் நாட்டையே கலங்க வைக்கும் பிச்சனையாக உருவெடுத்திருப்பது பாலியல் வல்லுறவு.

ஆண், ஒரு பெண்ணுடன் கொள்ளும் பலவந்தமான உடலுறவை கற்பைச் சூரையாடுதல், கற்பழிப்பு, பாலியல் பலாத்காரம், பாலியல் வன்முறை, வன்புணர்ச்சி, பாலியல் வல்லுறவு முதலிய பெயர்களில் அழைக்கின்றனர். இச்சொற்கள் எப்படி வளர்ச்சி பெற்றதோ, அதைப்போன்றே பாலியல் வல்லுறவிலும் ஆண்கள் புதிய புதிய உத்திகளைக் கையாளுகின்றனர். குறிப்பாக ஆண்கள் பெரும்பாலும் பாலியல் வல்லுறவுக்கு முன் போதைப் பொருட்களை உட்கொள்வதும், பாலியல் வல்லுறவுக்குப் பின் பெண்களின் பிறப்புறுப்புகளையும், மார்பகங்களையும் சிதைப்பதும், அப்பெண் உயிரோடிருந்தால் தனக்குத் தண்டனைக் கிடைத்துவிடும் எனக் கருதி அப்பெண்ணைக் கொலை செய்வதும் இயல்பாகிவிட்டது.

**"மலரினும் மெல்லியது காமம் சிலர்அதன்**
**செவ்வி தலைப்படு வார்"**[48]

இக்குறளின் மூலம் வள்ளுவர் மனித வாழ்க்கையில் இயற்கையாய்த் துய்க்க இருக்கும் இவ்வுணர்வைச் சமூக ஒழுங்குகெடாமல் அளவோடிருக்க வேண்டும் என்கிறார். ஆனால், இன்று பன்னாட்டு நிறுவனங்களின் வரவாலும், நுகர்வு கலாச்சாரத்தாலும் பார்க்கும் இடங்களெல்லாம் பாலியல் உணர்வைத் தூண்டும் படங்கள், விளம்பரங்கள், சுவரொட்டிகள், பதாகைகள், பாலியல் உறுப்புகள் தெரியும் கவர்ச்சியாடைகள், பாலியல் உணர்வைத் தூண்டும் உணவுகள் எனச் சிக்குண்டு சமூக ஒழுங்கே கெட்டுகிடக்கின்றது.

**"காதலுக்கு நான்கு கண்கள்**
**கள்வனுக்கு இரண்டு கண்கள்**
**காமுகனின் உருவத்தில்**
**கண்ணுமில்லை காதுமில்லை"**[49]

என்கிறார் மருதகாசி. இவரின் கூற்றிற்கிணங்க காமவெறியர்களுக்கு நீதி, நேர்மை, நியாயம், அறம், மனிதநேயம், கண்ணியம், கட்டுப்பாடு, அன்பு, நல்லொழுக்கம் முதலிய மனிதப் பண்புகளில் நாட்டமில்லை. இவர்களின் நோக்கமெல்லாம் உடல் மற்றும் உள்ளப் புணர்ச்சிகளைத் தணித்துக் கொள்வதே.

தொல்காப்பியர் களவியலில் 'மறையோர் தேஎத்து மன்றலெட்டனுள்' என்று குறிப்பிடுகிறார். அதாவது, பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், கந்தருவம்,

அசுரம், இராக்கதம், பைசாசம் ஆகிய எண்வகை திருமண முறைகளில் இராக்கதம், பைசாசம் ஆகிய இரண்டும் பாலியல் வல்லுறவைக் குறிக்கிறது. பெண் விரும்பாமலும், பெற்றோர் கொடாமலும் இளைஞன் வலியவந்து திருமணம் செய்து புணர்வது இராக்கதம், கள்ளுண்டு களித்தும் துயில்பவளைப் புணர்வதும் பைசாசமாகும்.

சங்ககாலத்தில் தோன்றிய இலக்கியமான அகநானூற்றில் தலைவன் தலைவியைவிட்டு பரத்தையோடு வையையாற்றில் புனலாடுகிறான். இதைக் கண்ட தோழி, தலைவியிடம் தலைவனின் செயலைக் கூறுகிறாள். உடனே தலைவி தலைவனைக் கண்டிக்கிறாள். அதற்குத் தலைவன், 'அவ்வாறு நிகழவில்லையென' மறுக்கிறான். அப்பொழுது பின்வரும் நிகழ்வைச் சுட்டி 'இச்செயலைவிட நின்செயல் பெரியது' என்கிறாள். இதனை,

**"சுரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்**
**திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய**
**அறனிலாளன் அறியேன் என்ற**
**திறன்இல் வெஞ்சூள் அறிகரி கடாஅய்**
**முறிஆர் பெருங்கிளை செறியப் பற்றி**
**நீறுதலைப் பெய்த ஞான்றை**
**வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே"**[50]

என்ற அகநானூறு பாடல் மூலம் அறிய முடிகிறது.

கள்ளூர் என்னும் ஊர் பழமையானதாகும். இவ்வூரில் பலவகையான பூக்கள் நிறைந்த அழகிய வயல்களையும், கரும்புத் தோட்டங்களையும் கொண்டது. அழகிய நெற்றியினையுடைய இளையாள் ஒருத்தியுடன் கூடி, அவளின் அழகிய நலத்தினைத் தீவினையே தொழிலாகக் கொண்ட ஒருவன் நுகர்ந்து விடுகிறான். அதன்பின் அவளை நாடி அவன் வரவேயில்லை. அவளைக் கைவிட்டுவிடுகிறான். அந்நிலையில் என்ன செய்வதென்று அறியாத அந்நங்கை இறுதியாகச் சான்றோரிடம் முறையிட்டுக் கதறுகிறாள். அவளின் துயர்நிலையை கேட்ட சான்றோர், அத்தீயவனை அழைத்து விசாரிக்கின்றனர். அத்தீயவனோ சற்றும் மனசாட்சியின்றி 'இதற்கு முன் இவளை அறியேன்' இவள் யார் என்பது கூடத் தனக்குத் தெரியாதென்றும் துணிவுடன் பொய்சூள் கூறி அவளை ஏற்க மறுக்கிறான். நீதியிலா அவனின் சூளினை நன்கு ஆய்ந்த அவையினர். அவன் கூறியது முற்றிலும் பொய் என்பதைத் தக்கச் சாட்சியாளர் கூற்றினால் தெளிவடைகின்றனர்.

அவனுக்குக் கடுமையான தண்டனை வழங்க வேண்டும் என்று முடிவு செய்து, அத்தண்டனையை மக்கள் முன்னிலையில் வழங்குகின்றனர்.

தளிர்கள் பொருந்திய மூன்று கவராய கிளைகளின் நடுவே அவனை இறுகப் பிணித்துக் கட்டி, அவன் தலையில் அதிக அளவில் சுண்ணாம்பு தண்ணீரினை ஊற்றினர். சுண்ணாம்பு தண்ணீர் தன் தலையில் பட்டதினால் எரிச்சல் தாங்காமல் அவன் துடிக்கிறான். 'ஐயோ! என்று அலறுகின்றான். அவன் துடிப்பதைக் கண்ட ஊர்ப்பொதுமக்கள் அவன்மேல் இரக்கம் கொள்ளாமல், மாறாக இது அவனுக்குச் சரியான தண்டனையே' என்று மகிழ்கின்றனர். இவ்வாறு சங்ககாலத்தில் பாலியல் வல்லுறவு செய்த ஆடவனுக்குத் தண்டனை வழங்கப்படுகின்றது. இத்தகைய நிகழ்வு பெரும்பாலும் மிகுதியாக இல்லை. சங்ககால மக்கள் களவு வாழ்க்கையில் ஈடுபட்டு, பின்னர் கற்புநெறியில் வாழ்ந்தனர். இல்வாழ்க்கையின் பயனால் மிகுதியான குழந்தைகளைப் பெற்றெடுத்தனர். இத்தகைய நிலையில் 'காமம்' என்பது ஒரு முறைப்படுத்தப்பட்ட ஒழுக்கம் சார்ந்த பண்பாக இருந்தது.

சமகாலத்தைப் பாலியல் வல்லுறவுக் காலம் என்றே அழைக்கலாம். உலகமயமாதல், சந்தைப் பொருளாதாரம், நுகர்வு கலாச்சாரம் என்ற கருத்தாக்கங்களின் மனித மனம் மரத்துப்போனது. தினந்தோறும் நாளேடுகளில் திருப்பும் பக்கங்களெல்லாம் பள்ளிகளில் ஆசிரியர்களும், காவல் நிலையங்களில் அதிகாரிகளும், அலுவலகங்களில் சகஊழியர்களும், பொது இடங்களில் இளைஞர்களும் எனப் பெண்களை வயது வேறுபாடின்றி பாலியல் வல்லுறவு செய்வதும், பிறகு அவர்களைக் கொலை செய்வதும் வழக்கமான செய்திகளாகிவிட்டது.

**விலை மகளிர்**

மனித வாழ்வில் ஆண் பெண் உறவு முக்கிய இடம் பெறுகிறது. மனித குலத்தின் அடிப்படை நலனே அதைப்பொறுத்திருக்கிறது. வாழ்க்கையின் இலட்சியங்களான அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றிலும் ஒத்த நிலை இருக்க வேண்டும். அப்போதுதான் வாழ்க்கையில் முழுமையான இன்பம் நிலவும். குடும்ப வளர்ச்சி மனிதனுக்கு அவசியம். நல்ல மக்களைப் பெறுவது நாட்டுக்குத் தேவை. ஏனெனில் மனித சமுதாய வளர்ச்சி நல்ல மக்களைப் பெறுவதில்தான் இருக்கிறது.

விலை மகளிர் தங்கள் தொழிலின் மூலம் காம இன்பத்தையும் அதே நேரத்தில் ஜீவனோபாயத்தையும் பெறுகின்றனர். காம இன்பம் நாடுவதற்காக ஒரு

பெண் ஆணை நாடுவது இயல்பு. ஆனால் பணம் சம்பாதிப்பதற்காக அவள் அவ்வாறு செய்தால் அது இயற்கையானதல்ல.

பணத்துக்காகத் தனது உடலை கலவி இன்பத்துக்கு விலை கூறுபவளே விலைமகள் எனப்படுவாள். இதில் காதல் என்பதற்கு இடம் இல்லை. அன்பினால் ஒரு ஆடவனை நாடுபவள் விலைமகளாக மாட்டாள். விலை மகளிரை மூன்று விதமாகப் பிரிக்கப்பட்டு உள்ளனர்.

❖ **குடும்ப தாசி**

சகஜமாகக் காணும் வகை, கீழ்க் குலத்தைச் சேர்ந்தவர்கள் கண்ணியமின்றி நடந்து கொள்ளும் மட்டரகமானவர்கள்.

❖ **அழகு தாசிகள்**

குடும்பதாசிகளை விட இவர்கள் அழகு மிக்கவர்கள் என்பதே வித்தியாசம். அழகின் காரணமாகத் தரமும் உயர்கிறது.

❖ **கணிகை**

இவள் அழகு மட்டுமின்றி கலைகளிலும் வல்லவள். மேலே சொன்னவை பிரதானமான மூன்று வகை. விலை மகளிரை முழுவதும் வகைப்படுத்திச் சொல்வதானால் ஒன்பது விதமாகக் கூறலாம். அவை,

| | | |
|---|---|---|
| ❖ சாதாரணரகம் | - | குடும்பதாசி |
| ❖ அழகு தாசி | - | ரூபஜிபி |
| ❖ கலைத்தாசி | - | கணிகை |
| ❖ சேடி | - | பரிசாரிகா |
| ❖ விபசாரி | - | ஸ்வைரிணி |
| ❖ வீட்டை விட்டு ஓடி வந்தவள் | - | பிரகாச பினஷ்டை |
| ❖ நடிகை | - | நடி |
| ❖ சிற்பதாசி | - | சில்பகாரிகை |
| ❖ இரகசியதாசி | - | குலதா |

இவர்கள் பலதரப்பட்டவர்களாயினும் பணம் பறிக்கக் கையாளும் முறைகள் எல்லோருக்குமே பொதுவானவை ஆகும்.

**காதல் மணமே சிறந்தது**

எந்தப் பெண்ணும் எந்த ஆணையும் மணந்து கொள்ளலாம் என்பது சரியல்ல. மணம் செய்து கொள்ளப்போகும் ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர்

நன்கு பார்த்து அறிந்து கொண்டிருக்க வேண்டும். புற அழகு, குணநலன்கள், நன்னடத்தை ஆகியவற்றைத் தெரிந்து கொண்டு ஒருவர் பால் மற்றவர்க்குக் கவர்ச்சி ஏற்பட வேண்டும். அத்தகையவர்கள் செய்து கொள்ளும் மணமே சிறப்புடையதாகும். இதல்லாமல் திருமணம் செய்தல் கூடாது.

ஒரு ஆணும், ஒரு பெண்ணும் ஒருவர் மேல் ஒருவர் காதல் கொள்ளாமல் இருந்து, பெற்றோர்கள் அல்லது உறவினர்களுடைய நிர்ப்பந்தம் காரணமாக அவர்களுக்குள் திருமணம் நிகழ்ந்தால் அது மகிழ்ச்சியளிப்பதாக இருக்காது.

**திருக்குறளில் வரைவின் மகளிர்**

மத நூல்கள், அறநூல், அகப்புறநூல்கள் இப்படி உலகிலுள்ள எம் மொழியின் கண்ணும் இல்லாத சிறப்புடைய ஒரு நூல் திருக்குறளாகும். பாரதிதாசன் சொல்வது போல், வள்ளுவன் சொல்லாததும் இல்லை, இல்லாததும் இல்லை, வெல்லாததும் இல்லை. மனிதகுலம் முழுமைக்கும் பொதுமையான ஒரு நூல் இவ்வுலகின்கண் உள்ளதென்றால் அது திருக்குறள்தான் ஆகும். நாம் பொதுவாக வழக்குகளை கீழ், மேல், உயர், உச்சநீதி மன்றங்களுக்குச் செல்வது போல இலக்கியங்களில் ஏற்படும் வழக்குகளை (சர்ச்சைகளை) தீர்த்து வைப்பது திருக்குறள் என்னும் உச்சநீதி மன்றமே. வள்ளுவர் ஒரு கருத்தைச் சொல்லிவிட்டாரென்றால் அதனை ஆய்ந்து பார்க்க வேண்டிய அவசியம் இல்லை.

திருவள்ளுவர் பொருட்பாலில் இரு அதிகாரங்களில் பெண்களால் நேரும் அழிவைப் பேசுவார். இனிக் காமத்தான் வருவன நேரே பகையல்லவாயினும், ஆக்கம் சிதைத்தல், அழிவுகலைத் தருதல் என்னும் தொழில்களால் பகையோடு ஒத்தலின் பகைபாற்படுவனவாகும். ஆதலான் அவற்றைப் பகைப் பகுதியது இறுதிக்கண் கூறுவான் தொடங்கி, முதற்கண் பெண்வழிச் சேறல் கூறுகின்றனர். அ∴தாவது,

**“பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்**
**பெண்ணே பெருமை உடைத்து”**[51]

தன் இல்லாள் ஏவியபடியே செய்து திரிகின்ற ஒருவனது ஆண் தன்மையைக் காட்டிலும், நாணத்தையுடைய அவளது பெண்தன்மையே மேலானதாகும்.

**“அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்**
**இன்சொல் இழுக்குத் தரும்”**[52]

அன்பால் விரும்பாமல் அவன்தரும் பொருளையே விரும்பும் மகளிர் அவனையே அன்பால் விரும்பியது போலப் பேசும் பேச்சும், அவனுக்குப் பின்னர்த் துன்பம் தரும். மேலும்,

**“பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்**
**நயன்தூக்கி நள்ளா விடல்”**[53]

ஒருவனிடமுள்ள பொருளின் அளவை அறிந்து, அதனை அடையும்வரை பண்பைப்பற்றிப் பேசும் பண்பில்லாத மகளிரது நடத்தையை ஆராய்ந்து பார்த்து நெருங்காமல் இருக்க வேண்டும்.

**“பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்**
**ஏதில் பிணந்தழீஇ யற்று”**[54]

கொடுக்கும் பொருளையே விரும்பும் பொது மகளிரது பொய்யான முயக்கமானது பிணம் எடுப்பவர் இருட்டறையில் முன் அறியாத பிணத்தைத் தழுவியது போலாகும்.

**“பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்**
**ஆயும் அறிவி னவர்”**[55]

இன்பமாகிய பொருளை இகழ்ந்து பொருளையே விரும்பும் பொதுமகளிரது இழிந்த இன்பத்தை அருளோடு கூடிய பொருளை ஆராய்ந்து செய்யும் அறிவாளர் விரும்பார்.

**“பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்**
**மாண்ட அறிவி னவர்”**[56]

இயற்கையான மதிநலத்தால் மாட்சிமைப்பட்ட அறிவினை உடையவர்கள் பொருள் தருவார்க்கெல்லாம் பொதுவான ஆசைகாட்டும் மகளிரது இழிவான நலத்தைத் தீண்டார்.

**“தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்**
**புன்னலம் பாரிப்பார் தோள்”**[57]

தம் அழகால் செருக்கடைந்து தம் புன்மையான நலத்தை விலை தருவாரிடம் எல்லாம் பரப்பும் பொதுமகளிர் தோளினை தம் புகழை நினைக்கும் உயர்ந்தோர் தீண்டமாட்டார்.

**“நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்**
**பேணிப் புணர்பவர் தோள்”**[58]

நெஞ்சிலே பொருள்மேல் ஆசைகொண்டு, அதைப் பெறக் கருதிப் பொருள் தருபவரோடு உடலால் கூடியிருக்கும் மகளிரது தோள்களை நெஞ்சமில்லாதவர்களே சேர்வர்.

**"ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப**
**மாய மகளிர் முயக்கு"**[59]

வஞ்சித்தலில் வல்ல மகளிரது முயக்கத்தை அவ்வஞ்சனையை ஆராய்ந்து அறியும் அறிவுடையவர் அல்லாத பிறருக்கு அணங்குத் தாக்கு என்று சொல்வார்கள்.

**"வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்**
**பூரியர்கள் ஆழும் அளறு"**[60]

உயர்ந்தோர் இழிந்தோர் என்னும் எவரையும் விலை தந்தால் தழுவுகிற மகளிரது மெல்லிய தோள்கள் அறிவில்லாத கீழ்மக்கள் புகுந்து அழுந்தும் நரகம் ஆகும்.

**"இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்**
**திருநீக்கப் பட்டார் தொடர்பு"**[61]

எப்போதும் கவர்த்த மனத்தையுடைய மகளிரும், கள்ளும், சூதும், என்னும் மூன்று தொடர்புகளும், திருமகளால் கைவிடப்பட்டவருக்கு நெருங்கிய நட்பு ஆகும்.

வரைவின் மகளிரின் நோக்கம், பழகும் தன்மை, அவரை விரும்புவோர் அடையும் இழிவு ஆகியவற்றைத் திருவள்ளுவர் கூறியதைப் போல மற்ற கவிஞர்கள் கூறவில்லை என்றே கொள்ள வேண்டும்.

**பெண்களுக்குரிய பழமொழிகள்**

'பேதமை என்பது பெண்ணுக்கு அணிகலன்'
'அடுக்களைக்கு ஒரு பெண்ணும்
அம்பலத்திற்கு ஒரு ஆணும்'
'நாட்டுக்கு அவள் ராணியா இருந்தாலும்
வீட்டுக்கு அவள்பெண்டாட்டிதானே'
'கூந்தல் அழகி குடியைக் கெடுப்பாள்'
'கணுக்கால் பெருத்தால் கணவனைத் தின்பாள்'
'மாமியார் மெச்சிய மருமகள் இல்லை'
'மருமகள் மெச்சிய மாமியார் இல்லை'

‘மாமியார் ஒடச்சா மண்குடம்’
‘மருமகள் ஒடச்சா பொன்குடம்’
‘மகன் செத்தாலும் பரவாயில்லை
மருமகள் வாழக் கூடாது’
‘அண்ணனிடத்தில் ஆறுமாதம் வாழ்ந்தாலும்
அண்ணியிடம் அரைநாழி வாழ முடியுமா’
‘அண்ணன்தான் கூடப் பிறந்தவன்
அண்ணியுமா கூடப் பிறந்தவள்’
‘மக வருமுன்னே பூட்டிக்கோ கட்டிக்கோ
மருமக வருமுன்னே உண்ணுக்கோ தின்னுக்கோ’
‘அக்கா ஆனாலும் சக்களத்திதான்
அலுத்து வியர்த்து அக்காளண்டைப் போட்டாள்’
‘ஆண்பிள்ளைகள் ஆயிரம் ஒத்திருந்தாலும்
அக்கா தங்கை ஒத்திரார்’
‘ஆணாயிரம் ஒத்தாலும் பெண் நாலு ஒவ்வாது’
‘பத்து வராகனுக்கு மிஞ்சிய பதிவிரதை இல்லை’
‘காசு கொடுத்தவனே கணவன்’
‘அடுத்த வீட்டுக்காரி ஆம்பள புள்ள பெத்தாளாம்
எதிர்த்த வீட்டுக்காரி இடிச்சுகிட்டு செத்தாளாம்’
‘அயல் வீடு வாழ்ந்தால் ஒன்பது நாள் பட்டினி கிடப்பாள்’
‘கணக்கன் பிள்ளைப் பெண்சாதி கடுக்கன்
போட்டுக் கொண்டால் என்றால் காரியக்காரன்
பெண்சாதி காதை அறுத்துக் கொள்வாளாம்’
‘சாண் பிள்ளையானாலும் ஆண்பிள்ளை’

இப்படிப் பல்வேறு விதமான பழமொழிகள் நம் சமூகத்தில் மரபு வழியாகச் சொல்லப்பட்டு காலங்காலமாக பெண்கள் தரத்தை குறைவாகவே மதிப்பிட்டுள்ளனர்.

பெருவாரியான மக்கள் தொகையைப் பெற்றுள்ள இந்து மதத்தில் இருவேறு நிலைகள் உள்ளதாகக் கொள்ளலாம். தெய்வமாக மதிக்கும் கருத்தியல் கூறுகள், அடிமைத்தனம் கொண்ட நடைமுறை வாழ்க்கை ஆகியனவாகும். இந்து மதத்தில் பெண்ணுக்கென்று தனி இடமோ, இயக்கமோ இல்லை. அவள் இளமையில்

தந்தையின் தயவிலும், திருமணமானபின் கணவனின் பிடியிலும், கணவன் மறைந்தால் அல்லது முதுமைக் காலத்தில் பிள்ளைகளைச் சார்ந்தும் வாழ வேண்டிய நிலை.

கணவனோடு வாழும் பெண் 'சுமங்கலி' என்றும் 'கட்டுக்கழுத்தி' என்றும் போற்றப்படுவார்கள். கணவனை இழந்தாலும், பிரிந்து வாழ்ந்தாலும் திருமணமே செய்து கொள்ளாமல் வாழ்ந்தாலும் அப்பெண்ணுக்கு உரிய மரியாதை இருப்பதில்லை.

கிறித்துவ, முகமதியப் பெண்களும் ஏறக்குறைய இந்துப் பெண்களைப் போலவே பலவிதங்களிலும் நடத்தப்படுகின்றனர். ஜொராஸ்டிரிய மதம் பிற மதங்களை விட சமூக அளவிலும், சொத்துரிமையிலும், குடும்ப அளவிலும் மேம்பட்ட நிலையைத் தந்துள்ளது.

இலக்கிய வகையில் எடுத்துக் கொண்டால் நம் சங்க இலக்கியங்களும், தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களும் பெண்களைக் குலமகளிர், பரத்தையர், மூதின் மகளிர், சுற்றத்தார், தொழில் செய்யும் பெண்கள், கல்வி பெற்ற மகளிர், ஏவல் பெண்டிர், விறலி, கலைமகளிர் என்ற வகையில் குறிப்பிட்டுப் பேசுகின்றன.

**தேவதாசிகள்**

பண்பாட்டுத் தேவையாக பாலியல் உறவுகள் முறைப்படுத்தப்பட்டாலும், தனிக்குடும்ப முறையைப் பொறுத்தவரை தாய்வழித் தலைமையே தொடர்ந்தது. தாய்க்குப்பின் குடும்பத்தின் தலைமைப் பதவியும், செல்வாக்கும், அதிகாரமும் தாயிடமிருந்து வாரிசு முறையால் மகளை அடைந்தது. மேலை நாடுகளில் மதங்கள் உருக்கொள்ள ஆரம்பித்த போது கூட அம்மதங்களை வழிநடத்தும் தலைவர்களை நீக்கவும், பதவியில் அமர்த்தவுங் கூட பெண்கள் உரிமை பெற்றிருந்தனர். அது மட்டுமின்றி 'காசி' போன்ற இளம் பெண்கள் மதத்தை வழி நடத்தும் மத குருமார்களாகவும் திகழ்ந்தனர்.

நம்முடைய புராணங்களிலும் பண்டைய இலக்கியங்களிலும் தேவ அசுர போராட்டம் அதிகமாகக் காணப்படுகிறது. இந்தப் போராட்டத்தில் தேவர்களின் மனைவிமார்கள் அசுரர்களால் கற்பழிக்கப்பட்டதாகவும், தேவர்களின் தலைவனான இந்திரன் அவர்களைப் பூமியில் பிறந்து இறைவனுக்குத் தொண்டு செய்யுமாறு பணித்ததாகவும் அப்படி பூமிக்கு வந்த தேவர் குலப்பெண்களே தேவதாசிகளென்றும், திருக்கோயில்களில் இறைவனுக்குத் தொண்டு செய்து

தங்கள் புனிதத்தை மீண்டுமடைந்து தேவலோகம் செல்வதாகவும் பத்ம புராணம் கூறுகிறது.

இதிகாசங்கள், புராணங்கள் இவைகளில் பல்வேறு கதைகள் சொல்லப்பட்டாலும் உண்மை வாழ்க்கையில் இவர்கள் உருவானதற்கான காரணங்கள் சமூக ரீதியாகச் சொல்லப்படுகின்றது.

- ❖ உற்பத்திக் கருவிகளால் தன் செல்வத்தைப் பெருக்கிக் கொண்ட ஆணினம் பிள்ளைகளின் எண்ணிக்கைக் கூடுதலாக இருப்பின் வயலின் உற்பத்தியைப் பெருக்கலாம் எனும் பேராசையில் பெண்கள் பலரை மணந்தான்.
- ❖ முதல் மனைவிக்கு மக்கட் பேறு இல்லாத போது வாரிசு வேண்டி பல பெண்களை மணக்க ஆரம்பித்தான். முதல் மனைவி இறந்து விட்டாலோ, நோய்வாய்ப்பட்டாலோ, தனக்குத் துணை வேண்டிப் பெண்கள் பலரை மணந்தான்.
- ❖ தன்னுடைய இயல்புக்கும், ஆசைக்கும், உரியவளாகத் தன் மனைவி இல்லாவிட்டால் தன்னுடன் ஒத்துழைக்கும் பெண்களை மனைவியராக ஆக்கிக் கொண்டான்.
- ❖ உடன் பிறந்தார் இறந்து விட்டால் அவர்களின் மனைவியர்க்குக் காப்பாக இருப்பதாகக் கூறிக்கொண்டு அப்பெண்களையும் மணந்து கொண்டான்.
- ❖ வாணிபம் காரணமாக வெளியூர்களுக்குச் சென்று அங்கு பல நாட்கள் தங்க வேண்டியிருந்ததால் அவ்வூரிலும் மனைவி வேண்டிப் பல பெண்களை மணந்து கொண்டான்.
- ❖ வேறொருவரின் செல்வத்தைக் கவருவதற்காகக் கூடுதலாக அவர் தம் பெண்டிரை மணந்து கொண்டான்.
- ❖ போரில் வெற்றி பெற்றவன் பகைவனின் மனைவியையும், மகளையும் அங்குள்ள அழகிய பெண்களையும் கவர்ந்து மனைவியாக்கிக் கொண்டான்.

இவை போன்ற காரணங்களால் ஆணினம் சமூகத்தில் பல மனைவியர் மணத்தை உருவாக்கியது.

இப்படி காம இச்சை காரணமாகவோ, சொத்துரிமை காரணமாகவோ ஆண்கள் வெளிப்படையாகவோ அல்லது மறைமுகமாகவோ பெண்கள் பலருடன் தொடர்பு கொண்டிருந்த செயலே பரத்தமை தோன்றுதற்கு வித்திட்டதாகக் கொள்ளலாம். தொல்காப்பியருடைய காலத்திலும், அவருக்குப் பின் வந்த

சங்ககாலத்திலும் இலைமறை காயாக பண்பாட்டு உணர்ச்சியுடன் சொல்லப்பட்ட பரத்தமை சங்க காலத்திற்குப் பிறகு தனித் தொழிலாக உருவெடுத்தது.

வரலாற்றாசிரியர்கள் முதலாம் இராஜராஜன் காலத்தில் தான் தேவதாசிகள் கோயில்களில் பணியாற்றத் தொடங்கியதாகக் கொள்கின்றனர். ஆனால் இம்முறை பல்லவர் காலத்திலேயே தொடங்கப்பட்டுவிட்டதாக கல்வெட்டு ஆவணங்கள் தெரிவிக்கின்றன.

சங்ககாலம் தொடங்கி, காமக்கிழத்தி, காதற்பரத்தை, சேரிப்பரத்தை என்றிருந்த நிலைமாறி தத்தை, விகுருதை, பிரத்தியை, பக்தை, இருதை, அலங்காரி, உருத்திரக் கணிகை என ஏழுவகையினராகப் பிரிவுபட்டனர். இவருள் உருத்திரகணிகையர் மரபினரே கோயில்களில் பணியாற்ற அமர்த்தப்பட்டனர். இக்கருத்தினை அப்பரடிகளும், ஞானசம்பந்தரும் தம் தேவாரங்களில் குறிப்பிடுகின்றனர்.

**பொட்டுக்கட்டுதல்**

பொட்டுக்கட்டுவதென்பது ஒரு பெண் தேவதாசியாக மாற்றப்படுவதன் அல்லது அடையாளச் சடங்காகும். பொட்டு திருமாங்கல்யத்திற்கு இணையானதாகும். ஒரு பெண் தேவதாசி ஒருத்திக்குப் பிறந்து விட்டதால் மட்டுமே அந்தத் தேவதாசி உரிமையை அவள் பெற்றுவிட முடியாது. முறைப்படி பொட்டுக் கட்டுவதன் மூலமே அவளை கடவுளுக்கு அர்ப்பணிப்பதன் மூலமே அவள் தேவதாசி ஆக முடியும்.

இந்த பொட்டுக்கட்டும் சடங்கு அவள் பணிபுரியும் கோவிலில் மட்டுமே நிகழ்த்தப் பெறும். தேவதாசியாகும் பெண்ணுக்கு அவள் குடும்பத்தில் உள்ள வயதான பெண்மணியால் கோயில் மூலவர் சன்னதியில் இச்சடங்கு நிறைவேற்றப்படும். சில சமயங்களில் அக்கோயில் அர்ச்சகராலும் இச்சடங்கு செய்யப்படுவதுண்டு. இவ்விதம் பொட்டுக்கட்டிக் கொள்வதற்கு வயது ஒரு தடையாக இருந்ததில்லை என்பது கல்வெட்டுச் செய்திகளில் உறுதிப்படுகின்றது.

**“ஆந்திரப் பிரதேசத்தில் கிருஷ்ணா மாவட்டத்தில் உள்ள நாகேஸ்வரசுவாமி கோயில் கல்வெட்டு அக்கோயிலில் எட்டு வயது சிறுமி கூட தேவதாசியாகப் பணிபுரிந்ததைக் குறிப்பிடுகிறது. கர்நாடகத்தில் ஒரு பெண் அவள் வயதுக்கு வருவதற்கு முன்பாகத்தான் இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட வேண்டும் என்ற வழக்கம் இருந்தது உறுதிப்படுகின்றது. தஞ்சை மாவட்டம் நீடாமங்கலத்தில் உள்ள சந்தான ராமஸ்வாமி கோயிலில் அர்ப்பணிக்கப்பட்டு பொட்டுக்கட்டப்பட்ட**

**தாசிக்கு வயது பத்து. இவள் ஜீவிதத்திற்கு நாள்தோறும் ஒன்றைப் பட்டை சாதமும் மாதந்தோறும் ஒரு கலம் அரிசியும் கொடுக்கப்பட வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது”[62].**

கோயில் பணிக்கென்று பொட்டுக்கட்டி விடப்பட்ட தேவதாசி பெண்கள் அக்கோயில்களில் காலைசந்தி, உச்சிகால பூஜை, மாலை மற்றும் இரவு பூஜைகளின் போது சம்பிரதாயமாக தேவாரம் பாடப்பட்டு நாட்டியம் நிகழ்த்த வேண்டும் என்பது அவர்களது நித்தியப்பணியாக இருந்தது. பல தேவதாசிப் பெண்கள் ஒரே கோயிலில் இருந்தால் முறை வைத்து நடத்தப்படுவதுண்டு.

**“கி.பி.1311-இல் முகமதிய தளபதி மாலிக்காபூர் தென்னாடு நோக்கிப் படையெடுத்தான். கோயில்களைக் குறிவைத்துத் தாக்குதல்கள் நடத்தினான். இவனது தாக்குதல் திருவரங்கக் கோயில் மீதும் திரும்பியது. ஸ்ரீரங்கநாத மாணிக்கம் என்றழைக்கப்பட்ட அம்சலேகா என்ற தேவதாசி இப்படையெடுப்பில் அவளுடைய தாயார், தோழிகளையும் இழந்தாள். நிலைமை மோசமாகவே ரங்கநாதர் படிமத்தைக் காப்பாற்ற தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டு கோயிலினுள் நுழைய முயன்ற மாலிக்காபூரின் படைத்தளபதி மீது பார்வையைச் செலுத்தினாள்.**

**அவன் அவள் அழகில் மயங்கி அவளைப் பின் தொடர்ந்தான். அங்குமிங்குமாக அலைக்கழித்து மதிலின் ஓரத்தில் வைத்து அவனைக் கீழே தள்ளி கொன்றாள். இதை கேள்வியுற்ற மாலிக்காபூர் படைகள் பின் வாங்கினாலும் தங்களது தளபதியைக் கொன்ற பெண்ணைப் பழிவாங்க அவள் மீது தாக்குதலைத் தொடர்ந்தனர். பதுங்கிப் பதுங்கிச் சென்ற அவள் கால் இடறி மதிலின் வேறுபக்கமாக விழுந்தாள். படைகள் திரும்பிச் சென்று விட்டன”[63].**

அடுத்த நாள் காலையில் அறங்காவலர்கள், கால்முறிந்து உயிருக்குப் போராடும் அம்சலேகாவைக் கண்டு அவளது தியாகத்தில் ரங்கநாதரின் உற்சவச் சிலையைக் காப்பாற்றிய அவளுக்கு நன்றி கூறினர். அவள் இறக்கும் போது, எம்பெருமான் உடுத்துக்களைந்த உடையால் மூடவேண்டும். தன் உடலை கோயில் மடப்பள்ளியிலிருந்து கொண்டு வந்து நெருப்பால் தகனம் செய்ய வேண்டும். இந்த கௌரவம் தனக்கு மட்டுமன்றி, தன் இனத்தவர்களுக்கும் இப்படிச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். அன்றிலிருந்து அவள் கேட்டுக் கொண்டது நடைமுறையில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

**தேவதாசி மரபின் முடிவு**

ஐரோப்பியர்களின் வரவு இந்திய திருநாட்டின் சுதந்திரத்திற்குக் கைவிலங்கு போடப்பட்டதைப் போலவே தேவதாசியர் வாழ்க்கை நடைமுறைகளுக்கும் கருப்புத்திரையைப் போர்த்தியது. இதற்குப் பிறகு கோயில் நிர்வாகம் ஊர்ப்பெரியவர்களின் கைக்குச் சென்றது. தேவதாசிகளின் தடைச் சட்டத்தை ஆங்கில அரசு கொண்டு வந்தது. அவர்களும் வேறு தொழிலை நாடினர். குடும்ப முறைக்கு மாறினர். வேறு மாநிலங்களுக்கும் குடிபெயர்ந்தனர்.

**தேவதாசி கலைகள்**

சாதாரண பெண்களுக்கு எழுதப்படிக்கத் தடை, ஆடிப்பாடத் தடை, அலங்காரம் செய்து கொள்ளத் தடை என்றிருந்த ஆதி காலத்தில் தேவதாசிப் பெண்கள் எல்லாக் கலைகளிலும் தேர்ச்சி பெற்றார்கள். அந்தக் காலத்தில் எழுதப்பட்டிருந்த காமசூத்திரம் கூட ஆயகலைகள் 64-உம் தெரிந்திருந்தால் அவளுக்கு தேவதாசி அந்தஸ்து கிடைக்கும். இப்படி கலைகளில் சிறந்து விளங்கிய தேவதாசிகளில் அழகான தேவதாசிகளை அந்தப் பகுதிகளில் உள்ள ஆண்கள் தங்களின் விருப்பத்துக்குரியவர்களாகக் கொண்டாடினார்கள்.

ஐரோப்பாவில் இரண்டாவதாக செய்யும் திருமணமும், திருமணமான பெண்ணுடன் உறவு கொள்வதும் துர்நடத்தையாகும். ஆனால் இந்தியாவில் கண்ணன், தசரதன் காலத்திலிருந்து மேற்படி காரியங்கள் நன்னடத்தைகளாகவே கருதப்பட்டு வருகின்றன. ஐரோப்பாவிலும் இன்றைய இந்தியாவிலும் கூட ஒரு பெண் பல ஆண்களுடன் உறவு கொள்வது உசிதமானதாகக் கருதப்படுவதில்லை. ஆனால் திரௌபதிக்கு ஐந்து கணவர்கள் இருந்தார்கள். அப்படியிருந்தும் அவள் புனிதமான பதிவிரதையாகவே விளங்கினாள் என்பது நமக்குத் தெரியும். இமயமலையில் வாழும் சில ஜாதிகளிலும் இன்றும் ஒரு பெண் பல கணவர்களைக் கொண்டிருப்பதும், சகோதரர்கள் அனைவருக்கும் ஒருத்தியே மனைவியாக இருப்பதும் காணப்படுகிறது. அம்மக்கள் இதை துர்நடத்தையாகக் கனவிலும் கருதுவதில்லை. அங்குள்ள மக்கள் ஒருவனுக்குள்ள பல மனைவியரைப் பற்றியோ, ஒருத்திக்குள்ள பல கணவன்மார்களைப் பற்றியோ சொல்வதற்கு சங்கோஜப்படுவதில்லை. திரௌபதியும் தனக்கு ஐந்து கணவர்கள் என்று சொல்வதற்கு சங்கோஜிக்கவில்லை அல்லவா! சமுதாயம் எதை ஒப்புக் கொண்டதோ அது நன்னடத்தையாகும்.

நிலப்பிரப்புக்கள் காலத்தில் ஆஸ்தியையும் அந்தஸ்தையும் பார்த்தே திருமணங்கள் நிச்சயிக்கப்பட்டன. கணவன் மனைவியைக் கண்காணிக்கவும்,

அவள் மேல்சந்தேகம் தோன்றினால் அவளைக் கொலை செய்யவும் உரிமை இருந்தது. கணவன் எவ்வளவு துர்நடத்தையுள்ளவனாக இருந்தாலும் மனைவியானவள் அதை வாய்மூடி மௌனியாக பொறுத்துக் கொண்டு தான் கிடக்க வேண்டும். பெண்ணின் துர்நடத்தையை சமுதாயம் அவமானதாகக் கருதியது. ஆணின் துர்நடத்தையைச் சாதாரண விஷயமாகக் கருதி கண்ணை மூடிக்கொண்டது.

**விலைமாதர்கள் நிலை**

அருணகிரியார் விலைமாதர் வீடுகளே சொர்க்கம் என்று கிடந்தவர். ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு விதமான அழகு. அந்த அழகில் திருப்தியடைய முடியவில்லை. ஒருத்தியை பார்த்துவிட்டு மற்றொருத்தியை பார்க்கும்போது, இன்னொரு பேரழகியாய்த் தோன்றுகிறாள். இதில் அழகுக்கு எல்லை வகுக்க முடியுமோ? அந்தப் பேரழகுப் பெட்டகங்களை மறக்கத்தான் முடியுமோ? என்னவிலையானாலும் அவர்களை அணுஅணுவாக அனுபவித்து விட வேண்டும் என ஆவல் அருணகிரியாரை உந்தியது. அருணகிரிக்கு உடலில் இரத்தம் சுண்டி நாடி தளர ஆரம்பித்தது. கைப்பொருளை எல்லாம் செலவழித்தபின் ஒவ்வொருவராக இவரை விட்டு விலகத் தொடங்கினார்கள்.

**“உடலில் ரோகம் துன்புறுத்த, உள்ளத்தில் சோகச் சுமைகள் உருக்குலைக்க, பரத்தையரின் சாகசங்கள் அனைத்தையும் உணர்ந்த அவர் தம்மை இம்மாயப் படுகுழியிலிருந்து மீட்பவராக முருகப் பெருமானையே நினைத்து வணங்கினார்”[64].**

அருணகிரியார் வாழ்ந்த காலத்தில் முகமதியர்கள் படையெடுப்பு நிகழ்ந்த காலம். எனவே சோழமன்னர்கள் வழங்கிவந்த நிவந்தங்கள் நின்று போயின. குறுநில மன்னர்களால் ஏற்பட்ட குழப்பங்கள், தெலுங்கர், கன்னடர்கள் செல்வாக்கு இவை காரணமாகத் தங்கள் செல்வாக்கை இழந்த தேவதாசிகள் தங்கள் உடலழகை விற்றுப் பிழைக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டனர். பெருங்கோயில்கள் இருக்கும் இடங்களில் தொண்டு செய்து வந்த அவர்கள் வறுமை காரணத்தால் இழிநிலைக்குத் தள்ளப்பட்டனர். விலைமகளிர் கோயில்கள் நிறைந்துள்ள ஊர்களிலேயே அதிகம் இருந்துள்ளனர்.

**விலைமாதர்களின் தேவை**

பெரிய வீட்டுப் பெண்களின் ஒழுக்கம் மிகவும் முக்கியம் என்று கருதப்படும் வரையில், திருமணம் என்னும் சடங்குடன் வேறோர் ஏற்பாடும் அவசியமாகும். அந்த

ஏற்பாடுதான் விலைமாதரை அமர்த்திக் கொள்ளல். அது உண்மையில் திருமண ஏற்பாட்டோடு சம்பந்தப்பட்ட தென்றே கொள்ளலாம். வீடு அல்லது இல்லறத்தின் புனிதத் தன்மையையும், நம்முடைய மனைவியர், பெண்களின் ஒழுக்கத்தையும் காக்க உதவும் சானனமே வேசித் தொழில் என்று லெக்கி (Lecky) என்பார் ஒரு நூலில் கூறியுள்ளதை யாவரும் அறிய முடிகிறது.

ஆடவர் மணமாகாமல் இருக்கும் போதோ, அல்லது தம்முடைய மனைவியிரைப் பிரிந்து வெளியூர்களில் பிரயாணம் செய்யும் போதோ புலனடக்கம் அனுஷ்டிக்க முடியாமலிருப்பர். அப்போது அவர்களுடைய இச்சையைப் பூர்த்தி செய்து கொள்ள உயர்ந்த குடும்பப் பெண்கள் கிடைக்காத நிலையில் வேசித் தொழில் தேவைப்படுகின்றது. ஆகவே ஆடவர்களின் தேவைக்காகச் சில வகுப்புப் பெண்களை சமூகமே ஒதுக்கி வைக்கின்றது. ஆண்களின் இத்தகைய தேவையை அங்கீகரிக்கச் சமூகம் வெட்கப்படுகின்றது. ஆனால் அத்தேவையை முழுதும் பூர்த்தியாக்காமல் விட்டு விடுவதற்கும் சமூகம் அஞ்சுகின்றது. தேவைப்பட்ட கணமே விலைமகள் கிடைத்து விடுகின்றாள் என்பது மட்டுமல்ல, அவளுடைய தொழிலுக்கு வெளியே வாழ்க்கையில் வேறு எதிலும் கலந்து கொள்வதில்லையாதலால் அவள் தன் தொழிலைச் சிரமமின்றி இரகசியமாக நடத்த முடிகிறது. அவளிடம் இன்பம் நுகரும் ஆடவனோ, கௌரவம் குறையாமல் மீண்டும் தன் மனைவி, குடும்பம் என பழையபடி வாழ்க்கை நடத்த முடிகிறது.

பழங்காலத்திலிருந்தே இந்தியாவில் விலைமாதர்கள் இந்தியாவின் பல பாகங்களிலும் வாழ்ந்து வந்தனர். இவர்களைக் கணிகையர்கள், தாசிகள் என்று அழைப்பதுண்டு. இவர்களின் வாழ்க்கையில் அவ்வளவாக நியதிகள் வரையறுக்கப்படவில்லை. அவர்கள் பேரழகு படைத்தவர்களாகவும், வாளிப்பான உடலுடனும், இசை, நடனம் போன்றவற்றில் தேர்ச்சி பெற்றவர்களாகவும், அரசவையில் அந்தஸ்து பெற்றவர்களாகவும் விளங்கினர். நடித்தல், பூமாலை புனைதல், நூல்வேலை, ஆடைசெய்தல், சமையல், வாசனை திரவியம், மாந்திரிக நிகழ்ச்சிகள், தோட்டம் அமைத்தல், கைவேலை செய்தல், பலமொழிகற்றல், கிளிகளுக்குப் பேசக்கற்றுக் கொடுத்தல் போன்ற அறுபத்து நான்கு கலைகளிலும் தேர்ச்சி பெற்று இருந்துள்ளனர்.

அரசர்களின் அந்தப்புரத்தில் பலநாடுகளைச் சார்ந்த அழகிகளை வைத்திருந்தனர். இவர்கள் அரசருடனும், மற்ற சமயங்களில் ஏனைய அரசப் பிரநிதிகளுடனும் தொடர்பு கொண்டிருப்பர். அரசருக்குத் தேவையான

பணிவிடைகள் செய்தல், மற்றும் பெரும் படையுடன் போர் முனைக்குச் செல்லும்போதும் கணிகைகள் உடன்செல்லுதல் வழக்கமாக இருந்துள்ளது.

**பெண்களின் அவசரகால திருமணம்**

பெண்கள் பொதுவாக சிற்றின்ப உணர்ச்சி கொண்டவர்கள் என்றும் அவர்கள் வயது வந்ததும் தம் பெற்றோர்கள் எவ்வளவு பாதுகாத்தாலும் அவர்கள் தமக்கென காலனை நாடுவார்கள் என்று எண்ணினர். அவ்வாறு அவள் சென்று கற்புத்தன்மையை இழந்து விட்டால் அவள் வாழ்நாள் முழுவதும் திருமணம் செய்து கொடுக்க முடியாது என்பதாலும் பெற்றோர்கள் உரிய சமயத்திலேயே திருமணம் செய்து வைக்க முயன்றனர். அவ்வாறு திருமணம் செய்து வைக்காவிடில் தவறான வழியில் சென்று அதனால் அவளை சாதியை விட்டு நீக்கி வைக்கும் நிலைக்கு ஆளாகிவிடுவார்கள். அதனால் பிச்சை எடுத்தோ, விலைமாதராகவோ ஆக நேரிடுகிறது. ஆகவே பெற்றோர்கள் பெண் பிள்ளைகளைப் பெருஞ்சுமையாகக் கருதி உள்ளனர். தம் மகளுக்கு விரைவில் திருமணம் முடிப்பதையே விரும்பினார்கள்.

ஆடல் பாடலில் வல்ல பரத்தையர்கள் சங்ககாலந்தொட்டே தமிழகத்தில் இருந்துள்ளனர். பரத்தையர் சமுதாயம் பெண்மக்கள் பெறுவதையே விரும்பினர். கணிகையர் குலத்தில் பல பிரிவுகள் இருந்துள்ளது. உருத்திரக்கணிகை மாராமபதியிலார் குலத்தில் தோன்றிய பரவையாரைச் சுந்தரர் மணந்து கொண்டார். இதனால் பரத்தையரும் குலமகளிராயினர். மாதவி, நருமதை போன்றவர்கள் தங்கள் குல ஒழுக்கத்தை வெறுத்துக் கற்பு நெறியை விரும்பியவர்கள். எனவே குலமகளிரது கற்பு வாழ்க்கை கணிகையரைக் கவர்ந்திருக்க வேண்டும் எனக் குறிப்பிடப்படுகிறது.

**பெண்களின் சுதந்திரப் பார்வை**

பெண்கள் அதிக அளவில் சுதந்திரம் பெறத்தொடங்கியதிலிருந்து மணவாழ்வில் பண்டைக் காலத்தில் இருந்ததை விடத் தம்பதிகளிடையே பரஸ்பர நம்பிக்கை குன்றுவதற்கான பல வாய்ப்புகள் தோன்றியுள்ளன. பல வழிகளில் பெண்களின் விடுதலை இயக்கம் மணவாழ்க்கையை இன்னும் கடினமாக்கி விட்டன. பழைய காலத்தில் மனைவி கணவனுக்குக்கேற்ப நடக்க வேண்டியிருந்தது. ஆனால் கணவன மனைவியின் போக்குக்கேற்றவாறு நடக்க வேண்டியதில்லை. இன்றோ பெண்கள் தம்முடைய தனித்தன்மையைப் பேணுவதற்குத் தமக்குள்ள உரிமையைப் பற்றியவராயும், தாம் ஈடுபட்டுள்ள அலுவலில் நாட்டம்

கொண்டவராயும் இருப்பதால் ஓரளவுக்கு மேல் கணவன்மாரின் விருப்பத்துக்கேற்ப நடக்க மறுத்துவிடுகின்றனர்.

ஒரே கூரையால் பாதுகாக்கப்பட்ட இதயங்களின் இணைப்பு ஒரு குடும்பமாகும். அன்பு, பரிவு, பாதுகாப்புணர்வு, ஒன்றுபட்டு வாழ்வது, சகிப்புத்தன்மை ஆகியவற்றின் உறைவிடம் குடும்பம். இது ஐக்கிய நாடுகளின் அமைப்பு குடும்பம் பற்றி அளிக்கும் விளக்கம் ஆகும். ஆனால் வேகமாக வளர்ந்து வரும் அறிவியல், பொருளியல், சமூகச் சூழலில் குடும்பம் எதிர்கொள்ளும் சவால்கள்தான் எத்தனை? தொழில் வளர்ச்சியடைந்த நாடுகளில் எதிர்காலத்தில் குடும்பம் என்ற அமைப்பு நிலைத்திருக்குமா என்ற சந்தேகம் எழுந்துள்ளது. திருமணம் செய்து கொள்ளாமலேயே வாழும் தம்பதியர், குடும்ப பொறுப்பை ஏற்க விரும்பாதவர்கள், தனியாய் வாழ்பவர்கள், ஓரினச்சேர்க்கையை விரும்புபவர்கள், குழந்தைகளை வைத்துக் கொண்டு பிரிந்து வாழும் பெற்றோர்கள், ஒழுங்கற்ற திருமணங்கள், கலாச்சார சீரழிவு, சுயநலம், தனிநபர் வாதம் ஆகிய போக்குகள் குடும்பத்தின் அடித்தளத்தையே ஆட்டம் காண வைக்கின்றன.

அலுவலகத்திலிருந்து நாங்கள் வீடு திரும்பும்போது செருப்பை மட்டும் கழட்டி வாயிலில் வைப்பதில்லை. சமத்துவத்தையும் வெளியே விட்டு விடுகிறோம் என ஒரு பெண் கூறியது நடைமுறையாக உள்ளது. குடும்பத்தில் பெண் ஒரு சுமைதாங்கியாக, மிதியடியாகத் தொடர்ந்து பயன்படுத்தப்பட்டிருக்கிறாள் என்பது வரலாற்று உண்மை ஆகும்.

ஓர் அப்பா கெட்டுக் குட்டிச் சுவரானாலும் ஒரு குடும்பம் பிழைத்துவிடும். ஆனால் ஓர் அம்மா அப்படியாகிவிட்டால் அந்தக் குடும்பமே அழிந்து விடும். இந்த நாட்டின் கலாச்சாரத்தின் உறைவிடமே நம்நாட்டுப் பெண்கள் தான். நம் நாட்டுப் பொருளாதாரத்தின் ஆதாரமே குடும்பம்தான். அந்தக் குடும்பத்தின் மையமே பெண்தான். இந்த நாட்டில் வாழையடி வாழையாக சமய நம்பிக்கைகள் தழைத்து வந்திருக்கின்றதென்றால் அதற்குக் காரணம் நம் நாட்டு பெண்கள்தான். ஆக குடும்பமும் சரி, சமுதாயமும் சரி, கலாச்சாரமும் சரி, பொருளாதாரமும் சரி எல்லாம் பெண்களைச் சார்ந்துதான் அமைந்திருக்கின்றன எனலாம்.

கலாச்சார ரீதியாகவும், பெண்களுக்கே உரித்தான தாய்மையின் காரணமாகவும் இயற்கையாகவே தன்னையடக்கி மற்றவர்களைப் பராமரிக்கும் குடும்பப் பாங்கின் மூலமாகத்தான் அவர்களுக்கு மரியாதையும், மதிப்பும் உருவாகின்றன. புகழுக்கும், மரியாதைக்கும், வித்தியாசம் இருக்கிறது.

புகழ்தனிநபரைச் சேரும், ஒரு தனிப் பெண்ணின் புகழ் பெண் என்கிற இனத்தைச் சென்றடையாது. பெண் என்கிற வர்க்கத்துக்கான குணங்களின் மூலமாகத்தான் அவர்களுக்குச் சமுதாயத்தில் மரியாதை கிட்டும்.

பெண்கள் உடலியல், உயிரியல் கூற்றின்படியோ இயல்பின் காரணமாகவோ விபச்சாரம் செய்யும் எண்ணம் இல்லாதவர்கள். நம்நாட்டுப் பெண்களுக்கு நாம் நால்வகை குணங்களைக் கொடுத்து எல்லை மீறாமல் வைத்திருக்கிறோம். தாய், தாரம், தமக்கை, தங்கை என்று எத்தனை அவதாரம் எடுத்தாலும் மனைவியிடம் மட்டுமே மனதாலும், உடலாலும், உணர்வாலும் கவரப்படுகிறோம். இது நம் சமுதாயம் ஏற்படுத்தியிருக்கும் நல்ல ஏற்பாடு ஆகும்.

**பண்டைக்கால மகளிர் வாழ்க்கை**

அன்யோன்யமான உறவுகள் ஒரு போராட்டமாக மாறாது. ஆனால் எரிச்சலிலும், வெறுப்பிலும் சிக்கிக் கொண்டு வேண்டா வெறுப்பாக வேறு வழியின்றி பழகுகின்றனர். இதற்குக் காரணம் என்ன தெரியுமா? உங்கள் கணவர் ஓர் ஆண் என்பதையும், நீங்கள் ஓர் பெண் என்பதையும் உங்களையும் மறந்து விடுவதுதான். நான் ஆண் உசத்தி, பெண் குறைவு என்று நினைக்கக் கூடாது.

ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள முக்கியத் தேவைகளும், உணர்வுகளும், அவற்றின் வெளிப்பாடுகளும் அடியோடு வேறு, அன்பு என்ற சொல்லுக்கு இருவர் கொடுக்கும் அர்த்தங்களே வேறு என்று கூறுகிறது நவீன அறிவியல். உதாரணத்திற்கு பெண்ணின் மூளைக்கு அதிமுக்கியத் தேவை உறவு முறைகள். அந்த உறவினை ஏற்படுத்திக் கொள்வது எப்படியெனில் தன்னுடைய பிரச்சனைகளை ஒருவரிடம் விலாவாரியாக பேசுவதன் மூலம் பிரச்சனை தீருவது, தீராமல் போவது இரண்டாம் பட்சம். பேசுவதுதான் முக்கியம் அதன் மூலம் உறவும் பலப்படுகிறது.

ஆனால் ஆணின் மூளையில் பிரச்சனை வந்தால் அதற்கு உடனடியாக தீர்வு கண்டுவிட்டுத்தான் மறுவேலை பார்க்கும். இந்த இருவரும் ஒன்று சேரும் போது என்ன நடக்கும் என்று யோசித்துப் பாருங்கள். நீங்கள் அன்றைக்கு நடந்ததை வருத்தத்தோடு கூற வருகிறீர்கள். உங்கள் கணவரோ ‘சீக்கிரம் விஷயத்திற்கு வா’ என்கிறார். எப்படி இருக்கும் உங்களுக்கு? அவருக்கு உங்கள் மேல் அலாதி அக்கறை. அதனால் உங்களுடைய பிரச்சனையை உடனடியாகத் தீர்க்க வேண்டும் என்று நினைக்கிறார் என்று எடுத்துக் கொள்ள வேண்டும்.

நம் பண்டைக்கால மகளிர் நன்கு உணர்ந்து தெளிந்ததனால் தான் வாழ்க்கையைத் தொலைத்து விடாமல் சொர்க்கமாக்கிக் கெள்ள முயன்றதோடு மட்டுமல்லாமல் வெற்றியும் கண்டிருக்கிறார்கள். இதற்குப் பெயர் விட்டுக் கொடுப்பதுமல்ல, ஆணாதிக்கமுமல்ல, இருப்பதை உணர்ந்து அதற்கேற்ப நடந்து கொள்ளுவதாகும். நாம் சாலையில் சைக்கிளில் செல்வதாக வைத்துக் கொள்வோம் எதிரே பேருந்து வருகிறது. ஒதுங்கி வழி விடுகிறோம். அடுத்து சுமை ஏற்றிய லாரி வருகிறது. அதற்கும் ஒதங்கி வழி விடுகிறோம். நமக்குக் கோபமும், எரிச்சலும் வருகிறது. எத்தனை முறை நாமே விலகி வழிவிடுவது? இந்த முறை எதிரில் வாகனம் விலகட்டுமே என்று நாம் பேருந்தில் மோதிக் கொள்வோமா? அப்படி மோதினால் முடிவென்னவாகும்? இதை நம் நாட்டுப் பெண்கள் நன்கு உணர்ந்திருந்த காரணத்தால் தான் வாழ்க்கையைச் சுவையுள்ளதாக ஆக்கிக் கொள்ள அவர்களால் முடிந்தது.

**அழகான பெண்களில் வரைவின் மகளிர்**

நெதர்லாண்டு நாட்டிலுள்ள 'ராட்போட்' பல்கலைக்கழக விஞ்ஞானிகள் அழகான பெண்களைக் கண்டால் ஆண்களுக்கு ஏற்படும் ரசாயன மாற்றம் என்ன? என்பது குறித்து ஆய்வு நடத்தினார்கள்.

முதலில் அழகான மாடல் பெண்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு அவர்களிடம் கல்லூரி மாணவர்களை விட்டு ஒவ்வொரு பெண்ணிடமும் ஒரு மாணவன் மிக அருகில் இருந்து ஏழு நிமிடங்கள் என்னவேண்டுமானாலும் பேசலாம் என அனுமதி தந்தனர். மிக நெருக்கமான சூழ்நிலையில் அழகான பெண்களைக் கண்டதால் கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை, என்ன பேசுவது என்றே தெரியவில்லை. நாக்குழறிப் போனது, அசடு வழிந்தார்கள். காரணம் பாலுணர்வு தூண்டப்பட்டு மூளை மழுங்கடிக்கப்பட்டது தான் ஆகும்.

அதேபோல் மாடல் வேலை செய்யும் ஆடவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களோடு கல்லூரிப் பெண்களைப் பேச விட்டனர். நெருக்கமான சூழலில் இருந்த போதும் அம்மாணவிகள் மிகத் தெளிவாகப் பேசினர். எந்தவிதமான தடுமாற்றமும் இல்லை. தன்னுடன் பேசும் ஆடவன் உடல் நலத்துடன் இருக்கிறானா? வசதி உள்ளவனா? இளமைத் துடிப்பு உள்ளவனா? என்பதை முக்கியமாகக் கவனித்தார்கள். பாலுணர்வு தூண்டலோ எந்தவிதமான மாற்றமுமோ ஏற்படவில்லை.

உலகின் எந்த இன ஆடவர்களிடமும், எந்த மொழி இலக்கியத்திலும் பாலியல் அடக்கம் உடையவர்கள் என்று காட்டப்படுவது குறிக்கோளுக்காக இருக்க முடியுமே தவிர உண்மை அதுவன்று என்பது அனைவரும் அறிந்ததே. எந்த வயதிலும், எந்த நிலையிலும் பெண்கள் தங்களை அழகுபடுத்திக் கொள்வதில் முனைப்பாகவே இருக்கிறார்கள். காரணம் தங்கள் கணவன் தங்களை விட்டு விலகி விடக் கூடாது என்பதில் உள்ள கவனமேயாகும். பெண்கள் சிலர் தங்கள் துணைவர்களிடம் கடுமையாக நடந்து கொள்வதும் தரம் தாழ்ந்து பேசுவதும் நாம் காணக் கூடிய ஒன்றுதான். இதையெல்லாம் பொறுப்பது போல் நடித்துக் கொண்டு இன்னொரு பெண்ணின் மீது நாட்டம் கொள்வர் ஆடவர். 1932 முதல் தமிழகத்தில் விபச்சாரத் தடைச்சட்டம் நடைமுறையில் உள்ளது. அப்படியெனில் ஒழுக்கம் மேம்பட்டிருக்க வேண்டாமா? ஒழுக்கச் சிதைவு தலைவிரித்தாடுகிறது. பேதைப் பருவம் முதல் பேரிளம் பெண்வரை பாலியல் வன்கொடுமைக்கு ஆளாகிறார்கள்.

ஆணும் பெண்ணும் சங்கமிக்கும் பாலியல் தொடர்பில் ஒரு ஆண்மகன் நினைத்தால் எந்தப் பெண்ணையும் கற்பிழக்கச் செய்ய முடியும். ஆனால் எத்தனை பெண்கள் நினைத்தாலும் ஒரு ஆடவனை அவன் விரும்பினால் தவிர அவனை வன்புணர்ச்சிக்கு உள்ளாக்க முடியாது. இது இயற்கையின் கொடையாக ஆண்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. ஏறக்குறைய பதினைந்து வயதில் ஆண்மையைப் பெறும் ஒரு இளைஞன் எத்தனை காலம் ஆற்றியிருக்க முடியும்? வேலை நிமித்தம், வெளியூர் செல்லல், பலரோடு பழகுதல் ஆகியவை அவர்களை நிலையிலிருந்து பிறழ வைக்கிறது.

மனைவி உள்ளவன் மட்டும் தான் இன்பம் காணமுடியுமென்றால் திருமணம் செய்த பிறகுதான் அந்த ஆசை வர வேண்டும். வீடு உள்ளவன் வீட்டில் உண்கிறான். அது இல்லாதவன் விடுதியில் உண்கிறான். அதுதான் வரைவின் மகளிர். மனிதயினம் ஆணும் பெண்ணுமாகப் படைக்கப்பட்டதிலிருந்து இந்நாள் வரை பெண்கள் அடங்கி இருந்தாலும், அடக்கப்பட்டிருந்தாலும் அதுவும் நன்மைக்கே. இதை நன்குணர்ந்த சமுதாயத்தின் ஏற்பாடுதான் வரைவின் மகளிர் ஆவார்கள்.

குடும்பம்தான் சமுதாயத்தின் அச்சாணி. அந்தக் குடும்பம் பல்கலைக் கழகமாக இருக்க பெண்களே உறுதுணை. அவர்கள் பெருமை பெற

வேண்டுமெனில் வரைவின் மகளிரும் உலாவந்து தான் ஆக வேண்டும். அவர்கள் இல்லையென்றால் குடும்பம் என்ற அமைப்புச் சீர்குலைந்து விடும். இதனை,

**“இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்**

**மரப்பாவை சென்றுவந் தற்று”**[65]

வறுமையால் இரப்பவர் இல்லையானால், குளிர்ந்த இடத்தையுடைய பெரிய உலகினரின் போக்கும், வரவும், மரப்பாவை இயந்திரக் கயிற்றால் சென்றுவந்தாற் போன்றதாகும். வரைவின் மகளிர் இல்லாத உலகமும் மரப்பவை உலவும் உலகமாகத்தான் இருக்கும்.

உலக இலக்கியங்களாகட்டும், தமிழ் அக இலக்கியங்களாகட்டும் வரைவின் மகளிர் மூலஸ்தானத்திற்கு முன்னிருக்கும் காவல் தெய்வங்களைப் போன்றவர்கள். இயற்கை ஆணினத்திற்குச் சில நன்கொடைகளை கொடுத்திருக்கிறதென்பது உண்மை ஆகும்.

தொல்காப்பியப் பொருளதிகார மாளிகையில் நுழைந்தால் ‘தலைவி’ என்னும் ஒப்பிலா மங்கையை, கற்புக்கரசியை பண்பின் திருவுருவைக் கண்டு மகிழலாம். ஏறத்தாழ மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே பெண்பாலார்க்குரிய நுண்மாண்நுழை புலத்தை தொல்காப்பியர் போற்றிப் புகழ்ந்துள்ளார். இடைக்காலத்தை பெணடிர் தம் அறிவை இழிந்தும், பழித்தும் பேசிய நிலை யாங்ஙனம் எழுந்தது என்பது விந்தைக்குரியதே. காப்பியர் கூறும் காரிகையைத்தான் வள்ளுவர் இளங்கோ போன்றோர் தம் சொற்கோவிலில் வடித்துப் பொற்கோயில் எழுப்பினார் போலும்.

நாடும், வீடும் செழிக்க, செந்நெறி தழைக்க, மனித இனம் மாண்புற, சமுதாயம் மணம் வீச வரைவின் மகளிர் தங்களை இழிவுபடுத்திக் கொண்டு தியாகத்தில் வாழ்கின்றார்கள் என்பது மிகை ஆகும்.

## தொகுப்புரை

- தமிழர்கள் இயற்கையோடு ஒட்டிய வாழ்வை வாழ்ந்து வந்தனர். குடும்பமே சமுதாய வாழ்க்கையின் அடிப்படையாக இருந்தது. காதலுக்கு காரணம் ஊழ் என்று நினைத்தனர். காதல் என்பது மென்மையான, ஆழமான சொல் ஆகும். சங்ககால மக்கள் காதலித்தும் திருமணம் செய்து உள்ளனர்.
- 'விறலி' என்பவள் உள்ளத்து உணர்வுகளை வெளிப்படுத்தி ஆடுபவள். பாணர் குலப்பெண். பதினாறு வயதுடையவள். ஆடுதல், பாடுதல், இசைத்தல், உரைநிகழ்த்துதல் ஆகியவை இவளுடைய தொழில் ஆகும். பரத்தையற் பிரிவு என்பது பிரிவு வகையில் சொல்லப்படாவிட்டாலும், அப்பிரிவு விலக்க இயலாத ஒன்றாகவும் உள்ளது. பரத்தையரைப் பொதுமகளிர், பொருட்பெண்டிர், விலைக்கனிகை, விலைநலப் பெண்டிர் முதலிய பெயர்களில் அழைக்கப்பட்டனர்.
- பரத்தையரிலும் ஒத்தகிழத்தியர், இழிந்த கிழத்தியர், வரையப்பட்டார் என மூவகையைத் தொல்காப்பியர் சுட்டுவார். திருக்குறளில் வரைவின் மகளிர் பற்றிய செய்திகள் பரந்து காணப்படுகின்றன. வடமொழியாளர் வாத்ஸ்யாயனர் பரத்தையர் பற்றி விரிவாகக் கூறியுள்ளார். நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், மதுரைக் காஞ்சி ஆகியவற்றில் பரத்தையர் பற்றிய செய்திகள் விரிவாக அமைந்துள்ளன.

**இயல் ஐந்து**

**சான்றெண்விளக்கம்**


1. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-135
2. பாலையன் அ.ப-புறநானூறு பா-86
3. மேலது பா-278
4. மேலது பா-91
5. மேலது பா-279
6. மேலது பா-312
7. அறிவரசன் ந முனைவர் -பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-28
8. பாலையன் அ.ப-புறநானூறு பா-211
9. மேலது பா-256
10. அறிவரசன் ந முனைவர் - பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-33
11. மேலது பக்-33
12. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - பதிற்றுப்பத்து பா-51
13. மேலது பா-18
14. மேலது பா-86
15. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-80
16. அறிவரசன் ந முனைவர் -பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-29
17. பாலையன் அ.ப-புறநானூறு பா-32
18. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை -பதிற்றுப்பத்து-பா-44
19. மேலது பா-52
20. மேலது பா-89
21. மேலது பா-51
22. மேலது பா-54
23. மேலது பா-43
24. மேலது பா-48
25. மாணிக்கவாசகன் ஞா-மதுரைக்காஞ்சி பா-583
26. பாலையன் அ.ப-புறநானூறு பா-365
27. புலியூர்க்கேசிகன்-பரிபாடல் பா-9 18,19-வரி
28. மேலது பா-20 வரி-49
29. அங்கமுத்து முதலியார் டி.என் -அகநானூறு பா-256

30. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-குறள்-913
31. மேலது குறள்-920
32. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-களவியல் நூ-2
33. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-366
34. புலியூர்க்கேசிகன்-ஐங்குறுநூறு பா-110
35. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-229
36. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-1289
37. அறிவரசன் முனைவர் ந -பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-70
38. அறிவரசன் முனைவர் ந -பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-221
39. மேலது பக்-221
40. மேலது பக்-221
41. மேலது பக்-222
42. மேலது பக்-168
43. மேலது பக்-168
44. மேலது பக்-168
45. மேலது பக்-169
46. மேலது பக்-171
47. மேலது பக்-172
48. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-1289
49. அறிவரசன் முனைவர் ந -பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-255
50. அங்கமுத்து முதலியார் டி.என்-அகநானூறு பா-256
51. புலியூர்க்கேசிகன்-திருக்குறள் 907
52. மேலது-911
53. மேலது-912
54. மேலது-913
55. மேலது-914
56. மேலது-915
57. மேலது-916
58. மேலது-917
59. மேலது-918
60. மேலது-919

61. மேலது-920

62. முருகேசன்-வரலாற்றில் தேவதாசிகள் பக்-111

63. மேலது பக்-118

64. மேலது பக்-233

65. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-1058

## முடிவுரை

இருபத்தோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் மனித இனம் அறிவியல் வளர்ச்சியினாலும், ஊடகங்களின் துணையாலும் நாகரிக வாழ்வில் பெரிய மாற்றங்களைக் கண்டு வளர்ந்து கொண்டிருக்கின்றது. ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு நிமிடமும் பிற நாடுகளுடன் தொடர்பு கொண்டிருக்கின்றது. அந்த வகையில் மக்கள் உருவாக்கிய உபகரணங்கள் பயன்பாட்டில் உள்ளன.

சங்ககாலம் முதல் முறையாக தோன்றியது. 450 கோடி ஆண்டுகளுக்கு முன் தோன்றிய பூமிப்பந்தில் 100 கோடி ஆண்டுகளுக்கு முன் கடல் தோன்றி 50 கோடி ஆண்டுகளுக்கு முன் நுண்ணுயிரிகள் தோன்றி 3 இலட்சம் ஆண்டுகளுக்கு முன் மனிதன் தோன்றினான்.

மனித இனம் தோன்றிய போதே இலக்கியமும், இலக்கணமும் தோன்றின. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு போன்ற நூல்கள் இலக்கியம் ஆகும். அகத்தியம், தொல்காப்பியம் இலக்கணம் ஆகும். இவை சங்க இலக்கிய கால நூல்கள் எனப் பெயர் பெறுகின்றன.

சங்ககால மக்கள் அகம், புறம் என இருவிதமான வாழ்க்கை முறையை கடைபிடித்து வாழ்ந்து வந்தனர். அகவாழ்க்கையை ஐந்திணைகளாகப் பிரித்தனர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பனவாகும். ஒழுக்கமே திணைகளுக்கு அடிப்படை முதல், கருப்பொருட்களின் அடிப்படையில் உரிப்பொருள்கள் அமைந்தன.

சங்க இலக்கியத்தில் மொத்தப் பாடல்கள் 2387 ஆகும். சங்க இலக்கியப் பாடல்கள் அனைத்தும் காதல், வீரம், சமுதாய வாழ்க்கை, கல்வியின் சிறப்பு போன்றவற்றைப் பற்றிப் பேசுகின்றது.

மனித இனம் பெருகத் தொடங்கிய போது இனக்குழு வாழ்க்கை ஏற்பட்டது. குழந்தைப் பேற்றின் காரணமாகத் தாய்வழிச் சமூகம் ஏற்பட்டது. குழந்தைப் பேறு உண்டாகத் தந்தையும் காரணம் என்று ஏற்பட்டபோது தந்தை வழிச் சமூகமும் ஆணாதிக்கமும் ஏற்பட்டது.

சமூகமானது விரிவடைந்த போது பழக்க வழக்கங்களில் சிறிது மாற்றம் ஏற்பட்டது. இப்படிப் பல சமூகங்கள் கிளைவிடத் தொடங்கிய போது சமுதாயம் ஏற்பட்டது. மனித இனத்தில் உறவு முறைகள் ஏற்பட்டன. சங்க காலச் சமுதாயம், குடும்பம், சமூகம், அரசு இவைகள் ஏற்பட்டு மனித வாழ்க்கையில் பண்பட்ட நிலை உருவானது. சங்ககாலத்தில் மனையின்கண் இருந்து மனையறம் நிகழ்த்தும்

உரிமையும் இல்லறத்தில் தலைமை தாங்கி நடத்திச் செல்லும் சிறப்பும் மகளிர்க்கே உரியனவாக இருந்தது. உயிரினும் நாணம் சிறந்தது, நாணிலும் கற்புச் சிறந்தது என்று பெண்கள் தங்களைப் பாதுகாத்துக் கொண்டனர்.

சங்ககாலத்தில் எட்டு வகையான மணமுறை வழக்கத்தில் இருந்தது. பிரம்மம், பிரஜாபத்யம், ஆர்ஷம், தைவம், காந்தர்வம், ஆசுரம், ராசஷஸம், பைசாசம் போன்றவை ஆகும்.

காதல் என்பது மென்மையானது, ஆழமானது, அதன் உள்ளுணர்வு உயிருடன் கலந்தது. காதலில்லாமல் திருமணம் நடந்ததாகச் சான்றுகள் இல்லை. காதலித்தவர்களைப் பெற்றோர் கூட்டி வைப்பர் அல்லது அவர்களாகவே உடன்போக்கு மேற்கொண்டு திருமணம் செய்து கொண்டனர். தலைவன், தலைவி, அமைதியாகவும், சிறப்புடனும் குடும்பம் நடத்த பாங்கன், பாங்கி, செவிலி முதலியோர் துணையாக இருந்தனர்.

இல்லற வாழ்வு களவு, கற்பு ஆகிய இருவழிகளில் அமைந்திருந்தது. பரத்தையர் பிரிவு என்பது பிரிவுகளில் ஒன்றாகச் சொல்லப்படாவிட்டாலும், அதுவும் அனுமதிக்கப்பட்ட ஒன்றாகவே இருந்தது. பரத்தையர்கள் பொது மகளிர், பொருட் பெண்டிர், விலைக்கணிகை, விலை நலப் பெண்டிர் என சுட்டப்பட்டனர்.

சங்ககால மன்னர்களின் அரசியலில் ஐம்பெருங்குழு, எண்பேராயம் போன்ற அவைகள் இருந்தன. அந்தணர், அமைச்சர், சேனாதிபர், தூதர், மருந்தர் ஆகியோர்களைக் கொண்டு அரசாட்சியை நடத்தினார்கள். தமிழகத்தில் சிறப்பான தொழில் உழவே ஆகும். எல்லா மக்களுக்கும் உணவு கிடைக்கும் வகையில் உழவுத் தொழிலை சிறப்பாக செய்தனர்.

தமிழகத்தில் பண்டமாற்று முறையில் வாணிபம் நடைபெற்றது. உள்நாட்டு வாணிபம், வெளிநாட்டு வாணிபம் ஆகியவை சிறப்பாக நடைபெற்றது. அகில், சந்தனம், ஏலம், மஞ்சள், தந்தம், முத்து, மரகதம் ஆகியவற்றை ஏற்றுமதி செய்துள்ளனர்.

வாழ்க்கையை முழுமையாக வாழத் தெரிந்த சங்ககால மக்கள் ˙தங்கள் மகிழ்ச்சிக்காக சில பொழுதுபோக்கு விளையாட்டுக்களை விளையாடி தங்கள் பொழுதினை கழித்தனர்.

இசை, நாட்டியம், நாடகம், செய்யுள் இயற்றும் புலவர்கள் எனப் பல்வேறுபட்ட துறைகளிலும் கலைஞர்கள் தோன்றினர். மக்களும் மன்னர்களும், குறுநில மன்னர்களிடத்தில் தங்கள் கலைகளை வளர்த்துக் கொண்டனர்.

சங்ககாலத்தில் தொழிலடிப்படையில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர், போன்றவர்கள் இருந்தார்கள். இருப்பினும் அவர்களிடையே உயர்வு, தாழ்வு மனப்பான்மை காணப்படவில்லை.

ஆடவர்கள் பெண்களோடு கொண்டிருக்கும் பாலுணர்வு தொடர்பான மாற்றங்கள் மட்டும், மாறுபாடுகளுக்கு உட்படாமல் ஒரே தன்மையாக சென்று கொண்டிருக்கிறது. தாய்வழிச் சமுதாயத்திலிருந்து தந்தை வழிச் சமூகம் அமைந்த பிறகு ஆணாதிக்கம் விலக்க இயலாத ஒன்றாக ஆகிவிட்டது.

சங்ககால மக்கள் கல்வியில் சிறந்து விளங்கினார்கள். அழிவில்லாத சிறந்த செல்வமாக கல்வியை நினைத்தார்கள். பெண்கள் நடனத்தில் சிறந்து விளங்கியுள்ளனர். நடனத்திற்க்கு என்று அரங்கேற்றக்களம் என்ற ஒன்றை அமைத்துக் கொண்டனர். அரங்கேற்றம் செய்யும் பொழுது அக்காலத்தில் கூத்தர்கள், ஆடலாசிரியன், இசை ஆசிரியன், கவிஞன் என்போர் கூடி இருந்தனர்.

வேத்தியல் கூத்து, பொதுவியல் கூத்து என கூத்துக்கள் சங்க காலத்தில் இடம்பெற்று இருந்தன. துணங்கை கூத்து என்பது பெரும்பாலும் மகளிர் ஆடும் கூத்தாகும்.

சங்ககாலத்தில் சமுதாயத்தில் சமயம் முக்கியமான இடம் பெற்றிருந்தது. இயற்கையையும் அவர்கள் கடவுளாக நினைத்தனர். சிவன், திருமால், விஷ்னு, முருகன் போன்ற கடவுள்களை வணங்கியுள்ளனர்.

நாற்றிசையை காக்கும் தேவர்களாக இந்திரன், யமன், வருணன், குபேரன் போன்றவர்கள் இருந்தனர் என்பதை மக்கள் நம்பினார்கள். பத்தினி தெய்வமாக கண்ணகியை மக்கள் வழிபட்டனர். கண்ணகியின் உருவத்தை சிற்பமாக செதுக்கி கருவறையில் வைத்து வணங்கினார்கள்.

சங்ககாலத்தில் மகளிர்க்கு உயர்ந்த இடத்தை கொடுத்தனர். அவர்கள் வீரம், கல்வி, நாட்டுப்பற்று குடும்பத்தை வளர்ச்சி அடையச் செய்தல் ஆகியவற்றில் தங்கள் பங்கினை முழுமையாக செலுத்தி இருந்தனர்.

விறலி யாழ் முதலிய நரம்புக் கருவிகளை வாசிக்கும் திறன் பெற்றிருப்பதாலும், இனிமையான குரலில் பாடும் வல்லமையைப் பெற்றிருப்பதாலும் வேந்தன் பெண் யானைகளையும், பொன்னால் செய்யப்பட்ட மாலைகளையும் பரிசாக விறலியர்களுக்கு அளிப்பார்கள்.

விறலி முதுமையும், அனுபவமும் நிறைந்தவளாக இருப்பாள். அவ்விறலி இளம் வயதுடைய மற்றொரு விறலியை ஆற்றுப்படுத்துவாள். சேரனின் வெற்றிச்

சிறப்பு, பாசறையில் அவன் காதல் மகளிரோடு உறவாடியமை, போரில் தோல்வியுற்ற பகைவர்களைத் தன் நாட்டில் அடிமையாக்கி இருத்தல் ஆகியவற்றை விறலி எடுத்துக்கூறுவாள்.

விறலியை 'பாண்மகள்' என்று சுட்டுவதனால் இவள் பாணர்களின் மகளாக இருந்திருக்கலாம் என்று கூறப்படுகிறது. சேரன் செங்குட்டுவன் மோகூரினை ஆண்ட பழையனிடம் பெற்ற வெற்றியினைக் குறிப்பிட்டு, அத்தகைய சிறப்புடைய செங்குட்டுவனிடம் நாங்கள் செல்கிறோம். ஆகவே, நீயும் எங்களுடன் வந்தால் வேந்தன் தரும் பரிசினால் உங்களுடைய வறுமையைப் போக்கிக் கொள்ளலாம் என விறலி ஒருத்தி, மற்றொரு விறலியிடம் கூறி அழைத்துச் சென்று பொருள் ஈட்டிக்கொள்வார்கள்.

அணிகலன்களை அணிந்த மென்மையான இயல்புடைய விறலியர் அழகு சிறக்கவும், பாணர் பசுமையான அணிகலன் அணியவும், ஏவல் இளைஞர் வேந்தனின் போர்க்களத்தை வாழ்த்திப் பாடவும், விறலியே வேந்தனைக் காணச் செல் என விறலியை முதன்மையானவளாகக் கொண்டு அவர்தம் பாணரும், இளைய பாணரும் விறலியை ஆற்றுப்படுத்தியுள்ளனர்.

அகஇலக்கியங்கள் அனைத்தும் பரத்தையர் பிரிவைப் பற்றிப் பேசுகின்றன. ஒத்த கிழத்தியர், இழிந்த கிழத்தியர், வரையப்பட்டார் எனத் தொல்காப்பியர் சுட்டுவதால், ஆடவர் ஒருத்திக்கு மேல் மணம் செய்து கொள்ளும் வழக்கம் இருந்தது.

திருக்குறள், சிலம்பு, மணிமேகலை, நாலடியார் முதலிய இலக்கியங்களிலும் வரைவின் மகளிர் பற்றிய செய்திகள் வருகின்றன. திருக்குறள் மட்டுமே பிறன்மனை நயத்தல் பற்றிப் பேசுகிறது.

உளவியலின்படி குழந்தைகளிடமே பாலுணர்வு மறைந்து கிடக்கின்றது. தக்க பருவத்தில் அது வெளிப்படுகின்றது. பெண்கள் மங்கல அணிகலன்களாக தாலி, பொட்டு, மிஞ்சி ஆகியவற்றை அணிந்தார்கள். திருமணம் ஆன பெண்கள் தங்கள் கணவனை கடவுளாக நினைத்து வணங்கினார்கள்.

பெண்களைப் பொறுத்த வரையில் பிறந்த வீடு, புகுந்தவீடு என்னும் ஈரடுக்குகள் நம்முடைய தமிழ்ச் சமூகத்தில் தொன்றுதொட்டு நிலவி வருகின்றன. பெண், புகுந்த வீட்டில் நற்பெயர் வாங்க வேண்டும் என்பதற்கான பயிற்சிக் களமாகவே பிறந்த வீடு அமைகிறது. அதனால் நினைவு தெரியும் நாள் முதற் கொண்டே ஆண்-பெண் பாகுபாடு தோன்றி விடுகிறது.

ஆணுக்கு வெளிப்புறம் உலகம், பெண்ணுக்கு வீடுதான் உலகம் என்ற மூடத்தனத்தினால் பெண்ணை வீட்டுக்குள்ளே பூட்டி வைக்கின்றனர். இதன் காரணமாகப் பெண்கள் உளநோய்ப் பாதிப்புக்குள்ளாகின்றனர். வரதட்சணை போன்ற அவலங்கள் பெண் சிசுக்கொலைக்கான முக்கியக் காரணங்களாக அமைகின்றன.

பெண்ணை ஒரு இழிந்த பொருளாக நடத்துதல், எப்பொழுதும் பிறரைச் சார்ந்தே வாழ வேண்டும் என்று கட்டாயப்படுத்துதல் போன்ற ஆணாதிக்கச் சமூகத்தால் கொண்டு வரப்பட்ட மரபுகளை உடைத்தெறிந்து பெண்கள் வெளியில் வர வேண்டும்.

உலக சமுதாயம் மணவிலக்கு, மறுமணம், பலதாரமணம் இங்ஙனம் சென்று கொண்டிருக்க தமிழ்ச் சமுதாயம் மட்டும் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தெளிந்த நீரோடை போல ஒரே நிலையில் சென்று கொண்டிருக்கிறது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தேவதாசி ஒழிப்புச் சட்டம் வந்த பிறகும், உலக நாகரிகத் தொடர்பினாலும் ஒழுக்கச் சிதைவு ஏற்பட்டிருப்பதை எல்லோரும் ஏற்றுக் கொண்டுதான் ஆக வேண்டும்.

சங்ககால மக்கள் பிற சமுதாய மக்களிலிருந்து மாறுபட்டு செவ்வியல் மரபுகளைக் காத்துப் பின்வரும் சமுதாயத்திற்குக் கொடுத்திருக்கின்றனர் என்பதில் ஐயமில்லை.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதார நூல்கள்


1. **சுப்ரமண்யன் ந., டாக்டர்** — **சங்ககால வாழ்வியல்**
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-600 098,
மூன்றாம் பதிப்பு - 2017.

2. **துரைசாமிப்பிள்ளை சு.,ஔவை** — **பதிற்றுப்பத்து**
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை-600 014,
ஆறாம் பதிப்பு - 2017.

3. **பாலையன் அ.ப.,** — **புறநானூறு**
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை-600 014,
முதல் பதிப்பு - 2008.

4. **புலியூர்க்கேசிகன்** — **குறுந்தொகை மூலமும் உரையும்**
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை-600 014,
ஆறாம் பதிப்பு - 2018.

5. **மாணிக்கவாசகன் ஞா.,** **பத்துப்பாட்டு மூலமும் விளக்கமும்**
உமாபதிப்பகம்,
171, புதிய எண்-18,
பவளக்காரத்தெரு,
மண்ணடி,
சென்னை-600 001,
மூன்றாம் பதிப்பு - 2016.

**துணைமை ஆதார நூல்கள்**

1. **அகத்தியலிங்கம் ச.டாக்டர்** **சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே**
மணிவாசகர் பதிப்பகம்,
சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை - 600 108,
முதற்பதிப்பு - 2010.

2. **அங்கமுத்து முதலியார் டி.என்.,** **அகநானூறு**
மணிமிடைபவளம்,
சாய்விக்ரம் பப்ளிகேஷன்ஸ்,
51, எப்-4, ஜோஸ் பிளாட்ஸ்,
அலமேலுபுரம்,
சேலையூர்,
சென்னை - 600 073,
முதல் பதிப்பு - 2011.

3. **இளங்கோஅடிகள்** **சிலப்பதிகாரம்**
அடியார் உரையும் பழைய உரையும்,
உ.வே.சாமிநாத ஐயர் பதிப்பு,
ஆறாம் பதிப்பு - 1955.

4. **இளம்பூரணனார்** **தொல்காப்பியம் எழுத்ததிகாரம்**
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை - 600 014.

5. **இளம்பூரணார் உரை** — **தொல்காப்பியம்**
கழக வெளியீடு,
சென்னை,
முதல் பதிப்பு - 1973.

6. **கடியலூர் உருத்திரங்கண்ணனார்** — **பெரும்பாணாற்றுப்படை**
நச்சினார்க்கினியார் உரை,
உ.வே.சாமிநாத ஐயர் பதிப்பு,
ஐந்தாம் பதிப்பு - 1956.

7. **கில்பர்ட் கிலேட்டர்** — **இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு**
தமிழில் பன்மொழிப் புலவர்,
கா.அப்பாதுரை,
கழக வெளியீடு.

8. **செல்லம் வே.தி. பேராசிரியர்** — **தமிழக வரலாறும் பண்பாடும்**
மணிவாசகர் பதிப்பகம்,
8/7 சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை - 600 108,
முதல் பதிப்பு - 1995.

9. **சோமசுந்தரனார்** — **பரிபாடல்**
சை.சி.நூ.கழகம்,
சென்னை,
மறுபதிப்பு - 1975.

10. **சோமசுந்தரனார் பொ.வே.** — **புறப்பொருள் வெண்பாமாலை**
சை.சி.நூ.கழகம்,
சென்னை,
முதல் பதிப்பு - 1982.

11. **ஞானமூர்த்தி தா.ஏ.டாக்டர்** — **சங்ககாலச் சமுதாயம்**
முத்துக்கோவை,
தமிழக புலவர் குழு,
திருச்சி,
முதல் பதிப்பு - 1981.

12. **தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு** **தமிழ்நாட்டு வரலாறு**
சங்ககாலம்-அரசியல்
தமிழ் வளர்ச்சி இயக்கத்திற்காக
வெளியிட்டோர்,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை - 6.

13. **துரைசாமிப் பிள்ளை சு.,ஔவை** **புறநானூறு**
திருநெல்வேலி, தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
லிமிடெட்,
154, டி.டி.கே.சாலை,
சென்னை-18,
முதல் பதிப்பு - 1951.

14. **தொல்காப்பியர்** **தொல்காப்பியம் பொருளதிகாரம்**
நச்சினார்க்கினியர் உரை,
சை.சி.நூ.கழகம்,
சென்னை,
மறுபதிப்பு - 1983.

15. **நச்சினார்க்கினியர் உரை** **தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்**
கழக வெளியீடு,
சென்னை,
முதல் பதிப்பு - 1972.

16. **பக்தவச்சலபாரதி** **தமிழர் மானிடவியல்**
புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்,
புதுச்சேரி, மெய்யப்பன்-தமிழாய்வகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்-608 001,
முதற்பதிப்பு - 2002.

17. **பழனிச்சாமி செ.டாக்டர்** **புறநானூற்றில் தமிழர் பண்பாடு**
வாணி பதிப்பகம்,
கோவை - 11,
முதற்பதிப்பு - 1989.

18. **பாலசுப்பிரமணியன் கு.வெ. முனைவர்** **நற்றிணை (மூலமும் உரையும்)**
41-பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்,
சென்னை - 600 098,
முதல் பதிப்பு - 2004.

19. **பிள்ளை கே.கே. டாக்டர்** **தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute
of Tamil Studies,
இரண்டாம் முதன்மைச் சாலை,
மையத் தொழில் நுட்ப வளாகம்,
தரமணி,
சென்னை - 600 113.

20. **பிரேமா இரா. முனைவர்** **குறுந்தொகை**
வர்த்தமானன் பதிப்பகம்,
ஏ.ஆர்.ஆர்.காம்ப்ளெக்ஸ்,
141, உஸ்மான் சாலை,
தி.நகர், சென்னை - 600 017,
முதல் பதிப்பு - 1999.

21. **புலியூர்க்கேசிகன்** **ஐங்குறுநூறு**
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை - 600 014,
ஐந்தாம் பதிப்பு - 2019.

22. **புலியூர்க்கேசிகன்** **குறுந்தொகை**
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை - 600 014,
முதல் பதிப்பு - 2010.

23. **புலியூர்க்கேசிகன்** — **திருக்குறள் புதிய உரை**
பூம்புகார் பதிப்பகம்,
127, பிரகாசம் சாலை,
சென்னை - 600 108,
இருபத்தொன்றாம் பதிப்பு - 2006.

24. **புலியூர்க்கேசிகன்** — **தொல்காப்பியம்**
சுபா பதிப்பகம்,
பிளாக் எண்.11,
FOA ஜெயின் சுதர்சனா
அபார்ட்மெண்ட்ஸ்,
174, மாடம்பாக்கம் ரோடு,
ராஜகீழ்ப்பாக்கம்,
சென்னை - 73,
முதல் பதிப்பு - 2011.

25. **புலியூர்க்கேசிகன்** — **பரிபாடல்**
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை - 600 014,
ஏழாம் பதிப்பு - 2019.

26. **புலியூர்க்கேசிகன்** — **மணிமேகலை**
பாரிநிலையம்,
59, பிராட்வே,
சென்னை - 1,
மூன்றாம் பதிப்பு - 1965.

27. **பூவண்ணன் டாக்டர்** — **கம்பராமாயணம்**
வர்த்தமானன் பதிப்பகம்,
40, சரோஜினி தெரு,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

28. **பெர்ட்ராண்டுரஸ்ஸல்**
**(தமிழாக்கம் கே.மாதவன்)** — **திருமண முறைகள்**
பழனியப்பாபிரதர்ஸ்,
சென்னை,
முதற்பதிப்பு - 1965.

29. **மதன்** — **கி.மு., கி.பி., கிழக்குப்பதிப்பகம்**
No.33/15, இரண்டாவது தளம்,
எல்டாமஸ் ரோடு,
ஆழ்வார் பேட்டை,
சென்னை - 600 018,
முதல் பதிப்பு - 2006.

30. **மாணிக்கனார் அ.புலவர்** — **புறநானூறு மூலமும் உரையும்**
(முதற்பகுதி)
வர்த்தமானன் பதிப்பகம்,
எ.ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ்,
141, உஸ்மான் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017,
முதல் பதிப்பு - 1999.

31. **மாணிக்கனார் அ.புலவர்** — **புறநானூறு மூலமும் உரையும்**
(இரண்டாம் பகுதி)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை - 600 017,
முதல் பதிப்பு - 1999.

32. **மாணிக்கவாசகன் ஞா.,** — **பத்துப்பாட்டு**
சிறுபாணாற்றுப்படை,
உமா பதிப்பகம்,
171, புதிய எண்.18, பவளக்காரத்தெரு,
மண்ணடி, சென்னை - 600 001,
மூன்றாம் பதிப்பு - 2016.

33. **முருகேசன்** — **வரலாற்றில் தேவதாசிகள்**
குறிஞ்சி 21, டீச்சர்ஸ்கில்டு காலனி,
இராஜாஜி நகர் விரிவு,
வில்லிவாக்கம்,
சென்னை 600 049,
முதல் பதிப்பு - 2009.

34. **வரதராசன் மு.,** — **தமிழ் இலக்கிய வரலாறு**
சாகித்திய அகாதெமி இரவீந்திர பவன்,
35, பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி - 110 001,
பதினொன்றாம் பதிப்பு - 1998.

35. **வானமாமலை நா.,** **தமிழர் வரலாறும் பண்பாடும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
பிரைவேட் லிமிடெட்,
41-பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை - 600 098,
முதல் பதிப்பு - 1966.

36. **வேங்கடராமன் கா.கோ. முனைவர்** **தமிழ் இலக்கிய வரலாறு**
கலையக வெளியீடு,
275 B5 பாலாஜி நகர்,
பரமத்தி வேலூர்,
நாமக்கல் மாவட்டம் - 638 182,
நான்காம் பதிப்பு - 2006.

37. **ஸ்ரீ சந்திரன் ஜெ.,** **சிலப்பதிகாரம்**
வர்த்தமானன் பதிப்பகம்,
ஏ.ஆர்.ஆர். உஸ்மான் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

38. **ஸ்ரீ சந்திரன் ஜெ.,** **நாலடியார் மூலமும் தெளிவுரையும்**
வர்த்தமானன் பதிப்பகம்,
ஏ.ஆர்.ஆர். காம்ப்ளெக்ஸ்,
141, உஸ்மான் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 17,
ஐந்தாம் பதிப்பு - 1999.

**களஞ்சியம்**

**வாழ்வியற் களஞ்சியம்** **தொகுதி எட்டு, பதினொன்று,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
1991.

**ஆய்வேடுகள்**


**முனைவர் பட்ட ஆய்வேடு** — **பண்டைத் தமிழக நாகரிகமும் பண்பாடும்**
நேசமணிப் பதிப்பகம்,
காட்டுப்பாடி விரிவு.
1966.

**விஜயபாரதி இரா.**
**(முனைவர் பட்ட ஆய்வேடு)** — **சங்க இலக்கியங்களில் மகளிர்**
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
உருமு தனலட்சுமி கல்லூரி,
காட்டூர்,
திருச்சிராப்பள்ளி - 620 019.

# சங்க இலக்கியங்கள் காட்டும் வரைவின் மகளிர் நிலை

பெரியார் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி)
பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு


ஆய்வாளர்

திருமதி ப.மோகனசுந்தரி, எம்.ஏ.,பி.எட்.,எம்.ஃ.பில்.,

முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்)

பதிவு எண்: **PU/COE/CRE-IX/2284/2016**

நெறியாளர்

முனைவர் க.பொன்மொழி, எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,

இணைப்பேராசிரியர்






## தமிழாய்வுத்துறை

கந்தசாமிக் கண்டர் கல்லூரி

ப.வேலூர் (நாமக்கல்) 638 182


## நவம்பர் - 2022

**இயல் ஐந்து**

**சங்க இலக்கியங்களில் வரைவின் மகளிர் நிலை**

- முன்னுரை
- சங்க இலக்கியம் சுட்டும் மகளிர்
- வீரமகளிர்
- மகளிரின் கல்வி
- மகளிரின் நாட்டுப்பற்று
- மகளிர் திட்டமிடுதல்
- குடும்ப அதிகாரத்தில் மகளிர்
- மகளிர் மதிப்பு
- கைம்மை மகளிர்
- மகளிரின் ஒப்பனை
- பதிற்றுப்பத்தில் விறலியர்
    - விறலியர்
    - விறலியரின் இளமை
- விறலியாற்றுப்படை
- விறலியரின் பணிகள்
- பரத்தையர் நிலை
- விறலியர் பரத்தையராகயிருத்தல்
- விறலியின் வருணனை
- விறலியர் பெற்ற பரிசுகள்
- வரைவின் மகளிர்
    - ஒத்த கிழத்தியர்
    - இழிந்தாராவார்
    - வரையப்பட்டார்
- பரத்தையரைக் குறிக்கும் வேறு பெயர்கள்
- காதலின் தன்மை
- பெண்ணின் பெருமைகள்

- மங்கல அணிகலன்கள்

    - தாலி
    - பொட்டு
    - மிஞ்சி
- ஆண் குழந்தைக்கு வீரம், கல்வி, பெண் குழந்தைக்கு ஒப்பனை என முக்கியத்துவப்படுத்துதல்
- பெண் வயதிற்கு வரலும் ஆணின் ஆதிக்க மரபும்
- பெண் ஆணைச் சார்ந்து வாழ்தலும், ஆண் பெண்ணைக் கேலிச்செய்தலும்
- திருமணத்திற்குப் பின் பெண்ணின் வாழ்வியல் சிக்கல்கள்
- தமிழிலக்கியத்தில் பாலியல் வல்லுறவு
- விலை மகளிர்
    - குடும்ப தாசி
    - அழகு தாசிகள்
    - கணிகை
- காதல் மணமே சிறந்தது
- திருக்குறளில் வரைவின் மகளிர்
- பெண்களுக்குரிய பழமொழிகள்
- தேவதாசிகள்
- பொட்டுக்கட்டுதல்
- தேவதாசி மரபின் முடிவு
- தேவதாசி கலைகள்
- விலை மாதர்கள் நிலை
    - விலை மாதர்களின் தேவை
- பெண்களின் அவசரகால திருமணம்
- பெண்களின் சுதந்திரப் பார்வை
- பண்டைக்கால மகளிர் வாழ்க்கை
- அழகான பெண்கள் வரைவின் மகளிர்
- தொகுப்புரை

## இயல் ஐந்து

## சங்க இலக்கியங்களில் வரைவின் மகளிர் நிலை

**முன்னுரை**

சங்க காலத்தில் மகளிர்க்கு உயர்ந்த இடம் அளிக்கப்பட்டிருந்தது. வீரம், கல்வி, தூது, நாட்டுப்பற்று, திட்டமிடுதல், குடும்பத்தில் அதிகாரம் ஆகியவற்றில் பெண்கள் வளர்ச்சி அடைந்துள்ளனர். ஔவையார், பொன்முடியார், நச்செள்ளையார், ஒக்கூர் மாசாத்தியார் போன்ற வீரப் பெண்மணிகள் பாடிய மூதின் முல்லைப் பாடல்கள் கோழையையும் வீரம் செறிந்தவனாக மாற்றும் செய்யும் வல்லமையுடையன.

வேங்கை, வெட்சி, குவளை, மல்லிகை, ஆகிய மலர்களைப் பெண்கள் விரும்பிச் சூடினர். சந்தனம், குங்குமம் ஆகியவற்றை மகளிர் பூசிக் கொண்டனர். சங்ககால மக்கள் அழகுப்படுத்தல் எனும் ஒப்பனை செய்தலைத் தங்களின் வாழ்க்கையில் ஓர் அங்கமாகக் கொண்டு பண்பாடு, நாகரீகத்தின் வளர்ச்சிப் படி நிலையைக் காட்டுகிறது. அதில் மகளிர் தங்களை அழகு செய்து கொள்வதில் மிகுந்த ஈடுபாடு கொண்டு இருந்தனர். தலை முதல் பாதம் வரையிலான அனைத்து உடல் பாகங்களுக்கும் ஆடைகளில் தொடங்கி அணிகலன் வரையிலான பலவிதமான ஒப்பனையைக் கையாண்டு தம்மை மேலும் அழகுப்படுத்திக் கொண்டனர். அழகு என்றால் பெண்கள். பெண்கள் என்றால் அழகு என்ற வகையில் அழகுக்கு அழகு சேர்ப்பது அவர்களின் ஒப்பனையே ஆகும்.

விறலியரின் இளமைக் காலம், பரத்தையர் நிலை, வரைவின் மகளிர் செயல்பாடுகள், பெண்களுக்குரிய அணிகலன்கள், தேவதாசிகள், விலை மாதர்கள் நிலை, பெண்களின் சுதந்திரம் ஆகியவை பற்றி சங்க இலக்கியங்களில் வரைவின் மகளிர் நிலை என்னும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

**சங்க இலக்கியம் சுட்டும் மகளிர்**

தமிழகத்தைப் பொறுத்தவரையில் சங்க காலம் என்பது தமிழரின் நாகரிகத்தையும், பண்பாட்டையும் சமூக நிலைகளையும் பறைசாற்றும் வரலாற்றுப் பெட்டகமாகும். தமிழ்நாட்டு வரலாறு, சங்ககாலம் முதற்கொண்டுதான் தெளிவாக வருகிறது. இச்சங்க காலத்தில் மகளிர் நிலை எவ்வாறு இருந்திருக்கிறது என்பதனை,

**"வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்**
**மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"**[1]

என்னும் குறுந்தொகை அடிகள் காட்டுகின்றன. அதாவது, சமூக வாழ்விற்குத் துணை செய்யும் கடமைகள் ஆணுக்கு உயிர் போன்றது என்றும், அத்தகு ஆடவரை உயிராகக் கருதுதல் பெண்ணுக்குரிய கடமை என்றும்

உணர்த்துகின்றன. திரு.வி.க. பெண்மையைத் தாய்மை, இறைமை என்றே கண்டார். மகாகவி பாரதி பெண்மை வாழ்கவென்றே போற்றினார். ஆனால், ஒருபுறம் இன்று அப்பெண்மையின் நிலை இந்நாட்டில் அட்டையில் போடவும் சட்டையில் ஒட்டவும் கட்டாயம் தேவை. பெண்களின் படம் என்ற அவலநிலைக்கு மாறியிருக்கிறது. மறுபுறம் பெண்கள் வீரம் செறிந்தவராக, விமான ஓட்டிகளாக, கல்வியாளராக, மருத்துவராக, காவல் துறையினராக, நாட்டை ஆள்பவராகப் பன்முகத் தன்மையில் வளர்ச்சியடைந்துள்ளனர்.

**வீரமகளிர்**

பண்டைக் காலத்தில் பெண்கள் காதலையும் வீரத்தையும் தம் இருகண்களாக போற்றினர். வீரக் குடும்பத்தில் பிறந்த பெண்ணிடம் வேறுவொரு பெண் உன் மகன் எங்கே? என்று கேட்கிறாள். அவன் எங்குள்ளான் என்பதை அறியேன், புலி தங்கி சென்ற குகைபோல் அவனைப் பெற்ற வயிறு இதோ, அவன் போர்க்களத்தில் தோன்றுவான் எனப் பெருமிதத்தோடு கூறுகின்றாள். இதனை,

**"சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்**
**யாண்டுள னோவென வினவுதி என்மகன்**
**யாண்டுள ன்ஆயினும் அறியேன் ஓரும்**
**புலிசேர்ந்து போகிய கல்அளை போல**
**ஈன்ற வயிறோ இதுவே**
**தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே"**[2]

என்ற புறநானூறு பாடல் மூலம் காணலாம். போர்க்களத்தில் போர் தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. எங்கிருந்தோ ஒருவன் ஓடி வருகின்றான். 'உன் மகன் புறப்புண்பட்டு இறந்தான்' என்ற செய்தியைக் கூறுகின்றான். அவ்வீரத்தாய் மகனின் இறப்பிற்குக் கலங்கவில்லை மாறாக, புறப்புண்ணுக்கு நாணுகிறாள். என் மகன் புறப்புண்பட்டு இறந்திருந்தால் அவனுக்கு உயிர் அமுதமாகப் பாலூட்டிய எனது மார்பகங்களையே வெட்டி எறிவேன் என்கிறாள். மேலும்,

**"நரம்புஎழுந்து உலறிய நிரம்பா மென்தோள்**
**முளரி மருங்கின் முதியோள் சிறுவன்**
**படைஅழிந்து மாறினன் என்றுபலர் கூற**
**மண்டுஅமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்**
**முலை அறுத்திடுவென் யான் எனச் சினைஇக்**
**கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்**

**செங்களம் துழவுவோள் சிதைந்துவே றாகிய**

**படுமகன் கிடக்கை காணூஉ**

**ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே”[3]**

என்ற புறநானூறு பாடல் மூலம் அறிய முடிகிறது.

**மகளிரின் கல்வி**

சங்ககாலத்தில் பெண் கல்வி உயர்ந்து இருந்தது. பெண்கள் கல்வியில் உயர்ந்திருந்தனர் என்பது ஔவையார், காக்கைபாடினியார், வெள்ளிவீதியார் போன்ற பெண்பாற் புலவர்களின் பாடல்களால் புலனாகிறது. அதியமான் என்ற அரசன் தான் அரிதிற் பெற்ற நெடுநாள் வாழவைக்கும் நெல்லிக்கனியை ஔவையாருக்கு வழங்கியதிலிருந்து பெண்பாற் புலவரை அக்கால அரசர்கள் போற்றிய திறத்தைப் பின்வரும் பாடலால் உணரலாம்.

**“சிறியிலை நெல்லிக் தீங்கனி குறியாது**

**ஆதல் நின்னகத்து அடக்கிச்**

**காதல் நீங்க எமக்கு ஈத்தனையே”[4]**

**மகளிரின் நாட்டுப்பற்று**

போர்க்களத்தில் போர் முரசு கொட்டிக் கொண்டே இருக்கிறது. வீட்டுக்கொரு ஆண்மகன் வேலெடுத்து போர்க்களம் நோக்கிச் சென்ற வண்ணம் இருக்கின்றனர். ஒரு தனி இல்லம்-வீரமங்கை ஒருத்தி இருக்கின்றாள். முதல் நாள் போருக்குத் தந்தையை அனுப்பினாள். இரண்டாம் நாள் போருக்குச் சகோதரனை அனுப்பினாள். மூன்றாம் நாள் போருக்குக் கணவனை அனுப்பினாள். மூவரும் ஒருவர் பின் ஒருவராகப் போர்க்களத்திலேயே வீர சொர்க்கம் அடைந்தனர். மறுபடியும் போர் முரசு ஒலிக்கின்றது திகைக்கின்றாள். அவரது நாட்டுப்பற்று பின்னின்று தள்ள வெற்றுடலோடு தெருவில் விளையாடிக் கொண்டிருக்கும் ஒரே மகனை அழைத்து முதலில் வேலினைத் தருகின்றாள். பின்னர்தான் உணருகிறாள் புதல்வன் ஆடை கட்டவில்லையென்று பிறகு வெள்ளாடையை இடுப்பில் கட்டி, பறந்துகிடக்கும் குடுமிக்கு எண்ணெய் தடவி, முடிந்து, போர்க்களம் நோக்கி ஓடு என்று ஆணையிடுகின்றாள். இதனை,

**“கெடுக சிந்தை கடிதுஇவள் துணிவே**

**..................................................................**

**செருமுக நோக்கிச் செல்க என விடுமே”[5]**

என்ற பாடலின்வழி அறியலாம்.

**மகளிர் திட்டமிடுதல்**

பெண்கள் குடும்பத்தின் வளர்ச்சியில் திட்டமிட்டுச் செயல்பட்டதைக் காண முடிகின்றது. சங்ககாலம் பெண்பாற் புலவர்களில் ஒருவரான பொன்முடியார் மிக ஆணித்தரமாக ஒரு மனிதன் வாழ்வுபெற சமுதாயத்தில் ஒவ்வொருவரும் திட்டமிட்டுச் செயல்பட வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார்.

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
**நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
**களிறுஎறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"[6]**

இப்பாடலில் சமூகத்தில் தாய், தந்தை, கொல்லர், வேந்தர், இளைஞர் ஆகியோரின் கடமைகளைப் பற்றிக் குறிப்பிடப்படுகின்றது.

**குடும்ப அதிகாரத்தில் மகளிர்**

தலைவன் செய்வன எல்லாம் சரியானவை என்று அப்படியே ஏற்றுக்கொள்ளும் வழக்கம் சங்க காலத்தில் இல்லை. தலைவன் பரத்தையிடம் சென்று வந்தால் அக்காலச் சமுதாயத்தில் அது வழக்கமான ஒன்று என்று தலைவி கருதியது இல்லை. எனவே, தலைவியானவள் மீண்டு வந்த தலைவனைப் பார்த்து யார் நீ? என்று முன்பின் அறியாதவள் போல் வினா எழுப்புவாள். பின் 'உன் செயலைக் கண்டு நான் பொறுத்துக் கொள்ளேன்' என்பாள். அக்கால மகளிர் தன் கணவனே தவறு செய்தாலும் கேள்வி கேட்கும் அதிகாரம் பெற்றிருந்தாள்.

'எமக்கு நீ என்ன உறவு உடையவன்? நீயோ பெரியவன். துயரால் ஆற்றாது துடிக்கும் நான் என்ன உன் அடியாளோ? என்னைவிட்டு விலகிப் போவாய் என்பாள்.

**"யாரை நீ எம் இல் புகுதர்வாய்**
**எம் வீட்டினுள்ளே நுழைபவனே நீயார்?"[7]**

இங்குத் தலைவி எழுப்பிய கேள்விகளால் சங்ககாலத்தில் பெண்களுக்கு உரிமை வழங்கப்பட்டதை நன்கு அறியலாம். வீட்டைப் பொறுத்தவரையில் அது தலைவியினுடையதேயாகும். தலைவன் 'என் வீடு' என்று குறிப்பிடுவதில்லை. தலைவி உரிமையுடன் 'எம்மனை', 'எம் இல்' என்று குறிப்பிடும் வழக்கமுண்டு.

**மகளிர் மதிப்பு**

இன்றைய விஞ்ஞான யுகத்தில் குழந்தை பிறந்தவுடன் முதல் கேள்வி குழந்தை ஆணா, பெண்ணா? என்பது தான். ஆண் குழந்தை பிறந்தால் மகிழ்வர். ஆனால், இதே நிலைதான் சங்க காலத்திலும் இருந்துள்ளது. ஆண் குழந்தை பிறந்தால்தான் மதிப்பாகக் கருதினர். இக்குழந்தையைப் பெற்ற பெண்ணே சிறப்புப் பெற்றாள் என்பதனை,

**"பாஅல் இன்மையிற் பல்பாடு அவைத்து**

**முலைக்கோள் மறந்து புதல்வனோடு"[8]**

என்ற பாடலின் வழி அறிய முடிகின்றது. இதற்குக் காரணம் இறந்தவர்களுக்கு மறுமைக்கடன் செய்யும் உரிமை புதல்வனுக்கு இருந்தது. அதனால் புதல்வியை வெறுக்கும் அவலம் காணப்பட்டது.

**கைம்மை மகளிர்**

கற்புக்கு அணிகலனாக விளங்கிய மங்கையர் தம் தலைவன் இறந்துவிட்டால் அவரோடு உயிர் துறப்பது வழக்கமாகயிருந்தது. கணவன் இறந்ததும் சில பெண்கள் தீப்பாய்ந்து உயிர் துறந்தனர். இதற்குச் சேரலாதன் மனைவி நற்சோனையை உதாரணமாகக் கூறலாம். சில பெண்கள் கைம்மை நோன்பினைக் கடைப்பிடித்து உடலை வருத்தி உயிர் வாழ்ந்தனர். கைம்மை மகளிர் வெந்த வேளைக்கீரையும், அல்லியரிசியையும் உண்டனர். இவர்களது கூந்தலை மழிப்பதும், வளையல்களைக் கழற்றுவதும் சமூக வழக்கங்களாக இருந்தன. தன்னுடைய காதற் கணவனுடன் ஒருத்தி சுரத்திடைச் சென்றாள். அங்கு நடந்த போரில் அவளுடைய கணவன் உயிர்விட்டான். கொழுகொம்பிழந்த கொடிபோல் தனிமையுற்று வருந்தும் அவள் கலம் வனையும் குயவனைக் கண்டாள். அக்குயவனிடம் நானும் எம் தலைவனோடு இறக்க விரும்புகின்றேன். ஆதலால் எமக்கும் அவருடன் இருக்க இடம் அமையுமாறு பெரியதொரு தாழி புனைய வேண்டும் என்கிறாள். இதனை,

**"வியன்மலர் அகன்பொழில் ஈமத்தாழி**

**அகலிது ஆக வனைமோ**

**நனந்தலை மூதூர்க் கலம்செய் கோவே"[9]**

என்று சுட்டுகிறது. இல்வாழ்வில் ஒன்றிய ஆடவன் மறைந்தால் பெண்டிர் தன் திருமண அடையாளச் சின்னமாக இருந்த இழைகளைக் களைகின்றனர். அத்துடன் தன் கூந்தல் களைந்து சுவையற்ற எளிய உணவை நேரம் தவறி உண்டும்,

பரல்கள் பொதிந்த இடத்தில் பாயின்றித் தூங்கியும் வாழ்கின்ற துன்பநிலையை அறியும்போது மனிதநேயம் உடைய யாரையும் வருந்த செய்கின்றன.

**மகளிரின் ஒப்பனை**

இளம் மகளிர் கூந்தலுக்கு நெய்தடவி அதை ஐந்து பிரிவாக வகுத்துப் பின்னினர். முதுமகளிர் கூந்தலை வாரிமுடித்துக் கட்டினர். மகளிர் நீராடிய பின் கூந்தலுக்கு அகிற்புகையிடுவது வழக்கத்தில் இருந்தது. கண்களுக்கு மைதீட்டுவதும் காணப்பட்டது.

**பதிற்றுப்பத்தில் விறலியர்**

ஒளி-இருள், பகல்-இரவு, மலை-மடு, பள்ளம்-மேடு, நீர்-நெருப்பு, ஆக்கம்-அழிவு, தோற்றம்-மறைவு என்பன போன்ற இருமைகள் உலகை இயக்குகின்றன. உலகின் உயிரோட்டம் உயிரினங்களின் ஆண்-பெண் என்னும் இருமையால் இயல்கின்றது.

ஒரு முழுமையின் சமக்கூறாக இவ்விருமைகள் அமைகின்றனவேயன்றித் தம்முள் உயர்வு தாழ்வு கற்பிப்பனவல்ல என்பது இயற்கை நியதி. ஆனால், இன்றைய உலகு ஆணாதிக்கச் சமுதாயமாக, ஆண் பெண்ணைவிட மேலானவன் என்ற கருத்தில் செயல்படுவதாகப் பெண்ணியவாதிகள் குறிப்பிடுகின்றனர். இத்தகைய சிந்தனை தனித்த ஆய்வுக்குரியது. இங்குக் கி.மு.ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பிலிருந்து சங்ககால மகளிர் நிலைப் பற்றி ஆய்வு செய்து பல்வேறு தகவல்களை ஆராய்ச்சியாளர்கள் கொடுத்து உள்ளனர்.

இயற்றமிழின் பொற்காலம் சங்ககாலம் என அனைவரும் கூறுவர். ஆயினும், இசைத்தமிழுக்கும், நாடகத் தமிழுக்கும் கூடப் பொற்காலம் அதுவேயாகும். தொல்குடியைச் சார்ந்த பெண் கலைஞரான விறலியர் கலை, மருத்துவம், அரசியல், சமூகத்தொண்டு எனப் பன்முகத் திறன் பெற்றிருக்கின்றனர். அதனால்தான் தொல்காப்பியர் புறத்திணையில் ஆற்றுப்படையின் இலக்கணத்தைக் கூறும்போது ஆற்றுப்படுத்துவர்களில் ஒருவராகவும், அகத்திணையில் தலைவன் தலைவி இருவருக்கும் இடையே ஏற்படும் ஊடலைத் தீர்க்கும் வாயில்களாகவும் குறிப்பிடுகிறார். எனவே, இத்தகைய சிறப்புகளைப் பெற்ற விறலியர்களின் வாழ்க்கையைப் பதிற்றுப்பத்தில் மானுடவியல் நோக்கில் ஆராயப்பட்டுள்ளது.

**விறலியர்**

விறல் என்றால் வெற்றி, பெருமை, சிறப்பு, வலிமை, வீரம், உடல் வேறுபாடு என்று மெய்யப்பன் தமிழ் அகராதி பொருள் தருகின்றது. விறலில் சிறப்பாக

உள்ளக் குறிப்பை வெளிப்படுத்தும் பாங்கு பெரும்பாலும் மகளிர்க்கே உரியது. ஆகவே, **“விறல்பட ஆட வல்ல மகளிருக்கு விறலி எனப் பெயர் ஏற்பட்டிருக்கலாம். விறலி என்பவள் உள்ளக் குறிப்புப் புறத்து வெளிப்பட ஆடுபவள்”**[10] என்கிறது தமிழ் லெக்ஸிகன். விறலி என்பவள் பாணர்குலப் பெண், பதினாறு அகவைப் பெண் என்று செந்தமிழ் அகராதியும் குறிப்பிடுகின்றது. **“எண் வகைச்சுவையும் மனத்தின் கண்பட்ட குறிப்புகளும், புறத்துப் போந்து புலப்பட ஆடுதல் விறலாதலின் அதனையாடுபவள் இவள் விறலி எனப்பட்டாள்”**[11] என்கிறது அபிதான சிந்தாமணி.

விறலியர் என்பார் பெண்பால் கூத்தரும், பாடகரும் ஆவர். இச்சொல் கூத்தர், பொருநர் என்பனவற்றின் பெண்பாற் சொல்லாகவே எப்போதும் விளக்கப்பட்டுள்ளது. இவர்கள் கூத்தர்கள், புலவர்களின் மனைவியர் என்பதில் ஐயமில்லை. தலைவனது புதுப்புதுப் பரத்தை உறவிற்குத் துணையாக ஒரு விறலி இருந்தாள். விறலியர் தலைவன், தலைவியிடம் மட்டுமின்றி பரத்தையரிடமும் நட்பு கொண்டிருந்தனர் என்பது இதனால் புலனாகின்றது. பதிற்றுப்பத்தில் விறலி அகம், புறம் என்னும் இருநிலைகளிலும் பேசப்படுகிறாள்.

**விறலியரின் இளமை**

பொதுவெளி ஆண் சமூகத்தில் நிகழ்த்தப்படும் கலைகள் பெரும்பாலும் இளமையும் அழகுமுடைய பெண் கலைஞர்களையே விரும்புவது இயல்பு. ஆகவே, ஆடல், பாடல், இசைத்தல், உரைநிகழ்த்துதல் ஆகிய தொழில்களில் சிறப்புப் பெற்ற விறலியர் இளமை உடையவர்களாகவே இருந்து உள்ளனர். ‘சில்வளை விறலியர்’ என்றும் ‘நல்நுதல் விறலியர்’ என்றும் கலைத் தொழிலில் ஈடுபடும் விறலியர்களின் இளமையை அடையாளப்படுத்தும் விதமாக அமைகின்றது. ‘சில்வளை விறலி’ என்பதற்க்கு உரையெழுதும் பொழுது பெயர் தெரியாத பழைய உரையாசிரியர் இது அவளது இளம் வயதைக் குறிக்கிறது என்கிறார். சில வளையல் அணிவது பெதும்பைப் பருவம். அதாவது 9 வயதிலிருந்து 10 வயது வரை.

சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய சிலப்பதிகாரத்தில் மாதவி அழகும் இளமையும் உடைய கணிகையர் குலப்பெண். வேந்தனுக்குக் கோவலன் 1008

பொன் கழஞ்சு கொடுத்துவிட்டு திருமணம் செய்து கொள்ளாமலே இன்பம் துய்த்து ஒரு மகவையும் பெற்றெடுக்கிறான். எனவே, சங்க மருவிய காலத்திற்கு முன் விறலியை உடமைப் பொருளாக்கிக் கொள்ள ‘வளையல்’ என்பது அவளது இசைவினைக் கேட்கும் குறிப்புப் பொருளாக இருக்கலாம்.

- ❖ செந்தமிழ் அகராதியும் ஒருபடி மேலே சென்று ‘விறலி’ என்பவள் ‘பதினாறு வயதுடையவள்’ என்கிறது. எனவே, இங்கு விறலி என்பவள் இளம் வயதுடைய பெண் என்பது உறுதியாகின்றது.
- ❖ ‘நல்நுதல் விறலியர்’ என்னும் தொடருக்குப் பெரும்பாலும் உரையாசிரியர்கள் ‘ஒளிபொருந்திய நெற்றியை உடையவள்’ எனப் பொருள் தருகின்றனர். விறலியின் நெற்றி செயற்கையில் ஒளியுண்டாகாமல் இயற்கையில் ஒளியுண்டாகியிருப்பதற்குக் காரணம் அவளது இளமையே. இளமையுடைய பெண்களுக்கே தோலில் சுருக்கமில்லாமல் நெற்றி பளபளப்பாக இருக்கும். எனவே ‘நல்நுதல் விறலியர்’ என்பது ஒன்பது வயதிலிருந்து பதினாறு வயதுடைய பெண்ணைக் குறிக்கும் அடையாளமாகும்.

**விறலியாற்றுப்படை**

விறலி ஒருத்தி, மற்றொரு விறலியிடம் தான் வேந்தனிடம் பெற்ற பரிசால் தன் வறுமையைப் போக்கிய நிலையைக் குறிப்பிட்டு, அவளையும் அவ்வேந்தனிடம் ஆற்றுப்படுத்தும் நிகழ்வு விறலியாற்றுப் படையாகும். இவற்றின் மூலம் விறலி கலைக்குழுவில் பெற்றிருந்த தனித்தன்மைகளையும் அவளது தலைமைப் பண்புகளையும் வெளிப்படுத்தும் விதமாக அமைகின்றன. தொல்காப்பியர் புறத்திணையில் ஆற்றுப்படையின் இலக்கணத்தைக் கூறி, கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகியோர்கள் ஆற்றுப்படுத்துபவர்களாகக் குறிப்பிடுகின்றார். ஆகவே, இவர்களுடைய வாழ்வியல் சார்ந்த கருத்துகள் சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையில் விரவிக் காணப்படுகின்றது.

இக்கருத்துக்களையெல்லாம் தொகுத்து பிற்காலத்தில் தொகை நூலாகப் ‘பத்துப்பாட்டு’ என்னும் பெயரில் சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படையென முழுமையாகப் பேசினர். ஆனால், பத்துப்பாட்டில் விறலியின் வாழ்க்கை குறித்த தனியான ஆற்றுப்படை நூல் இடம்பெறவில்லை.

தாய்வழிச் சமூகம் மறைந்து தந்தை வழிச் சமூகம் தோற்றம் பெற்ற சூழலில் பெண்ணைத் தன் கட்டுக்குள் வைப்பதற்காகக் குடும்பத்தில் பெண்கள் இரண்டாந்தரக் குடியுரிமை, கணவன் இறந்த பிறகு பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகள், பெண்கள் தம் விருப்பத்திற்கேற்ப எங்கும் சுதந்திரமாகச் செல்ல முடியாதநிலை, தகுந்த ஆடவருடைய பாதுகாப்பிலே செல்ல வேண்டிய அவலம் முதலிய காரணங்களால் பெண்களை அடிமைப்படுத்தினர். அதனால் விறலியருக்கு அவர்களின் வாழ்க்கை குறித்த நூல் தனியாகத் தொகுக்கப்படவில்லை. ஆனால், எட்டுத் தொகையிலுள்ள புறப்பாடல்களான புறநானூற்றிலும் (64,103,105,133), பதிற்றுப்பத்திலும் (40,49,57,60,78,87) பத்துப் பாடல்கள் விறலியாற்றுப்படைத் துறையில் இடம்பெற்றுள்ளன.

விறலியை முதன்மைப்படுத்திப் பாடப்படும் இந்தப் பாடல்களிலும் கூட விறலி தனியே ஆற்றுப்படுத்தப்படுவதும், விறலியை உடன் அழைத்துச் செல்வதும் என்னும் இருவேறுபட்ட நிலைகளில் அமைந்துள்ளது.

**விறலியரின் பணிகள்**

பதிற்றுப்பத்தில் விறலியரின் பணிகளைக் கலைப்பணி, சமூகப்பணி என இரண்டு வகையாகப் பாகுப்படுத்தலாம். கலைப்பணியில் ஆடல், பாடல், இசைத்தல், உரைநிகழ்த்துதல் ஆகியனவும், சமூகப்பணியாகப் போர்க்களத்தில் வீரர்களுக்கு எழுச்சியூட்டுதல், வேந்தன் வழங்கும் விருந்திற்கு உணவு சமைத்தல், போரில் காயமுற்ற வீரர்களுக்கு மருத்துவ உதவி செய்தல், போர்க்களத்தில் இறந்து அல்லது சிதறுண்டு கிடக்கும் வீரர்களின் உறுப்புகளை அப்புறப்படுத்துதல் ஆகியனவும் அமைகின்றன. விறலி ஒருத்தி ஆடல் நிகழ்த்திய அரங்கினையும் அவளின் ஆடலின் முறைமையினையும் பின்வரும் பாடல் உணர்த்துகின்றது.

**“வண்டு இறைகொண்ட தண் கடற்பரப்பின்**
**அடும்ப அமல் அடைகரை அலவன் ஆடிய**
**..................................................................................**
**பாடல் சான்று நீடினை உறைதலின்**
**வெள்வேல் அண்ணல் மெல்லியன் போன்ம்”**[12]

இப்பாடல் மனைமரக் கொண்டைகளில் நெய்தல் மற்றும் நரவம் பூக்கள் கொடியெனப் படர்ந்து அவற்றின் மலர் மணம் வீசுகின்றன. பனைமரங்களின் அருகருகே வேந்தர்கள் புடைசூழ அமர்ந்து பார்வையாளர்களாகப் பார்க்கின்றனர். வட்டக்களறியில் ஆடுமகளான விறலி ஆடவும் பாடவும் செய்கிறாள். அதற்கேற்ப

இசைக் கருவிகளின் வாசிப்பு நிகழ்கிறது. முதலில் விறலி சுற்றிலும் அமர்ந்துள்ள வேந்தர்கள் உள்ளிட்ட பார்வையாளர்கள் அனைவரையும் வணங்கிக் கொள்கிறாள். பாடிக்கொண்டே ஆடுகிறாள். இவளுடைய ஆடல் பாம்பு அசைந்தாடுவதைப்போல காணப்படுகின்றது.

கிழக்கும் மேற்கும் இடையிலும் என ஆடுகளத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கைகளைக் குவித்து வணங்கியவாறு கண்களை இடப்புறமும் வலப்புறமும் அசைத்தவாறு கால் மணி குலுங்க ஆடுகிறாள். மலர்ந்த நெய்தல் மலர் போன்ற கண்களால் வேந்தனையும் பிறரையும் கண்டவாறு புன்முறுவலுடன் அமர்ந்தும் குதித்தும் ஆடுகிறாள். நின்றாடல், அமர்ந்தாடல், குதித்தாடல், சுழன்றாடல், வீழ்ந்தாடல், உருண்டாடல் போன்ற ஆடல் முறைகளையெல்லாம் அவள் ஆடுவது பாம்பு நடனத்துடன் ஒப்புமையாகின்றது.

வேந்தன், தான் போரில் பெற்ற வெற்றியைக் கொண்டாடுகிறான். இக்கொண்டாட்டத்தில் குறுநில மன்னர்களுக்கும், படைவீரர்களுக்கும் விருந்து கொடுப்பது வழக்கம். இவ்விருந்திற்குத் தேவையான உணவினை 'கூந்தல் விறலியர்' சமைத்திருக்கின்றனர். இதனை,

**"உண்மின் கள்ளே அடுமின் சோறே**
**எறிக திற்றி ஏற்றுமின் புழுக்க**
**.......................................................**
**கூந்தல் விறலியர் வழங்குக அடுப்பே**
**பெற்றது உதவுமின் தப்பு இன்று பின்னும்"**[13]

இப்பாடல், கூந்தல் விறலியர் சைவம், அசைவம் என்னும் இருமுறைச் சமையல் கலையிலும் சிறப்புப் பெற்றிருந்ததனைக் குறிப்பிடுகின்றது.

பொறையன் என்னும் சேர வேந்தன் போர்க்களத்தில் பகைவர்களுடைய உடல்களை வெட்டி வீழ்த்தியும், அதில் வெளிப்படும் குருதி வாடையையும் பொருட்படுத்தாமல் அடங்காத சினமுடையவனாகத் திகழ்கிறான். அவனுடைய சினத்தைத் தணிக்கும் அருமருந்தாக விறலியர்களின் ஆடல் அமைகின்றது. இதனை,

**"உறலுறு குருதிச் செருக்களம் புலவக்**
**கொன்றமர்க் கடந்த வெந்திறற் றடக்கை**

.....................................................................

**சாந்து வருவானி நீரினும்**

**தீந்தண் சாயலன் மன்ற தானே”[14]**

இப்பாடல் போர்க்களத்தில் குருதி சிந்திய வீரர்களின் உடல்களையும், இறந்துபட்ட வீரர்களின் உடல்களையும் அப்புறப்படுத்தும் பணிகளில் விறலியர் ஈடுபட்டுள்ளதை அறியமுடிகின்றது.

**பரத்தையர் நிலை**

பரத்தமை ஒழுக்கம் சங்ககாலச் சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது. தலைவனின் இப்போற்றா ஒழுக்கத்தைச் சார்ந்த நிகழ்ச்சிகளைப் பல பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. தலைவியைக் காட்டிலும் இளமை உடையவளாகவும், தலைவி பூப்பு நீராடிய காலத்தில் மகப்பேறு வேண்டி தலைவனை அவளிடத்து அனுப்புகின்றவளாகவும், தலைவனையும் தலைவியையும் ஆற்றாது உரைப்பவளாகவும் அகப்பாடல்களில் பரத்தை காட்டப்பட்டுள்ளாள். ‘தலைவனோடு நான் புனல் விளையாடச் செல்லப் போகிறேன் இயலுமானால் தலைவி தன் கணவனை என்னிடமிருந்து மீட்டுக்கொள்ளட்டும்’ என்று பரத்தை ஒருத்தி இறுமாப்புடன் கூறுவதைக் குறுந்தொகைப் பாடல் பின்வருமாறு கூறுகிறது.

**“கூந்தல் ஆம்பல் முழு நெறி அடைச்சி**

**பெரும் புனல் வந்த இருந்துறை விரும்பி**

.........................................................................

**முனை ஆன் பெருநிரை போல**

**கிளையொடு காக்க தன் கொழுநன் மார்பே”[15]**

பரத்தையிற் பிரிந்து மீண்ட தலைவனை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டும் தோழி, தலைவியிடம் கூறும்போது,

**“தன் துறை ஊரன் பெண்டினை ஆயின்**

**பல ஆகுக நின்நெஞ்சில்பரரே**

**சில ஆகுக நீதுஞ்சும் நானே”[16]**

என்கிறாள். இங்கும், ‘பெண்டினை ஆயின்’ என்ற சொல் தலைவனின் குற்றங்களுக்காக வருந்துவதும் அமைதி இழந்து தூங்காது இருப்பதுவுமே கற்புடைய பெண்ணின் கடமை என்று அறிவுறுத்தப்பட்டுள்ளது.

**விறலியர் பரத்தையராகயிருத்தல்**

பொதுவாக கலையும் காமமும் இணைந்தே வளருபவை. ஆகவே, அழகும் இளமையும் உடைய விறலியர்கள் வேந்தர்களின் காமக்கிழத்தியராகவே வாழ்ந்திருக்கின்றனர். இதனை,

**"கடும்பின் அடுகலம் நிறையாக நெடுங்கொடிப்**

**பூவா வஞ்சியும் தருகுவன் ஒன்றோ?**

**வண்ணம் நீவிய வணங்கு இறைப் பணைத்தோள்**

**ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகஎன**

**மாட மதுரையும் தருகுவன் எல்லாம்**

**பாடுகம் வம்மினோ பரிசில் மாக்கள்"**[17]

எனச் சோழன் நலங்கிள்ளியை வாழ்த்தி பாடும்போது கோவூர்கிழார் குறிப்பிடுகிறார். இங்கு வேந்தன் விறலியருக்குப் பூவின் விலையாக மாடமதுரையைத் தருவான் என்பது சுட்டத்தக்கது. விறலியின் பூவை விலையாக வாங்கும் வேந்தன், அந்த விறலியோடு அன்றிரவு உறவாடி மகிழ்வான் என்பது பொருளாகும். இது விறலி பரத்தையாக மாறும் கட்டத்தின் முதற்படியாகும்.

**"ஆடுநடை அண்ணல் நிற்பாடு மகள்காணியர்**

**காணிலியரோ நிற்புகழ்ந்த யாக்கை**

**.................................................................**

**மன்னர் மறைந்த தாழி**

**வன்னி மன்றத்து விளங்கிய காடே"**[18]

இவற்றில் 'உனது உடலை நோயோ, சாவோ அணுகாது விறலியே அணைந்திருப்பாள்' என்று கூறப்படும். வேந்தர்கள் விறலியுடன் திளைத்திருந்தமை இதிலிருந்து தெரிய வருகின்றது. விறலியர் அரசவை மகளிராகவும் காமக் கிழத்தியராகவும் மாறினர். இடைக்காலத்தில் அவர்கள் பரத்தையராகவும் விலை மகளிராகவும் தாழ்ந்தனர்.

கடற்கரையில் ஓங்கி வளர்ந்த பனைகள் நிறைந்த படப்பையில் பெரும் பந்தரிட்டுச் சேரன் நீண்ட நேரமாக விறலியரின் நடனத்தைக் கண்டு கழித்ததையும் அதனால் அவன் மனைவி ஊடல் கொண்டதையும் காக்கைபாடினியார், நச்செள்ளையார் குறிப்பிடுகின்றார்.

**"சுடரும் பாண்டில் திருநாறு விளக்கத்து**

**முழா இமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணையாக**

**.....................................................................**

**உருபு கிளர் வண்ணம் கொண்ட**

**வான்தோய் வெண்குடை வேந்தர் தம் எயிலே”[19]**

தலைவன் தன் இருக்கையை விட்டு ஆட்டம் ஆடும் துணங்கையரோடு தோள்களையும் கைகளையும் தழுவிக்கொண்டு ஆடுகிறான். இதைக் கண்டத் தலைவி வருந்துகிறாள். தலைவி வருந்துவதை ஆடிக் கொண்டிருக்கும் தலைவன் உணருகிறான். ‘உடனே ஆட்டக் கலைஞர் அணிந்திருந்த மலர்களில் செங்குவளைப்பூ ஒன்றை எடுத்து வருத்தம் தோய்ந்த தன் தலைவியை அணுகி அன்பின் காணிக்கையாக, இக்குவளைப் பூவினைப் பெற்றுக் கொள்வாயாக’ எனத் தன் பார்வையினாலே வேண்டிக் கொள்கிறான். தலைவியோ, நீ எமக்கு யாரையோ? ஆட்டக்காரியோடு சேர்ந்து ஆடிக்கொள், ‘வாழ்க நின் கண்ணி! வாழ்க நின் இளமையும் இரசனையும் இன்பமும்’ எனக் கூறிச் சூரியனைப் போல் முகம் சிவந்து காணப்பட்டாள். இதிலும் விறலி நேரடியாகச் சுட்டப்படவில்லை.

ஒரு நாட்டினை ஆளும் வேந்தன் அவனுடைய செயல் மக்களுக்கு முன்மாதிரியாக இருந்திருக்க வேண்டும். ஆனால், அவனோ பொது வெளியில் நடனப் பெண்களுடன் ஆடுவது என்பது நகைப்புக்குரியதாகும். ஒரு வேந்தன் முன்பின் அறிமுகம் இல்லாத நடனப் பெண்களுடன் சேர்ந்து ஆடிடமுடியாது. எனவே, வேந்தனுக்கு முன்பே அப்பெண்களுடன் தொடர்பு இருந்திருக்க வேண்டும். மேலும், வேந்தனின் இச்செயலைக் கண்ட அவனுடைய மனைவி தன் கணவனின் பாலியல் வேட்கையினை அறிந்திருப்பவள். அதனால்தான் கடும் சினத்துடன் ஊடல் கொள்கிறாள். இதனால் வேந்தன் நடனப் பெண்களுடன் அவன் முன்பு கொண்டிருந்த உறவை உறுதிப்படுத்துகின்றது.

பெருங்குன்றூர்கிழார், பெருஞ்சேரலிரும் பொறையின் மகனைப் பாடியபோது, ‘வதுவை மகளிர்’ என்னும் காமக்கிழத்தியர் உறவை விடுத்து மனைவியோடு சேர்ந்து வாழுமாறு அறிவுறுத்துகிறார். இதனை,

**“கனவினும் பிரியா உறையுளொடு தண்ணெனத்**

**தகரம் நீவிய துவராக் கூந்தல்**

**வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து**

**வாழ்நாள் அறியும் வயங்குசுடர் நோக்கத்து**

**மீனொடு புரையும் கற்பின்**

**வாள்நுதல் அரிவையொடு காண்வரப் பொலிந்தே”[20]**

இப்பாடல், விறலி என்று நேரடியாகக் குறிப்பிடாமல் ‘வதுவை மகளிர்’ எனப்படும் பரத்தையராகக் குறிப்பிடுகின்றது. ஆகவே, இப்பரத்தையராகிய விறலியர்கள் குறிப்பிட்ட காலம் வரை வேந்தனுக்குக் காமச் சேவை புரிந்ததையே குறிப்பிடுகின்றது.

**விறலியின் வருணனை**

விறலியாற்றுப்படையில் விறலியின் உறுப்பு வருணனைகள் இடம்பெறவில்லை. ஆனால், விறலி ஆணின் பின் செல்பவளாக மாற்றம் பெற்ற பாணாற்றுப்படைகளில் அவளது உறுப்பு வருணனைகளாக அமைகின்றன. பெண் மகவு பிறப்புப் பற்றிப் பேசாத சங்க இலக்கியம்-ஆண் மகவைக் குலவிளக்கு எனப் பேசி மகிழும் சங்க இலக்கியம், அத்தகைய ஆண் மகனின் அழகை வருணிப்பதில் அக்கறை காட்டவில்லை. மாறாக இளம் பெண்ணை வருணிப்பதில் அக்கறையும் திறமையும் காட்டி நிற்கிறது. ஒவ்வோர் உறுப்பையும் கவனம் கொள்ளும்படியாக வருணிக்கிறது. பல பரிமாணங்களோடு அழகும் உணர்வும் தளும்பும் படியாகப் புனைந்துரைக்கிறது. என்ன இது முரண்பாடு என்று கேட்கலாம். ஆனால், ஆண் மேலாண்மை என்ற நிலைமைக்கு உட்பட்ட பார்வைத் தளமே இது. ஆண் மகனுடைய தேவை, அவனுடைய ரசனை, அவனுடைய விருப்பம், அவனுடைய பார்வைக் கோணம், இவையே பெண்ணுடல் அதிகமாகவும் விவரமாகவும் சொல்லப்படுவதற்குக் காரணங்கள் ஆகும். விறலியின் உடல் வருணனைக் கீழே அமைகின்றது.

**“சுடர்நுதல் மட நோக்கின்**
**வாள்நகைஇலங்கு எயிற்று**
**அமிழ்து பொதி துவர்வாய் அசைநடை விறலியர்”**[21]

என்றும்,

**“வீங்கு இறைத் தடைஇய அமைமருள் பணைத்தோள்**
**ஏந்தெழில் மழைக்கண் வனைந்துவரல் இளமுலை**
**பூந்துகில் அல்குல் தேம்பாய் கூந்தல்**
**மின்னிழை விறலியர் நின்மறம் பாட”**[22]

காட்சி வாழ்த்திலும், வஞ்சித் துறைப் பாடாண்பாட்டிலும் அமைந்த துறைகளில் விறலியின் உறுப்புகள் பாடப்பட்டுள்ளன. இப்பாடல்களில் விறலியின் நெற்றி, பல், வாய், தோள், கண், முலை, அல்குல், தலை, காது ஆகிய உறுப்புகள் வருணனையாகின்றன. பெண்ணின் தோற்றப் பொலிவு ஆணின் உணர்வு

நிலைகளையும் விருப்பங்களையும் எடுத்துரைக்கவும், பாலியல் உணர்வுகளை வெளிப்படுத்திக் கொள்ளவும், உறவுகளை முறைப்படுத்திக் கொள்ளவும் கூடிய தகவலியலாக அறியப்படுகிறது. எனவே, ஆணின் பாலியல் வேட்கையினைத் தணித்துக் கொள்ள பெண்ணின் தோள், முலை, அல்குல் ஆகிய உறுப்புகள் இடம் பெறுகின்றன.

**விறலியர் பெற்ற பரிசுகள்**

சங்க இலக்கியங்கள், புலவர்களின் வறுமையைப் போக்க, வேந்தர்கள் அவர்களுக்குப் பல பரிசுகள் வழங்கியதைச் சுட்டுகின்றன. பதிற்றுப்பத்தில் கிண்ணரப் பறவையை ஒத்த சிறகுகளைப் போன்ற நரம்புகள் பின்னப்பட்ட யாழினைக் கொண்டு இசையினை எழுப்பி நல்ல குரலில் பாடுகின்ற விறலிக்கு வேந்தன் பெண் யானையைப் பரிசாகக் கொடுக்கின்றான். இதனை,

**"ஆடுசிறை அறுத்த நரம்புசேர் இன்குரல்**
**பாடு விறலியர் பல்பிடி பெறுக"[23]**

இப்பாடல் விறலியர் இசைக்கருவியினை மீட்டும் திறனையும், இனிமையான குரலில் பாடும் வல்லமையையும் குறிப்பிடுகின்றது.

**"ஒள்நுதல் விறலியர்க்கு ஆரம் பூட்டிக்"[24]**

பாடும் தொழிலால் சிறப்பு பெற்ற விறலியை ஊக்கப்படுத்தும் விதமாக வேந்தன் பொன்னால் செய்யப்பட்ட மாலையைப் பரிசாக வழங்கியதை அறிய முடிகின்றது.

**வரைவின் மகளிர்**

வரைவின் மகளிரைக் காமக்கிழத்தியர் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். இவர்களின் செயல்பாடுகளை கற்பியலில் வைத்துத் தொல்காப்பியர் கூறியுள்ளார். காமக்கிழத்தியராவார் பின்முறை வதுவை ஆக்கிய கிழத்தியர், அவர் மூவகைப்படுவர். ஒத்த கிழத்தியரும், இழிந்த கிழத்தியரும், வரையப் பட்டாரும் எனவாகும்.

- **ஒத்த கிழத்தியர்**

முன்பு மணம் செய்து கொண்ட மனைவியைத் தவிர காமம் காரணமாகப் பின்னுந் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைந்து கொள்ளுதல் ஆகும்.

- **இழிந்தாராவார்**

அந்தணர்க்கு அரச குலத்திலும், வணிக குலத்திலும், வேளாண் குலத்திலும் கொடுக்கப்பட்டாரும், அரசர்க்கு அவருக்குக் கீழுள்ள ஏனை இரண்டு குலத்தினும் கொடுக்கப்பட்டாரும், வணிகர்க்கு வேளாண் குலத்தில் கொடுக்கப்பட்டாரும் என்பர்.

- ❖ **வரையப்பட்டார்**

செல்வராயினார் கணிகைக் குலத்திலுள்ளார்க்கும் இல்லறச் சிறப்புக் கொடுத்து மணந்து கொள்வதாகும். அவர் கன்னியில் மணந்து கொண்டவரும், அதன் பின்பு மணந்து கொண்டவரும் என இருவகைப்படுவர். இவ்விருவரும் உரிமை பூண்டவர் ஆதலின் காமக்கிழத்தியர் எனப்பட்டனர்.

பரத்தையர் என்பார் யாரெனில் அவர் ஆடலும் பாடலும் வல்லவராகி, அழகும் இளமையுங் காட்டி, இன்பமும் பொருளும் வெ.்.கி ஒருவர் மாட்டுந் தங்காதார். இவருள்ளும் ஒருவரைப் பற்றி மறுதலைப் பெண்டிரைச் சார்த்திக் கூறுவனவும் காமக் கூற்றின் பாற்படும். இச்சூத்திரத்தால் காமக்கிழத்தியென ஓதாது 'கிழத்தியர்' என ஓதுதலாலும் பலவகையார் என்று கொள்ள வேண்டும்.

**பரத்தையரைக் குறிக்கும் வேறு பெயர்கள்**

பரத்தையரைப் பொதுமகளிர், கணிகை, விலைக்கணிகை, விலை நலப் பெண்டிர், கொண்டி மகளிர் போன்ற பெயர்களால் சங்க இலக்கியங்களில் சுட்டப்படுகின்றனர்.

**"நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்"**[25]

**"விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற"**[26]

**"பரத்தையுள் ளதவே பண்புறு கழறல்**
**தோள்புதி துண்ட பரத்தையிற் சிவப்புற"**[27]

**"மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை"**[28]

**"பரத்தை ஆயம் கரப்பவும் ஒல்லாது"**[29]

**"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்"**[30]

**"இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்"**[31]

போன்ற நூல்களில் பரத்தையரைக் குறிக்கும் பெயர்களைப் பற்றி கூறப்பட்டுள்ளது.

**காதலின் தன்மை**

காமப் பருவம் எய்திய நங்கை, தாய் ஏவற்படி தினைப்புனம் செல்கின்றாள். தோழியரும் உடன் செல்கின்றனர். முற்றிய கதிர்களைக் கவரும் கிளிக்கூட்டத்தைத் தட்டைக் கருவிகொண்டு வெருட்டுகின்றனர். அருவி ஆடியும், கழை கொய்தும், மலர் தொடுத்தும் வந்து அசோகந் தண்ணிழலில் அமர்கின்றனர். குமரப்பருவம் எய்திய நம்பி தன் வேட்டை நாயொடு மலையெலாம் சுற்றித் திரிகின்றான். மலர் மணம் கமழும் தலமாலை அணிந்து இவ்வேட்டுவ குமரன் நங்கை இருக்குமிடத்துக்குத் தானாக வந்து சேருகிறான். தன் அம்பால் புண்பட்ட மதயானை இப்பக்கம் போந்ததுண்டோ? என்று மலரூதும் வண்டின் இசைக்கு செவி கொடுத்திருந்த இளம் பார்க்கிறான். அப்போது அவனுக்குக் காதற் குறிப்பு இல்லை. மார்பில் செங்கழுநீரும், தலையில் வெட்சிப் பூவும், அகத்துச் சந்தனப்பூச்சும் கையில் வில்லம்பு கொண்டு முன்னிற்கும் இளைஞனுக்கு முன்னே இளமாதர்கள் நிற்கக் கூசினர். வினாவுக்கு மறுமொழி கூற அன்னோர் நா எழவில்லை. இதற்கூடே நம்பியின் கண்ணும் நங்கையின் கண்ணும் நட்புக் கொண்டன.

கண்டதும் காதல் என்பது இதுவே. 'கண்தரவந்த காம ஒள்ளெரி' என்று குப்பைக் கோழியார் காமத்தின் பிறப்பிடமாகக் கண்ணைக் கூறுவர். கல்லொடு கல்சேர்ந்து தீ உண்டாவது போலக் கண்ணொடு கண்சேர்ந்து தீ உண்டாவது காமத்தீயாம் என்று குறிப்பர். ஒன்றுபட்ட உள்ளக் குறிப்பைத் தலைவன் பார்வை தலைவிக்கும், அவள் பார்வை அவனுக்கும் உரைக்கின்றன. ஒரு கருத்தை வாயாற் சொன்னால் வெளிப்படையாக நன்கு விளங்கும். வாயாற் சொல்லிக் கொள்ளுதல் காதலுலகிற்குப் பொருந்தாது. காதல் நோயை வளர்க்கும். ஆதலின் காதலர் உள்ளக் கருத்தை கண்ணால் சொல்லிக் கொள்வர். அ∴து அவர்கட்கு வாயாற் சொல்லிக் கொள்வது போலப் புரியும்.

உளவியல் தன்மையின் படியும், உலக இயற்கையின் படியும் காதல் என்பது இரு உள்ளங்களை எவ்விதம் பிணைத்து விடுகின்றது என்பதை அறியலாம்.

பால்வேறுபட்ட ஆண்மையும், பெண்மையும் பார்த்ததும் உள்ளம் பறி கொடுத்துக் காமப் பித்தேறுதற்குக் காரணம் என்கொல்? இவ்வினா இன்னும் தீராவினாவே. காதல் காரணம் என்று எளிதாகச் சொல்லி விடுகிறோம். காதல் என்பதுதான் யாது? இதற்கு அறிவியலும் விடைகூற ஒண்ணாமையைக் கென்னத்து வாக்கர் 'பாலுடவியல்' நூலில் ஒப்புக் கொள்கிறார். பாலுணர்வு பற்றி ஒரு

பொருத்தமான கொள்கையை நாம் கூறுவதற்கு இயலவில்லை என்பதை ஒத்துக் கொள்ள வேண்டும். பெண்ணொருத்தியைக் காண்கிறான்.

அவள் மொழியைக் கேட்கிறான். அவள் மணத்தை மோக்கின்றான். அவள் மெய்யைத் தீண்டுகின்றான். கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து உற்றறியும் போது உள்ளம் காமத்தின் கொள்கலம் ஆகிறது. உடம்பில் சில மாற்றங்கள் நிகழ்கின்றன. இவையெல்லாம் புணர்ச்சியில் போய் முடிவடையும் காதல் புறநிலைகளைக் கண்டு கூறுமளவே அறிவியல் செய்யக் கூடியது. அதன் தோற்றத்தை இது தெளிவாக்குமோ? இல்லவே இல்லை. ஏராளமான இளைய ஆண்களும், பெண்களும் நாள்தோறும் சாலையிலும், சோலையிலும் ஒருவரை ஒருவர் காண்கின்றனரே, கண்டும் ஒருவன் யாரோ ஒருத்தி மேல் காதல் கொள்கின்றான். ஒருத்தி எவனோ ஒருத்தன் பால் கண்சாய்க்கின்றாள். பலரை விலக்கி ஒருவரைத் தேர்ந்து விரும்பும் இச்சிறப்புப் பார்வைக்குக் காரணம் இதுவென உயிரியல் நூலும் செல்ல முடிவதில்லை.

இஃது ஆய்வுக்குரிய சிக்கல் என்று நம் முன்னோரும் கருதினர். வாளாவிராது காரணங்காண முயன்றனர். ஆண், பெண் என்பன படைப்புத் தொடக்கத்து ஒரே ஒரு பொருளாம் என்றும், தெய்வ சாபத்தால் பிளவுபட்டு இரண்டாயின என்றும், அன்று முதல் ஒன்றாய் இணையப்பாடுபடுகின்றன என்றும் காதலுக்கு விளக்கம் கூறுவர் பிளேட்டோ.

இது உமையொருபாகம் அர்த்தநாரீசுவரன் எனச் சிவனுக்கு ஆண்பாதி பெண்பாதி உருவம் கற்பிக்கும் இந்துப் புராணத்தைப் போன்றது.

**“ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்த பால தாணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோ னாயினும் கடிவரை இன்றே”**[32]

என விதியின் காரணமாகவே காதற்காட்சி நடைபெறும் எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார். இவரைப் பின்பற்றியே சங்கப்புலவர்களும் பாடியுள்ளனர்.

**“பால்வரைந்து அமைத்தல் அல்லது அவர்வயின்**
**சால்பு அளந்து அறிதற்கு யாஅம் யாரோ?”**[33]

எனப்பேரிச் சாத்தன் குறிஞ்சித் திணையில் வைத்துப் பாடுவதும்,

**“பிறிதொன் றாகக் கூறும்**

**ஆங்கும் ஆக்குமோ வாழியே பாலே”[34]**

என நெய்தல் திணையில் வைத்து அம்மூவனார் பாடுவதையும் காணலாம்.

காதலராவார் வேறு வேறு இடத்தில் பிறந்தவர்களாக இருக்க வேண்டும் என்றில்லை. முன்பின் அறிமுகம் இல்லாதவர்களாக இருக்க வேண்டும் என்ற நியைதியும் இல்லை. ஒவ்வொரு நாளும் பழகிக் கொண்டு வரும் சிறுவனும் சிறுமியும் வயது வந்த நிலையில் காதல் பார்வை பார்க்கலாம். குழந்தைகளாய் இருந்த பருவத்தில் அவ்விருவரும் தலைமுடி பற்றியிழுத்து அடித்துக் கொள்வர். செவிலியர் இடையே புகுந்து விலக்கினாலும் விடாது சண்டையிடும் இயல்புடையவர்கள். இன்று மாலையில் தொடுக்கப்பட்ட மலர்களைப் போல மணமக்களாக உள்ளனர். இது நல்லூழின் செயலாகும். இதுவென்று தலைவன் தலைவியைச் சிறுபருவம் முதல் பழகியோர் உடன்போக்கைக் கண்டு விதியின் செயலை வியக்கின்றார். இதனை,

**“இவன் இவள் ஐம்பால் பற்றவும் இவள் இவன்**
**புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்**
**காதற் செவிலியர் தவிர்ப்பவும் தவிராது**
**ஏதில் சிறுசெரு உறுப மன்னோ**
**நல்லை மன்றம்ம பாலே-மெல்இயல்**
**துணைமலர்ப் பிணையல் அன்னஇவர்**
**மணம் மகிழ் இயற்கை காட்டி யோயே”[35]**

என மோதாசனார் காதலின் அழுத்தத்தை ஒரே பாடலில் எடுத்துச் சொல்லி விடுகின்றார். தொல்காப்பியரின் நூற்பாவிற்கு எடுத்துக்காட்டாய் வருவதை உணரலாம். இப்படி களவில் தலைவனும் தலைவியும் சந்தித்துப் புணர்வதைத்தான் ‘இயற்கைப் புணர்ச்சி’ என்று இலக்கண நூல்களும், கோவையிலக்கியங்களும் பேசும்.

வெண்மை என்ற ஒரு வண்ணம் பல்வேறு நிறங்களைத் தன்னுள் அடக்கியிருப்பதைப் போல காதல் என்பதும் பல்வேறு உணர்வுகளை உள்ளடக்கி விதி என்னும் வெண்மை நிறத்தில் வெளிப்படுகின்றது. அமைதியும், சீற்றமும், விழிப்பும் மானமும், தவிப்பும் பாதுகாப்பும், கொந்தளிப்பும் மயக்கமும் எனப் பல மன நிலைகளை உள்ளடக்கிக் கொண்டிருக்கிறது காதல். அதனால்தான் வள்ளுவரும்,

**“மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்**

**செவ்வி தலைப்படு வார்”[36]**

அனிச்சமலரைக் காட்டிலும் காமம் மிக மென்மையானது. அதன் தன்மை அறிந்து, அதன் சிறந்த பயனையும் பெறக் கூடியவர்கள் உலகத்தில் சிலரேயாவர் என்று கூறியுள்ளார். ஆண், பெண் உறவுக்குக் காரணம் காதல். காதலுக்குக் காரணம் பால் என்னும் விதி.

காதலுக்கு மனப்பொருத்தம் அவசியம் என்பர். நாட்டுப்புற மக்கள், இதனையே இலக்கியங்கள் உள்ளப் புணர்ச்சி என்கின்றனர். உள்ளப்புணர்ச்சி யென்றாலே தலைவி கற்புக்கடம் பூண்டவளாகின்றாள். மெய்யுறு புணர்ச்சியும் களவில் நிகழ்வதால் கற்புநிலை உடையவளாகின்றாள் தலைவி. உள்ளம் உள்ளினாலே செயலாகச் சொல்வது நம் இலக்கியங்கள் ஆகும்.

**பெண்ணின் பெருமைகள்**

பெண் பிறப்பாலும் எண்ணிக்கையாலும் ஆணுக்கு நிகரானவள். அவள் ஆணின் வாழ்வில் தாயாக, சகோதரியாக, மனைவியாக, மகளாக இணைந்து வாழ்கிறாள். மனித சமூகத்தைத் தன் கருவில் சுமந்து, தன் இரத்தத்தையும் அன்பையும் ஊட்டி அதனைச் செம்மைப்படுத்துபவளும் பெண்தான். **“அப்பெண் பிறவியின் விழுமிய நோக்கம் அன்பாய் ஒருவனை மணந்து, ஒழுங்குபட்ட இல்வாழ்க்கை என்னும் இயற்கை வாழ்வு நடத்துவதில் நிறைவேறும்”[37]** என்பார் திரு.வி.கலியாணசுந்தரனார். இவ்வாறு பலவகையில் பாராட்டுகளைப் பெற்றிருக்கும் பெண்கள் வீட்டில் அடிமைகளாக வாழ்கிறார்கள். ஆண்கள் பெண்ணின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு வாழ்ந்தால் அவர்களின் வாழ்வு செழிப்படையும்.

**மங்கல அணிகலன்கள்**

பெண்ணை அழகுப் பதுமையாகக் காட்சிப்படுத்துவதற்கு அணிகலன்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. காலங்காலமாகப் பெண்ணை அடிமைப்படுத்துவதற்கு ஆண்களால் பூட்டப்பட்ட அடிமைச் சின்னமே அணிகலன். இந்த அடிமைச் சின்னம் பருவத்திற்கேற்ப, காலத்திற்கேற்ப வேறுபட்டது. திருமணத்திற்குப் பின் தாலி, குங்குமம், மிஞ்சி, வளையல் போன்றவை மங்கலச் சின்னமாக வலியுறுத்தப்பட்டு கணவன் இறந்த பிறகு அவற்றை அணியக் கூடாது என்று சொல்லும் அவலம் பெண்ணுக்கு மட்டும் இழைக்கப்படுகிறது. இந்த அவலங்களுக்குச் சமூகக் கட்டமைப்பும், பெண்ணின் அறியாமையும் காரணமாக அமைகின்றன.

- **தாலி**

திருமண நிகழ்ச்சியில் தாலி கட்டுவது மங்கலக் குறியீடாகும். சங்ககாலத்தில் இழையணி, தொடி, மங்கலவணி போன்ற சொற்கள் தாலியைக் குறிப்பதாக அறிஞர் பெருமக்கள் குறிப்பிடுவர். தாலி என்பது பெண்ணுக்கான வேலியாக வலியுறுத்தப்பட்டது. நாட்டுப்புறப் பெண்கள் எதை வேண்டுமானாலும் இழப்பர். ஆனால் தாலியை மட்டும் இழக்க விரும்பமாட்டார்கள். அப்படி இழப்பதாகயிருந்தால் கணவன் இறந்த பிறகே இழப்பர். தாலியை நாட்டுப்புறங்களில் மாங்கல்யம் எனக் குறிப்பிடுவர். தாலியை மஞ்சள் கயிற்றிலும் பொன்னால் செய்யப்பட்ட சங்கிலியிலும் கோத்து அணிவர். பெண்கள் சிலர் தாலிக் கயிற்றைத் தாலிச்சரடு, மஞ்சள் சரடு எனக் குறிப்பிடுவர். நாட்டுப்புறங்களில் கணவன் இறந்த பிறகு பிணத்தைத் தூக்குவதற்கு முன் மனைவிக்குப் புதுத்தாலி கட்டி, மஞ்சள், பூ, பொட்டு, வளையல் போன்றவற்றை அணிவித்து உடனே அனைத்தையும் பறித்துப் பிணத்தின் (கணவன்) கையில் கொடுத்துவிடுவர்.

**“மஞ்சள் பட்டு சேலையிழந்து**
**மதித்த நகையிழந்து**
**மஞ்சள் சரடு இழந்து**
**மஞ்சளிட்ட பொட்டிழந்து”**[38]

என்ற பாடலில் ஒரு பெண் கணவன் இறந்தவுடன் சேலை, நகை, தாலி, பொட்டு போன்றவற்றை இழந்ததனைக் குறிப்பிடுகிறாள்.

❖ **பொட்டு**

பெண்களின் ஒப்பனைப் பொருளாக விளங்கும் பொட்டு காலப்போக்கில் மங்கலக் குறியீடாக வளர்ச்சி பெற்றுவிட்டது. சங்ககாலத்தில் பொட்டினைத் திலகம் எனக் குறிப்பிட்டனர். நெற்றியில் திலகமிடும் வழக்கத்தினை,

**“நெற்றி விழியா நிறைதிலகம் இட்டாளே**
**கொற்றவை கோலங் கொண்டு ஓர் பெண்”**[39]

என்று பெண்கள் நெற்றியில் திலகமிட்ட வழக்கத்தினைக் குறிப்பிடுகிறது.

**“ஊசிபோல வாவெடுத்து**
**என்னைத்தேடிய ராசாவே-நா**
**உன்னிதமாய் பொட்டு வைத்தே-நீ**
**கண் மறைந்த நாழிகைக்கு-நா**

**ஊசி முனை இழந்தே-நா**

**உன்னிதமாய் பொட்டிழந்தே"[40]**

என்னும் பாடல் கணவனின் மறைவிற்குப் பிறகு பெண்கள் பொட்டு வைக்காத மரபைச் சுட்டுகிறது.

❖ **மிஞ்சி**

நாட்டுப்புறப் பெண்கள் பெருவிரலுக்கு அடுத்த விரலில் 'மிஞ்சி' என்னும் அணியை வெள்ளியால் செய்து அணிவர். இதனை மெட்டி என்று அழைப்பர். திருமணத்திற்குப் பின் இவ்விரலில் மெட்டி அணிவதற்குக் காரணம். இவ்விரலுக்கும் கருப்பைக்கும் தொடர்பிருப்பதாலும், மெட்டி அணிவதால் கருப்பை வளர்ச்சியடைவதாலும் கால் விரலில் அணிகின்றனர்.

**"வட்ட வட்டப் பாறையிலே**

**வரகரசி தீட்டையிலே**

**குட்டப்புள்ள காலமிஞ்சி**

**கண்ண நல்லா பறிக்குதல்லோ"[41]**

எனும் பாடலில் கால் விரலில் மிஞ்சி அணியும் வழக்கம் குறிப்பிடப்படுகிறது. இவ்வணிகலனும் கணவன் இறந்த பிறகு பறிக்கப்படுகிறது. தமிழ்ப்பெண்கள் காலங்காலமாக 'கணவனே கண்கண்ட தெய்வம்', 'கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்' என்ற மனநிலையிலேயே வாழ்கின்றனர்.

**ஆண் குழந்தைக்கு வீரம், கல்வி, பெண் குழந்தைக்கு ஒப்பனை என முக்கியத்துவப்படுத்துதல்**

ஆண் குழந்தை ஆயிரம் தாலாட்டுகளில் புகழ்ந்து பேசப்படுகிறது. அவன் எதிர்கால வெற்றிகள் முன்கூட்டியே கற்பனை செய்து சொல்லப்படுகின்றன. ஆனால் பெண் குழந்தையாக இருந்தாலோ தாலாட்டு ஊமையாகிவிடுகிறது. பெருவாரியான தாலாட்டுப்பாடல்களில் ஆண் குழந்தைக்கு வீரமும், கல்வியும் புகட்டுகின்றனர். ஆனால், பெண் குழந்தைக்கு அவர்கள் அணியக்கூடிய ஆபரணங்களையும், ஒப்பனைகளையும் பாடுகின்றனர். இதனை,

**"செம்பேறும் எழுத்தாணி ஏங்கண்ணே**

**உனக்கு சேமம் குருத்தோலை**

**குருத்தோலை வாசிக்க ஏங்கண்ணே**

**நீங்க கருத்தா பிறந்தாரோ**

**வெள்ளியினால பேனாவோ ஏங்கண்ணே உனக்கு**

**வெண்கலத்தால் மை கூடோ-நீ**
**சாஞ்சு கணக்கெழுத ஏங்கண்ணே உனக்கு**
**கொண்டு வந்தார் தாய்மாமே”[42]**

என்ற பாடலில் தன் மகன் ஓலையால் எழுத்தாணி கொண்டு எழுதும் முறையினைக் கற்கப் பிறந்தவன் எனவும், பேனாவையும், வெள்ளியால் செய்யப்பட்ட மைக்கூட்டினையும் குறிப்பிட்டு, அதனைத் தன்னுடைய சகோதரன் தன் மகனுக்கு வாங்கி வருவதாகச் சொல்லி ஆண் குழந்தையின் எதிர்காலத்தில் கல்வியை முதன்மைப்படுத்துகிறாள் தாய்.

**“காட்டை கிளச்சிவிட்டு தம்பிக்கு**
**கடிநாயை ஏவிவிட்டு**
**வேட்டைக்குப் போராரு தம்பி**
**பன்றி மலை கானகத்தே”[43]**

என்ற பாடலில் நாயை அழைத்துக் கொண்டு திண்டுக்கல் மாவட்டத்தில் உள்ள பன்றிமலைக் காட்டிற்கு வேட்டைக்குச் செல்வதாகத் தன் ஆண் குழந்தையின் வீரத்தை உவமைப்படுத்திப் பாடுகிறாள்.

**“பட்டி திறந்து பிடித்த பிடி பொன்னெடுத்து**
**ஆத்திக்காய் வாளி செய்து ஏ பொண்ணுக்கு**
**மலர்ந்த சிமிக்கி செய்து”[44]**

என்ற பாடலிலும்,

**“வாருமய்யா வளையல் செட்டி-எங்கம்மாவுக்கு**
**வண்ண வண்ண வளையிலிட”[45]**

என்ற பாடலிலும் பெண் குழந்தைக்கு அணியக்கூடிய அணிகலன்களைப் பாடுகின்றனர். இவ்வாறு சிறுவயது முதலே ஆணுக்கு உயர்வாகவும், பெண்ணுக்குத் தாழ்வாகவும் வேறுபாடு காட்டி வளர்க்கப்படுவதால் வளர்ந்த பிறகு ஆண்மகன் பெண்ணை அடிமைப்படுத்தவே கருதுவான். எனவே, பால் வேறுபாடின்றி ஆண், பெண் இருவருமே சமம் என வேறுபாடு கருதாது பாடினால் எப்படி ஜீஜீபாய் சிவாஜிக்குத் தாலாட்டின் மூலம் வீரத்தைப் புகட்டி தன் நாட்டை கைப்பற்றினாளோ அதைப்போல் பெண்ணையும் வீரம் செறிந்தவளாக வளர்க்க முடியும்.

**பெண் வயதிற்கு வரலும் ஆணின் ஆதிக்க மரபும்**

பெண் பருவம் அடைகின்ற அதாவது முதல் மாதவிடாய் நிகழ்ச்சியைப் பூப்படைதல் அல்லது வயதிற்கு வரல் என்று குறிப்பிடுகின்றனர். பெண் வயதிற்கு

வந்த பிறகு பெற்றோர்கள் அந்தப் பெண்ணின் மீது தன் முழு ஆதிக்கத்தையும் செலுத்துகின்றனர். அது தொடர்பான ஆதிக்க மரபுகள் பின்வருமாறு.

- ❖ வயதிற்கு வந்த பெண் ஆணைவிடப் புனித மற்றவள் எனக் கருதுதல்
- ❖ அவளைத் தொடுதல் கூடாது. அப்படித் தொட்டுவிட்டால் தீட்டு ஒட்டிக் கொள்ளும் என நம்புதல்
- ❖ பெண்ணைத் தனிமைப்படுத்துதல்
- ❖ குலவையிட்டுப் பெண்ணை நுகர்பொருளாக ஏலம் போடுதல்

பெண்ணிடமிருந்து வெளியேறும் இறந்த கருமுட்டைகளின் கழிவு பெண்ணை இருட்டறைக்குள்ளே சிறைப்படுத்துகிறது. இதுமட்டுமல்லாது பெண் பூப்படைந்த போது செருப்பு, விளக்குமாறு, இரும்பு போன்ற பொருட்களைக் காவல் வைப்பதும், முறைப் பையன் மாலை போடுவதும், நாத்தனார் பேய் பிடித்துவிடும் எனக் கருதி விளக்குமாற்றால் தலையைச் சுற்றுவதுமான செயல்களைச் செய்வர். இவையும் இவைபோன்ற பிற செயல்களும் பெண்ணை இழிவுபடுத்துவது மட்டுமல்லாது அவள் எப்பொழுதும் பிறரைச் சார்ந்தே வாழவேண்டுமென அறிவுறுத்தவும் செய்கின்றன. பெண்ணின் இறந்த கருமுட்டை வெளியேறுவதற்கு இப்படிச் செய்யப்படும் சடங்குக்கு மாறாக ஆணிடமிருந்து வெளியேறும் விந்திற்கு எந்தச் சடங்கும் செய்யப்படுவதில்லை. இப்படி ஆணை மேன்மைப்படுத்தியும் பெண்ணை இழிவுபடுத்தியும் செயல்படுவது ஆணாதிக்கத்தின் வெளிப்பாடாகும்.

**“தண்ணிக்குப் போ மகளே**
**தடம் பாத்து வா மகளே**
**தட்டுவாணி பயல கண்டா**
**எட்டி வச்சு வாமகளே”**[46]

என்ற பாடலில் பருவம் அடைந்த பெண் மீது சமூகத்தின் பார்வைபடுவதால் ‘கற்பு’ என்ற பெண்ணின் அடையாளத்தைத் திருமணமாகும் வரை காப்பது தாயின் கடமை என்ற கருத்து விளக்கம் பெறுகிறது. அப்பெண் தன் தாய்க்குத் தெரியாமல் தடம்மாறி தவறு செய்துவிட்டால் அந்த அவப்பெயர் ஆணைப் பாதிப்பதில்லை. அது அக்குடும்பத்திலுள்ள பெண்களை மட்டுமே பாதிக்கிறது. எனவே, கற்பைப் பாதுகாப்பது அப்பெண்ணைவிட அவளுடைய தாயே என்பது இப்பாடலின் வழி புலப்படுத்துகிறது.

**பெண் ஆணைச் சார்ந்து வாழ்தலும், ஆண் பெண்ணைக் கேலிச்செய்தலும்**

பெண் என்பவள் சமூகத்தில் இரண்டாம் தரக் குடியுரிமையுடையவள் எனக்கருதி அவளை ஆண்கள் கேலி செய்கின்றனர்.

வன்மை, கோபம், ஆளுந்திறம், ஆண்களுக்குச் சொந்தமென்றும், சாந்தம், அமைதி, பேணுந்திறம் பெண்களுக்குச் சொந்தமென்றும் சொல்வதானது கூறப்பட்டுள்ளது. வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம், புலிக்குச் சொந்தமென்றும், சாந்தம், அமைதி, பேணுந்திறம் ஆட்டுக்குச் சொந்தமென்றும் சொல்லப்படுகிறது. நாம் வேண்டும் பெண் உரிமை என்பது என்னவெனில், ஆணைப் போலவே பெண்ணுக்கும் வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம் உண்டென்பதை ஆண் மக்கள் ஒப்புக் கொள்ள வேண்டும் எனக் குறிப்பிட்டார் பெரியார். ஆனால் இக்கருத்தை இன்னும் ஏற்றுக்கொள்ளாமல் சாந்தம், அமைதி, பேணுந்திறம் போன்றவை பெண்ணுக்கே உரியவை எனக் கருதி பெண் ஆணைச் சார்ந்து வாழச் செய்வதும், ஆண் பெண்ணைக் கேலி செய்வதும் நடைமுறை வாழ்வில் வழக்கமாக நிகழ்கின்றன.

**“குத்தடி குத்தடி சைனக்கா**
**குனிஞ்சு குத்தடி சைனக்கா**
**பந்தலிலே பாவக்கா**
**தொங்குதடி தோலாக்கு**
**பைய வாரா பாத்துக்கோ**
**பணம் கொடுத்தா வாங்கிக்கோ**
**சில்லறையை மாத்திக்கோ**
**சுருக்குப் பையில போட்டுக்கோ**
**சிலுக்கு சிலுக்கென ஆட்டிக்கோ”**[47]

என்ற விளையாட்டுப்பாடல் நாட்டுப்புறப் பெண்கள் தம் உடல் உழைப்பால் கிடைத்த கூலியை ஆணிடம் ஒப்படைத்து விட்டுத் தம் சுய தேவைகளுக்கு ஆணையே (கணவனை) எதிர்பார்த்திருக்கும் நிலையினை உணர்த்துவது மட்டுமல்லாது பெண் என்பவள் ஆணுக்குரிய போகப்பொருள் என்ற கருத்தையும் பெண்ணின் நடையைக் கேலி செய்வதன் மூலம் சுட்டுகிறது.

**திருமணத்திற்குப் பின் பெண்ணின் வாழ்வியல் சிக்கல்கள்**

திருமணத்திற்குப் பின் ஒரு பெண் மனைவியாக மட்டுமில்லாமல் தாய் என்ற பொறுப்பையும் பெறுகிறாள். காலங்காலமாகத் தந்தை, தமையன், கணவன், மகன் என்ற அடிப்படையில் அடிமைப்படுத்துவது மட்டுமல்லாமல் பெண்

திருமணத்திற்காகவே பிறப்பெடுத்தவளாகக் கருதி, ஆணின் பாலுறவுத் தேவைகளை நிவர்த்தி செய்பவளாக, காலம் முழுவதும் அவனுக்குப் பணிவிடை செய்பவளாகத் திகழ வேண்டுமெனச் சமூக மரபுச் சட்டங்கள் ஆணைப் பாதுகாக்கவே எழுதப்பட்டுள்ளன. ஆணைப் பாதுகாக்கும் சமூக அமைப்பில் பெண்ணுக்கு ஏற்படும் சிக்கல்களாகப் பின்வருவன அமைகின்றன.

- ❖ இளமைத் திருமணம்
- ❖ கிழவனுக்கு வாழ்க்கைப்படுதல்
- ❖ பொருத்தமில்லாத கணவனிடம் துன்புறுதல்
- ❖ வரதட்சணைக் கொடுமை
- ❖ பெண் சிசுக்கொலை
- ❖ கணவன் மனைவி உறவில் சிக்கல்
- ❖ பெண் கல்வி மறுப்பு
- ❖ பெண்ணுக்கு மட்டும் கற்பு வலியுறுத்தப்படுதல்
- ❖ பெண்ணின் உடல் உழைப்பைச் சுரண்டுதல்
- ❖ மாமியார் கொடுமை
- ❖ குழந்தைப்பேறு இயலாத நிலையில் பெண் எதிர்கொள்ளும் சிக்கல்கள்
- ❖ சொத்துரிமையின்மை
- ❖ விதவைக் கொடுமை
- ❖ மரபுக்குள் பெண் அடிமையாதல்

போன்றவையாகும்.

**தமிழிலக்கியத்தில் பாலியல் வல்லுறவு**

இலக்கியம் என்பது சமுதாயத்தைப் பிரதிபலிக்கும் காலக்கண்ணாடி. இக்காலக்கண்ணாடி காலந்தோறும் சமூகத்தில் நிகழும் இன்பதுன்பங்கள், ஏற்றத்தாழ்வுகள், நிறைவேறாத ஆசைகள், போர் முறைகள், வழிபாடுகள், இயற்கை பேரழிவுகள் முதலியவற்றை ஆவணப்படுத்துகின்றது. இவை பிற்காலத்தில் வரலாறாகிறது. குறிப்பாகத் தமிழரின் திருமணமுறை எங்ஙனம் நிகழ்ந்தது என்பதை அறிய வேண்டுமெனில் நமக்கு சங்க இலக்கியமான அகநானூறு துணைநிற்கிறது. இருபத்தோராம் நூற்றாண்டிலும் ஒரு புதிய பிரச்சினையோ அல்லது ஒரு புதிய கருத்தாக்கமோ உருபெற்றால் நமக்கு ஆதாரமாக இருப்பது தொல்காப்பியமும் சங்க இலக்கியமுமே ஆகும். ஆகவே,

இன்றைய சூழலில் நாட்டையே கலங்க வைக்கும் பிச்சனையாக உருவெடுத்திருப்பது பாலியல் வல்லுறவு.

ஆண், ஒரு பெண்ணுடன் கொள்ளும் பலவந்தமான உடலுறவை கற்பைச் சூரையாடுதல், கற்பழிப்பு, பாலியல் பலாத்காரம், பாலியல் வன்முறை, வன்புணர்ச்சி, பாலியல் வல்லுறவு முதலிய பெயர்களில் அழைக்கின்றனர். இச்சொற்கள் எப்படி வளர்ச்சி பெற்றதோ, அதைப்போன்றே பாலியல் வல்லுறவிலும் ஆண்கள் புதிய புதிய உத்திகளைக் கையாளுகின்றனர். குறிப்பாக ஆண்கள் பெரும்பாலும் பாலியல் வல்லுறவுக்கு முன் போதைப் பொருட்களை உட்கொள்வதும், பாலியல் வல்லுறவுக்குப் பின் பெண்களின் பிறப்புறுப்புகளையும், மார்பகங்களையும் சிதைப்பதும், அப்பெண் உயிரோடிருந்தால் தனக்குத் தண்டனைக் கிடைத்துவிடும் எனக் கருதி அப்பெண்ணைக் கொலை செய்வதும் இயல்பாகிவிட்டது.

**“மலரினும் மெல்லியது காமம் சிலர்அதன்**
**செவ்வி தலைப்படு வார்”**[48]

இக்குறளின் மூலம் வள்ளுவர் மனித வாழ்க்கையில் இயற்கையாய்த் துய்க்க இருக்கும் இவ்வுணர்வைச் சமூக ஒழுங்குகெடாமல் அளவோடிருக்க வேண்டும் என்கிறார். ஆனால், இன்று பன்னாட்டு நிறுவனங்களின் வரவாலும், நுகர்வு கலாச்சாரத்தாலும் பார்க்கும் இடங்களெல்லாம் பாலியல் உணர்வைத் தூண்டும் படங்கள், விளம்பரங்கள், சுவரொட்டிகள், பதாகைகள், பாலியல் உறுப்புகள் தெரியும் கவர்ச்சியாடைகள், பாலியல் உணர்வைத் தூண்டும் உணவுகள் எனச் சிக்குண்டு சமூக ஒழுங்கே கெட்டுகிடக்கின்றது.

**“காதலுக்கு நான்கு கண்கள்**
**கள்வனுக்கு இரண்டு கண்கள்**
**காமுகனின் உருவத்தில்**
**கண்ணுமில்லை காதுமில்லை”**[49]

என்கிறார் மருதகாசி. இவரின் கூற்றிற்கிணங்க காமவெறியர்களுக்கு நீதி, நேர்மை, நியாயம், அறம், மனிதநேயம், கண்ணியம், கட்டுப்பாடு, அன்பு, நல்லொழுக்கம் முதலிய மனிதப் பண்புகளில் நாட்டமில்லை. இவர்களின் நோக்கமெல்லாம் உடல் மற்றும் உள்ளப் புணர்ச்சிகளைத் தணித்துக் கொள்வதே.

தொல்காப்பியர் களவியலில் ‘மறையோர் தேஎத்து மன்றலெட்டனுள்’ என்று குறிப்பிடுகிறார். அதாவது, பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், கந்தருவம்,

அசுரம், இராக்கதம், பைசாசம் ஆகிய எண்வகை திருமண முறைகளில் இராக்கதம், பைசாசம் ஆகிய இரண்டும் பாலியல் வல்லுறவைக் குறிக்கிறது. பெண் விரும்பாமலும், பெற்றோர் கொடாமலும் இளைஞன் வலியவந்து திருமணம் செய்து புணர்வது இராக்கதம், கள்ளுண்டு களித்தும் துயில்பவளைப் புணர்வதும் பைசாசமாகும்.

சங்ககாலத்தில் தோன்றிய இலக்கியமான அகநானூற்றில் தலைவன் தலைவியைவிட்டு பரத்தையோடு வையையாற்றில் புனலாடுகிறான். இதைக் கண்ட தோழி, தலைவியிடம் தலைவனின் செயலைக் கூறுகிறாள். உடனே தலைவி தலைவனைக் கண்டிக்கிறாள். அதற்குத் தலைவன், 'அவ்வாறு நிகழவில்லையென' மறுக்கிறான். அப்பொழுது பின்வரும் நிகழ்வைச் சுட்டி 'இச்செயலைவிட நின்செயல் பெரியது' என்கிறாள். இதனை,

**"சுரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்**
**திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய**
**அறனிலாளன் அறியேன் என்ற**
**திறன்இல் வெஞ்சூள் அறிகரி கடாஅய்**
**முறிஆர் பெருங்கிளை செறியப் பற்றி**
**நீறுதலைப் பெய்த ஞான்றை**
**வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே"**[50]

என்ற அகநானூறு பாடல் மூலம் அறிய முடிகிறது.

கள்ளூர் என்னும் ஊர் பழமையானதாகும். இவ்வூரில் பலவகையான பூக்கள் நிறைந்த அழகிய வயல்களையும், கரும்புத் தோட்டங்களையும் கொண்டது. அழகிய நெற்றியினையுடைய இளையாள் ஒருத்தியுடன் கூடி, அவளின் அழகிய நலத்தினைத் தீவினையே தொழிலாகக் கொண்ட ஒருவன் நுகர்ந்து விடுகிறான். அதன்பின் அவளை நாடி அவன் வரவேயில்லை. அவளைக் கைவிட்டுவிடுகிறான். அந்நிலையில் என்ன செய்வதென்று அறியாத அந்நங்கை இறுதியாகச் சான்றோரிடம் முறையிட்டுக் கதறுகிறாள். அவளின் துயர்நிலையை கேட்ட சான்றோர், அத்தீயவனை அழைத்து விசாரிக்கின்றனர். அத்தீயவனோ சற்றும் மனசாட்சியின்றி 'இதற்கு முன் இவளை அறியேன்' இவள் யார் என்பது கூடத் தனக்குத் தெரியாதென்றும் துணிவுடன் பொய்சூள் கூறி அவளை ஏற்க மறுக்கிறான். நீதியிலா அவனின் சூளினை நன்கு ஆய்ந்த அவையினர். அவன் கூறியது முற்றிலும் பொய் என்பதைத் தக்கச் சாட்சியாளர் கூற்றினால் தெளிவடைகின்றனர்.

அவனுக்குக் கடுமையான தண்டனை வழங்க வேண்டும் என்று முடிவு செய்து, அத்தண்டனையை மக்கள் முன்னிலையில் வழங்குகின்றனர்.

தளிர்கள் பொருந்திய மூன்று கவராய கிளைகளின் நடுவே அவனை இறுகப் பிணித்துக் கட்டி, அவன் தலையில் அதிக அளவில் சுண்ணாம்பு தண்ணீரினை ஊற்றினர். சுண்ணாம்பு தண்ணீர் தன் தலையில் பட்டதினால் எரிச்சல் தாங்காமல் அவன் துடிக்கிறான். 'ஐயோ! என்று அலறுகின்றான். அவன் துடிப்பதைக் கண்ட ஊர்ப்பொதுமக்கள் அவன்மேல் இரக்கம் கொள்ளாமல், மாறாக இது அவனுக்குச் சரியான தண்டனையே' என்று மகிழ்கின்றனர். இவ்வாறு சங்ககாலத்தில் பாலியல் வல்லுறவு செய்த ஆடவனுக்குத் தண்டனை வழங்கப்படுகின்றது. இத்தகைய நிகழ்வு பெரும்பாலும் மிகுதியாக இல்லை. சங்ககால மக்கள் களவு வாழ்க்கையில் ஈடுபட்டு, பின்னர் கற்புநெறியில் வாழ்ந்தனர். இல்வாழ்க்கையின் பயனால் மிகுதியான குழந்தைகளைப் பெற்றெடுத்தனர். இத்தகைய நிலையில் 'காமம்' என்பது ஒரு முறைப்படுத்தப்பட்ட ஒழுக்கம் சார்ந்த பண்பாக இருந்தது.

சமகாலத்தைப் பாலியல் வல்லுறவுக் காலம் என்றே அழைக்கலாம். உலகமயமாதல், சந்தைப் பொருளாதாரம், நுகர்வு கலாச்சாரம் என்ற கருத்தாக்கங்களின் மனித மனம் மரத்துப்போனது. தினந்தோறும் நாளேடுகளில் திருப்பும் பக்கங்களெல்லாம் பள்ளிகளில் ஆசிரியர்களும், காவல் நிலையங்களில் அதிகாரிகளும், அலுவலகங்களில் சகஊழியர்களும், பொது இடங்களில் இளைஞர்களும் எனப் பெண்களை வயது வேறுபாடின்றி பாலியல் வல்லுறவு செய்வதும், பிறகு அவர்களைக் கொலை செய்வதும் வழக்கமான செய்திகளாகிவிட்டது.

**விலை மகளிர்**

மனித வாழ்வில் ஆண் பெண் உறவு முக்கிய இடம் பெறுகிறது. மனித குலத்தின் அடிப்படை நலனே அதைப்பொறுத்திருக்கிறது. வாழ்க்கையின் இலட்சியங்களான அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றிலும் ஒத்த நிலை இருக்க வேண்டும். அப்போதுதான் வாழ்க்கையில் முழுமையான இன்பம் நிலவும். குடும்ப வளர்ச்சி மனிதனுக்கு அவசியம். நல்ல மக்களைப் பெறுவது நாட்டுக்குத் தேவை. ஏனெனில் மனித சமுதாய வளர்ச்சி நல்ல மக்களைப் பெறுவதில்தான் இருக்கிறது.

விலை மகளிர் தங்கள் தொழிலின் மூலம் காம இன்பத்தையும் அதே நேரத்தில் ஜீவனோபாயத்தையும் பெறுகின்றனர். காம இன்பம் நாடுவதற்காக ஒரு

பெண் ஆணை நாடுவது இயல்பு. ஆனால் பணம் சம்பாதிப்பதற்காக அவள் அவ்வாறு செய்தால் அது இயற்கையானதல்ல.

பணத்துக்காகத் தனது உடலை கலவி இன்பத்துக்கு விலை கூறுபவளே விலைமகள் எனப்படுவாள். இதில் காதல் என்பதற்கு இடம் இல்லை. அன்பினால் ஒரு ஆடவனை நாடுபவள் விலைமகளாக மாட்டாள். விலை மகளிரை மூன்று விதமாகப் பிரிக்கப்பட்டு உள்ளனர்.

- **குடும்ப தாசி**

சகஜமாகக் காணும் வகை, கீழ்க் குலத்தைச் சேர்ந்தவர்கள் கண்ணியமின்றி நடந்து கொள்ளும் மட்டரகமானவர்கள்.

- **அழகு தாசிகள்**

குடும்பதாசிகளை விட இவர்கள் அழகு மிக்கவர்கள் என்பதே வித்தியாசம். அழகின் காரணமாகத் தரமும் உயர்கிறது.

- **கணிகை**

இவள் அழகு மட்டுமின்றி கலைகளிலும் வல்லவள். மேலே சொன்னவை பிரதானமான மூன்று வகை. விலை மகளிரை முழுவதும் வகைப்படுத்திச் சொல்வதானால் ஒன்பது விதமாகக் கூறலாம். அவை,

- சாதாரணரகம் - குடும்பதாசி
- அழகு தாசி - ரூபஜிபி
- கலைத்தாசி - கணிகை
- சேடி - பரிசாரிகா
- விபசாரி - ஸ்வைரிணி
- வீட்டை விட்டு ஓடி வந்தவள் - பிரகாச பினஷ்டை
- நடிகை - நடி
- சிற்பதாசி - சில்பகாரிகை
- இரகசியதாசி - குலதா

இவர்கள் பலதரப்பட்டவர்களாயினும் பணம் பறிக்கக் கையாளும் முறைகள் எல்லோருக்குமே பொதுவானவை ஆகும்.

**காதல் மணமே சிறந்தது**

எந்தப் பெண்ணும் எந்த ஆணையும் மணந்து கொள்ளலாம் என்பது சரியல்ல. மணம் செய்து கொள்ளப்போகும் ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர்

நன்கு பார்த்து அறிந்து கொண்டிருக்க வேண்டும். புற அழகு, குணநலன்கள், நன்னடத்தை ஆகியவற்றைத் தெரிந்து கொண்டு ஒருவர் பால் மற்றவர்க்குக் கவர்ச்சி ஏற்பட வேண்டும். அத்தகையவர்கள் செய்து கொள்ளும் மணமே சிறப்புடையதாகும். இதல்லாமல் திருமணம் செய்தல் கூடாது.

ஒரு ஆணும், ஒரு பெண்ணும் ஒருவர் மேல் ஒருவர் காதல் கொள்ளாமல் இருந்து, பெற்றோர்கள் அல்லது உறவினர்களுடைய நிர்ப்பந்தம் காரணமாக அவர்களுக்குள் திருமணம் நிகழ்ந்தால் அது மகிழ்ச்சியளிப்பதாக இருக்காது.

**திருக்குறளில் வரைவின் மகளிர்**

மத நூல்கள், அறநூல், அகப்புறநூல்கள் இப்படி உலகிலுள்ள எம் மொழியின் கண்ணும் இல்லாத சிறப்புடைய ஒரு நூல் திருக்குறளாகும். பாரதிதாசன் சொல்வது போல், வள்ளுவன் சொல்லாததும் இல்லை, இல்லாததும் இல்லை, வெல்லாததும் இல்லை. மனிதகுலம் முழுமைக்கும் பொதுமையான ஒரு நூல் இவ்வுலகின்கண் உள்ளதென்றால் அது திருக்குறள்தான் ஆகும். நாம் பொதுவாக வழக்குகளை கீழ், மேல், உயர், உச்சநீதி மன்றங்களுக்குச் செல்வது போல இலக்கியங்களில் ஏற்படும் வழக்குகளை (சர்ச்சைகளை) தீர்த்து வைப்பது திருக்குறள் என்னும் உச்சநீதி மன்றமே. வள்ளுவர் ஒரு கருத்தைச் சொல்லிவிட்டாரென்றால் அதனை ஆய்ந்து பார்க்க வேண்டிய அவசியம் இல்லை.

திருவள்ளுவர் பொருட்பாலில் இரு அதிகாரங்களில் பெண்களால் நேரும் அழிவைப் பேசுவார். இனிக் காமத்தான் வருவன நேரே பகையல்லவாயினும், ஆக்கம் சிதைத்தல், அழிவுகலைத் தருதல் என்னும் தொழில்களால் பகையோடு ஒத்தலின் பகைபாற்படுவனவாகும். ஆதலான் அவற்றைப் பகைப் பகுதியது இறுதிக்கண் கூறுவான் தொடங்கி, முதற்கண் பெண்வழிச் சேறல் கூறுகின்றனர். அ.்.தாவது,

**“பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்**
**பெண்ணே பெருமை உடைத்து”**[51]

தன் இல்லாள் ஏவியபடியே செய்து திரிகின்ற ஒருவனது ஆண் தன்மையைக் காட்டிலும், நாணத்தையுடைய அவளது பெண்தன்மையே மேலானதாகும்.

**“அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்**
**இன்சொல் இழுக்குத் தரும்”**[52]

அன்பால் விரும்பாமல் அவன்தரும் பொருளையே விரும்பும் மகளிர் அவனையே அன்பால் விரும்பியது போலப் பேசும் பேச்சும், அவனுக்குப் பின்னர்த் துன்பம் தரும். மேலும்,

**"பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்**
**நயன்தூக்கி நள்ளா விடல்"**[53]

ஒருவனிடமுள்ள பொருளின் அளவை அறிந்து, அதனை அடையும்வரை பண்பைப்பற்றிப் பேசும் பண்பில்லாத மகளிரது நடத்தையை ஆராய்ந்து பார்த்து நெருங்காமல் இருக்க வேண்டும்.

**"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்**
**ஏதில் பிணந்தழீஇ யற்று"**[54]

கொடுக்கும் பொருளையே விரும்பும் பொது மகளிரது பொய்யான முயக்கமானது பிணம் எடுப்பவர் இருட்டறையில் முன் அறியாத பிணத்தைத் தழுவியது போலாகும்.

**"பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்**
**ஆயும் அறிவி னவர்"**[55]

இன்பமாகிய பொருளை இகழ்ந்து பொருளையே விரும்பும் பொதுமகளிரது இழிந்த இன்பத்தை அருளோடு கூடிய பொருளை ஆராய்ந்து செய்யும் அறிவாளர் விரும்பார்.

**"பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்**
**மாண்ட அறிவி னவர்"**[56]

இயற்கையான மதிநலத்தால் மாட்சிமைப்பட்ட அறிவினை உடையவர்கள் பொருள் தருவார்க்கெல்லாம் பொதுவான ஆசைகாட்டும் மகளிரது இழிவான நலத்தைத் தீண்டார்.

**"தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்**
**புன்னலம் பாரிப்பார் தோள்"**[57]

தம் அழகால் செருக்கடைந்து தம் புன்மையான நலத்தை விலை தருவாரிடம் எல்லாம் பரப்பும் பொதுமகளிர் தோளினை தம் புகழை நினைக்கும் உயர்ந்தோர் தீண்டமாட்டார்.

**"நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்**
**பேணிப் புணர்பவர் தோள்"**[58]

நெஞ்சிலே பொருள்மேல் ஆசைகொண்டு, அதைப் பெறக் கருதிப் பொருள் தருபவரோடு உடலால் கூடியிருக்கும் மகளிரது தோள்களை நெஞ்சமில்லாதவர்களே சேர்வர்.

**“ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப**
**மாய மகளிர் முயக்கு”**[59]

வஞ்சித்தலில் வல்ல மகளிரது முயக்கத்தை அவ்வஞ்சனையை ஆராய்ந்து அறியும் அறிவுடையவர் அல்லாத பிறருக்கு அணங்குத் தாக்கு என்று சொல்வார்கள்.

**“வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்**
**பூரியர்கள் ஆழும் அளறு”**[60]

உயர்ந்தோர் இழிந்தோர் என்னும் எவரையும் விலை தந்தால் தழுவுகிற மகளிரது மெல்லிய தோள்கள் அறிவில்லாத கீழ்மக்கள் புகுந்து அழுந்தும் நரகம் ஆகும்.

**“இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்**
**திருநீக்கப் பட்டார் தொடர்பு”**[61]

எப்போதும் கவர்த்த மனத்தையுடைய மகளிரும், கள்ளும், சூதும், என்னும் மூன்று தொடர்புகளும், திருமகளால் கைவிடப்பட்டவருக்கு நெருங்கிய நட்பு ஆகும்.

வரைவின் மகளிரின் நோக்கம், பழகும் தன்மை, அவரை விரும்புவோர் அடையும் இழிவு ஆகியவற்றைத் திருவள்ளுவர் கூறியதைப் போல மற்ற கவிஞர்கள் கூறவில்லை என்றே கொள்ள வேண்டும்.

**பெண்களுக்குரிய பழமொழிகள்**

‘பேதமை என்பது பெண்ணுக்கு அணிகலன்’
‘அடுக்களைக்கு ஒரு பெண்ணும்
அம்பலத்திற்கு ஒரு ஆணும்’
‘நாட்டுக்கு அவள் ராணியா இருந்தாலும்
வீட்டுக்கு அவள்பெண்டாட்டிதானே’
‘கூந்தல் அழகி குடியைக் கெடுப்பாள்’
‘கணுக்கால் பெருத்தால் கணவனைத் தின்பாள்’
‘மாமியார் மெச்சிய மருமகள் இல்லை’
‘மருமகள் மெச்சிய மாமியார் இல்லை’

‘மாமியார் ஒடச்சா மண்குடம்’
‘மருமகள் ஒடச்சா பொன்குடம்’
‘மகன் செத்தாலும் பரவாயில்லை
மருமகள் வாழக் கூடாது’
‘அண்ணனிடத்தில் ஆறுமாதம் வாழ்ந்தாலும்
அண்ணியிடம் அரைநாழி வாழ முடியுமா’
‘அண்ணன்தான் கூடப் பிறந்தவன்
அண்ணியுமா கூடப் பிறந்தவள்’
‘மக வருமுன்னே பூட்டிக்கோ கட்டிக்கோ
மருமக வருமுன்னே உண்ணுக்கோ தின்னுக்கோ’
‘அக்கா ஆனாலும் சக்களத்திதான்
அலுத்து வியர்த்து அக்காளண்டைப் போட்டாள்’
‘ஆண்பிள்ளைகள் ஆயிரம் ஒத்திருந்தாலும்
அக்கா தங்கை ஒத்திரார்’
‘ஆணாயிரம் ஒத்தாலும் பெண் நாலு ஒவ்வாது’
‘பத்து வராகனுக்கு மிஞ்சிய பதிவிரதை இல்லை’
‘காசு கொடுத்தவனே கணவன்’
‘அடுத்த வீட்டுக்காரி ஆம்பள புள்ள பெத்தாளாம்
எதிர்த்த வீட்டுக்காரி இடிச்சுகிட்டு செத்தாளாம்’
‘அயல் வீடு வாழ்ந்தால் ஒன்பது நாள் பட்டினி கிடப்பாள்’
‘கணக்கன் பிள்ளைப் பெண்சாதி கடுக்கன்
போட்டுக் கொண்டால் என்றால் காரியக்காரன்
பெண்சாதி காதை அறுத்துக் கொள்வாளாம்’
‘சாண் பிள்ளையானாலும் ஆண்பிள்ளை’

இப்படிப் பல்வேறு விதமான பழமொழிகள் நம் சமூகத்தில் மரபு வழியாகச் சொல்லப்பட்டு காலங்காலமாக பெண்கள் தரத்தை குறைவாகவே மதிப்பிட்டுள்ளனர்.

பெருவாரியான மக்கள் தொகையைப் பெற்றுள்ள இந்து மதத்தில் இருவேறு நிலைகள் உள்ளதாகக் கொள்ளலாம். தெய்வமாக மதிக்கும் கருத்தியல் கூறுகள், அடிமைத்தனம் கொண்ட நடைமுறை வாழ்க்கை ஆகியனவாகும். இந்து மதத்தில் பெண்ணுக்கென்று தனி இடமோ, இயக்கமோ இல்லை. அவள் இளமையில்

தந்தையின் தயவிலும், திருமணமானபின் கணவனின் பிடியிலும், கணவன் மறைந்தால் அல்லது முதுமைக் காலத்தில் பிள்ளைகளைச் சார்ந்தும் வாழ வேண்டிய நிலை.

கணவனோடு வாழும் பெண் 'சுமங்கலி' என்றும் 'கட்டுக்கழுத்தி' என்றும் போற்றப்படுவார்கள். கணவனை இழந்தாலும், பிரிந்து வாழ்ந்தாலும் திருமணமே செய்து கொள்ளாமல் வாழ்ந்தாலும் அப்பெண்ணுக்கு உரிய மரியாதை இருப்பதில்லை.

கிறித்துவ, முகமதியப் பெண்களும் ஏறக்குறைய இந்துப் பெண்களைப் போலவே பலவிதங்களிலும் நடத்தப்படுகின்றனர். ஜொராஸ்டிரிய மதம் பிற மதங்களை விட சமூக அளவிலும், சொத்துரிமையிலும், குடும்ப அளவிலும் மேம்பட்ட நிலையைத் தந்துள்ளது.

இலக்கிய வகையில் எடுத்துக் கொண்டால் நம் சங்க இலக்கியங்களும், தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களும் பெண்களைக் குலமகளிர், பரத்தையர், மூதின் மகளிர், சுற்றத்தார், தொழில் செய்யும் பெண்கள், கல்வி பெற்ற மகளிர், ஏவல் பெண்டிர், விறலி, கலைமகளிர் என்ற வகையில் குறிப்பிட்டுப் பேசுகின்றன.

**தேவதாசிகள்**

பண்பாட்டுத் தேவையாக பாலியல் உறவுகள் முறைப்படுத்தப்பட்டாலும், தனிக்குடும்ப முறையைப் பொறுத்தவரை தாய்வழித் தலைமையே தொடர்ந்தது. தாய்க்குப்பின் குடும்பத்தின் தலைமைப் பதவியும், செல்வாக்கும், அதிகாரமும் தாயிடமிருந்து வாரிசு முறையால் மகளை அடைந்தது. மேலை நாடுகளில் மதங்கள் உருக்கொள்ள ஆரம்பித்த போது கூட அம்மதங்களை வழிநடத்தும் தலைவர்களை நீக்கவும், பதவியில் அமர்த்தவுங் கூட பெண்கள் உரிமை பெற்றிருந்தனர். அது மட்டுமின்றி 'காசி' போன்ற இளம் பெண்கள் மதத்தை வழி நடத்தும் மத குருமார்களாகவும் திகழ்ந்தனர்.

நம்முடைய புராணங்களிலும் பண்டைய இலக்கியங்களிலும் தேவ அசுர போராட்டம் அதிகமாகக் காணப்படுகிறது. இந்தப் போராட்டத்தில் தேவர்களின் மனைவிமார்கள் அசுரர்களால் கற்பழிக்கப்பட்டதாகவும், தேவர்களின் தலைவனான இந்திரன் அவர்களைப் பூமியில் பிறந்து இறைவனுக்குத் தொண்டு செய்யுமாறு பணித்ததாகவும் அப்படி பூமிக்கு வந்த தேவர் குலப்பெண்களே தேவதாசிகளென்றும், திருக்கோயில்களில் இறைவனுக்குத் தொண்டு செய்து

தங்கள் புனிதத்தை மீண்டுமடைந்து தேவலோகம் செல்வதாகவும் பத்ம புராணம் கூறுகிறது.

இதிகாசங்கள், புராணங்கள் இவைகளில் பல்வேறு கதைகள் சொல்லப்பட்டாலும் உண்மை வாழ்க்கையில் இவர்கள் உருவானதற்கான காரணங்கள் சமூக ரீதியாகச் சொல்லப்படுகின்றது.

❖ உற்பத்திக் கருவிகளால் தன் செல்வத்தைப் பெருக்கிக் கொண்ட ஆணினம் பிள்ளைகளின் எண்ணிக்கைக் கூடுதலாக இருப்பின் வயலின் உற்பத்தியைப் பெருக்கலாம் எனும் பேராசையில் பெண்கள் பலரை மணந்தான்.

❖ முதல் மனைவிக்கு மக்கட் பேறு இல்லாத போது வாரிசு வேண்டி பல பெண்களை மணக்க ஆரம்பித்தான். முதல் மனைவி இறந்து விட்டாலோ, நோய்வாய்ப்பட்டாலோ, தனக்குத் துணை வேண்டிப் பெண்கள் பலரை மணந்தான்.

❖ தன்னுடைய இயல்புக்கும், ஆசைக்கும், உரியவளாகத் தன் மனைவி இல்லாவிட்டால் தன்னுடன் ஒத்துழைக்கும் பெண்களை மனைவியராக ஆக்கிக் கொண்டான்.

❖ உடன் பிறந்தார் இறந்து விட்டால் அவர்களின் மனைவியர்க்குக் காப்பாக இருப்பதாகக் கூறிக்கொண்டு அப்பெண்களையும் மணந்து கொண்டான்.

❖ வாணிபம் காரணமாக வெளியூர்களுக்குச் சென்று அங்கு பல நாட்கள் தங்க வேண்டியிருந்ததால் அவ்வூரிலும் மனைவி வேண்டிப் பல பெண்களை மணந்து கொண்டான்.

❖ வேறொருவரின் செல்வத்தைக் கவருவதற்காகக் கூடுதலாக அவர் தம் பெண்டிரை மணந்து கொண்டான்.

❖ போரில் வெற்றி பெற்றவன் பகைவனின் மனைவியையும், மகளையும் அங்குள்ள அழகிய பெண்களையும் கவர்ந்து மனைவியாக்கிக் கொண்டான்.

இவை போன்ற காரணங்களால் ஆணினம் சமூகத்தில் பல மனைவியர் மணத்தை உருவாக்கியது.

இப்படி காம இச்சை காரணமாகவோ, சொத்துரிமை காரணமாகவோ ஆண்கள் வெளிப்படையாகவோ அல்லது மறைமுகமாகவோ பெண்கள் பலருடன் தொடர்பு கொண்டிருந்த செயலே பரத்தமை தோன்றுதற்கு வித்திட்டதாகக் கொள்ளலாம். தொல்காப்பியருடைய காலத்திலும், அவருக்குப் பின் வந்த

சங்ககாலத்திலும் இலைமறை காயாக பண்பாட்டு உணர்ச்சியுடன் சொல்லப்பட்ட பரத்தமை சங்க காலத்திற்குப் பிறகு தனித் தொழிலாக உருவெடுத்தது.

வரலாற்றாசிரியர்கள் முதலாம் இராஜராஜன் காலத்தில் தான் தேவதாசிகள் கோயில்களில் பணியாற்றத் தொடங்கியதாகக் கொள்கின்றனர். ஆனால் இம்முறை பல்லவர் காலத்திலேயே தொடங்கப்பட்டுவிட்டதாக கல்வெட்டு ஆவணங்கள் தெரிவிக்கின்றன.

சங்ககாலம் தொடங்கி, காமக்கிழத்தி, காதற்பரத்தை, சேரிப்பரத்தை என்றிருந்த நிலைமாறி தத்தை, விகுருதை, பிரத்தியை, பக்தை, இருதை, அலங்காரி, உருத்திரக் கணிகை என ஏழுவகையினராகப் பிரிவுபட்டனர். இவருள் உருத்திரகணிகையர் மரபினரே கோயில்களில் பணியாற்ற அமர்த்தப்பட்டனர். இக்கருத்தினை அப்பரடிகளும், ஞானசம்பந்தரும் தம் தேவாரங்களில் குறிப்பிடுகின்றனர்.

**பொட்டுக்கட்டுதல்**

பொட்டுக்கட்டுவதென்பது ஒரு பெண் தேவதாசியாக மாற்றப்படுவதன் அல்லது அடையாளச் சடங்காகும். பொட்டு திருமாங்கல்யத்திற்கு இணையானதாகும். ஒரு பெண் தேவதாசி ஒருத்திக்குப் பிறந்து விட்டதால் மட்டுமே அந்தத் தேவதாசி உரிமையை அவள் பெற்றுவிட முடியாது. முறைப்படி பொட்டுக் கட்டுவதன் மூலமே அவளை கடவுளுக்கு அர்ப்பணிப்பதன் மூலமே அவள் தேவதாசி ஆக முடியும்.

இந்த பொட்டுக்கட்டும் சடங்கு அவள் பணிபுரியும் கோவிலில் மட்டுமே நிகழ்த்தப் பெறும். தேவதாசியாகும் பெண்ணுக்கு அவள் குடும்பத்தில் உள்ள வயதான பெண்மணியால் கோயில் மூலவர் சன்னதியில் இச்சடங்கு நிறைவேற்றப்படும். சில சமயங்களில் அக்கோயில் அர்ச்சகராலும் இச்சடங்கு செய்யப்படுவதுண்டு. இவ்விதம் பொட்டுக்கட்டிக் கொள்வதற்கு வயது ஒரு தடையாக இருந்ததில்லை என்பது கல்வெட்டுச் செய்திகளில் உறுதிப்படுகின்றது.

**“ஆந்திரப் பிரதேசத்தில் கிருஷ்ணா மாவட்டத்தில் உள்ள நாகேஸ்வரசுவாமி கோயில் கல்வெட்டு அக்கோயிலில் எட்டு வயது சிறுமி கூட தேவதாசியாகப் பணிபுரிந்ததைக் குறிப்பிடுகிறது. கர்நாடகத்தில் ஒரு பெண் அவள் வயதுக்கு வருவதற்கு முன்பாகத்தான் இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட வேண்டும் என்ற வழக்கம் இருந்தது உறுதிப்படுகின்றது. தஞ்சை மாவட்டம் நீடாமங்கலத்தில் உள்ள சந்தான ராமஸ்வாமி கோயிலில் அர்ப்பணிக்கப்பட்டு பொட்டுக்கட்டப்பட்ட**

**தாசிக்கு வயது பத்து. இவள் ஜீவிதத்திற்கு நாள்தோறும் ஒன்றைப் பட்டை சாதமும் மாதந்தோறும் ஒரு கலம் அரிசியும் கொடுக்கப்பட வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது"[62].**

கோயில் பணிக்கென்று பொட்டுக்கட்டி விடப்பட்ட தேவதாசி பெண்கள் அக்கோயில்களில் காலைசந்தி, உச்சிகால பூஜை, மாலை மற்றும் இரவு பூஜைகளின் போது சம்பிரதாயமாக தேவாரம் பாடப்பட்டு நாட்டியம் நிகழ்த்த வேண்டும் என்பது அவர்களது நித்தியப்பணியாக இருந்தது. பல தேவதாசிப் பெண்கள் ஒரே கோயிலில் இருந்தால் முறை வைத்து நடத்தப்படுவதுண்டு.

**"கி.பி.1311-இல் முகமதிய தளபதி மாலிக்காபூர் தென்னாடு நோக்கிப் படையெடுத்தான். கோயில்களைக் குறிவைத்துத் தாக்குதல்கள் நடத்தினான். இவனது தாக்குதல் திருவரங்கக் கோயில் மீதும் திரும்பியது. ஸ்ரீரங்கநாத மாணிக்கம் என்றழைக்கப்பட்ட அம்சலேகா என்ற தேவதாசி இப்படையெடுப்பில் அவளுடைய தாயார், தோழிகளையும் இழந்தாள். நிலைமை மோசமாகவே ரங்கநாதர் படிமத்தைக் காப்பாற்ற தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டு கோயிலினுள் நுழைய முயன்ற மாலிக்காபூரின் படைத்தளபதி மீது பார்வையைச் செலுத்தினாள்.**

**அவன் அவள் அழகில் மயங்கி அவளைப் பின் தொடர்ந்தான். அங்குமிங்குமாக அலைக்கழித்து மதிலின் ஓரத்தில் வைத்து அவனைக் கீழே தள்ளி கொன்றாள். இதை கேள்வியுற்ற மாலிக்காபூர் படைகள் பின் வாங்கினாலும் தங்களது தளபதியைக் கொன்ற பெண்ணைப் பழிவாங்க அவள் மீது தாக்குதலைத் தொடர்ந்தனர். பதுங்கிப் பதுங்கிச் சென்ற அவள் கால் இடறி மதிலின் வேறுபக்கமாக விழுந்தாள். படைகள் திரும்பிச் சென்று விட்டன"[63].**

அடுத்த நாள் காலையில் அறங்காவலர்கள், கால்முறிந்து உயிருக்குப் போராடும் அம்சலேகாவைக் கண்டு அவளது தியாகத்தில் ரங்கநாதரின் உற்சவச் சிலையைக் காப்பாற்றிய அவளுக்கு நன்றி கூறினர். அவள் இறக்கும் போது, எம்பெருமான் உடுத்துக்களைந்த உடையால் மூடவேண்டும். தன் உடலை கோயில் மடப்பள்ளியிலிருந்து கொண்டு வந்து நெருப்பால் தகனம் செய்ய வேண்டும். இந்த கௌரவம் தனக்கு மட்டுமன்றி, தன் இனத்தவர்களுக்கும் இப்படிச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். அன்றிலிருந்து அவள் கேட்டுக் கொண்டது நடைமுறையில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

**தேவதாசி மரபின் முடிவு**

ஐரோப்பியர்களின் வரவு இந்திய திருநாட்டின் சுதந்திரத்திற்குக் கைவிலங்கு போடப்பட்டதைப் போலவே தேவதாசியர் வாழ்க்கை நடைமுறைகளுக்கும் கருப்புத்திரையைப் போர்த்தியது. இதற்குப் பிறகு கோயில் நிர்வாகம் ஊர்ப்பெரியவர்களின் கைக்குச் சென்றது. தேவதாசிகளின் தடைச் சட்டத்தை ஆங்கில அரசு கொண்டு வந்தது. அவர்களும் வேறு தொழிலை நாடினர். குடும்ப முறைக்கு மாறினர். வேறு மாநிலங்களுக்கும் குடிபெயர்ந்தனர்.

**தேவதாசி கலைகள்**

சாதாரண பெண்களுக்கு எழுதப்படிக்கத் தடை, ஆடிப்பாடத் தடை, அலங்காரம் செய்து கொள்ளத் தடை என்றிருந்த ஆதி காலத்தில் தேவதாசிப் பெண்கள் எல்லாக் கலைகளிலும் தேர்ச்சி பெற்றார்கள். அந்தக் காலத்தில் எழுதப்பட்டிருந்த காமசூத்திரம் கூட ஆயகலைகள் 64-உம் தெரிந்திருந்தால் அவளுக்கு தேவதாசி அந்தஸ்து கிடைக்கும். இப்படி கலைகளில் சிறந்து விளங்கிய தேவதாசிகளில் அழகான தேவதாசிகளை அந்தப் பகுதிகளில் உள்ள ஆண்கள் தங்களின் விருப்பத்துக்குரியவர்களாகக் கொண்டாடினார்கள்.

ஐரோப்பாவில் இரண்டாவதாக செய்யும் திருமணமும், திருமணமான பெண்ணுடன் உறவு கொள்வதும் துர்நடத்தையாகும். ஆனால் இந்தியாவில் கண்ணன், தசரதன் காலத்திலிருந்து மேற்படி காரியங்கள் நன்னடத்தைகளாகவே கருதப்பட்டு வருகின்றன. ஐரோப்பாவிலும் இன்றைய இந்தியாவிலும் கூட ஒரு பெண் பல ஆண்களுடன் உறவு கொள்வது உசிதமானதாகக் கருதப்படுவதில்லை. ஆனால் திரௌபதிக்கு ஐந்து கணவர்கள் இருந்தார்கள். அப்படியிருந்தும் அவள் புனிதமான பதிவிரதையாகவே விளங்கினாள் என்பது நமக்குத் தெரியும். இமயமலையில் வாழும் சில ஜாதிகளிலும் இன்றும் ஒரு பெண் பல கணவர்களைக் கொண்டிருப்பதும், சகோதரர்கள் அனைவருக்கும் ஒருத்தியே மனைவியாக இருப்பதும் காணப்படுகிறது. அம்மக்கள் இதை துர்நடத்தையாகக் கனவிலும் கருதுவதில்லை. அங்குள்ள மக்கள் ஒருவனுக்குள்ள பல மனைவியரைப் பற்றியோ, ஒருத்திக்குள்ள பல கணவன்மார்களைப் பற்றியோ சொல்வதற்கு சங்கோஜப்படுவதில்லை. திரௌபதியும் தனக்கு ஐந்து கணவர்கள் என்று சொல்வதற்கு சங்கோஜிக்கவில்லை அல்லவா! சமுதாயம் எதை ஒப்புக் கொண்டதோ அது நன்னடத்தையாகும்.

நிலப்பிரப்புக்கள் காலத்தில் ஆஸ்தியையும் அந்தஸ்தையும் பார்த்தே திருமணங்கள் நிச்சயிக்கப்பட்டன. கணவன் மனைவியைக் கண்காணிக்கவும்,

அவள் மேல்சந்தேகம் தோன்றினால் அவளைக் கொலை செய்யவும் உரிமை இருந்தது. கணவன் எவ்வளவு துர்நடத்தையுள்ளவனாக இருந்தாலும் மனைவியானவள் அதை வாய்மூடி மௌனியாக பொறுத்துக் கொண்டு தான் கிடக்க வேண்டும். பெண்ணின் துர்நடத்தையை சமுதாயம் அவமானதாகக் கருதியது. ஆணின் துர்நடத்தையைச் சாதாரண விஷயமாகக் கருதி கண்ணை மூடிக்கொண்டது.

**விலைமாதர்கள் நிலை**

அருணகிரியார் விலைமாதர் வீடுகளே சொர்க்கம் என்று கிடந்தவர். ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு விதமான அழகு. அந்த அழகில் திருப்தியடைய முடியவில்லை. ஒருத்தியை பார்த்துவிட்டு மற்றொருத்தியை பார்க்கும்போது, இன்னொரு பேரழகியாய்த் தோன்றுகிறாள். இதில் அழகுக்கு எல்லை வகுக்க முடியுமோ? அந்தப் பேரழகுப் பெட்டகங்களை மறக்கத்தான் முடியுமோ? என்னவிலையானாலும் அவர்களை அணுஅணுவாக அனுபவித்து விட வேண்டும் என ஆவல் அருணகிரியாரை உந்தியது. அருணகிரிக்கு உடலில் இரத்தம் சுண்டி நாடி தளர ஆரம்பித்தது. கைப்பொருளை எல்லாம் செலவழித்தபின் ஒவ்வொருவராக இவரை விட்டு விலகத் தொடங்கினார்கள்.

**“உடலில் ரோகம் துன்புறுத்த, உள்ளத்தில் சோகச் சுமைகள் உருக்குலைக்க, பரத்தையரின் சாகசங்கள் அனைத்தையும் உணர்ந்த அவர் தம்மை இம்மாயப் படுகுழியிலிருந்து மீட்பவராக முருகப் பெருமானையே நினைத்து வணங்கினார்”[64].**

அருணகிரியார் வாழ்ந்த காலத்தில் முகமதியர்கள் படையெடுப்பு நிகழ்ந்த காலம். எனவே சோழமன்னர்கள் வழங்கிவந்த நிவந்தங்கள் நின்று போயின. குறுநில மன்னர்களால் ஏற்பட்ட குழப்பங்கள், தெலுங்கர், கன்னடர்கள் செல்வாக்கு இவை காரணமாகத் தங்கள் செல்வாக்கை இழந்த தேவதாசிகள் தங்கள் உடலழகை விற்றுப் பிழைக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டனர். பெருங்கோயில்கள் இருக்கும் இடங்களில் தொண்டு செய்து வந்த அவர்கள் வறுமை காரணத்தால் இழிநிலைக்குத் தள்ளப்பட்டனர். விலைமகளிர் கோயில்கள் நிறைந்துள்ள ஊர்களிலேயே அதிகம் இருந்துள்ளனர்.

**விலைமாதர்களின் தேவை**

பெரிய வீட்டுப் பெண்களின் ஒழுக்கம் மிகவும் முக்கியம் என்று கருதப்படும் வரையில், திருமணம் என்னும் சடங்குடன் வேறோர் ஏற்பாடும் அவசியமாகும். அந்த

ஏற்பாடுதான் விலைமாதரை அமர்த்திக் கொள்ளல். அது உண்மையில் திருமண ஏற்பாட்டோடு சம்பந்தப்பட்ட தென்றே கொள்ளலாம். வீடு அல்லது இல்லறத்தின் புனிதத் தன்மையையும், நம்முடைய மனைவியர், பெண்களின் ஒழுக்கத்தையும் காக்க உதவும் சாதனமே வேசித் தொழில் என்று லெக்கி (Lecky) என்பார் ஒரு நூலில் கூறியுள்ளதை யாவரும் அறிய முடிகிறது.

ஆடவர் மணமாகாமல் இருக்கும் போதோ, அல்லது தம்முடைய மனைவியிரைப் பிரிந்து வெளியூர்களில் பிரயாணம் செய்யும் போதோ புலனடக்கம் அனுஷ்டிக்க முடியாமலிருப்பர். அப்போது அவர்களுடைய இச்சையைப் பூர்த்தி செய்து கொள்ள உயர்ந்த குடும்பப் பெண்கள் கிடைக்காத நிலையில் வேசித் தொழில் தேவைப்படுகின்றது. ஆகவே ஆடவர்களின் தேவைக்காகச் சில வகுப்புப் பெண்களை சமூகமே ஒதுக்கி வைக்கின்றது. ஆண்களின் இத்தகைய தேவையை அங்கீகரிக்கச் சமூகம் வெட்கப்படுகின்றது. ஆனால் அத்தேவையை முழுதும் பூர்த்தியாக்காமல் விட்டு விடுவதற்கும் சமூகம் அஞ்சுகின்றது. தேவைப்பட்ட கணமே விலைமகள் கிடைத்து விடுகின்றாள் என்பது மட்டுமல்ல, அவளுடைய தொழிலுக்கு வெளியே வாழ்க்கையில் வேறு எதிலும் கலந்து கொள்வதில்லையாதலால் அவள் தன் தொழிலைச் சிரமமின்றி இரகசியமாக நடத்த முடிகிறது. அவளிடம் இன்பம் நுகரும் ஆடவனோ, கௌரவம் குறையாமல் மீண்டும் தன் மனைவி, குடும்பம் என பழையபடி வாழ்க்கை நடத்த முடிகிறது.

பழங்காலத்திலிருந்தே இந்தியாவில் விலைமாதர்கள் இந்தியாவின் பல பாகங்களிலும் வாழ்ந்து வந்தனர். இவர்களைக் கணிகையர்கள், தாசிகள் என்று அழைப்பதுண்டு. இவர்களின் வாழ்க்கையில் அவ்வளவாக நியதிகள் வரையறுக்கப்படவில்லை. அவர்கள் பேரழகு படைத்தவர்களாகவும், வாளிப்பான உடலுடனும், இசை, நடனம் போன்றவற்றில் தேர்ச்சி பெற்றவர்களாகவும், அரசவையில் அந்தஸ்து பெற்றவர்களாகவும் விளங்கினர். நடித்தல், பூமாலை புனைதல், நூல்வேலை, ஆடைசெய்தல், சமையல், வாசனை திரவியம், மாந்திரிக நிகழ்ச்சிகள், தோட்டம் அமைத்தல், கைவேலை செய்தல், பலமொழிகற்றல், கிளிகளுக்குப் பேசக்கற்றுக் கொடுத்தல் போன்ற அறுபத்து நான்கு கலைகளிலும் தேர்ச்சி பெற்று இருந்துள்ளனர்.

அரசர்களின் அந்தப்புரத்தில் பலநாடுகளைச் சார்ந்த அழகிகளை வைத்திருந்தனர். இவர்கள் அரசருடனும், மற்ற சமயங்களில் ஏனைய அரசப் பிரதிநிதிகளுடனும் தொடர்பு கொண்டிருப்பர். அரசருக்குத் தேவையான

பணிவிடைகள் செய்தல், மற்றும் பெரும் படையுடன் போர் முனைக்குச் செல்லும்போதும் கணிகைகள் உடன்செல்லுதல் வழக்கமாக இருந்துள்ளது.

**பெண்களின் அவசரகால திருமணம்**

பெண்கள் பொதுவாக சிற்றின்ப உணர்ச்சி கொண்டவர்கள் என்றும் அவர்கள் வயது வந்ததும் தம் பெற்றோர்கள் எவ்வளவு பாதுகாத்தாலும் அவர்கள் தமக்கென காலனை நாடுவார்கள் என்று எண்ணினர். அவ்வாறு அவள் சென்று கற்புத்தன்மையை இழந்து விட்டால் அவள் வாழ்நாள் முழுவதும் திருமணம் செய்து கொடுக்க முடியாது என்பதாலும் பெற்றோர்கள் உரிய சமயத்திலேயே திருமணம் செய்து வைக்க முயன்றனர். அவ்வாறு திருமணம் செய்து வைக்காவிடில் தவறான வழியில் சென்று அதனால் அவளை சாதியை விட்டு நீக்கி வைக்கும் நிலைக்கு ஆளாகிவிடுவார்கள். அதனால் பிச்சை எடுத்தோ, விலைமாதராகவோ ஆக நேரிடுகிறது. ஆகவே பெற்றோர்கள் பெண் பிள்ளைகளைப் பெருஞ்சுமையாகக் கருதி உள்ளனர். தம் மகளுக்கு விரைவில் திருமணம் முடிப்பதையே விரும்பினார்கள்.

ஆடல் பாடலில் வல்ல பரத்தையர்கள் சங்ககாலந்தொட்டே தமிழகத்தில் இருந்துள்ளனர். பரத்தையர் சமுதாயம் பெண்மக்கள் பெறுவதையே விரும்பினர். கணிகையர் குலத்தில் பல பிரிவுகள் இருந்துள்ளது. உருத்திரக்கணிகை மாராமபதியிலார் குலத்தில் தோன்றிய பரவையாரைச் சுந்தரர் மணந்து கொண்டார். இதனால் பரத்தையரும் குலமகளிராயினர். மாதவி, நருமதை போன்றவர்கள் தங்கள் குல ஒழுக்கத்தை வெறுத்துக் கற்பு நெறியை விரும்பியவர்கள். எனவே குலமகளிரது கற்பு வாழ்க்கை கணிகையரைக் கவர்ந்திருக்க வேண்டும் எனக் குறிப்பிடப்படுகிறது.

**பெண்களின் சுதந்திரப் பார்வை**

பெண்கள் அதிக அளவில் சுதந்திரம் பெறத்தொடங்கியதிலிருந்து மணவாழ்வில் பண்டைக் காலத்தில் இருந்ததை விடத் தம்பதிகளிடையே பரஸ்பர நம்பிக்கை குன்றுவதற்கான பல வாய்ப்புகள் தோன்றியுள்ளன. பல வழிகளில் பெண்களின் விடுதலை இயக்கம் மணவாழ்க்கையை இன்னும் கடினமாக்கி விட்டன. பழைய காலத்தில் மனைவி கணவனுக்குக்கேற்ப நடக்க வேண்டியிருந்தது. ஆனால் கணவன மனைவியின் போக்குக்கேற்றவாறு நடக்க வேண்டியதில்லை. இன்றோ பெண்கள் தம்முடைய தனித்தன்மையைப் பேணுவதற்குத் தமக்குள்ள உரிமையைப் பற்றியவராயும், தாம் ஈடுபட்டுள்ள அலுவலில் நாட்டம்

கொண்டவராயும் இருப்பதால் ஓரளவுக்கு மேல் கணவன்மாரின் விருப்பத்துக்கேற்ப நடக்க மறுத்துவிடுகின்றனர்.

ஒரே கூரையால் பாதுகாக்கப்பட்ட இதயங்களின் இணைப்பு ஒரு குடும்பமாகும். அன்பு, பரிவு, பாதுகாப்புணர்வு, ஒன்றுபட்டு வாழ்வது, சகிப்புத்தன்மை ஆகியவற்றின் உறைவிடம் குடும்பம். இது ஐக்கிய நாடுகளின் அமைப்பு குடும்பம் பற்றி அளிக்கும் விளக்கம் ஆகும். ஆனால் வேகமாக வளர்ந்து வரும் அறிவியல், பொருளியல், சமூகச் சூழலில் குடும்பம் எதிர்கொள்ளும் சவால்கள்தான் எத்தனை? தொழில் வளர்ச்சியடைந்த நாடுகளில் எதிர்காலத்தில் குடும்பம் என்ற அமைப்பு நிலைத்திருக்குமா என்ற சந்தேகம் எழுந்துள்ளது. திருமணம் செய்து கொள்ளாமலேயே வாழும் தம்பதியர், குடும்ப பொறுப்பை ஏற்க விரும்பாதவர்கள், தனியாய் வாழ்பவர்கள், ஓரினச்சேர்க்கையை விரும்புபவர்கள், குழந்தைகளை வைத்துக் கொண்டு பிரிந்து வாழும் பெற்றோர்கள், ஒழுங்கற்ற திருமணங்கள், கலாச்சார சீரழிவு, சுயநலம், தனிநபர் வாதம் ஆகிய போக்குகள் குடும்பத்தின் அடித்தளத்தையே ஆட்டம் காண வைக்கின்றன.

அலுவலகத்திலிருந்து நாங்கள் வீடு திரும்பும்போது செருப்பை மட்டும் கழட்டி வாயிலில் வைப்பதில்லை. சமத்துவத்தையும் வெளியே விட்டு விடுகிறோம் என ஒரு பெண் கூறியது நடைமுறையாக உள்ளது. குடும்பத்தில் பெண் ஒரு சுமைதாங்கியாக, மிதியடியாகத் தொடர்ந்து பயன்படுத்தப்பட்டிருக்கிறாள் என்பது வரலாற்று உண்மை ஆகும்.

ஓர் அப்பா கெட்டுக் குட்டிச் சுவரானாலும் ஒரு குடும்பம் பிழைத்துவிடும். ஆனால் ஓர் அம்மா அப்படியாகிவிட்டால் அந்தக் குடும்பமே அழிந்து விடும். இந்த நாட்டின் கலாச்சாரத்தின் உறைவிடமே நம்நாட்டுப் பெண்கள் தான். நம் நாட்டுப் பொருளாதாரத்தின் ஆதாரமே குடும்பம்தான். அந்தக் குடும்பத்தின் மையமே பெண்தான். இந்த நாட்டில் வாழையடி வாழையாக சமய நம்பிக்கைகள் தழைத்து வந்திருக்கின்றதென்றால் அதற்குக் காரணம் நம் நாட்டு பெண்கள்தான். ஆக குடும்பமும் சரி, சமுதாயமும் சரி, கலாச்சாரமும் சரி, பொருளாதாரமும் சரி எல்லாம் பெண்களைச் சார்ந்துதான் அமைந்திருக்கின்றன எனலாம்.

கலாச்சார ரீதியாகவும், பெண்களுக்கே உரித்தான தாய்மையின் காரணமாகவும் இயற்கையாகவே தன்னையடக்கி மற்றவர்களைப் பராமரிக்கும் குடும்பப் பாங்கின் மூலமாகத்தான் அவர்களுக்கு மரியாதையும், மதிப்பும் உருவாகின்றன. புகழுக்கும், மரியாதைக்கும், வித்தியாசம் இருக்கிறது.

புகழ்தனிநபரைச் சேரும், ஒரு தனிப் பெண்ணின் புகழ் பெண் என்கிற இனத்தைச் சென்றடையாது. பெண் என்கிற வர்க்கத்துக்கான குணங்களின் மூலமாகத்தான் அவர்களுக்குச் சமுதாயத்தில் மரியாதை கிட்டும்.

பெண்கள் உடலியல், உயிரியல் கூற்றின்படியோ இயல்பின் காரணமாகவோ விபச்சாரம் செய்யும் எண்ணம் இல்லாதவர்கள். நம்நாட்டுப் பெண்களுக்கு நாம் நால்வகை குணங்களைக் கொடுத்து எல்லை மீறாமல் வைத்திருக்கிறோம். தாய், தாரம், தமக்கை, தங்கை என்று எத்தனை அவதாரம் எடுத்தாலும் மனைவியிடம் மட்டுமே மனதாலும், உடலாலும், உணர்வாலும் கவரப்படுகிறோம். இது நம் சமுதாயம் ஏற்படுத்தியிருக்கும் நல்ல ஏற்பாடு ஆகும்.

**பண்டைக்கால மகளிர் வாழ்க்கை**

அன்யோன்யமான உறவுகள் ஒரு போராட்டமாக மாறாது. ஆனால் எரிச்சலிலும், வெறுப்பிலும் சிக்கிக் கொண்டு வேண்டா வெறுப்பாக வேறு வழியின்றி பழகுகின்றனர். இதற்குக் காரணம் என்ன தெரியுமா? உங்கள் கணவர் ஓர் ஆண் என்பதையும், நீங்கள் ஓர் பெண் என்பதையும் உங்களையும் மறந்து விடுவதுதான். நான் ஆண் உசத்தி, பெண் குறைவு என்று நினைக்கக் கூடாது.

ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள முக்கியத் தேவைகளும், உணர்வுகளும், அவற்றின் வெளிப்பாடுகளும் அடியோடு வேறு, அன்பு என்ற சொல்லுக்கு இருவர் கொடுக்கும் அர்த்தங்களே வேறு என்று கூறுகிறது நவீன அறிவியல். உதாரணத்திற்கு பெண்ணின் மூளைக்கு அதிமுக்கியத் தேவை உறவு முறைகள். அந்த உறவினை ஏற்படுத்திக் கொள்வது எப்படியெனில் தன்னுடைய பிரச்சனைகளை ஒருவரிடம் விலாவாரியாக பேசுவதன் மூலம் பிரச்சனை தீருவது, தீராமல் போவது இரண்டாம் பட்சம். பேசுவதுதான் முக்கியம் அதன் மூலம் உறவும் பலப்படுகிறது.

ஆனால் ஆணின் மூளையில் பிரச்சனை வந்தால் அதற்கு உடனடியாக தீர்வு கண்டுவிட்டுத்தான் மறுவேலை பார்க்கும். இந்த இருவரும் ஒன்று சேரும் போது என்ன நடக்கும் என்று யோசித்துப் பாருங்கள். நீங்கள் அன்றைக்கு நடந்ததை வருத்தத்தோடு கூற வருகிறீர்கள். உங்கள் கணவரோ ‘சீக்கிரம் விஷயத்திற்கு வா’ என்கிறார். எப்படி இருக்கும் உங்களுக்கு? அவருக்கு உங்கள் மேல் அலாதி அக்கறை. அதனால் உங்களுடைய பிரச்சனையை உடனடியாகத் தீர்க்க வேண்டும் என்று நினைக்கிறார் என்று எடுத்துக் கொள்ள வேண்டும்.

நம் பண்டைக்கால மகளிர் நன்கு உணர்ந்து தெளிந்ததனால் தான் வாழ்க்கையைத் தொலைத்து விடாமல் சொர்க்கமாக்கிக் கெள்ள முயன்றதோடு மட்டுமல்லாமல் வெற்றியும் கண்டிருக்கிறார்கள். இதற்குப் பெயர் விட்டுக் கொடுப்பதுமல்ல, ஆணாதிக்கமுமல்ல, இருப்பதை உணர்ந்து அதற்கேற்ப நடந்து கொள்ளுவதாகும். நாம் சாலையில் சைக்கிளில் செல்வதாக வைத்துக் கொள்வோம் எதிரே பேருந்து வருகிறது. ஒதுங்கி வழி விடுகிறோம். அடுத்து சுமை ஏற்றிய லாரி வருகிறது. அதற்கும் ஒதங்கி வழி விடுகிறோம். நமக்குக் கோபமும், எரிச்சலும் வருகிறது. எத்தனை முறை நாமே விலகி வழிவிடுவது? இந்த முறை எதிரில் வாகனம் விலகட்டுமே என்று நாம் பேருந்தில் மோதிக் கொள்வோமா? அப்படி மோதினால் முடிவென்னவாகும்? இதை நம் நாட்டுப் பெண்கள் நன்கு உணர்ந்திருந்த காரணத்தால் தான் வாழ்க்கையைச் சுவையுள்ளதாக ஆக்கிக் கொள்ள அவர்களால் முடிந்தது.

**அழகான பெண்களில் வரைவின் மகளிர்**

நெதர்லாண்டு நாட்டிலுள்ள 'ராட்போட்' பல்கலைக்கழக விஞ்ஞானிகள் அழகான பெண்களைக் கண்டால் ஆண்களுக்கு ஏற்படும் ரசாயன மாற்றம் என்ன? என்பது குறித்து ஆய்வு நடத்தினார்கள்.

முதலில் அழகான மாடல் பெண்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு அவர்களிடம் கல்லூரி மாணவர்களை விட்டு ஒவ்வொரு பெண்ணிடமும் ஒரு மாணவன் மிக அருகில் இருந்து ஏழு நிமிடங்கள் என்னவேண்டுமானாலும் பேசலாம் என அனுமதி தந்தனர். மிக நெருக்கமான சூழ்நிலையில் அழகான பெண்களைக் கண்டதால் கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை, என்ன பேசுவது என்றே தெரியவில்லை. நாக்குழறிப் போனது, அசடு வழிந்தார்கள். காரணம் பாலுணர்வு தூண்டப்பட்டு மூளை மழுங்கடிக்கப்பட்டது தான் ஆகும்.

அதேபோல் மாடல் வேலை செய்யும் ஆடவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களோடு கல்லூரிப் பெண்களைப் பேச விட்டனர். நெருக்கமான சூழலில் இருந்த போதும் அம்மாணவிகள் மிகத் தெளிவாகப் பேசினர். எந்தவிதமான தடுமாற்றமும் இல்லை. தன்னுடன் பேசும் ஆடவன் உடல் நலத்துடன் இருக்கிறானா? வசதி உள்ளவனா? இளமைத் துடிப்பு உள்ளவனா? என்பதை முக்கியமாகக் கவனித்தார்கள். பாலுணர்வு தூண்டலோ எந்தவிதமான மாற்றமுமோ ஏற்படவில்லை.

உலகின் எந்த இன ஆடவர்களிடமும், எந்த மொழி இலக்கியத்திலும் பாலியல் அடக்கம் உடையவர்கள் என்று காட்டப்படுவது குறிக்கோளுக்காக இருக்க முடியுமே தவிர உண்மை அதுவன்று என்பது அனைவரும் அறிந்ததே. எந்த வயதிலும், எந்த நிலையிலும் பெண்கள் தங்களை அழகுபடுத்திக் கொள்வதில் முனைப்பாகவே இருக்கிறார்கள். காரணம் தங்கள் கணவன் தங்களை விட்டு விலகி விடக் கூடாது என்பதில் உள்ள கவனமேயாகும். பெண்கள் சிலர் தங்கள் துணைவர்களிடம் கடுமையாக நடந்து கொள்வதும் தரம் தாழ்ந்து பேசுவதும் நாம் காணக் கூடிய ஒன்றுதான். இதையெல்லாம் பொறுப்பது போல் நடித்துக் கொண்டு இன்னொரு பெண்ணின் மீது நாட்டம் கொள்வர் ஆடவர். 1932 முதல் தமிழகத்தில் விபச்சாரத் தடைச்சட்டம் நடைமுறையில் உள்ளது. அப்படியெனில் ஒழுக்கம் மேம்பட்டிருக்க வேண்டாமா? ஒழுக்கச் சிதைவு தலைவிரித்தாடுகிறது. பேதைப் பருவம் முதல் பேரிளம் பெண்வரை பாலியல் வன்கொடுமைக்கு ஆளாகிறார்கள்.

ஆணும் பெண்ணும் சங்கமிக்கும் பாலியல் தொடர்பில் ஒரு ஆண்மகன் நினைத்தால் எந்தப் பெண்ணையும் கற்பிழக்கச் செய்ய முடியும். ஆனால் எத்தனை பெண்கள் நினைத்தாலும் ஒரு ஆடவனை அவன் விரும்பினால் தவிர அவனை வன்புணர்ச்சிக்கு உள்ளாக்க முடியாது. இது இயற்கையின் கொடையாக ஆண்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. ஏறக்குறைய பதினைந்து வயதில் ஆண்மையைப் பெறும் ஒரு இளைஞன் எத்தனை காலம் ஆற்றியிருக்க முடியும்? வேலை நிமித்தம், வெளியூர் செல்லல், பலரோடு பழகுதல் ஆகியவை அவர்களை நிலையிலிருந்து பிறழ வைக்கிறது.

மனைவி உள்ளவன் மட்டும் தான் இன்பம் காணமுடியுமென்றால் திருமணம் செய்த பிறகுதான் அந்த ஆசை வர வேண்டும். வீடு உள்ளவன் வீட்டில் உண்கிறான். அது இல்லாதவன் விடுதியில் உண்கிறான். அதுதான் வரைவின் மகளிர். மனிதயினம் ஆணும் பெண்ணுமாகப் படைக்கப்பட்டதிலிருந்து இந்நாள் வரை பெண்கள் அடங்கி இருந்தாலும், அடக்கப்பட்டிருந்தாலும் அதுவும் நன்மைக்கே. இதை நன்குணர்ந்த சமுதாயத்தின் ஏற்பாடுதான் வரைவின் மகளிர் ஆவார்கள்.

குடும்பம்தான் சமுதாயத்தின் அச்சாணி. அந்தக் குடும்பம் பல்கலைக் கழகமாக இருக்க பெண்களே உறுதுணை. அவர்கள் பெருமை பெற

வேண்டுமெனில் வரைவின் மகளிரும் உலாவந்து தான் ஆக வேண்டும். அவர்கள் இல்லையென்றால் குடும்பம் என்ற அமைப்புச் சீர்குலைந்து விடும். இதனை,

**“இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்**

**மரப்பாவை சென்றுவந் தற்று”**[65]

வறுமையால் இரப்பவர் இல்லையானால், குளிர்ந்த இடத்தையுடைய பெரிய உலகினரின் போக்கும், வரவும், மரப்பாவை இயந்திரக் கயிற்றால் சென்றுவந்தாற் போன்றதாகும். வரைவின் மகளிர் இல்லாத உலகமும் மரப்பவை உலவும் உலகமாகத்தான் இருக்கும்.

உலக இலக்கியங்களாகட்டும், தமிழ் அக இலக்கியங்களாகட்டும் வரைவின் மகளிர் மூலஸ்தானத்திற்கு முன்னிருக்கும் காவல் தெய்வங்களைப் போன்றவர்கள். இயற்கை ஆணினத்திற்குச் சில நன்கொடைகளை கொடுத்திருக்கிறதென்பது உண்மை ஆகும்.

தொல்காப்பியப் பொருளதிகார மாளிகையில் நுழைந்தால் ‘தலைவி’ என்னும் ஒப்பிலா மங்கையை, கற்புக்கரசியை பண்பின் திருவுருவைக் கண்டு மகிழலாம். ஏறத்தாழ மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே பெண்பாலார்க்குரிய நுண்மாண்நுழை புலத்தை தொல்காப்பியர் போற்றிப் புகழ்ந்துள்ளார். இடைக்காலத்தை பெணடிர் தம் அறிவை இழிந்தும், பழித்தும் பேசிய நிலை யாங்ஙனம் எழுந்தது என்பது விந்தைக்குரியதே. காப்பியர் கூறும் காரிகையைத்தான் வள்ளுவர் இளங்கோ போன்றோர் தம் சொற்கோவிலில் வடித்துப் பொற்கோயில் எழுப்பினார் போலும்.

நாடும், வீடும் செழிக்க, செந்நெறி தழைக்க, மனித இனம் மாண்புற, சமுதாயம் மணம் வீச வரைவின் மகளிர் தங்களை இழிவுபடுத்திக் கொண்டு தியாகத்தில் வாழ்கின்றார்கள் என்பது மிகை ஆகும்.

## தொகுப்புரை

- தமிழர்கள் இயற்கையோடு ஒட்டிய வாழ்வை வாழ்ந்து வந்தனர். குடும்பமே சமுதாய வாழ்க்கையின் அடிப்படையாக இருந்தது. காதலுக்கு காரணம் ஊழ் என்று நினைத்தனர். காதல் என்பது மென்மையான, ஆழமான சொல் ஆகும். சங்ககால மக்கள் காதலித்தும் திருமணம் செய்து உள்ளனர்.
- 'விறலி' என்பவள் உள்ளத்து உணர்வுகளை வெளிப்படுத்தி ஆடுபவள். பாணர் குலப்பெண். பதினாறு வயதுடையவள். ஆடுதல், பாடுதல், இசைத்தல், உரைநிகழ்த்துதல் ஆகியவை இவளுடைய தொழில் ஆகும். பரத்தையற் பிரிவு என்பது பிரிவு வகையில் சொல்லப்படாவிட்டாலும், அப்பிரிவு விலக்க இயலாத ஒன்றாகவும் உள்ளது. பரத்தையரைப் பொதுமகளிர், பொருட்பெண்டிர், விலைக்கனிகை, விலைநலப் பெண்டிர் முதலிய பெயர்களில் அழைக்கப்பட்டனர்.
- பரத்தையரிலும் ஒத்தகிழத்தியர், இழிந்த கிழத்தியர், வரையப்பட்டார் என மூவகையைத் தொல்காப்பியர் சுட்டுவார். திருக்குறளில் வரைவின் மகளிர் பற்றிய செய்திகள் பரந்து காணப்படுகின்றன. வடமொழியாளர் வாத்ஸ்யாயனர் பரத்தையர் பற்றி விரிவாகக் கூறியுள்ளார். நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், மதுரைக் காஞ்சி ஆகியவற்றில் பரத்தையர் பற்றிய செய்திகள் விரிவாக அமைந்துள்ளன.

## இயல் ஐந்து

## சான்றெண்விளக்கம்

1. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-135
2. பாலையன் அ.ப-புறநானூறு பா-86
3. மேலது பா-278
4. மேலது பா-91
5. மேலது பா-279
6. மேலது பா-312
7. அறிவரசன் ந முனைவர் -பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-28
8. பாலையன் அ.ப-புறநானூறு பா-211
9. மேலது பா-256
10. அறிவரசன் ந முனைவர் - பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-33
11. மேலது பக்-33
12. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை - பதிற்றுப்பத்து பா-51
13. மேலது பா-18
14. மேலது பா-86
15. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-80
16. அறிவரசன் ந முனைவர் -பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-29
17. பாலையன் அ.ப-புறநானூறு பா-32
18. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை -பதிற்றுப்பத்து-பா-44
19. மேலது பா-52
20. மேலது பா-89
21. மேலது பா-51
22. மேலது பா-54
23. மேலது பா-43
24. மேலது பா-48
25. மாணிக்கவாசகன் ஞா-மதுரைக்காஞ்சி பா-583
26. பாலையன் அ.ப-புறநானூறு பா-365
27. புலியூர்க்கேசிகன்-பரிபாடல் பா-9 18,19-வரி
28. மேலது பா-20 வரி-49
29. அங்கமுத்து முதலியார் டி.என் -அகநானூறு பா-256

30. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-குறள்-913
31. மேலது குறள்-920
32. புலியூர்க்கேசிகன்-தொல்காப்பியம்-களவியல் நூ-2
33. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-366
34. புலியூர்க்கேசிகன்-ஐங்குறுநூறு பா-110
35. புலியூர்க்கேசிகன்-குறுந்தொகை பா-229
36. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-1289
37. அறிவரசன் முனைவர் ந -பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-70
38. அறிவரசன் முனைவர் ந -பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-221
39. மேலது பக்-221
40. மேலது பக்-221
41. மேலது பக்-222
42. மேலது பக்-168
43. மேலது பக்-168
44. மேலது பக்-168
45. மேலது பக்-169
46. மேலது பக்-171
47. மேலது பக்-172
48. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-1289
49. அறிவரசன் முனைவர் ந -பெண்மொழி புனைவும் நீக்கமும் பக்-255
50. அங்கமுத்து முதலியார் டி.என்-அகநானூறு பா-256
51. புலியூர்க்கேசிகன்-திருக்குறள் 907
52. மேலது-911
53. மேலது-912
54. மேலது-913
55. மேலது-914
56. மேலது-915
57. மேலது-916
58. மேலது-917
59. மேலது-918
60. மேலது-919

61. மேலது-920

62. முருகேசன்-வரலாற்றில் தேவதாசிகள் பக்-111

63. மேலது பக்-118

64. மேலது பக்-233

65. புலியூர்க்கேசிகன்-திருக்குறள்-1058

## முடிவுரை

இருபத்தோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் மனித இனம் அறிவியல் வளர்ச்சியினாலும், ஊடகங்களின் துணையாலும் நாகரிக வாழ்வில் பெரிய மாற்றங்களைக் கண்டு வளர்ந்து கொண்டிருக்கின்றது. ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு நிமிடமும் பிற நாடுகளுடன் தொடர்பு கொண்டிருக்கின்றது. அந்த வகையில் மக்கள் உருவாக்கிய உபகரணங்கள் பயன்பாட்டில் உள்ளன.

சங்ககாலம் முதல் முறையாக தோன்றியது. 450 கோடி ஆண்டுகளுக்கு முன் தோன்றிய பூமிப்பந்தில் 100 கோடி ஆண்டுகளுக்கு முன் கடல் தோன்றி 50 கோடி ஆண்டுகளுக்கு முன் நுண்ணுயிரிகள் தோன்றி 3 இலட்சம் ஆண்டுகளுக்கு முன் மனிதன் தோன்றினான்.

மனித இனம் தோன்றிய போதே இலக்கியமும், இலக்கணமும் தோன்றின. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு போன்ற நூல்கள் இலக்கியம் ஆகும். அகத்தியம், தொல்காப்பியம் இலக்கணம் ஆகும். இவை சங்க இலக்கிய கால நூல்கள் எனப் பெயர் பெறுகின்றன.

சங்ககால மக்கள் அகம், புறம் என இருவிதமான வாழ்க்கை முறையை கடைபிடித்து வாழ்ந்து வந்தனர். அகவாழ்க்கையை ஐந்திணைகளாகப் பிரித்தனர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பனவாகும். ஒழுக்கமே திணைகளுக்கு அடிப்படை முதல், கருப்பொருட்களின் அடிப்படையில் உரிப்பொருள்கள் அமைந்தன.

சங்க இலக்கியத்தில் மொத்தப் பாடல்கள் 2387 ஆகும். சங்க இலக்கியப் பாடல்கள் அனைத்தும் காதல், வீரம், சமுதாய வாழ்க்கை, கல்வியின் சிறப்பு போன்றவற்றைப் பற்றிப் பேசுகின்றது.

மனித இனம் பெருகத் தொடங்கிய போது இனக்குழு வாழ்க்கை ஏற்பட்டது. குழந்தைப் பேற்றின் காரணமாகத் தாய்வழிச் சமூகம் ஏற்பட்டது. குழந்தைப் பேறு உண்டாகத் தந்தையும் காரணம் என்று ஏற்பட்டபோது தந்தை வழிச் சமூகமும் ஆணாதிக்கமும் ஏற்பட்டது.

சமூகமானது விரிவடைந்த போது பழக்க வழக்கங்களில் சிறிது மாற்றம் ஏற்பட்டது. இப்படிப் பல சமூகங்கள் கிளைவிடத் தொடங்கிய போது சமுதாயம் ஏற்பட்டது. மனித இனத்தில் உறவு முறைகள் ஏற்பட்டன. சங்க காலச் சமுதாயம், குடும்பம், சமூகம், அரசு இவைகள் ஏற்பட்டு மனித வாழ்க்கையில் பண்பட்ட நிலை உருவானது. சங்ககாலத்தில் மனையின்கண் இருந்து மனையறம் நிகழ்த்தும்

உரிமையும் இல்லறத்தில் தலைமை தாங்கி நடத்திச் செல்லும் சிறப்பும் மகளிர்க்கே உரியனவாக இருந்தது. உயிரினும் நாணம் சிறந்தது, நாணிலும் கற்புச் சிறந்தது என்று பெண்கள் தங்களைப் பாதுகாத்துக் கொண்டனர்.

சங்ககாலத்தில் எட்டு வகையான மணமுறை வழக்கத்தில் இருந்தது. பிரம்மம், பிரஜாபத்யம், ஆர்ஷம், தைவம், காந்தர்வம், ஆசுரம், ராசஷஸம், பைசாசம் போன்றவை ஆகும்.

காதல் என்பது மென்மையானது, ஆழமானது, அதன் உள்ளுணர்வு உயிருடன் கலந்தது. காதலில்லாமல் திருமணம் நடந்ததாகச் சான்றுகள் இல்லை. காதலித்தவர்களைப் பெற்றோர் கூட்டி வைப்பர் அல்லது அவர்களாகவே உடன்போக்கு மேற்கொண்டு திருமணம் செய்து கொண்டனர். தலைவன், தலைவி, அமைதியாகவும், சிறப்புடனும் குடும்பம் நடத்த பாங்கன், பாங்கி, செவிலி முதலியோர் துணையாக இருந்தனர்.

இல்லற வாழ்வு களவு, கற்பு ஆகிய இருவழிகளில் அமைந்திருந்தது. பரத்தையர் பிரிவு என்பது பிரிவுகளில் ஒன்றாகச் சொல்லப்படாவிட்டாலும், அதுவும் அனுமதிக்கப்பட்ட ஒன்றாகவே இருந்தது. பரத்தையர்கள் பொது மகளிர், பொருட் பெண்டிர், விலைக்கணிகை, விலை நலப் பெண்டிர் என சுட்டப்பட்டனர்.

சங்ககால மன்னர்களின் அரசியலில் ஐம்பெருங்குழு, எண்பேராயம் போன்ற அவைகள் இருந்தன. அந்தணர், அமைச்சர், சேனாதிபர், தூதர், மருந்தர் ஆகியோர்களைக் கொண்டு அரசாட்சியை நடத்தினார்கள். தமிழகத்தில் சிறப்பான தொழில் உழவே ஆகும். எல்லா மக்களுக்கும் உணவு கிடைக்கும் வகையில் உழவுத் தொழிலை சிறப்பாக செய்தனர்.

தமிழகத்தில் பண்டமாற்று முறையில் வாணிபம் நடைபெற்றது. உள்நாட்டு வாணிபம், வெளிநாட்டு வாணிபம் ஆகியவை சிறப்பாக நடைபெற்றது. அகில், சந்தனம், ஏலம், மஞ்சள், தந்தம், முத்து, மரகதம் ஆகியவற்றை ஏற்றுமதி செய்துள்ளனர்.

வாழ்க்கையை முழுமையாக வாழத் தெரிந்த சங்ககால மக்கள் தங்கள் மகிழ்ச்சிக்காக சில பொழுதுபோக்கு விளையாட்டுக்களை விளையாடி தங்கள் பொழுதினை கழித்தனர்.

இசை, நாட்டியம், நாடகம், செய்யுள் இயற்றும் புலவர்கள் எனப் பல்வேறுபட்ட துறைகளிலும் கலைஞர்கள் தோன்றினர். மக்களும் மன்னர்களும், குறுநில மன்னர்களிடத்தில் தங்கள் கலைகளை வளர்த்துக் கொண்டனர்.

சங்ககாலத்தில் தொழிலடிப்படையில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர், போன்றவர்கள் இருந்தார்கள். இருப்பினும் அவர்களிடையே உயர்வு, தாழ்வு மனப்பான்மை காணப்படவில்லை.

ஆடவர்கள் பெண்களோடு கொண்டிருக்கும் பாலுணர்வு தொடர்பான மாற்றங்கள் மட்டும், மாறுபாடுகளுக்கு உட்படாமல் ஒரே தன்மையாக சென்று கொண்டிருக்கிறது. தாய்வழிச் சமுதாயத்திலிருந்து தந்தை வழிச் சமூகம் அமைந்த பிறகு ஆணாதிக்கம் விலக்க இயலாத ஒன்றாக ஆகிவிட்டது.

சங்ககால மக்கள் கல்வியில் சிறந்து விளங்கினார்கள். அழிவில்லாத சிறந்த செல்வமாக கல்வியை நினைத்தார்கள். பெண்கள் நடனத்தில் சிறந்து விளங்கியுள்ளனர். நடனத்திற்க்கு என்று அரங்கேற்றக்களம் என்ற ஒன்றை அமைத்துக் கொண்டனர். அரங்கேற்றம் செய்யும் பொழுது அக்காலத்தில் கூத்தர்கள், ஆடலாசிரியன், இசை ஆசிரியன், கவிஞன் என்போர் கூடி இருந்தனர்.

வேத்தியல் கூத்து, பொதுவியல் கூத்து என கூத்துக்கள் சங்க காலத்தில் இடம்பெற்று இருந்தன. துணங்கை கூத்து என்பது பெரும்பாலும் மகளிர் ஆடும் கூத்தாகும்.

சங்ககாலத்தில் சமுதாயத்தில் சமயம் முக்கியமான இடம் பெற்றிருந்தது. இயற்கையையும் அவர்கள் கடவுளாக நினைத்தனர். சிவன், திருமால், விஷ்னு, முருகன் போன்ற கடவுள்களை வணங்கியுள்ளனர்.

நாற்றிசையை காக்கும் தேவர்களாக இந்திரன், யமன், வருணன், குபேரன் போன்றவர்கள் இருந்தனர் என்பதை மக்கள் நம்பினார்கள். பத்தினி தெய்வமாக கண்ணகியை மக்கள் வழிபட்டனர். கண்ணகியின் உருவத்தை சிற்பமாக செதுக்கி கருவறையில் வைத்து வணங்கினார்கள்.

சங்ககாலத்தில் மகளிர்க்கு உயர்ந்த இடத்தை கொடுத்தனர். அவர்கள் வீரம், கல்வி, நாட்டுப்பற்று குடும்பத்தை வளர்ச்சி அடையச் செய்தல் ஆகியவற்றில் தங்கள் பங்கினை முழுமையாக செலுத்தி இருந்தனர்.

விறலி யாழ் முதலிய நரம்புக் கருவிகளை வாசிக்கும் திறன் பெற்றிருப்பதாலும், இனிமையான குரலில் பாடும் வல்லமையைப் பெற்றிருப்பதாலும் வேந்தன் பெண் யானைகளையும், பொன்னால் செய்யப்பட்ட மாலைகளையும் பரிசாக விறலியர்களுக்கு அளிப்பார்கள்.

விறலி முதுமையும், அனுபவமும் நிறைந்தவளாக இருப்பாள். அவ்விறலி இளம் வயதுடைய மற்றொரு விறலியை ஆற்றுப்படுத்துவாள். சேரனின் வெற்றிச்

சிறப்பு, பாசறையில் அவன் காதல் மகளிரோடு உறவாடியமை, போரில் தோல்வியுற்ற பகைவர்களைத் தன் நாட்டில் அடிமையாக்கி இருத்தல் ஆகியவற்றை விறலி எடுத்துக்கூறுவாள்.

விறலியை 'பாண்மகள்' என்று சுட்டுவதனால் இவள் பாணர்களின் மகளாக இருந்திருக்கலாம் என்று கூறப்படுகிறது. சேரன் செங்குட்டுவன் மோகூரினை ஆண்ட பழையனிடம் பெற்ற வெற்றியினைக் குறிப்பிட்டு, அத்தகைய சிறப்புடைய செங்குட்டுவனிடம் நாங்கள் செல்கிறோம். ஆகவே, நீயும் எங்களுடன் வந்தால் வேந்தன் தரும் பரிசினால் உங்களுடைய வறுமையைப் போக்கிக் கொள்ளலாம் என விறலி ஒருத்தி, மற்றொரு விறலியிடம் கூறி அழைத்துச் சென்று பொருள் ஈட்டிக்கொள்வார்கள்.

அணிகலன்களை அணிந்த மென்மையான இயல்புடைய விறலியர் அழகு சிறக்கவும், பாணர் பசுமையான அணிகலன் அணியவும், ஏவல் இளைஞர் வேந்தனின் போர்க்களத்தை வாழ்த்திப் பாடவும், விறலியே வேந்தனைக் காணச் செல் என விறலியை முதன்மையானவளாகக் கொண்டு அவர்தம் பாணரும், இளைய பாணரும் விறலியை ஆற்றுப்படுத்தியுள்ளனர்.

அகஇலக்கியங்கள் அனைத்தும் பரத்தையர் பிரிவைப் பற்றிப் பேசுகின்றன. ஒத்த கிழத்தியர், இழிந்த கிழத்தியர், வரையப்பட்டார் எனத் தொல்காப்பியர் சுட்டுவதால், ஆடவர் ஒருத்திக்கு மேல் மணம் செய்து கொள்ளும் வழக்கம் இருந்தது.

திருக்குறள், சிலம்பு, மணிமேகலை, நாலடியார் முதலிய இலக்கியங்களிலும் வரைவின் மகளிர் பற்றிய செய்திகள் வருகின்றன. திருக்குறள் மட்டுமே பிறன்மனை நயத்தல் பற்றிப் பேசுகிறது.

உளவியலின்படி குழந்தைகளிடமே பாலுணர்வு மறைந்து கிடக்கின்றது. தக்க பருவத்தில் அது வெளிப்படுகின்றது. பெண்கள் மங்கல அணிகலன்களாக தாலி, பொட்டு, மிஞ்சி ஆகியவற்றை அணிந்தார்கள். திருமணம் ஆன பெண்கள் தங்கள் கணவனை கடவுளாக நினைத்து வணங்கினார்கள்.

பெண்களைப் பொறுத்த வரையில் பிறந்த வீடு, புகுந்தவீடு என்னும் ஈரடுக்குகள் நம்முடைய தமிழ்ச் சமூகத்தில் தொன்றுதொட்டு நிலவி வருகின்றன. பெண், புகுந்த வீட்டில் நற்பெயர் வாங்க வேண்டும் என்பதற்கான பயிற்சிக் களமாகவே பிறந்த வீடு அமைகிறது. அதனால் நினைவு தெரியும் நாள் முதற் கொண்டே ஆண்-பெண் பாகுபாடு தோன்றி விடுகிறது.

ஆணுக்கு வெளிப்புறம் உலகம், பெண்ணுக்கு வீடுதான் உலகம் என்ற மூடத்தனத்தினால் பெண்ணை வீட்டுக்குள்ளே பூட்டி வைக்கின்றனர். இதன் காரணமாகப் பெண்கள் உளநோய்ப் பாதிப்புக்குள்ளாகின்றனர். வரதட்சணை போன்ற அவலங்கள் பெண் சிசுக்கொலைக்கான முக்கியக் காரணங்களாக அமைகின்றன.

பெண்ணை ஒரு இழிந்த பொருளாக நடத்துதல், எப்பொழுதும் பிறரைச் சார்ந்தே வாழ வேண்டும் என்று கட்டாயப்படுத்துதல் போன்ற ஆணாதிக்கச் சமூகத்தால் கொண்டு வரப்பட்ட மரபுகளை உடைத்தெறிந்து பெண்கள் வெளியில் வர வேண்டும்.

உலக சமுதாயம் மணவிலக்கு, மறுமணம், பலதாரமணம் இங்ஙனம் சென்று கொண்டிருக்க தமிழ்ச் சமுதாயம் மட்டும் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தெளிந்த நீரோடை போல ஒரே நிலையில் சென்று கொண்டிருக்கிறது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தேவதாசி ஒழிப்புச் சட்டம் வந்த பிறகும், உலக நாகரிகத் தொடர்பினாலும் ஒழுக்கச் சிதைவு ஏற்பட்டிருப்பதை எல்லோரும் ஏற்றுக் கொண்டுதான் ஆக வேண்டும்.

சங்ககால மக்கள் பிற சமுதாய மக்களிலிருந்து மாறுபட்டு செவ்வியல் மரபுகளைக் காத்துப் பின்வரும் சமுதாயத்திற்குக் கொடுத்திருக்கின்றனர் என்பதில் ஐயமில்லை.